முதற் பதிப்பு : ஜூன், 1999
ஏழாம் பதிப்பு : ஜனவரி, 2004
எட்டாம் பதிப்பு : ஜனவரி, 2005
ஒன்பதாம் பதிப்பு : பிப்ரவரி 2006



விலை : ரூ. **110.00**

| | | | |
|---|---|---|---|
| ☐ | TITLE | : | ENNAI CHETHUKKIYA ENNANGAL |
| ☐ | AUTHOR | : | Dr. M.S. UDAYAMURTHY |
| ☐ | LANGUAGE | : | TAMIL |
| ☐ | SUBJECT | : | AUTOBIOGRAPHY |
| ☐ | EDITION | : | Ninth Edition - February 2006 |
| ☐ | No. OF PAGES | : | xviii + 334 = 352 |
| ☐ | PUBLISHED BY | : | GANGAI PUTHAKA NILAYAM,<br>13, DEENADAYALU STREET,<br>THYAGARAYA NAGAR,<br>CHENNAI – 17. |
| ☐ | PRICE | : | Rs.110.00 |

*ஆசிரியர் முகவரி:*

டாக்டர் எம். எஸ். உதயமூர்த்தி
மக்கள் சக்தி இயக்கம்
17ஏ, சௌத் அவென்யு
காமராஜ் நகர், திருவான்மியூர்
சென்னை – 600 041.

Laser Typeset at : LKM Computer Printers, Chennai – 17.

Printed at : Nathan & Company, Chennai - 42.

# சில சிந்தனை இழைகள்

நான் தெரிந்து கொண்ட விஷயங்கள் இரண்டு: நம் வாழ்க்கையை நமது எண்ணங்களும் லட்சியங்களும் தான் உருவாக்குகின்றன என்கிற உண்மை; இரண்டாவது வாழ்வில் ஏதோ ஒரு மாபெருஞ் சக்தி நமக்கு வழிகாட்டி நம்மை நடத்திச் செல்கிறது என்கிற உணர்வு.

ஒரு சிற்பி தான் விரும்பும் சிற்பத்தை அதன் அழகை, அதன் கம்பீரத்தை, அதன் உணர்வை எல்லாம் ஒரு கல்லிலே செதுக்கிவிடுகிறான். இதற்கு பல ஆண்டுகள் வேலை செய்கிறான் எல்லாமே மிகப் பொருந்தி ஒரு மகத்தான சிற்பம் உருவாகிறது. சில சமயம் சிற்பம் அவன் விரும்புகிறபடி அமைவதில்லை.

அதுபோல ஒரு மனிதன் தான் விரும்புகிற அற்புத வாழ்வை வாழ முனைகிறான். அதற்கேற்றபடி காய்களை நகர்த்துகிறான்; சில சமயம் காரியம் நிகழ்கிறது; பல சமயம் நிகழ்வதில்லை. வாழ்வு ஏதோ ஒரு சூதாட்டம் போல தென்படுகிறது. நம் கையில் ஏதும் இல்லை என்று கைவிட்ட நிலைக்கு நாம் வருகிறோம்.

வாழ்வில் எதிர்பாராமல் சில சம்பவங்கள், சில விபத்துக்கள் ஏற்படுகின்றன. நாம் நம் மனச்சாட்சிப்படி நல்லவனாகத் தான் வாழ்ந்து வருகிறோம்; எனினும் காரண காரியம் இல்லாமல் ஏற்படுகிறது. அப்போது நம் தந்தை கூறுகிறார்.

“மகனே! இதை நீ அனுபவிக்க வேண்டுமென்று இருக்கிறது இது. முன்வினை. நாம் செய்த பாவங்கள் எல்லாம் இப்பிறவியில் நம்மைத் தொடர்கின்றன. இதிலிருந்து நாம் தப்பிக்க முடியாது” என்று நம் பெரியவர்கள் நமக்கு கூறுகிறார்கள்.

வாழ்வின் நியாயங்கள் எல்லாம் மறைந்து கிடக்கின்றன என்கிறார் தத்துவ ஞானி ஜேம்ஸ் ஆலன்.

வாழ்க்கை வரலாறு எழுதுவது எனக்கு மிகக் கூச்சமாக இருந்தது. “அப்படி என்ன சாதித்து

விட்டோம்?'' என்ற ஒரு எண்ணம். ''இது சுய விளம்பரமாக அல்லவா முடியும்; தற்பெருமை பேசுவதாக அல்லவா இது ஆகும்'' என்கிற மனக்கிலேசம்; சஞ்சலம். இது என்னிடம் பல ஆண்டுகள் இருந்தது.

ஏனெனில் என்னுள் 'நான்' என்ற தனித்தன்மை இன்றும் என்னுடன் இருக்கிறது. இது ஜீவனின் தன்மையா, அல்லது ஆணவத்தின் வெளிப்பாடா என்பதை நானே கேட்டுக் கொள்கிறேன். நாம் நமது தனித்தன்மையினால்தான் வாழ்கிறோம்; நம்மைப் பற்றி ஒரு முத்திரை குத்திக் கொள்கிறோம். ''இது ஆணவமாகவோ விளம்பரமாகவோ ஆகிவிடாதா?'' என்ற இந்த கேள்விதான் என்னைப் பல ஆண்டுகள் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதிலிருந்து ஒத்திப் போட்டுக் கொண்டே வந்தது; — சுமார் பதினெட்டு ஆண்டுகளுக்கு மேலாக.

பிறகு நானே யோசித்தேன். ஒரு கிராமத்தில் பிறந்த ஒரு இளைஞன், சாப்பாட்டுக்கு போதுமான ஒரு குடும்பத்தில் வாழ்ந்து வந்த இளைஞன், அமெரிக்கா செல்கிறான்; அங்கே அவர்களுக்கு சமமாகவோ, மேத்திரமாகவோ பல காரியங்களைச் செய்கிறான், என்றால் இது பாராட்டப்பட வேண்டியதுதானே, இது பலருக்கும் தன்னம்பிக்கை கொடுக்கும் விஷயம்தானே? என்று நானே கேட்டுக்கொண்டேன். எத்தனையோ சூழ்நிலைகளில் வாழும் கஷ்டங்கள், நிர்ப்பந்தங்கள் எனக்கு ஏற்பட்டன. எல்லாவற்றையும் சமாளித்து மீறினேன். ஒருவேளை இதெல்லாம் அன்றாட பிரச்சினையில் அல்லல் உறுபவர்களுக்கு ஒரு தெம்பை அளிக்குமோ மீறத் தூண்டுமோ என்ற ஒரு எண்ணம்.

இதன் விளைவுதான் இந்நூல். இதற்கு ஒரு முன்னோடியான சம்பவமும் என் வாழ்விலேயே நிகழ்ந்தது. அதையும் குறிப்பிட்டிருக்கிறேன். உள்ளே.

அதாவது எண்ணங்கள் என்ற நூலை எழுதியதி லிருந்து எனது பதிப்பாளர், வானதி திருநாவுக்கரசு அவர்கள் என் நூல்களுக்கு ஒரு வெளியீட்டு விழா எடுக்க வேண்டுமென்று பலமுறை என்னிடம் சொன்னார்.

நான்தான் இதை வேண்டாமென்று அன்புடன் புறக்கணித்து வந்தேன். புறக்கணித்ததன் காரணம் மேற்சொன்னதுதான்.

பிறகு நானே ஒருநாள், ஒரு புத்தகத்தை தற்செயலாக எடுத்துப் படித்துப் பார்க்க நேர்ந்தது. எனக்கு ஆச்சரியம் ஏற்பட்டது. "இவ்வளவு நன்றாக எழுதி இருக்கிறாரே" என்ற வியப்பு மேலிட யார் எழுதி இருக்கிறார் என்று பார்த்தேன். சாட்சாத் நான்தான்! உடனே வானதி அவர்களுக்கு கடிதம் எழுதினேன்.

அதே காரணம்தான் சென்ற ஆண்டு துவக்கத்தின் முன் *(14-1-1998)* கல்கி ஆசிரியர் திருமதி சீதாரவி அவர்களும் துணை ஆசிரியர் திரு ராகவனும் எங்கள் வீட்டுக்கு வந்தபோது நிகழ்ந்தது. நான் என் வாழ்க்கையைப் பின்னோக்கி பார்த்தேன். முன்பிருந்த அந்தப் பிடிபடாத பெருமை இல்லை. "அடாடா! நம் அனுபவத்தை எழுதினால் பலருக்கும் பயன்படக் கூடுமே!'' என்கிற எளிமையான எண்ணம்தான் மேலோங்கியது.

பெரியோர்கள் எழுதுகிறார்கள்; நாம் சொல்வது உண்மையாக இருந்தால் மட்டும் போதாது. அது நன்மை செய்வதாகவும் இருக்க வேண்டும்" என்று. எவ்வளவு பெரிய விஷயம்!

என்னுடைய நூல்கள் பலவும் நன்மை செய்திருக் கின்றன என்பதைக் கண்கூடாக கண்டிருக்கிறேன். ஆயிரக்கணக்கான கடிதங்கள் தெரிவித்தன; விருது கொடுத்தவர்கள் ஊரறிய பட்டியலிட்டார்கள்.

எனவேதான் இதை எழுத முன் வந்தேன். "நன்மை செய்யக் கூடுமோ?'' என்ற ஒரு நப்பாசை.

இதில் எல்லா விஷயங்களையும் எழுதி இருக்கிறேனா என்றால் — இல்லை! காரணம், அன்றாட வாழ்க்கையின் சாதாரணம் தான்! இந்த சாதாரணத்தை எழுதி வாசகர்களைப் 'போர'டிக்க விரும்பவில்லை! அடுத்து பல எழுத முடியாத விஷயங்களும் இருந்தன; நான் பழகிய மனிதர்கள் பற்றி; என் வாழ்வின் எல்லைக்குள் வந்தவர்கள் பற்றி. அதுபற்றி எழுதி இருந்தேனானால் அது கட்சிக்காரனின் ஒரு பக்கப்

பார்வையாகவும் வாதமாகவுமே இருக்கும்; சிலர் காலமாகிவிட்டார்கள். அவர்கள் பற்றியும் அவர்கள் பெயரைக் களங்கப் படுத்தும்படி எழுதுவதும் அதர்மம். அப்படி சரித்திராசிரியர்கள் எழுதலாம். அது வேறு விஷயம். இது என் சொந்த வாழ்க்கை வரலாறு; நான் எழுதக் கூடாது.

உண்மை என்கிறீர்களே எல்லாவற்றிலும் நீங்கள் உங்களைப்பற்றி எழுதியிருப்பது உண்மைதானா? என்று நீங்கள் கேட்கக்கூடும்.

நான் என் வாழ்வில் என் பங்குக்கு தவறுகள் செய்திருக்கிறேன். முன்கோபம், சுயநலம், ஆணவம் அவசரம் என்று பல காரணங்கள் - யோசித்துப் பார்த்தால். நான் ஒரு உறைகல் வைத்திருக்கிறேன். நாம் செய்யும் தவறுகளை நம் தாயிடமோ நம் மனைவியிடமோ பெருமையுடன் சொல்லிக் கொள்ள முடியுமா? என்று கேட்பது. என் தவறுகளை என் தாய் தந்தையிடமோ என் மனைவியிடமோ கூற நான் தவறியதில்லை; பெருமையுடன் அல்ல! (To Err is Human) தவறுவது மனித இயல்பு என்பார்கள். என் தாயின் அரவணைப்பு, என் மனைவியின் ஆறுதல் வார்த்தைகள் என்னை மீண்டும் சரியான நிலைக்கு கொண்டு வந்து புனிதப்படுத்தி இருக்கின்றன.

பல கால கட்டங்களில் நான் தவறுகள் இழைக்க முடியாத படி சூழ்நிலையின் நிர்ப்பந்தங்கள் — விவேகத்தின் ஆணைகள், — என்னை தடுத்து காப்பாற்றி இருக்கின்றன. என்னை மீறிய சக்திகள் என்னைத் தடுத்து நல்வழியில் இட்டுச் சென்றிருக்கின்றன. அதை மனத்தால் எண்ணி, மயிர்சிலிர்த்து கை கூப்புகிறேன்.

ஆசையின் உச்சகட்டத்தில் சில நடவடிக்கை எடுக்க முயல்கிறோம். அதற்கு நேர் எதிர் மாறான சம்பவம் நிகழ்கிறது! அப்படித்தான் எனக்கும் நிகழ்ந்தது; தெளிவு வந்தது.

பணத்தாசை மிகுந்த பட்டினத்தார் விராட்டியை வாங்கி வந்த தன் மகன் மீது கோபங் கொள்ள அவன் எழுதிச் சென்ற ஒரு வாசகம் அவருள் ஒரு நேர்மாறான திருப்பு முனையை அவர் வாழ்வில் ஏற்படுத்தியது.

காம விகாரங்களில் உழன்று கொண்டிருந்த அருணகிரிநாதருக்கு அவரது மூத்த சகோதரி சொன்ன ஒரு வாசகம், எதிர்மாறாத திருப்பத்தை ஏற்படுத்தியது.

அசோக சக்ரவர்த்தி தன் வெற்றியைக் காண போர்க்களம் என்ற போது புத்தபிட்சு ஒருவர் சொன்ன வாசகம் அவரது வாழ்வில் நேர் எதிர் மாறான ஒரு திருப்பத்தை ஏற்படுத்தியது.

அப்படி என் வாழ்வில் எந்த விதமான பிரமிக்கத் தக்க திருப்பங்களும் நிகழவில்லை. ஆனால் பல சின்னஞ் சிறு சம்பவங்கள் நிறைய நிகழ்ந்தன; வாழ்வின் திருப்பு முனையாக அமைந்தன. ஒவ்வொன்றும் வாழ்வின் அதி நுட்பமான உண்மைகளை எனக்குத் தெரிவித்தன; என்னை பக்குவப்படுத்தின.

வாழ்க்கையைப் பின்னோக்கிப் பார்க்கும்போது, ஒரு விஷயம் என் நினைவுக்கு வருகிறது. இப்படித்தான் "நீ வாழ்ந்தது உனக்கு நிறைவு தந்ததா?" என்று ஒரு பேரொளி கேட்டதாகவும், உடனடியாக வாழ்வின் பல முக்கிய சம்பவங்களும், 'சினிமா ரீல்' போல ஓட ஆரம்பித்தது என்று செத்துப் பிழைத்தவர்கள் கூறுகிறார்கள்.

என் வாழ்வில் மிகப் பெரிய சம்பவங்கள்: என் பெற்றோர் என்னை வளர்த்த விதம்; அந்த சூழ்நிலை; எனக்கு எழுத்தின் மீதும் படிப்பின் மீதும் ஏற்பட்ட தணியாத தாகம்; என் மனைவியாக வந்து, தோள் கொடுத்த என் துணைவி; இவற்றை எல்லாம் மீறி எனக்கேற்ற சூழ்நிலையை ஏற்படுத்தி எனக்கு வழிகாட்டிக் கொண்டு வரும் - ஒரு மாபெரும் சக்தி. இந்த சக்தியை நான் வாழ்வில் எப்போதும் சதாநேரமும் உணர்வதில்லை. ஒரு காரியம் முடிந்த பிறகு தான் "இது என் கையை மீறிய தெய்வச்செயல்" என்று என் மனம் கை கூப்பும். இதுதான் என் வாழ்வை நடத்தி வருகிறது.

என்னைச் செதுக்கிய எண்ணம் எது?

முப்பத்து நாலு வயது வரை தமிழ் நாட்டில் இருந்த போது ஒரு சிறந்த எழுத்தாளனாக வர வேண்டுமென்று

ஆசை; ஜீவனுடன் ஒட்டிக் கொண்டிருந்தது என்றே சொல்ல வேண்டும்.

அத்துடன் உலகில் நாம் உயர்ந்து பெரிய நிலைக்கு வர வேண்டும் என்ற உலக பந்தமும் என்னை விரட்டிக் கொண்டிருந்தது.

ஒரு இளநிலை பட்டப்படிப்பு (B.Sc) முடித்த உடன் நான் அத்துடன் ஓய்ந்திருக்கலாம். நான் வேலை பார்த்த கல்விக்கூடம் என் மேல் படிப்பை நிர்ப்பந்தித்தது; எனது ஆசையும் அதை ஒட்டியே சென்றது. இந்த எண்ணம் தான் நான் இந்தியாவில் இரண்டு முதுநிலைப் பட்டம் பெறவும், அமெரிக்காவில் டாக்டர் பட்டம் பெறவும் காரணமாயிற்று. பொருளால் ஆன உலகில் நாம் முன்னேற வேண்டும், மனிதர்களால் ஆள உலகில் நாம் மதிக்கப்பட வேண்டும் என்பன எனது ஜீவதாகங்களாய் இருந்தன.

ஆனால் நான் அமெரிக்கா சென்ற சில வாரங்களிலேயே என்னை மறந்தேன். தமிழ்நாட்டையும் இந்தியாவையும், விண்வெளிக் கோளிலிருந்து பார்ப்பது போல, அமெரிக்காவிலிருந்து பார்த்தேன். அதிலிருந்து நாட்டைப் பற்றிய பார்வை; நாட்டைப் பற்றிய சிந்தனை; நாட்டைப் பற்றிய படிப்பு இந்தியாவைப் பற்றி சொல்லிக் கொடுக்கும் அரசியல், சமுதாய இயல், சரித்திர பாடம் சொல்லிக் கொடுக்கும் பேராசிரியர்களுடன் தொடர்பு; பழக்கம். நான் என்னை மறந்தேன் என்று சொல்வதே உண்மையாக இருக்கும். போய்ச் சேர்ந்த ஓராண்டில் இந்தியாவுக்கும் சீனாவுக்கும் நடந்த போரில் இந்தியாவுக்காக அங்கே நிதி சேர்க்கும் பொறுப்பை எடுத்துக் கொண்டேன். பேராசிரியர்களையும் இந்திய மாணவர்களையும் கூட்டி சீன ஆக்கிரமிப்பு பற்றி கூட்டம் போட்டேன்.

இரண்டாண்டுகளில் என் மனைவி அமெரிக்காவுக்கு வந்து என்னுடன் இருந்த போது, பல்கலைக் கழகத்திலிருந்து மாலையில் வீட்டுக்கு வரும் நான் என் மனைவியிடம் தேசபக்தி பற்றியும், இந்தியா பற்றியும், பாரதியார் பற்றியும், வ.உ.சி. பற்றியும், நம் நாட்டின் பழம் பெருமை பற்றியும் மணிக்கணக்கில் பிரசங்கம் புரிவேன்.

என் மனைவி கேட்டுக் கொண்டிருப்பாள்; என் மனைவிக்கு உத்வேகம் வந்ததோ இல்லையோ, நான் ஆவேசத்தின் உச்ச கட்டத்தில் இருப்பேன்! என்னைப் பற்றிய எண்ணங்கள் என்னுள் பெரிய மாற்றம் பெற்றன. "நான் என்ன செய்ய முடியும்?" என்ற கையற்ற நிலை கொண்ட எண்ணங்கள் எல்லாம் மறைந்தே போயின. ஏதாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் என்னை கவ்விப் பிடித்துக் கொண்டது.

"இது சமதர்மமல்ல, அதர்மம்" என்ற தலைப்பில் கல்வி பற்றிய ஒரு கட்டுரை விகடனில் எழுதப் போக பெரிய விவாதமே கிளம்பியது. அப்போது பாண்டிச் சேரியிலிருந்து ஒரு அறிஞர் எழுதினார். விவாதத்திற்கான என் பதிலைப் பார்த்துவிட்டு, ''உதயமூர்த்திக்கு வந்திருப்பது "தர்ம ஆவேசம்" என்று. என்னால் அந்த வாசகத்தை மறக்க முடியவில்லை.

அடுத்த இரண்டாண்டுகளில், அமெரிக்காவில், நான் மருத்துவ ரசாயன ஆய்வில் ஈடுபட்டிருந்த போது என் வாழ்வில் ஒரு திருப்பம் ஏற்பட்டது. ஒரு சாதாரண எண்ணம்; அதுதான் என்னை திசை திருப்பிவிட்டது.

என்ன அந்த சாதாரண எண்ணம்? ஆராய்ச்சியில் தீவிரமாக ஈடுபட்டிருந்தபோது ஒருநாள் சிந்தித்தேன். ''எப்படி இந்த புதிய கண்டுபிடிப்புக்களுக்கான எண்ணங்கள் விஞ்ஞானிகளின் மனத்தில் தோன்றுகின்றன? கண்டுபிடிப்புக்களுக்கான ஒரு எண்ணப்பாதை - சிந்தனைப்பாதை - இருக்கிறதா? அதைத் தெரிந்து கொண்டால் கண்டுபிடிப்புக்களை எல்லாம் சுலபமாக்கி விடலாமே!" என்ற எண்ணம்தான் அது. இப்படிப்பட்ட சிந்தனையே ஒரு பெரிய கண்டுபிடிப்பு போல எனக்குப் பட்டது. இதன் விளைவாக விஞ்ஞானிகளின் வாழ்க்கை வரலாறு அவர்களது சுய சரித்திரம் - என்று எல்லாவற்றையும் படிக்க ஆரம்பித்தேன்.

கண்டுபிடிப்புக்கள் எல்லாம் மனத்தில் தான் ஆரம்பிக்கின்றன. எனவே கண்டுபிடிப்புக்களின் அம்சங்களாக நான் கண்ட கற்பனை உள்ளுணர்வு, எதிர்பார்ப்பு என்பவை பற்றி பூரணமாக அறிந்து

கொள்ள நான் மனவியலையும், அதீத மனவியலையும் (Para Psychology) படித்தேன்.

இங்கே தான் ஒரு சங்கமம் நிகழ்ந்தது. நானோ பாரதியார், கல்கி, காந்தி என்று படித்து அவர்களது தேசப்பற்றையும் தியாகத்தையும் கண்டு வியப்பவன். ஆராதிப்பவன். திடீரென்று என் ஆராய்ச்சியில் மனவியல் உண்மைகள் பல பளிச்சிட்டபோது அங்கே தான் தனி மனிதன் சமுதாயம், நாடு என்பவை எனது மனவியல் ஆராய்ச்சியுடன் சங்கமித்தன. இதனால், இந்தியாவில் தமிழ்ப்பத்திரிக்கை உலகிலும் ஆங்கிலப் பத்திரிக்கை உலகிலும் இதுவரை இல்லாத, ஒரு துறையில் தொடர்ந்து ஒரு இருபதாண்டுகள் ஆனந்த விகடனில் எழுதத் துவங்கினேன். இவற்றை நான் எழுதினேன் என்பது உண்மை ஆனாலும் இவைதான் என்னை உருவாக்கின என்பதுதான் பொருத்தமாகும்.

அடக்கத்தை விட்டு கூற வேண்டுமானால், சில ஆண்டுகளுக்குப் பின் நான் எழுதிய நூல்களையும் அதில் தொடும் ஆன்மீக அடிப்படைகளையும் காணும் போது இதை நான் தான் எழுதினேனா என்ற சந்தேகம் என்னுள் பெரிதாக எழுந்தது. சுமார் முப்பதாண்டுகளுக்கு முன் எழுதிய "எண்ணங்கள்" இன்றும் புதிய கருத்துக்களைக் கொண்ட நூல் போல பரவசம் தருவதும், இதைப் பாடமாக சுமார் நான்காண்டுகள் - ஒரு 160 பக்க நூலை சுமார் ஓராண்டு பாடமாக - சென்னைப் பல்கலைக் கழகம் போதித்தது என்பதும் என்னை வியக்க வைத்தது.

எதற்காக இப்படிச் சொல்கிறேன் என்றால் "வாழ்வின் தாத்பர்யம் நல்லெண்ணம் என்ற ஒரு சொல்லில் அடங்கி இருப்பதாகக் கருதுகிறேன்" என்று எண்ணங்கள் என்ற நூலின் முகவுரையை அந்த வாசகத்துடன் முடித்திருந்தேன்.

பல ஆண்டுகளுக்குப் பின்னால் புத்தருடைய எட்டு வழிப் பாதையை நான் ஆற அமர விரிவாகப் படித்து தெரிந்து கொண்ட போது, அவர் கூறும் எட்டு அம்சங்களான, நல் நோக்கம், நல் முயற்சி, நல் செயல், நல் சிந்தனை என்பன எல்லாம் எங்கே துவங்குகின்றன என்று பார்த்தால் எல்லாமே "நல்லெண்ணம்" என்ற ஒரு



சொல்லின் விரிவாக்கம் தான் என்று புரிந்தது. அப்போது என் உள்ளத்தில் ஏற்பட்டது வியப்பா அதிர்ச்சியா, என்று சொல்ல முடியவில்லை.

மனிதன் வாழும்போது எழுதும் விஷயத்தில் ஊன்றிப் போய் தன்னை மறக்கிறான். எழுதும் எழுத்துடன் ஒன்றாய் விடுகிறான். எங்கோ உள்ள மூலத்தைத் தொடுகிறான். சில சமயம் திருப்பிப் படிக்கும் போது "எழுதியது நானா?" நம் உள்ளமே சிலிர்க்கிறது; புழுங்கிப் போகிறது.

சொல்கிறார் திருஞான சம்பந்தர்:

"தனது உரை எனது உரையாகி" என்று. பேனா பிடித்திருப்பது தான் நாம். யாரோ நம் கையைப் பிடித்து எழுதுகிறார்கள். எங்கிருந்தோ வருகின்றன எண்ணங்கள். எங்கிருந்தோ பொங்கிப் பிரவகிக்கின்றன உணர்ச்சிகள். இப்படி சில சமயம் வருவது மனிதனின் மூளைக்கு அப்பால்; அப்பாலுக்கு அப்பால்.

பேராசிரியர் கல்கி எழுதுகிறார். "எனக்குப் பிடித்த எனது நாவல் அலை ஓசை தான். அதை நான் எழுத

வில்லை. அதற்கு ஒரு விடுதலைப் போராட்டப் பின்னணியைக் கொடுத்தேன். மற்றபடி கதாபாத்திரங் களே பேசினார்கள்.. சீதா, தாரிணி, ராகவன், சூர்யா என்று அவர்கள் பேசியதைத்தான் நான் எழுதினேன்" என்கிறார்.

ஸ்ரீஅரவிந்த அன்னை கூறுகிறார்:

"நூலாசிரியர்கள், எழுத்தாளர்கள் படைப்பாற்றல் உடையவர்கள். தங்கள் வேலையிலே அக எழுச்சி பெற்றவர்கள். அதாவது இலக்கியப் பணிக்கு தங்களை அர்ப்பணித்துக்கொண்டவர்கள். தங்களுக்குள்ளே உயிருள்ள ஒரு மன வடிவத்தை உண்டாக்குகிறார்கள். அது நன்கு உருவாக்கப் பட்டதாகவும் ஒருங்கிணைக்கப் பட்ட (முழுமை)தாகவும் இருக்கும். உடலுக்கு உட்படாத சுதந்திர வாழ்வு அதற்கு உண்டு. அதாவது அந்த எழுத்தாளர்கள் இறக்கும்போது உடல் மண்ணில் கலந்து விடும். இந்த மன உருவமைப்பு தனி சுதந்திரத்தோடு தொடர்ந்து வாழ்கிறது. ஏதோ ஒன்றை வெளிப்படுத்து வதற்காகவே அது உருவாக்கப்பட்டிருக்கிறது."

எழுத்தாளன் மற்ற எல்லா கலைஞர்களையும் ஆன்மீகவாதிகளையும் போல ஒரு சிருஷ்டி கர்த்தா. இல்லாததை உருவாக்குபவன். இதில் உருவாகும் சிருஷ்டி நாம் எதில் ஈடுபடுகிறோம் என்பதைப் பொறுத்தது. ஆன்மீகவாதி ஆன்மீகத்தின் உச்சத்தைத் தொடுகிறார். ஒரு சிற்பி அழகின் உச்சத்தை - தெய்வீகத்தைத் - தொடுகிறார். அதுபோல ஒரு எழுத்தாளன் தன் சிருஷ்டியின் உச்சத்தைத் தொடுகிறான். "நான் யார்? ஏன் வந்தேன்? என்று கேட்கும் ஒரு சுய சரித்திரத்தின் ஆசிரியன் அதன் உண்மையைத் தொடுகிறான்.

"உற்றுப் பார்த்து - எடுத்துக்கொண்ட பொருளுடன் ஒரு முனைப்படும்போது - தன்னை மறக்கும்போது - எது பார்க்கப்படுகிறதோ அது தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது" என்று பகவத் கீதை சொல்கிறது.

இது தேடலில் திகைத்த சக பயணியின் கதை; எதையோ தொட்டு தன் தேடலைத் தொடரும் ஒரு சகப் பயணியின் வரலாறு.

பலர் என்னிடம் நான் ஏதோ அமெரிக்காவின் சுகபோகங்களை எல்லாம் விட்டுவிட்டு பெரிய தியாக வாழ்க்கையை வாழ்வதாக பாராட்டுவார்கள்! அதெல்லாம் சுத்த 'பாஷ்'! அதெல்லாம் ஒன்றுமில்லை!

நான் என் வாழ்க்கையை வாழ்ந்து வருகிறேன்! எனக்குப் பிடித்ததை செய்து வருகிறேன், அவ்வளவுதான். எனது இத்தாலிய நண்பர் ஆங்கிலப் பேராசிரியர் விக்டர் மாக்கரூசோ சொல்வார்:

"முத்து ! இதோ பார்! எனக்கு ஆங்கில இலக்கியம் பிடிக்கிறது. இதைப் படித்துக் கொண்டிருக்கிறேன். எனக்குப் பிடித்த இந்த காரியத்தை செய்வதற்கு எனக்கு பேராசிரியர் என்ற பட்டம் சூட்டி, சம்பளம் வேறு கொடுக்கிறார்கள்!" என்று சொல்லி சிரிப்பார்!

என் கதையும் அப்படித்தான்.

பாசத்துடன், என் மனைவியுடன், குழந்தைகளுடன் வாழ்ந்தேன். ஆர்வத்துடன் எனக்குப் பிடித்ததை எழுதினேன். விருப்ப உணர்வுடன் எனக்குப் பிடித்த (பொது)க் காரியங்களைச் செய்து வருகிறேன்! அவ்வளவுதான்!

செயல் ஒன்றுதான் இந்த பொருளால் ஆன உலகத்திற்கு உரியது. செயல் ஒன்றுதான் நம் கையில் இருக்கிறது. அதுதான் இவ்வுலக வாழ்வின் தர்மம்.அந்த செயலை நல்லெண்ணத்தின் விளைவாக செய்கிறோமா என்று மட்டுமே நாம் தீர்மானிக்க வேண்டும்.

வாழ்த்துக்கள்!

சகபயணி

**—எம்.எஸ். உதயமூர்த்தி**

**சின்ன நீலங்கரை**
**சென்னை – 600 041**
**ஜனவரி 5 1999.**

# நன்றி

1) என் நூல்களை, தொடர்ந்து மிக அழகாக வெளியிட்டு, மிகுந்த அக்கறை எடுத்துக்கொண்டு பிரசுரித்து வரும் என் **இனிய நண்பர், சாதனையாளர் வானதி திருநாவுக்கரசு** அவர்களுக்கும் **அவரது குமாரர்கள் சோமுவுக்கும் ராமுவுக்கும்** என் இதய பூர்வமான நன்றி.

2) இந்த நூலை தொடர் கட்டுரைகளாக பிரசுரித்த கல்கி நிறுவனத்திற்கும் அதன் பதிப்பாளர் **கல்கி ராஜேந்திரன்** அவர்களுக்கும் இந்த அழகிய தலைப்பைக் கொடுத்து என்னை எழுதச் சொன்ன **கல்கி ஆசிரியர் திருமதி சீதா ரவி** அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி. மிகுந்த பொறுப்புடன் இத் தொடர் வாராவாரம் வெளிவர கவனம் செலுத்திய **துணை ஆசிரியர்கள் திரு. இளங்கோவனுக்கும், திரு. ராகவனுக்கும்,** நகைச்சுவை மிளிர கார்ட்டூன் போட்டுக் கொடுத்த கல்கி ஓவியர் **திரு. நடனம்** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்



முத்து-மீனாட்சி அம்மை சாமிநாதன்-காவேரி அம்மை

**மு. சிங்காரம் — கமலம் அம்மாள்**



**திருமதி. சீதாலஷ்மி**

தோற்றம் 1932 - மறைவு1997

# பொருளடக்கம்

1

# என்னைச் செதுக்கிய எண்ணங்கள்

திருமணமான புதிது. அப்போதுதான் பி. எஸ்ஸி. படிப்பை முடித்திருக்கிறேன். சீர்காழி இந்து உயர்நிலைப் பள்ளியில் எனக்கு ஆசிரியர் வேலை கிடைத்தது. பள்ளி ஆசிரியராகப் போக ஆசிரியப் பயிற்சி பெற்றிருக்க வேண்டும் - பி.டி. பட்டம் வேண்டும். ஆனால் பயிற்சி பெறாதவர்களையும் எடுத்துக் கொள்வார்கள்.

என் மாமா வீடு வைத்தீஸ்வரன் கோவிலில் இருந்தது. என் மனைவியின் அம்மா வழியில் என் மாமாவுக்குக் கிடைத்த பூர்வீக சொத்து அது! ஓய்வு பெற்று வந்ததும் வசிப்பதற்காகப் புதிதாக வீடு கட்டி இருந்தார்கள். அதிலேதான் நானும் என் மனைவியும் வாழ்வைத் துவங்கினோம். சீர்காழி நான்கு மைல் தூரம். சைக்கிளில் போய் வருவேன்.

எனக்கு வயது 21. என் மனைவி வயது 18. துணிச்சலான பெண். வேலை செய்யத் தயங்கமாட்டாள். வீட்டிலோ, தண்ணீருக்கு வசதி இல்லை. கொல்லையிலே கிணறு இல்லை. குளிக்க, துணி துவைக்க, பாத்திரம் விளக்க தினமும் தண்ணீரை வெளியில் இருந்துதான் எடுத்து வர வேண்டும். நாங்கள் இருந்த வீடோ, கடைத் தெரு முனையிலிருந்து நான்காவது வீடு. கடைத் தெரு எப்போதும் 'ஜே, ஜே' என்றிருக்கும். விடு வெட்டி ஆட்கள் எப்போதும் தெருமுனையில் நின்று கொண்டிருப்பார்கள். பஸ் நிற்குமிடம் அது. 'அது யார் வீடு?' என்பது கடைத் தெருவில் உள்ளவர்களுக்குப் பொதுவாகத் தெரியும். எனினும் ஒரு வயதுப் பெண் வெளியில் பல முறை சென்று குடத்தில் தண்ணீர் எடுத்து வருவது கஷ்டமான காரியமாகத்தான் இருந்தது.

என் மனைவி அதை எப்படி உணர்ந்தாளோ – நினைவில்லை. எனக்கு அது கஷ்டமாக இருந்தது. வள்ளுவர் ஓரிடத்தில் பாடுகிறார்:

"மலரன்ன கண்ணள் முகம் ஒத்தியாயின்
பலர் காணத் தோன்றன் மதி"

என்று.

அதாவது, "ஓ சந்திரனே, நீ என் காதலியின் முகத்தைப் போல அழகுடையவளாக இருந்தால் நீ பலர் காணத் தோன்றாதே" என்று பாடுகிறார். நானும் சந்திரனைப் பார்த்து அப்படிப் பாடும் நிலையில்தான் இருந்தேன்!

நாங்கள் வேலைக்காரியை வீட்டு வேலைக்கு வைத்துக் கொள்ளலாம்; குடும்பத்தில் நானும் என் மனைவியும் மட்டுமே. தண்ணீர் கொண்டு வருவதைத் தவிர வேலை ஏதும் கிடையாது. எனது மாதச் சம்பளமோ 65 + 22 = 87 ரூபாய். இதில் என் பெற்றோருக்கு அனுப்புவது போக குடும்பம் நடத்தத்தான் மிஞ்சும்.

ஒரு யோசனை தோன்றிற்று. மனைவியிடம் சொன்னேன்.

"இதோ பார்! நம் கொல்லையிலே ஒரு கிணறு தோண்டினால் என்ன?"

"ஆமாம். அதுதான் நல்லது. தண்ணீருக்காக வெளியே நடக்க வேண்டியதில்லை" என்றாள்.

கொல்லைக்குப் போனோம்; நோட்டம் விட்டோம். அதுவோ களிமண் பூமி. மேற்பரப்போ காய்ந்து கட்டாந் தரையாக இருந்தது. வீட்டிலே ஒரு மண்வெட்டியும் கடப் பாரையும் இருந்தது.

காய்ந்த தரையில், மண்வெட்டி போக மறுத்தது! நான் நினைத்தது போல வெட்டுவது ஒன்றும் சுலபமாக இல்லை! என்னுடைய வேலை, மண்வெட்டியால் வெட்டி மண்ணை வாரிக் கூடையில் நிரப்புவது. என் மனைவியின் வேலை அந்தக் கூடையைத் தூக்கிச் சென்று வேலி ஓரத்தில் கொட்ட வேண்டியது.

பள்ளியிலிருந்து சுமார் ஐந்து மணிக்கு வீடு வந்து சேர்வேன். ஆறரை வரையில் வெளிச்சம் இருக்கும்.

எங்கள் இருவருக்கும் 'கிணறு வெட்ட' வேண்டியதுதான் வேலை. பத்து நாட்களில் இடுப்பளவு ஆழம் போய் விட்டோம்.

மண்வெட்டி பிடித்த கைகள் காய்த்துப் போய் முரடு தட்டி இருந்தன. பள்ளிக் கூடத்தில் சக ஆசிரியர்களுடன் கை குலுக்கினால், அவர்கள் கேட்க ஆரம்பித்தார்கள். "என்ன மண் வெட்டி பிடித்தவன் கை போல கை கரடு தட்டி இருக்கிறது?" நான் சமாளிப்பதுண்டு. "நான் கிராமத்திலிருந்து வருகிற ஆள்! கை அப்படித்தான் இருக்கும்."

**ப**ல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்த போதே நான் தினமணியில் கட்டுரைகளும் 'பொன்னி'யில் கதைகளும் எழுதி வந்தவன். எனவே கரடு தட்டிய கைகளைப் பார்த்து எனக்கே அனுதாபம் ஏற்படும். "ஓ எழுத விரும்பும் விரல்களே, கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள். எழுத, உங்களை வலுப் படுத்துகிறேன் இப்போது." என்று நான் மானசீகமாகப் பேசுவதுண்டு. கை காய்த்துப் போனால் என்ன? நான் விடுவதாக இல்லை! நாங்கள் சோர்ந்து விடவில்லை. பன்னிரண்டு அடி வெட்டி இருப்போம். தண்ணீர் சுரந்தது. எங்களுக்கு ஒரே மகிழ்ச்சி! மேலும் இரண்டடி தோண்டினோம். மறுநாள் காலையில் நான்கடி ஆழத்திற்குத் தண்ணீர் நிறைந்திருப்பதைப் பார்த்து பெரு மகிழ்ச்சி. ஏதோ கங்கையை வீட்டுக்குக் கொண்டு வந்து விட்ட பெருமை. சுற்றிச் சுற்றி வந்தோம். அதையே பார்த்துக் கொண்டு நெடு நேரம் நின்றோம்.

களி மண் பூமியாதலால் கிணறு சரியவில்லை. கிணறு சதுரமாக அழகாக அமைந்தது. பல் விளக்கினோம்; பாத்திரம் துலக்கினோம். குளித்தோம்! அடாடா! என்ன ஆனந்தம்!

ஆனால் என் வீட்டிற்கு வந்த என் மாமாவும் மாமியும் உறவினர்களும் ஆச்சர்யத்துடன் கேட்டார்கள். "என்ன நீங்களா வெட்டினீர்கள்?" என்று. எனக்கு அவர்களது ஆச்சர்யம் புரியவில்லை.

ஆனால் எனக்கு மட்டும் தெரியும். அது தான் நான்; அதுதான் என் மனைவி!

"நான் சென்ற சில நாடுகள்" என்ற நூலில் திரு சி. சுப்பிரமணியம் அவர்கள் எழுதுகிறார். "அமெரிக்காவின் தலைநகரத்து விமானதளத்தில் இறங்கினேன். என்னை வரவேற்ற அமெரிக்க தூதர் என்னுடன் பேசிக்கொண்டு வந்தார். திடீரென்று அவரைக் காணோம். திரும்பிச் சென்று பார்த்தேன். எனக்குத் திடுக்கிட்டது. அங்கே அவர் என் பெட்டியைப் பெற்று அவரே தூக்கிக் கொண்டு வந்தார். அங்கே அவரவர்கள் பெட்டியை அவரவர்களே தூக்கிக் கொண்டு வந்தார்கள்!"

இன்றுகூட என் மைத்துனர்கள் எங்களது ஆரம்ப கால வாழ்வைப் பற்றிப் பேசும்போது "அவனும் இவளும் சேர்ந்து கிணறு வெட்டினார்கள்." என்று பெருமையுடன் சொல்வார்கள்.

என் வாழ்வில் தொடர்ந்து நிகழ்ந்த சம்பவங்களைப் பார்க்கும்போது எனக்கு ஜேம்ஸ் ஆலனின் வாசகங்கள் தான் நினைவுக்கு வரும். சொல்கிறார் ஆலன்: "சந்தர்ப்பங் களும் சூழ்நிலைகளும் ஒரு மனிதனை உருவாக்குவ தில்லை. உள்ளுக்குள்ளே இப்படிப்பட்ட மனிதன்தான் இருக்கிறான் என்பதை அவனுக்கே காட்டிக் கொடுக்கிறது"

உள்ளே எப்படிப்பட்ட மனிதன் இருக்கிறான்?

நானும் யோசிக்கிறேன். என்னைச் செதுக்கிய எண்ணம் எது?



2

# சீடன் தயாராகும்போது குரு தோன்றுவார்

அமெரிக்காவின் பிரபல செனட்டர் (பாராளுமன்ற உறுப்பினர் - மொத்தம் உள்ள நூறு பேரில் ஒருவர்) புல் பிரைட். அவர் ஒரு திட்டத்தைக் கொண்டு வந்தார். அதன்படி அமெரிக்க மாணவர்கள், பேராசிரியர்கள் வெளிநாடுகளில் சென்று மேல் படிப்பு படிக்கவும் அதே போல இந்தியா, பாகிஸ்தான் போன்ற நாடுகளில் உள்ள படித்த மாணவர்கள், அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் படிக்கவும் அமெரிக்கா நிதி உதவும் திட்டம் அது. இதன் மூலம் நமது நாட்டு சிறந்த மாணவர்களும பேராசிரியர்களும் அமெரிக்கா சென்று டாக்டர் படிப்பை மேற்கொள்ளலாம்; டாக்டர் பட்டம் இருந்தால் மேற்கொண்டு ஆராய்ச்சியை மேற்கொள்ளலாம. 'புல்பிரைட் அறிஞர்' என்ற பெருமை இதற்குண்டு. இத் திட்டத்தின்படி அமெரிக்கா சென்று படிக்க 1962ல் நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அப்போது நான் கிண்டி பொறியியல் கல்லூரியில் (இன்றைய அண்ணா பல்கலைக்கழகத்தில்) உதவி விரிவுரையாளராகப் பணியாற்றிக் கொண்டிருந்தேன். எனது வாழ்வின் சுவாரஸ்யமான காலகட்டம் அது.

அமெரிக்கா செல்வது, அதுவும் புல்பிரைட் திட்டத்தில் - ஒன்றும் சுலபமான காரியமல்ல. 1952ல் முதன் முதலாக இந்தத் திட்டம் அறிமுகப்படுத்தப் பட்டது. இளங்கலைப் பட்டப்படிப்பு போதும் என்று தகுதியைக் குறிப்பிட்டிருந்தார்கள்.

1952ல் நான் அமெரிக்கா செல்ல விண்ணப்பித்தேன். கிடைக்கவில்லை. அடுத்த ஓராண்டில் வெறும்

இளங்கலைப் பட்டம் போதாது. விண்ணப்பிப்பவர்கள் முதுகலைப் பட்டம் பெற்றிருக்க வேண்டும் என்று தகுதியை உயர்த்தி விட்டார்கள். நான் விடவில்லை. 1955ல் என் தகுதியை உயர்த்திக் கொள்ள மேல்படிப்புக்கு அண்ணாமலையில் சேர்ந்தேன். வேதியலில் எம்.ஏ பட்டம் பெற்றேன். மீண்டும் 1960ல் சென்னைப் பல் கலைக்கழகத்தில் மற்றுமோர் எம்.எஸ்.ஸி. பட்டம் (Organic Chemistry) பெற்று - அதாவது இரண்டு முதுகலைப் பட்டங்கள் பெற்று மீண்டும் விண்ணப்பித்தேன்.

அமெரிக்கா செல்ல என்னைத் தேர்ந்தெடுத்தார்கள். எனக்கு வயது 34. அப்போது வயதாகி விட்டதே என்று நான் கவலைப்படவில்லை. அமெரிக்காவுக்கு நான் சென்ற போது அங்கே கல்லூரிப் படிப்பை முடித்து விட்டு 22 வயது, 23 வயதில் அமெரிக்கா வந்த, பல பணக்கார வீட்டுப் பிள்ளைகள் இருந்தார்கள். நாம் ஏதாவது பேசினால், உடனே "நீங்களெல்லாம் பழங்காலம் சார். பழைய கதையைப் பேசுகிறீர்கள்" என்று வாய்க்கு வாய் எனக்கு வயதாகி விட்டதைச் சுட்டிக் காட்டினார்கள். எனக்குக் கோபம் வந்தது. நான் அவர்களைக் கேட்டேன்: "என்ன ஐயா இது! இள வயதிலேயே அமெரிக்கா வந்து நீங்கள் என்ன ஞானசம்பந்தர் மாதிரி பதிகமா பாடிவிட்டீர்கள்?" என்றேன்.

"இந்த வயதிலாவது வருவதற்கு எனக்கு வாய்ப்புக் கிடைத்ததே என்று நான் சந்தோஷப்படுகிறேன்."

அதற்குப் பிறகு அவர்கள் வாய் திறப்பதில்லை. அது மட்டுமல்ல; இன்னும் கூட ஏதோ அவர்களில் பலர் வருமானம் என்பதற்காக பேராசிரியர் வேலை பார்க்கிறார்களே தவிர, ஏதும் அதிலும் முத்திரை பதித்துவிடவில்லை.

**மே**ல்படிப்புக்கு அமெரிக்கா செல்ல ஆசைப்படும் பலர், தங்கள் பெற்றோருடன் என்னைப் பார்க்க வருவார்கள். ஒரு சிலரே "அமெரிக்காவுக்கு மேற்படிப்புக்கு செல்ல என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்பவர்கள். பெரும்பாலானோர் மேற்படிப்புக்கு வேலை பார்த்துக் கொண்டே படிக்க நீங்கள் சிபாரிசு செய்ய முடியுமா என்றுதான் கேட்பார்கள். இன்னும்

சிலர் ஒருபடி மேலே தாண்டி, "உங்கள் கம்பெனியில் வேலை கொடுங்கள்" என்று கேட்பார்கள். அவர்கள் பெற்ற பிள்ளையை நம்மிடம் தள்ளிவிட்டு "உங்கள் பிள்ளை போல பாவிக்க வேண்டும்" என்று சொல்வார்கள்! எனக்கு சிரிப்புத்தான் வரும்.

நான் அவர்களிடம் சொல்வதெல்லாம் இதுதான். "நடப்பு விஷயம் தெரியாது. ஏதோ நான் ஒரு சிபாரிசு கடிதம் கொடுத்து அவர்களை அமெரிக்காவுக்கு அனுப்பிவிட முடியும் என்று எதிர்பார்த்து வருகிறீர்கள். அது அப்படி முடியாது. நீங்கள் ஏமாற்றத்துடனே தான் திரும்புவீர்கள்!" என்று சொல்வேன்.

மேல்படிப்புக்குச் செல்ல விரும்புபவர்கள் பொதுவாக, நல்ல மார்க் வாங்கி இருக்க வேண்டும். அமெரிக்கப் பல்கலைக்கழகம் வைக்கும் மொழித் தேர்விலும், தகுதித் தேர்விலும் தேற வேண்டும். மிக முக்கியமாக, தங்கள் தகுதிகளை அவர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும். போதுமான மேற்படிப்புப் பட்டம் உள்ளவர்கள், ஏதாவது தொழில் துறையில் அனுபவமோ அல்லது ஆராய்ச்சித் துறையில் பட்டம் பெற்றிருக்கவோ வேண்டும். அப்படித் தங்கள் தகுதிகளை வளர்த்துக் கொள்ளாமல், இருப்பதை வைத்துக்கொண்டே அதே நிலையில் இருந்து கொண்டு அதிர்ஷ்டமில்லை என்று அங்கலாய்ப்பவர்கள் நம் ஊரில் அதிகம்.

நான் பெருமுயற்சி செய்து மேற்படிப்புப் படித்து என்னைத் தயார் செய்து கொண்டேன்.

இன்னும் எனக்கு நன்கு நினைவிருக்கிறது. எனது மாணவராய் இருந்த ஏ.சி. முத்தையா ஒரு கடிதத்தில் "நான் உங்களது சளைக்காத மனம் கண்டு வியக்கிறேன்" என்று எழுதியிருந்தார். 1952ல் அமெரிக்கா செல்ல விண்ணப்பித்த நான், பத்தாண்டுகள் கழித்துத்தான் 1962ல் அமெரிக்கா சென்றேன். பத்தாண்டுகள் போயிற்றே என்று நான் கவலைப்படவில்லை. பத்தாண்டுகள் கழித்தாவது போக முடிந்ததே என்கிற சந்தோஷம் தான், இன்னும்.

லூயிஸ் பாஸ்டியூர் என்ற பிரெஞ்சு நாட்டு விஞ்ஞானி, கண்ணுக்குத் தெரியாத கிருமிகள் காற்றில் மிதக்கின்றன. தண்ணீரில் இருக்கின்றன என்று

(மைக்ராஸ்கோப்) நுண்தரிசினி மூலம் உலகிற்குச் சொன்னவர். அவர் சொல்வார்: "அதிர்ஷ்டம் என்பது என்ன? அதிர்ஷ்டம் என்பது இரண்டும் இரண்டும் நான்கு என்கிற கணக்கு போல. அதாவது தயார் நிலை + வாய்ப்பு = அதிர்ஷ்டம்" என்பார். முதலில் தயார் நிலையில் நீங்கள் இருக்க வேண்டும்; அறிவு, அனுபவம், படிப்பு என்று எல்லா விதங்களிலும் நீங்கள் உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். அதாவது உங்கள் தகுதிகளை வளர்த்துக் கொள்ள வேண்டும். அந்தத் தயார் நிலையில் இருக்கும் போது வாய்ப்பு வருமானால், நீங்கள் உடனடியாக அதைக் கவ்விப் பிடித்துக் கொள்ளலாம்; அதுதான் அதிர்ஷ்டம். தயார் நிலையில் நீங்கள் இல்லாதபோது தகுதி இல்லாத போது-எத்தனையோ வாய்ப்புக்கள் அந்தத் துறையில் இருந்தாலும் உங்களை அந்த வேலைக்குத் தேர்ந்தெடுக்க மாட்டார்கள். நீங்கள் தயார் நிலையிலிருந்தால் வாய்ப்பு இன்றில்லாவிட்டால் நாளை நிச்சயமாக வரும். ஒரு வாய்ப்பு தவறினாலும் மறு வாய்ப்பில் பலன் கிடைக்கும். ஆகவேதான் எப்போதும் தயார் நிலையில் நம்மை வைத்துக் கொள்ள வேண்டும். நம் தகுதிகளை உயர்த்திக் கொள்வதில் கருத்தாயிருக்க வேண்டும்.

இதையே வேத உபநிடதங்களில் அழகாகக் கூறுவார்கள்.

"சீடன் தயாராக இருக்கும்போது குரு தோன்றுவார்" என்று. பலர் ஆன்மீகத் தேடலில் ஈடுபடுகிறார்கள். சரியான குரு கிடைக்கவில்லையே என்று அலைவார்கள். சீடன் உண்மையிலேயே மிகுந்த ஆர்வம் கொண்டு, ஒரு ஆன்மீக தாகத்துடன் இருக்கும் போது, குரு தானே தோன்றுவார் என்பது உபநிடத உண்மை மட்டுமல்ல, அனுபவ உண்மையும் கூட.

அலெக்சாண்டர் பிளெமிங் பெனிசிலின் மருந்தைக் கண்டுபிடித்தார் என்றால் அவர் தயார் நிலையில் இருந்தார் என்பதை நாம் உணர வேண்டும். இட்லியை இரண்டு நாள் மூடி வைத்துவிட்டுப் போனால் அதில் பச்சை நிறக்காளான் வளர்வதை நீங்களும் நானும் நம் வீட்டுப் பெண்மணிகளும் தான் பார்க்கிறோம். ஆனால்

அலெக்சாண்டர் பிளெமிங் அதைப் பற்றிய அறிவுடன் தயார் நிலையில் இருந்தார். எனவே அவர் பார்த்த பூஞ்சைக்காளான் அவருக்குப் பெரிய கண்டு பிடிப்பாயிற்று. எனவே நினைவில் கொள்வோம். எதை நாம் விரும்புகிறோமோ, அதற்கு முதலில் நம்மைத் தயார் செய்து கொள்வோம். அதன்பின் அது தானாகவே வரும், நம்மை நோக்கி!






3

## புளியமிலாறு தந்த ஆசி!

**கா**வேரி நதி பாயும் ஊர். ஒரு சிவன் கோவில். ஒரு பெருமாள் கோவில். ஊரில் நுழையுமுன் ஒரு ஐயனார் கோவில். எதிரே வெட்டவெளியில் மண்ணால் செய்யப்பட்டு வர்ணம் பூசப்பட்ட குதிரைகள் நின்று கொண்டிருக்கும். எதிரே ஒரு ஒற்றைப் பனை மரம். ஊரின் மூலைகளில் மூன்று மாரியம்மன் கோயில்கள். ஒரு அக்ரஹாரம், செட்டித் தெரு, ஒரு உடையார் தெரு, ஒரு மேளக்காரத் தெரு, வயல்களுக்கிடையே மற்ற குடியிருப்புகள். ஊரின் நடுவே ஓடும் சத்திய வாணன் வாய்க்கால்.

அந்த வாய்க்காலின் குறுக்கே பெருமாள் கோவிலுக்குச் செல்லப் பாலம் போட்டபோது என் தந்தைதான் அதைத் திறந்து வைத்தார். எங்கள் கிராமத்தில் முதல் முதலாக மின்சாரம் வந்தபோது என் தந்தையைத்தான் அழைத்து மின்னொளி வழங்கும் பொத்தானை அழுத்தச் சொன்னார்கள். நான் அப்போது அமெரிக்காவில் படித்துக் கொண்டிருந்தேன். செய்தியைக் கேட்டபோது, எனக்குப் பிடிபடாத பெருமை.

இத்தனைக்கும் என் தந்தை பெரும் பணக்காரரல்ல. ஏக போகத்திற்கு நிலம் நீச்சு கொண்ட தஞ்சை மிராசுதாரருமல்ல.

என் தந்தை அந்த கிராமத்தில் மளிகைக் கடை வைத்திருந்தார்கள். அதுதான் வருமானம். குடும்பம் நடத்துவதற்குப் போதுமான வருமானம் என்று சொல்ல முடியாது. எனினும் கௌரவமாக வண்டி ஓடிக்கொண்டிருந்தது. இருபது மைல் தள்ளி ஆறு மா நிலம் இருந்தது. அதிலிருந்து வீட்டுக்குப் போதுமான சீரகச் சம்பா நெல் வந்து சேரும்.

அந்த ஊரே ஒரு குடும்பம் போல் வாழ்ந்தது என்றால் மிகையாகாது. எல்லோருக்கும் எல்லோரையும் தெரியும்.

இரவு இரண்டு மணிக்கு வந்து கதவைத் தட்டுவார்கள். என் தந்தை கதவைத் திறந்து என்ன என்று கேட்பார்கள். "ஐயா! வீட்டில் பிரசவம். மருந்து வேணும்" என்று குரல் வரும். அலுக்காது சலிக்காது என் தந்தை உடனே அரிக்கன் லாந்தரைக் கொளுத்தி, கடைச் சாவியை எடுத்துக் கொண்டு போய் கடையைத் திறப்பார்கள். நாட்டு மருந்துச் சாமான்கள் எல்லாம் எடுத்துக் கொடுத்த பின் "காசு கொண்டு வந்திருக்கியா?" என்று கேட்பார்கள்.

"இல்லை ஐயா! ரெண்டு நாளில் கொடுத்து விடுகிறேன்" என்று பதில் வரும்.

"முன்பே பாக்கி இருக்கிறது. சரி போ! போ!" என்பார் என் தந்தை.

அவருடைய இத்தகைய உதவிதான் - அவர் செய்த புண்ணியம்தான் எனக்கெல்லாம் உதவியாக இருந்தது என்பது என் நினைப்பு. ஊரில் யாராவது நிலம் விற்றால், வாங்கினால் கடன் வாங்கினால் 'நோட்டு' எழுதுவதற்கு எங்கள் கடைக்குத்தான் வருவார்கள். அதற்காக காலணா வாங்க மாட்டார் என் தந்தை. எழுதிக் கொடுப்பார். என் தந்தையை காஞ்சிப் பெரியவர் சங்கர மடத்தின் தர்மாதி காரியாய் நியமித்திருந்தார். அந்த உத்தரவு வந்த கடி தத்தை நான் படித்திருக்கிறேன்.

**ஊ**ரில் ஜில்லா போர்டு நடத்தி வந்த ஒரு ஆரம்பப் பள்ளிக் கூடம். அதில்தான் நான் படித்தேன். உமா மகேஸ்வர அய்யர்தான் தலைமை ஆசிரியர். எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தவர் ரமணி அய்யர். பார்ப் பதற்கு பாரதி போன்ற நெடு நெடுவென்ற தோற்றம். கம்பீரம். முகத்தில் கண்டிப்புத் தெரியும்.

இரண்டாவது வகுப்பு என்று நினைக்கிறேன். கணக்கு போட்டுக் கொண்டு வரவில்லை என்று வெளியில் என்னை நிற்கச் சொன்னார். வெளியில் நின்றேன். ஏன் நிற்கிறோம் என்கிற விவரம் தெரியாத

வயது. கொஞ்ச நேரம் நின்ற பிறகு அலுத்துப் போய், வீட்டுக்குப் போய் விட்டேன். வீட்டுக் கொல்லையில் விளையாடிக் கொண்டிருந்தேன்.

சற்று நேரத்தில் ஆசிரியர் என்னைத் தேடி இருக் கிறார். நான் வீட்டுக்குப் போய் விட்டதாக யாரோ சொல்ல, பள்ளியிலிருந்து நேராக வீட்டுக்கு வந்தார். வருகிற வழியில் பெரிய புளிய மரம். ஒரு நல்ல புளியஞ் சிம்பை ஒடித்துக் கொண்டார்.

“எங்கே சின்னவன்?” என்றார்.

“ஏன்? கொல்லையில் விளையாடுகிறான்!” என்று சொல்லிக் கொண்டே என் தந்தை கடையிலிருந்து இறங்கி வந்தார். ஆசிரியர் நேரே கொல்லைக்கு வந்தார். எனக்கு புளியஞ் சிம்பினால் விளாசல் கிடைத்தது. என் தந்தை “அடிக்காதீங்க!” என்று மரியாதைக்காகச் சொன்ன ஞாபகம். நேரே அழுது கொண்டு அவர் பின்னால் மீண்டும் பள்ளிக்குச் சென்றேன். அவர்தான் எனக்கு டியூஷன் ஆசிரியரும் கூட. தினம் மாலையில் அரை மணி நேரம் பாடம் நடக்கும். காப்பி சாப்பிடுவார். வெற்றிலை பாக்கு போடுவார்.

அவர்தான் எனக்கு உலகிலேயே உயர்ந்த ஆசிரிய ராகப் பட்டார். “நல்ல அஸ்திவாரம் போட்டு விட்டால் போதும். அதற்குப் பிறகு ஒன்றும் தேவையில்லை” என்று அடிக்கடி சொல்வார் என் பெற்றோரிடம்.

நான் அமெரிக்காவிலிருந்தபோது அவர் ஓய்வு பெறுகிறார் என்று எழுதி இருந்தார்கள். அவர் ஓய்வு பெறுவதை பெரும் விழாவாக நடத்த வேண்டுமென்ற ஆசை எனக்கு.

நான் அமெரிக்காவுக்குக் கிளம்புமுன் 1962-ல் தேர்தல் வந்தது. எங்கள் மயிலாடுதுறை பாராளுமன்றத் தொகுதிக்கு, மரகதம் சந்திரசேகர் நிற்கிறார் என்று அறிவித்திருந்தார்கள். அப்போதே அவர் பிரபலமானவர். எனக்கு மகிழ்ச்சி. நான் அப்போது கிண்டி பொறியியல் கல்லூரியில் உதவி விரிவுரையாளராக வேலை பார்த்துக் கொண்டிருந்தேன். எனவே நேரே சாந்தோம் பகுதியில் உள்ள அவர் வீட்டிற்குச் சென்றேன். அவரது கணவர் சந்திரசேகரை சந்தித்தேன். பின் மரகதம் அம்மாவையும்

சந்தித்தேன். எங்கள் தொகுதியில் - பூம்புகாரில் மீனவர் களுக்கு ஒரு (Cold Storage) குளிர் சாதன வைப்பிடம் கட்டினால் நல்லது என்றும் இன்னும் பல விஷயங் களையும் அவரிடம் குறிப்பிட்டேன். அவர்கள் சந்தோஷப் பட்டார்கள்: வாக்களித்தார்கள்.

அமெரிக்கா சென்ற உடன் அவர் தேர்தல் நிதிக்காக ஒரு 200 ரூபாயை அனுப்பி இருந்தேன். அதை அவர் மயிலாடுதுறை பொதுக் கூட்டத்தில் பேசும்போது குறிப் பிட்டார். அந்தப் பணத்தை ஏதோ ஒரு நல்ல காரியத் திற்குக் திருப்பிவிட்டதைப் பற்றி பேப்பரில் படித்தேன். அமெரிக்காவுக்கு இந்தச் செய்தியைச் சுமந்த பேப்பர் கட்டிங் வந்தது.

இரண்டாண்டு கழித்து எனது பள்ளி ஆசிரியர் ரமணி அய்யர் ஓய்வு பெற்றபோது நான் மரகதம் சந்திர சேகருக்கு டெல்லிக்கு எழுதினேன். அப்போது அவர் மத்திய அமைச்சராக இருந்தார். எனது ஆசிரியர் ஓய்வு பெறும் விழாவில் பங்கேற்க வேண்டும் என்று. அவரும் ஒப்புதல் தெரிவித்து எழுதி இருந்தார். இதுதான் நான் அங்கிருந்து என் பள்ளி ஆசிரியருக்கு செய்யக் கூடிய மிகப் பெரிய கௌரவம்.

உடனே, ஊரில் உள்ள முக்கியமானவர்களுக் கெல்லாம் எழுதினேன். மத்திய அமைச்சர் விழாவுக்கு வருகிறார் என்றும் விழாவை சிறப்பாக நடத்துமாறும் எழுதி, ஆயிரம் ரூபாய்ப் பணமும் அனுப்பி இருந்தேன்.

ஆனால் ஊரில் உள்ளவர்கள் அதை நம்பத் தயாரா யில்லை! "என்ன! நம் கிராமத்துக்கு மத்திய அமைச்சர் டெல்லியிலிருந்து வருவதாவது! தலைமை தாங்குவ தாவது! அவன் ஏதோ ஆசையில் எழுதி இருக்கிறான்" என்று சொல்லி இருக்கிறார்கள்.

பின், ஒரு மாதம் கழித்து அந்த ஊரில் ஒரு ஜீப்பில் நான்கைந்து அதிகாரிகள் வந்து இறங்கினார்கள். எங்கள் வீட்டைத் தேடி இருக்கிறார்கள். "யார் இந்த ஆசிரியர்? என்றைக்கு விழா? மத்திய அமைச்சர் வருகிறார். டெல்லி யிலிருந்து சேதி வந்திருக்கிறது" என்று விசாரிக்கவும் ஆச்சரியத்துடன் ஊர் விழித்துக் கொண்டது. சுருக்க மாகச் சொன்னால் என் ஆசிரியர் ஓய்வு பெறும் விழா

''ஜாம் ஜாமெ''ன்று நடந்தது. எனக்குப் பெருமை: சந்தோஷம். பத்தாண்டுகள் கழித்து என் ஆசிரியர் சம்பந்தப்பட்ட ஓர் அதிசய சம்பவம் நடந்தது.

என் மூத்த மகன் சித்தார்த்தனுக்கு திருமணம். எம். ஜி. ஆர். அப்போது முதல்வர். அவர் முதல்வராகும் முன் அவரை அமெரிக்க பல்கலைக் கழகங்கள் சார்பில் நான் அழைத்திருந்தேன். ஒரு மாதம் அங்கே இருந்தார். நான் அவருடன் சுற்றுப் பயணம் செய்தேன். எனவே அவருடன் நெருங்கிய பழக்கம்; நட்பு. என் நண்பர் திரு மணியன்தான் சென்னையில் என் மகனின் திருமண வரவேற்புக்கான இடத்தையும் நாகசுர வித்வான் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் அவர்களது கச்சேரியையும் ஏற்பாடு செய்திருந்தார்.

என் ஆசிரியர் ரமணி அய்யருக்கு திருமண அழைப்பை அனுப்பிக் கொடுக்குமாறு என் உறவினர்களுக்கு எழுதி இருந்தேன். ரமணி அய்யர் காலமாகி விட்டதாய்ச் சொன்னார்கள். எனக்கு வருத்தமான வருத்தம்.

திருமண வரவேற்பில் ஏராளமான வி.ஐ.பிக்கள் வந்து கொண்டிருந்தனர். யாரோ அருகில் வந்தாற் போலிருந்தது. ஒரு கணம் திரும்பினேன். நெடு நெடு வென்ற உருவம். மூப்பின் தாக்கம். எளிமையின் முத்திரைகள்.

"நீதானே உதயமூர்த்தி?" என்று கேட்டார் அவர். எனக்குப் பொறி தட்டியது.

"நீங்கள் ரமணி சாரா?" என்றேன். "ஆம்" என்றார். கல்யாண வீட்டில் எனக்குத் தலை சுற்றியது.

என்ன இது! ரமணி சார்தான் இறந்து விட்டார் களே! இது என்ன? இது அவர் தானா? நிஜந்தானா? இல்லை, அவர் ஆவி இங்கே வந்திருக்கிறதா? செத்த மனிதர் எப்படி இங்கே வர முடியும்?"

பல கேள்விகள்; பல சந்தேகங்கள்! ஒரே குழப்பம். இதற்கிடையில் சில முக்கிய வி.ஐ.பிக்கள் என்னுடன் கை குலுக்க காத்துக் கொண்டிருந்ததால் "சார் ஒரு நிமிடம்" என்று சொல்லி விட்டு நகர்ந்தேன். கூட்டம் ஏராளம்.

எனவே ஐந்து நிமிடம் கழித்து திரும்பிப் பார்த்தால் ஆசிரியர் அங்கே இல்லை. இங்கே ஓடினேன்; அங்கே ஓடினேன். அவர் அடையாளம் சொல்லி "கண்டீர்களா?" என்று கேட்டேன். ஊஹ¯ம். ஒருவரும் கண்டதாகக் கூற வில்லை.

எங்கள் ஊரிலிருந்து வந்த ஒருவரைக் கேட்ட போது "அவர்தான் செத்துப் போய்விட்டாரே" என்றார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. என் பேராசிரியருக்கு ஒரு காப்பி கொடுத்துக் கூட, நான் உபசரிக்கவில்லை. உட்காரக் கூட சொல்லவில்லை" என்று என் மனம் என்னை சாடிக் கொண்டிருந்தது.

"செத்துப் போனவர் என் மேல் உள்ள அன்பினால் வந்திருக்கிறார். என் மூத்த மகனும் அவரிடம் படித்தான். எனவேதான் வந்திருக்கிறார்." நான் எனக்கே பலமுறை சொல்லிக் கொண்டேன். என்னை நிந்தித்துக் கொண்டி ருந்தேன் பல காலம்.

சென்னைக்கு நிரந்தரமாகக் குடி வந்தபோது 1990-ல் ஊரிலிருந்து என் உறவினர் ஒருவரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அது ரமணி சார் அவருக்கு எழுதிய கார்டு. தாம் ஓய்வு பெற்றபோது எடுக்கப்பட்ட விழாவின் போட்டோ படம் வேண்டுமென்று கேட்டு என் நண்பருக்கு எழுதி இருந்தார். எழுதியிருந்த வருடம் 1990. அவர் எழுதி இருந்த விலாசம் கோடம்பாக்கத்துக்கு, அருகிலுள்ள சாலிக்கிராமம். ஆகா! ரமணி சார் உயிருடன் இருக்கிறார்; உயிருடன் இருக்கிறார். மனம் துள்ள, பழங்களை வாங்கிக் கொண்டு ஓடினேன். வீட்டைக் கண்டு பிடித்தேன். சாஷ்டாங்கமாக அவர் காலில் விழுந்தேன். என் கண்களில் நீர் துளித்தது. மகனுட னும் மகளுடனும் பேரக் குழந்தைகளுடனும் அவர் அங்கே இருந்தார். அவரது மருமகளும் மகனும் எனக்கு காப்பி கொடுத்து உபசரித்தார்கள். மருமகள் கேட்டார்:

"மாமா, உங்களைப் புளிய மிலாறினால் அடித்ததாக 'பள்ளி அனுபவங்க'ளில் விகடனில் எழுதி இருக்கிறீர் களே? மாமா உங்களை அடித்தாரா?" நான் சிரித்துக் கொண்டேன், பதிலாக. புளிய மிலாறு! அவர் தந்த ஆசி யல்லவா அது!

என் முதல் மனவியல் புத்தகம் "எண்ணங்கள்". அதை என் பெற்றோருக்குச் சமர்ப்பித்திருந்தேன். எனது இரண்டாவது புத்தகம் "மனம், பிரார்த்தனை, மந்திரம்" என்பது. மாதா, பிதா, குரு, தெய்வமல்லவா? எனவே அந்த இரண்டாவது நூலை எனது மூன்று ஆசிரியர் களுக்குச் சமர்ப்பித்திருந்தேன். அந்த 'காணிக்கை'ப் பக்கத்தில் நான் எழுதி இருந்த வாசகங்கள்:

- பாரதியைப் போல் தோற்றமும் கம்பீரமும் அறிவும் தெளிவும் கொண்ட என் ஆரம்பப் பள்ளி ஆசிரியர் ரமணி அய்யர் அவர்களுக்கு.
- பாரபட்சமற்ற நோக்கையும் விஞ்ஞான மனோ பாவத்தையும், தெளிவையும், தைரியத்தையும் ரசாயன பாடத்துடனே சேர்த்துப் போதித்த டாக்டர் பாலையா அவர்களுக்கு.
- உலக ஞானத்தை 'கல்கி' என்ற பத்திரிகை மூலம் எனக்குப் போதித்த பேனா மன்னர் பேராசிரியர் கல்கி அவர்களுக்கு.

'அவர்களை நெஞ்சில் நிறுத்தி வணங்குகிறேன்' என்று எழுதி இருந்தேன்.

4

# உலக ஞானத்தைப் போதித்தவர்

"நாங்கள் எல்லாம் எழுத்துலக ஏகலைவர்கள். கல்கிதான் எங்கள் குரு" என்று கி.ரா. போன்ற அன்றைய பல எழுத்தாளர்கள் எழுதியிருந்தார்கள். அது உண்மை. அதில் நான் ஒருவன்.

கல்கியை தியாகபூமியிலிருந்து, கள்வனின் காதலி யிலிருந்து நான் படித்தவன். பார்த்திபன் கனவில் வருகிற சிவனடியார் எங்கே தன் துணிமணிகளை ஒளித்து வைத்திருந்தார், எந்த அய்யனார் கோயில் மண் குதிரை களுக்குள் என்று கல்கி எழுதுவார். மாயவரத்திலிருந்து வைத்தீஸ்வரன் கோவில் போகிற வழியில் உள்ள அய்யனார் கோயில்தான் அது என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்.

சிவகாமியின் சபதத்தைப் படித்தபோது நரசிம்ம வர்மரின் காதலியாய்த் துவங்கிய மகோன்னத நாட்டியப் பெண்ணின் கதை முடிவில் திருமணம் ஆகாதவளாய், இறைவன் பால் அன்பு கொண்ட சிவகாமியாய் நின்ற கோலம், என் கண்களை விட்டு அகலவில்லை; கண்ணீர் வராத நாளில்லை.

பொன்னியின் செல்வனில் எழுதுவார் முடிவில்: "வந்தியத் தேவா! உன் துயரம் நிறைந்த சிந்தனைகளை இப்போது நாங்கள் கலைக்க விரும்பவில்லை. உன்னைப் பிறகு சந்திக்கிறோம்" என்று. நம் கண்கள் கலங்கும்.

திருவழுந்தூர் சிவக்கொழுந்தின் ஊரும் எங்கள் ஊருக்கு அருகே உள்ள ஊர்தான். வீணை பவானியை யார் மறக்க முடியும்?

கல்கி ஒரு பெரிய கற்பனை உலகை எனக்கு சிருஷ்டித்துக் கொடுத்தார். "இன்றைய கனவுகள் -

கற்பனைகள்தான் நாளைய நிஜங்கள்'' என்கிறார் ஜேம்ஸ் ஆலன்.

மயிலாடுதுறை பள்ளியில் அப்போது பத்தாவது படித்துக் கொண்டிருந்தேன். வெள்ளிக்கிழமை பரீட்சை நாள். அன்றுதான் கல்கி வரும். நான் காலை ஏழிலிருந்து ஒன்பது மணிரரை கல்கியைப் படித்து முடிப்பதில் மும்முரம் காட்டுவேனே ஒழிய, பரீட்சைக்குப் பாடம் படிக்கிற நினைப்போ, பயமோ இருக்காது. அவ்வளவு ஈடுபாடு.

அதுதான் எனக்குள்ளே என்னை அறியாமல் இருந்த ஜீவதாகம் போலிருக்கிறது.

சிறுவனாக இருந்தபோதே கதை கேட்பதில் மிகுந்த ஆர்வம். கிராமத்தில், மதிய வேளையில் வேறு ஒன்றும் பொழுது போக்கு இல்லை. அடுத்தடுத்த வீடுகளில் என்னைவிட வயதில் மூத்த சகோதரிகள் இருந்தார்கள். அவர்கள் நிறைய கதை சொல்வார்கள். பிறகு ஒருநாள் "நீ கதை சொல்லு" என்று என்னைக் கேட்கப் போக, இது வரை நான் கேட்ட பல கதைகளையும் கலந்து ஒரு புது கலவைக் கதையைச் சொன்னது இன்னும் என் நினைவில் இருக்கிறது!

ஒரு சமயம் எட்டாம் வகுப்பு படிக்கும்போது நான் ஒரு கதை எழுதி இருந்தேன். என் அண்ணனிடம் காட்டினேன். "நீ கல்கியை காப்பி அடித்து எழுதி இருக்கிறாய்!" என்று சொல்லிவிட்டார். அது உண்மையல்ல. எனக்கு வருத்தமும் கூட. அதாவது நான் அத்தனை கல்கியின் கதையையும் படித்து மூழ்கி மூழ்கி - நான் அதாகவே மாறி விட்டேன் என்பதுதான் உண்மை என்ற விளக்கத்தைப் பின்னால்தான் தெரிந்து கொண்டேன்.

திரு எஸ்.ஏ.பி. காலமாவதற்கு இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன், அவரது அரசு கேள்வி பதிலை ஒரு வாரம் என்னை எழுதுமாறு கேட்டிருந்தார்கள். கேள்விகள் தரப்பட்டன.

நான் எஸ்.ஏ.பி. கேள்வி பதிலை பெரிதும் ரசிப்பவன். எனவே பதில் எழுத முன் வந்தபோது எஸ்.ஏ.பி. இதற்கு எப்படி பதிலளிப்பார் என்ற அவர் மன நிலை தான் என்னுள் எழுந்தது; என்னுள் மேலோங்கி இருந்தது.

சில கேள்விகளுக்கு எஸ்.ஏ.பி. மறைமுகமாக செக்ஸியாக பதிலளிப்பது வழக்கம். பின் "ஹி.. ஹி.. ஹி.." என்பார்.

பதில்களை நான் எழுதினாலும் - நான் எஸ்.ஏ.பியாக என்னை எண்ணிக் கொண்டு எழுதி, எனது பதில்களை சந்தோஷமாக, வெற்றிப் புன்னகையுடன் அனுப்பி வைத்தேன். இரண்டு நாள் கழித்துத்தான் "என்ன முட்டாள்தனம் செய்து விட்டோம்" என்ற ஞானம் பிறந்தது. ஆனாலும் காலம் தாழ்ந்து விட்டது. ஏனெனில் அது உடனடியாக பிரசுரத்திற்குப் போய் விட்டது.

எனக்கோ மிகுந்த கவலை; வருத்தம், என் மீதே. வெளி வந்த பதில் எனது 'பர்சனாலிட்டியைப் பிரதி பலிக்காது. என்னை அப்படி என் வாசகர்கள் ஏற்றுக் கொள்ள மாட்டார்கள்' என்பது எனக்கு நன்றாக தெரியும்.

குமுதம் வெளி வந்தது. அப்போதுதான் எஸ்.ஏ.பி. எவ்வளவு மகா கெட்டிக்காரர் என்பதைப் புரிந்து கொண் டேன். எனது கேள்வி பதிலை "உதயமூர்த்தியின் நகைச் சுவைப் பதில்கள்" என்று தலைப்பிட்டு என்னை காப் பாற்றினார்!

இனி நாம் நாமாக இருக்க வேண்டும்; என்னை நானே கண்டித்துக் கொண்டேன். வேடிக்கையாகக் கூட பிறரை 'இமிடேட்' செய்யக் கூடாது என்று என்னுள் சொல்லிக் கொண்டேன்.

நான் மாயவரம் முனிசிபல் பள்ளியில் படித்தவன். கல்கிக்கு மாயவரம் பகுதி மீது, தஞ்சை மீது அபரிமித மான காதல்.

ஒரு சமயம் மாயவரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் மிகுந்த அருமையாக நிர்வாகம் செய்து 98% சதம் மாணவர்களை தேறச் செய்த தலைமையாசிரியர் என்.எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர் அவர்களுக்கு நிர்வாகம் இடைஞ்சல் கொடுத்தது. கல்கி எழுதினார் பத்திரிக்கையில். மாயவரம் முனிசிபல் கமிஷனர் சாக்கடை நிர்வாகம் செய்கிறார் என்று எழுதி வெளுத்துக் கட்டினார். தஞ்சையில் ஓர் இரவு நாடகம் போட்ட

சி.என். அண்ணாதுரையை தமிழ்நாட்டு பெர்னர்ட் ஷா என்று எழுதினார்.

கல்கி பிறரைப் பாராட்டுவதில் மன்னர். தஞ்சையிலுள்ள நாதஸ்வர வித்வான்கள் பலருக்கும் இவரால் பெருமை வந்தது. கலையும் இசையும் இவர் எழுத்துக்களால் புது மலர்ச்சி பெற்றன.

முதன் முதலாக 1942 வாக்கில் என்று நினைக்கிறேன். கல்கி சத்தியாகிரகப் போரில் இறங்கினார். மாயவரத்தில் சத்தியாக்கிரகம் செய்வதாக இருந்தது. மறுநாள் காலை முனிசிபல் அலுவலகம் முன்னால் சத்தியாக்கிரகம்; கைதாகப் போகிறார். முதல் நாள் இரவு மாயவரம் பெரிய ஆஸ்பத்திரிக்கு முன்னால் உள்ள பெரிய வீட்டில் அவர் பேசுகிற கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தார்கள். நுழைவுக் கட்டணம் 2½ அணா. நானும் என் பள்ளி ஆசிரியரும் போயிருந்தோம். கல்கி அவர்களைப் பார்த்தேன். சிறிய மெலிந்த உருவம். கீச்சுக் குரல் எனினும் கம்பீரமான தோற்றம்.

குமுதத்திலே ஆரம்ப காலத்தில் கல்கியைப் பற்றி ஒரு கட்டுரைப் போட்டி வைத்திருந்தார்கள். அதில் முதல் பரிசை இரண்டு பேருக்குக் கொடுத்தார்கள். அதில் நான் ஒருவன்; கல்கியைப் பற்றி எழுதி முதல் பரிசு பெற்றவன். அப்போது நான் அதிகம் துமிலன் அவர்கள் ஆசிரியராயிருந்த தினமணி கதிரில் நிறைய கதைகள், கட்டுரைகள் எழுதி வந்தாலும் கூட இதுதான் எனது முதல் பரிசு, இலக்கிய உலகில். நான் அதைப் பெரிதும் மதித்தேன். குமுதத்திலிருந்து பரிசுப் பணத்தை அனுப்பி இருந்தார்கள். நான் பணத்தைத் திருப்பி அனுப்பி விட்டு எழுதினேன். "ஐயா! நன்றி பரிசுக்கு! நீங்கள் கொடுக்கும் பணம் என் அன்றாட வாழ்வின் செலவுகளில் கலந்து காலப் போக்கில் காணாமல் போய்விடும். எனவே இதை ஒரு ஞாபகர்த்தமாக ஒரு மெடல் போலவோ, எதுவாகவோ அனுப்பினீர்களானால் காலத்திற்கும் அது என் நினைவிலிருக்கும். உதவும்" என்று எழுதினேன்.

ஒரு பெரிய நிறுவனத்தில் அளிக்கப்பட்ட ஒரு சிறிய பரிசுக்கு முக்கியத்துவம் கொடுத்து ஏதாவது செய்வார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. எஸ்.ஏ.பி. அவர்கள் ஒரு

பதினைந்து நாளில் பவுனாலும் வெள்ளியாலும் ஆன, கழுத்தில் போட்டுக் கொள்ளக் கூடிய ஒரு மெடலை கல்கி கட்டுரைப் போட்டி முதல் பரிசு என்று பொறித்து எனக்கு அனுப்பி இருந்தார்.

எனக்கு ஏற்பட்டது பெருமகிழ்ச்சி.

என மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ள நான் எனது நண்பர் கல்கி ராஜேந்திரன் அவர்களைக் கூப்பிட்டேன். அவர் வீட்டில் இல்லை. அம்மா - அவரது தாயார் எடுத் தார்கள். கல்கி அவர்களின் மனைவி பேசுகிறார் என்று கேட்டதும் எனக்குப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டது. நான் எனக்குப் பரிசு கிடைத்த விஷயத்தைச் சொன்னேன். அவர்கள் சொன்னார்கள்:

"நான் வயிற்றில் என் மகனை உண்டாகி இருந்தேன். எனவே 'இப்போது சத்தியாகிரகம் செய்து ஜெயிலுக்குப் போக வேண்டாம்' என்று எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். மறுத்துவிட்டார்.

"பின் ராஜாஜியிடம் சொல்லி அவரைச் சொல்லச் சொன்னேன். அவரும் சொல்லிப் பார்த்தார். அவர் கேட்கவில்லை. ஜெயிலுக்குப் போக தீர்மானித்து விட்டார்.

"அப்போதுதான் எனக்குப் புரிந்தது. இவர் எனக் காக மட்டும் பிறக்கவில்லை. இவர் நாட்டுக்காகப் பிறந்தி ருக்கிறார் என்று!" கேட்ட எனக்கு மயிர் சிலிர்த்தது.

அவர் நாட்டுக்காகப் பிறந்தவர்.

மாந்தருக்குள் ஒரு தெய்வத்தைக் காட்டியவர். மனிதர் குல மாணிக்கத்தை எடுத்து வெளியில் வைத்தவர். மூன்று மாதக் கடுங்காவலை இலக்கியமாக்கியவர்.

**தம் எழுத்தால் சுதந்திரத்திற்கு முன்னும் பின்னும் ஒரு தலைமுறையைத் தம் வசமாக்கியவர்.**

அப்போது 1954ம் ஆண்டு கால கட்டம். நான் குடந்தை அரசினர் கல்லூரியில் வேதியல் துறையில் சோதனைக்கூட உதவி ஆசிரியராக பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

நன்றாக நினைவிருக்கிறது இன்றும். திடீரென்று ஒரு நாள் புதன்கிழமை என்று நினைக்கிறேன். மற்ற ஆசிரியர் களுடனும் எங்கள் துறைத் தலைவருடனும் பேசிக் கொண்டிருந்த போது கல்கி அவர்களின் எழுத்துக்களைப் பற்றிப் பேச்சு வந்தது. நான் கூறினேன்.

“கல்கி அவர்கள் போய்விட்டால் அவர் போல எழுத இனியார் இருக்கிறார்கள்?” என்றேன். இதையே தான் சுமார் மூன்று மணிநேரம் பேசிக் கொண்டிருந் தோம்.

என்னமோ தெரியவில்லை. வியாழக் கிழமையும் இதே விஷயம்தான் பேசினேன். வெள்ளிக் கிழமையும் கல்கி போய் விட்டால் என்றுதான் நான் பேசிக் கொண்டி ருந்தேன். வெள்ளிக் கிழமை காலை வெளி வந்த கல்கி இதழில் கல்கிக்கு உடல் நிலை சரியில்லை என்றும் மருத்துவமனையில் சேர்க்கப்பட்டிருக்கிறார் என்றும் எழுதி இருந்தார்கள். எனக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அடுத்த சனி, ஞாயிறு லீவு நாட்கள் போக திங்கள் காலை பத்திரிகையில் கல்கி அமரரானார் என்ற செய்தி வந்தது.

நான் சொல்லற்று, பேச்சிழந்து நின்றேன்.

இன்றும் நான் யோசிக்கிறேன். ஏன் கல்கி அவர்கள் இறக்கும் ஒரு வாரம் முன்பாக அவர் நினைவாக “அவர் போய் விட்டால்” என்று புலம்பிக் கொண்டிருந்தேன், என்று. என்ன அந்த உள்ளுணர்வு? என்ன அந்தத் தொடர்பு? பேசிப் பழகி, கூட ஒருவருடன் இருந்து வாழ் தல் வேண்டாம்; தேவையில்லை. அவரைப் பற்றிய உணர்வு - நினைவு அந்த நினைவின் ஆராதனை அவர் உடல் நிலையை எனக்குப் புலப்படுத்தியதா?

எனது எண்ணங்கள் மட்டும் என்னைச் செதுக்கி உருவாக்கவில்லை. நான் ஆராதித்த உயர் மனிதர்களின் உணர்வுகள் எல்லாம் எனக்கு வழிகாட்டி, என்னை உருவாக்கி வந்திருக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும்.



5

# பாரம்பரியம் தந்த பலம்

என்னுடைய தந்தையும், என் முன்னோரும் செய்து வந்த வணிகத் தொழில் பற்றிய நினைவும், என் தந்தையின் நினைவும் எனக்கு உற்சாகம் தந்தன. என் மீதே நான் நம்பிக்கை கொள்ள என் பூர்வீகம் காரணமாயிருந்தது.

அமெரிக்கப் பண்பாட்டையும் இந்தியப் பண்பாட்டையும் ஒப்பிட்டு நான் ஒரு கல்வித் திட்டம் எழுதினேன். நான் பேராசிரியராக இருந்த கல்லூரி, ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியும் கூட. எனவே ஆசிரியர்களுக்கு ஆசியப் பண்பாடு பற்றிய அறிவு தர ஒரு திட்டத்தை எழுதினேன்.

அமெரிக்காவில் குழந்தை வளர்ப்பில் அதிக சுதந்தரம் கொடுக்கப்படுகிறது. இதன் விளைவாக இளைஞர்கள் (பெண்கள்) பெற்றோர் அனுமதியுடன் 16 வயதிலேயே கார் ஓட்டும் உரிமம் பெறலாம். பதினெட்டு வயதாகி விட்டால் அவர்கள் தாங்களே நேரடியாக இந்த லைசென்சைப் பெறலாம்.

ஒரு பெண் பதினெட்டு வயது ஆனவுடன் அவள் தன் சுதந்திரத்தைப் பிரகடனப்படுத்துவது போல — அதே ஊரில் பெற்றோர் இருக்கும் போதே — தனி அறை எடுத்துக்கொண்டு சுதந்திர வாழ்க்கையை வாழத் துவங்குவாள்.

ஆண் - பெண் உறவு பற்றி அவர்கள் அதிக ஆசாரம் பார்ப்பதில்லை. ஒருவனை ஒருத்தி விரும்பினாள் என்றால், அவன் தனக்கேற்றவன் என்று தீர்மானிப்பாளானால், அவன் தன்னைத் திருமணம் செய்து கொள்வான் என்ற நம்பிக்கை ஏற்படும்போது, பல சமயம் அவர்கள் இருவரும் சேர்ந்து வாழ்வார்கள்.

நமது ஊரில் சிலர் எண்ணிக் கொண்டிருப்பது போல எல்லோருக்கும் 'யெஸ்' சொல்லி விடுகிற வகை அல்ல!

இதன் விளைவாகவோ என்னவோ, அவர்கள் மற்றவரது சமுதாய கௌரவம், குடும்பப் பாரம்பரியம், குடும்பம், பழகும் விதம், பெற்றோரின் தன்மை, பொருளாதார ஏற்றத் தாழ்வு விளைவிக்கும் மனோபாவ சிக்கல்கள், இதை எல்லாம் பார்ப்பதில்லை. திருமணத்தைப் பற்றி முடிவு செய்யும்போது இவற்றை எடுத்துக் கொள்வதில்லை.

ஆசையின் பேரில், அழகின் பேரில், ஒருவனது திறமையின் பேரில், படிப்பின் பேரில் நம்பிக்கை வைத்துத் திருமணம் நிச்சயிக்கப்படும். விவாகரத்துகள் ஐம்பது சதத்திற்கு மேல். இதற்குக் காரணம், கீழை நாடுகளிலுள்ள குடும்பக் கட்டுக்கோப்பும் விட்டுக் கொடுக்கும் குணமும், சகிப்புத் தன்மையும், ஆயுள் பரியந்த உறவு என்ற ஆழமான எண்ணமும் அதன் முக்கியத்துவமும் போற்றப் படாததுதான், என்பது எனது அபிப்பிராயம்.

அம்மா அப்பாவையும் அந்திம காலத்தில் 'நர்சிங் ஹோம்' எனப்படும் முதியோர் இல்லத்தில் சேர்த்து விடுவார்கள். எந்த அந்திம காலத்தில் அனுசரணையும், பாதுகாப்பும் பாசப்பிணைப்பும் ஆறுதல் தருமோ, அது அங்கில்லாமல் போய் விடுகிறது!

ஏதோ குருவிக்குஞ்சு வீட்டை விட்டு வெளியேறி விடுவது போல, புலிக்குட்டியைத் தாய் ஒரு காலகட்டத்திற்குப்பின் விரட்டி விடுவதைப் போல வாழ்க்கை - அதாவது தனித்துவம் சுதந்திரம் - அமைந்திருக்கிறது.

தனித்துவமும் சுதந்திரமும் அதிகமாக அங்கு போற்றப்படுகின்றன. இன்று நான் தெரிந்து கொண்ட உண்மை இந்தப் பிரபஞ்சமும் அதில் உள்ள அனைத்தும் தனித்தும் இயங்குகிறது; இணைந்தும் இயங்குகின்றது என்பதுதான். பொருளாலான உலகில்தான் வாழ்கிறோம்; பொருளுக்கு அப்பாற்பட்ட ஒரு உலகம் - நம் சிந்தனை உலகம்தான் இங்கே நம் வாழ்வை நடத்துகிறது.

மனிதனும் பிரபஞ்சமும் தனித்தும் இணைந்தும் இயங்க வேண்டும். ஒரு பெரிய கச்சேரி போல. கச்சேரி

யில் வாய்ப்பாட்டுக்கு ஓரிடம், வயலின் இசைக்கும் ஒரு தேவை, மிருதங்கத்தின் நாதத்திற்கு ஒரு தேவை, மோர்சிங், கடம், தம்புரா, தாளம் என்று எல்லாவற்றிற்கும் ஓர் இடம் - ஒரு தேவை இருக்கிறது. எல்லாம் இணைந்தும் சமயத்தில் தனி ஆவர்த்தனமும் நடத்துகின்றன. இதுதான் பிரபஞ்ச அமைப்பின் நியதி.

இதில் தனித்துவமும் தனி மனித சுதந்தரமும் மேலோங்கி நிற்குமானால், நாம் சூழ்நிலையிலிருந்து அந்நியப்படுத்தப்படுவோம். அது தான் அங்கு நிகழ்கிறது.

இது என்னை மிகவும் உறுத்தியது. பைபிளிலே ஓரிடத்தில் 'உலகின் மீது ஆதிக்கம் செலுத்து' (Dominate the Earth)என்கிற பாணியில் ஒரு வரி வருகிறது. அமெரிக்கர் கள்தான் அதை மட்டும் தனியே எடுத்துக் கொண்டு பின் பற்றுகிறார்களோ, இல்லையோ - அணு சக்தியிலிருந்து, சூழ்நிலையைப் பாழ்படுத்தும் ரசாயனங்கள் உற்பத்தி செய்வதிலிருந்து எங்குமே இயற்கை மீது ஆதிக்கம் செலுத்தும் மனோபாவம் ஊறிப் போயிருக்கிறதோ என்கிற ஒரு எண்ணம்; அச்சம், என்னுள்.

இதை முன்வைத்து நான் ஒரு கல்வித் திட்டம் எழுதினேன். அமெரிக்க மாணவர்கள் பிற நாட்டு வாழ்க்கை முறைகளையும், குடும்பப் பாங்கினையும், குறிப்பாக கீழை நாட்டு கலாசாரத்தை நன்கு தெரிந்து கொள்ள வேண்டும். தங்கள் கலாசாரத்துடன் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும்; அதற்கேற்ப அடுத்த தலைமுறை களுக்குப் பாடத் திட்டம் அமைக்கப்படவேண்டும் என்பது என் திட்டம். அதை அமெரிக்க கல்வி இலாகா ஏற்றுக் கொண்டு அத்தகைய ஆசிரிய பயிற்சிக்கான பணத்தை எங்களுக்கு தந்தது. அதற்கான ஆசிரியப் பயிற்சிக்காக ஐந்து ஆசிரியர்களை எங்கள் கல்லூரியி லிருந்து இந்தியாவுக்கு அழைத்து வந்தேன். ஒரு பத்து வாரப் பயிற்சி கொடுத்த பின் பாடத் திட்டத்தில் இந்த விழிப்புணர்வை அனுபவ அறிவை (Cross Cultural Studies) பிற மக்களது கலாசாரப் பாடமாகப் படிக்க வேண்டும் என்று திட்டம் தீட்டி வாஷிங்டனில் உள்ள கல்வித் துறைக்கு அனுப்பினேன்.

நான் சமுதாய இயல் (Sociology) பாடம் சொல்லிக் கொடுக்கும் பேராசிரியரல்ல; சமுதாய இயல் பாடம் படித்த மாணவனுமல்ல. என் துறையோ வேதியல்! (Chemistry) பொதுவாக நீங்கள் எந்தத் துறையில் வல்லுன ராகப் பயிற்சி பெற்றுப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்களோ, அந்தத் துறையில்தான் நீங்கள் மானியம் பெற முடியும்.

ஆனால் இந்த என் திட்டத்தை அவர்கள் ஏற்றுக் கொண்டு விட்டார்கள். ஆசிரியர்களை இந்தியாவுக்கு அழைத்துச் செல்ல மானியம் அளித்தார்கள். இது பல்கலைக் கழகத்தின் அரசியல் மற்றும் சமுதாய இயல்துறைகளில் இருந்த பேராசிரியர்கள் என்னைக் கண்டு கொள்ளவும், என்னைப் பற்றிய தனி எண்ணம் அவர்களுக்கு ஏற்படவும் காரணமாயிற்று.

"முயன்றால் முடியாததில்லை. ஆர்வம் இருந்தால் யாரும் தாழ் போட முடியாது. சூரியனை யாரும் கையால் மறைத்ததில்லை!" இப்படி நான் அடிக்கடி சொல்வதுண்டு. அதுவே நிஜமாயிற்று!

**எ**னக்கு எப்போதுமே அரசியல் பாடத்திலும், சமுதாய இயல் துறைப் படிப்பிலும் பொதுவான நாட்டம் அதிகம். எனக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் விஸ்கான்ஸின் பல்கலைக் கழக பிரபல பேராசிரியர் டாக்டர் ஹென்ரி ஹார்ட்டின் அரசியல் பாட வகுப்பில் பார்வையாளனாக அமர அனுமதி கேட்டுப் போய் உட்காருவேன்.

நம் நாட்டைப் பற்றி நாமே பலவற்றைக் கூறிக் கொண்டிருக்கிறோம். மாறாக "அவர்கள் நம்மைப் பற்றி, நம் அணுகுமுறைகளைப் பற்றி நமது முன்னேற்றத்தைப் பற்றி என்ன சொல்கிறார்கள்?" என்று தெரிந்து கொள்ள வேண்டும் என்பது என் ஆசை.

எனவே அங்கிருந்த இந்திய சம்பந்தமான சரித்திரத் துறை, சமுதாய இயல் துறை, அரசியல் துறைப் பேராசிரி யர்கள் அனைவரும் என்னை நன்கு அறிந்திருந்தார்கள். எங்கள் வீட்டிற்குப் பலமுறை இந்திய உணவருந்த அழைத் திருக்கிறேன். அதே போல அவர்கள் வீட்டிற்கும் நாங்கள்

சென்றிருக்கிறோம். இது, அறிமுகத்தைத் தாண்டிய நெருக்கம்; நட்பு.

பல பேராசிரியர்கள் இந்தியாவுக்குப் பலமுறை ஆராய்ச்சிக்காக வந்திருக்கிறார்கள். இந்தியப் பண் பாட்டை நன்கு அறிந்தவர்கள் அவர்கள். நமது சாதி அமைப்புகளை எல்லாம் படித்தவர்கள்.

என் துறைக்கு அப்பாற்பட்ட ஒரு துறையில் திட்டம் எழுதி, அதற்கு ஒரு மான்யம் பெற்றபோது எனக்கு ஒரு விஷயம் புலப்பட்டது.

அதாவது, கல்வித் துறைகளை எல்லாம் மீறலாம் என்கிற தெளிவு, துணிவு, மகிழ்ச்சி. இதுதான் நான் மனவியலில் இறங்கிய துணிவிற்கு ஒரு காரணம்.

அமெரிக்க அமைப்பும் அப்படி. "இது முடியும் - இது முடியாது" என்று எல்லைகளை எல்லாம் நாம்தான் வகுத்துக் கொள்கிறோம். உண்மையில் அறிவுக்கும் சாதனைக்கும் ஆர்வத்திற்கும் எல்லைகள் கிடையாது. வானம்தான் எல்லை.

பல ஆண்டுக் காலம் ஒரு துறையிலேயே இருந்தால் வாழ்க்கை செக்குமாட்டு வாழ்க்கையாக ஆகிவிடும். நமக்கு சுரத்து குறைந்துவிடும். மனவியலில் இதை 'தீய்ந்து போதல்', 'கருகிப் போதல்' என்பார்கள். அந்த நிலை எனக்கு ஏற்பட்டது. இது மனித இயல்பு. அந்தந்தத் துறையில் புதிது புதிதாகச் செய்ய, வளர, நாம் ஏதாவது புதுமையைச் செய்து கொண்டே இருக்க வேண்டும்; மாற்று விஷயங்களில் - புதிய விஷயங் களில் ஈடுபட வேண்டும்.

அது தவிர ஆசிரியத் தொழிலில், எனது அறிவின் விளக்கத்திற்கு மட்டுமே இடம் இருந்தது. என்னிடமுள்ள பல்வேறு திறமைகளும் வெளிவர வாய்ப்பில்லாததை உணர்ந்தேன்.

ஆசிரியத் தொழிலில் வருமானமும் குறைவு. என்னுடைய நண்பர்கள் சிலர் பல மருத்துவ கம்பெனி களில் ஆராய்ச்சித் துறையில் இருந்தார்கள். நானோ, நாட்டு நடப்பில், எப்படி புதிய பொருட்கள் சந்தைக்கு வருகின்றன, எப்படி மனிதர்கள் பெரும் பணக்காரர்களா

கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்; அவர் களுடைய சாதனைகளைப் பத்திரிகைகளில் படித்துக் கொண்டிருந்தேன். எனது சக ஆசிரியர்கள் பலருக்கு இது பற்றி உபதேசம் செய்து கொண்டிருந்தேன். எனது நண்பர்கள் சிலர் இதனால் கல்வித் துறையை விட்டு சொந்தத் தொழிலில் இறங்கினார்கள்.

எனவே நானும் தொழில் துறையில் இறங்க, அதில் அனுபவம் பெற முயன்றேன். சுலபமாயில்லை. ஆசிரியர் என்பவர் தானே தனக்கென ஏற்படுத்திக் கொண்ட தந்தக் கலசத்தில் (Ivory Tower) அமர்ந்திருப்பவர் என்கிற ஒரு பொது அபிப்ராயம் அங்கே பொதுமக்களிடம் உண்டு.

கண்ணியமான தொழில்தான்; புனிதமான தொழில் தான். எனினும் என்னை நடைமுறை உலகிலிருந்து அது அப்புறப்படுத்தி வருகிறது என்பது என் அனுபவமாக என்னுள் வேரூன்றி வந்தது.

நான் தொழில் துறையில் இறங்க முனைந்து பல வேலைகளுக்கும் விண்ணப்பித்தேன். ஓராண்டு வரை எதுவும் கிடைக்கவில்லை. முடிவில் வேலையை விட்டேன். எனக்குப் பிரிவு உபசார விருந்து வைத்து, ஆசிரியர் சங்கம் விடையளித்தபோது கல்லூரித் தலைவர் கேட்டார்.

"நீ சாதாரண ஆளில்லையே! வியூகம் வைத்துத் தானே எதையும் செய்வாய்! என்ன உன் திட்டம்? எங்கே போகிறாய்? இப்போதாவது சொல்!" என்றார்.

"இன்னும் எந்த வேலையும் எனக்கு கிடைக்க வில்லை! இதுதான் உண்மை! ஓராண்டுக் காலமாக முயன்றேன், பலனில்லை. இங்கே இனியும் இருப்பதில் பயனில்லை, இருக்கக் கூடாது என்று வேலையை விட்டேன். ராணுவத்தில் கேள்விப் பட்டிருப்பீர்கள். ராணுவப்படை அனைத்தும் பாலத்தைக் கடந்த பின், ராணுவ தளபதி சென்று, தான் கடந்து வந்த பாலத்தைக் கொளுத்திவிடுவான். அதாவது, எல்லோரும் முன்னே போய் போரிட வேண்டுமே தவிர. துளியும் பின் வாங்கித்

திரும்பி ஓடக் கூடாது என்று. அதைத்தான் நானும் செய்தேன்!'' என்றேன்.

ஆனால் ஒருவரும் நம்பத் தயாராயில்லை! விரைவில் ஒரு பெரிய ரசாயன நிறுவனத்தில் எனக்கு ஒரு விற்பனையாள் (Salesman) வேலை கிடைத்தது - பாதி சம்பளத்தில்! எனக்கு அந்தத் துறையில் டாக்டர் பட்டம் இருந்ததால் என்னை ஆலோசகனாகவும் உபயோகித் தார்கள்.

எனது அரசியல் பேராசிரியர் ஹென்ரி ஹொர்ட் டுக்கு எழுதினேன். நான் ஆசிரியர் வேலையை விட்டது பற்றியும் தொழில் துறையில் வேலை எடுத்துக் கொண்டது பற்றியும்.

அவர், "நம்ப முடியாத அளவிற்கு நீ அறிவில் வளர்ந்த மனிதன். எப்படி நீ இதை விட்டு விட்டு தொழிலில் இறங்கத் துணிந்தாய்?'' என்று கேள்வியுடன் பெரிய கடிதம் எழுதி இருந்தார். அவர் ஓய்வு பெற்ற போது தானே நாற்காலி மேஜை செய்யும் தச்சுத் தொழிலில் மேடிசன் நகரில் கடை வைத்தார் என்பது வேறு விஷயம்!

நான் பதிலுக்கு அவருக்கு எழுதினேன்:

"பேராசிரியர் அவர்களே! நான் பாரம்பரியமாகச் செய்யும் வணிகக் குடும்பத்தில் பிறந்தவன் என்பது உங்களுக்குத் தெரியும். எனவே அதில்தான் என் முழுத் திறமை வெளிவரும், என்று இறங்கினேன்.

"எப்படித் துணிந்தாய்? என்று கேட்டிருக்கிறீர்கள். என் அப்பா மளிகைக் கடை வைத்திருந்தார். தாத்தா முப்பாட்டனார் எல்லோருமே இந்த வியாபாரப் பரம் பரைதான். ஆகவே அந்த ரத்தம்தான் என்னுள்ளும் ஓடும்! என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன்.'' என்றெழுதினேன்.

**ச**மீபத்தில் இந்த விவரத்தை ஒரு கல்லூரி மாணவர்கள் கூட்டத்தில் நான் சொல்லிக் கொண்டிருந்த போது ஒரு மாணவர் எழுந்து கேட்டார்:

"ஐயா! நீங்கள் ஒரு வணிகக் குடும்பத்தில் பிறக்க வில்லை என்றிருந்தால் என்ன செய்திருப்பீர்கள்?''

"தம்பீ! என் தந்தையிடம் ஒரு வெள்ளிப் பொடி டப்பா இருந்தது. அவர் பொடி போடுவார். என் தந்தையின் பொடி டப்பி என்னிடம் இருக்கும் வரை, யாரும் என்னை அசைக்க முடியாது என்று எனக்கு நானே சொல்லிக் கொள்வேன்" என்றேன்.

சிரிப்பலை!

நம்பிக்கை! முடியும் என்னால் என்ற நம்பிக்கை! ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டு நம்மீது நாமே வளர்த்துக் கொள்ளும் ஒரு நம்பிக்கை!



6

## கொல்லையில் ஒரு கோயில்

மாலை நேரத்தில் நான் என் நண்பர்களுடன் தெருவில் விளையாடிக் கொண்டிருப்பேன். என் மாமா முத்தையாவின் வண்டி வரும். "சினிமாவுக்குப் போகலாம் வா!" என்று சொல்லிவிட்டு என்னை குண்டுக் கட்டாகத் தூக்கி வண்டியில் போடுவார். வீட்டு வாசலில் நின்று கொண்டு "அக்கா!" என்று குரல் கொடுப்பார். என் தாய் வருவார்கள். "சின்னவனை சினிமாவுக்கு அழைத்துப் போகிறேன்" என்பார்கள். "பத்திரமாக அழைச்சுக்கிட்டுப் போ" என்பார் என் தாய். அவ்வளவுதான். வண்டி மாட்டின் சலங்கை ஒலிக்க வண்டி கிளம்பி விடும்.

என் மாமா முத்தையா, எனக்கு நன்கு நினைவிருக்கிறது. நல்ல முன் நெற்றி. மெலிதான உருவம். எங்கள் கிராமத்தின் முனையில் பெரிய மளிகைக் கடை வைத்திருந்தார். நான்கு மைலில் உள்ள மயிலாடுதுறைக்கு, மளிகைக் கடைக்குச் சாமான் வாங்க ஒரு மாட்டு வண்டி இருந்தது.

என் தாய்க்கு என்னையும் என் அண்ணனையும் பற்றி மிக்க கவலை. எங்களுக்கு முன் ஒரு நான்கு குழந்தைகளைப் பறிகொடுத்தவர் அவர். எனவே நான் மயிலாடுதுறைப் பள்ளிக் கூடத்தில் படித்த போது என்றாவது சில நாள் மன்னம்பந்தலுக்கு செல்லும் ரயிலைத்தவறவிட்டு விடுவேன். பள்ளியிலிருந்து நான்கு மைல் வீட்டுக்கு நடந்து வருவேன். சில நாட்களில் இருட்டிவிடும். இரவு ஏழரை மணி ஆகிவிடும். என்ன நடக்கும் என்று நினைக்கிறீர்கள்?

அந்த இரவு நேரத்தில் கையில் ஒரு லாந்தரைக் கொளுத்திக் கொண்டு, கடைப் பையனைத் துணைக்கு

அழைத்துக்கொண்டு என் தாய் தவிப்புடன் விளநகரி லிருந்து கிளம்பி பாதி தூரம் வந்து விடுவார். என்னைச் செல்லமாக அணைத்துக் கொள்வார். பிள்ளை பத்திர மாக கிடைத்துவிட்டதில் அவ்வளவு சந்தோஷம். இந்த ஒரு விஷயத்தில் என் தாய் தவித்து நான் பார்த்திருக் கிறேனே தவிர மற்றபடி மிகுந்த மனத் தைரியம் கொண்டவர். எல்லாவற்றிலும் ஒரு தெறிப்பு; கணீரென்ற முடிவு; எங்கள் உறவினர்கள், ஊர்க்காரர்கள் எல்லோரிட மும் அன்பு காட்டி மிகுந்த மரியாதை கொடுத்து பழகும் குணம்.



**இடதுபுறம் எனது அண்ணன் வள்ளலார்**
**நடுவில் என் மாமா முத்தையா வலது புறம் நான்.**
**விளநகர் கிராமத்தில் 1955 வாக்கில்**

அவருக்கு தன் தம்பி முத்தையா மாமா பற்றி மிகுந்த கவலை இருந்தது. கடை வைத்து வியாபாரம் செய்த என் மாமாவுக்கு வியாபாரம் சரிவரப் போகவில்லை. குடும்ப சூழ்நிலையும் சரியில்லை. இது அவரைப் பாதித்தது; அதை விட அவரது ஒரே அக்காவான என் தாயைப் பெரிதும் பாதித்தது, என் தாயிடம் யோசனை கேட்க வருவார்.

என் தாய் வழிப் பாட்டியின் பெயர் காவேரி. 'பாட்டி' என்று அழைப்பதில்லை; 'அம்மை' என்று தான் அழைப்போம். என் பாட்டி திருமணம் செய்து கொண்ட இடம் கூறை நாடு பஞ்சுக்காரத்தெரு. அந்தக்காலத்தில் எங்கள் சொந்தக்காரர்களே அங்கே அதிகமிருந்ததால் தெருவுக்கு பஞ்சுக்காரர் தெரு என்று பெயர் வந்தது. "பூம்புகாரில் பஞ்சு வியாபாரம் செய்து வந்தவர்கள் நம் முன்னோர்கள், என்று என் தந்தை சொல்ல கேட்டிருக்கிறேன். எல்லோருக்கும் தொழில் வியாபாரம் தான்.

எனக்கு நினைவு தெரிந்த காலத்தில் காவேரி அம்மை தன் மகனுடன் வாழ விளநகர் என்ற எங்கள் கிராமத்திற்கு வந்துவிட்டார்கள். எங்கள் தெருவில் ஐந்தாறு வீடு தள்ளி எங்கள் மாமா வீடு இருந்தது. நடுத் தெருவில் ஒரே ஒரு தென்னை மரம் இருந்தது. காவேரி அம்மை நல்ல தகிக்கும் ஒரு மணி வெயிலில் வெறுங் காலுடன் எங்கள் வீட்டுக்கு வருவார். கொதிக்கும் மணலில் கால்வைக்க முடியாமல் தென்னைமரத்து நிழலில் கொஞ்சநேரம் நின்று கொண்டிருப்பார். மெலிந்த உருவம். விதவையானதனால் முடியில்லாத தலையில் நரை குத்திட்டு நிற்கும். முகத்தில் தெய்வீகம். அவர் மீது எனக்கு ஒரு அசாதாரண அன்பு இன்றும் மேவி நிற்கிறது. காவேரி என்ற பெயரும் சரி, காவேரி அம்மை தனது சிறிய உடம்புடன், குடு குடுவென்று சாலையில் நடந்து வரும் தோற்றமும் சரி, இன்றும் என் நினைவில் பசுமையாக நிற்கிறது.

என் குடும்பத்தினரை உங்களுக்கு அறிமுகம் செய்ய வேண்டும். எனது சகோதரி மிகவும் மூத்தவர்; பெயர் பட்டு. அவர்தான் என் பெற்றோருக்குத் தலைக் குழந்தை. அடுத்த நான்கு ஆண்குழந்தைகளும் தவறிப் போக நானும் என் அண்ணனும் கடைசியாகப் பிறந்தோம்.

என் சகோதரியை நல்ல பணக்கார வியாபார குடும்பத்தில் கொடுத்திருந்தார்கள். என் சகோதரிக்கும் எனக்கும் அதிக வயது வித்தியாசமிருந்ததால் நான் அவர் களுடன் மற்ற குடும்பங்களில் இருந்தது போல் சின்ன வயதிலேயே விளையாடிப் பழகுகின்ற வாய்ப்பே இல்லாமல் போய் விட்டது.

எனது சகோதரி எங்கள் மீது வைத்திருந்த அன்பு அபரிமிதமானது. பல சமயம் அது ஆணையாக இருக்கும். ஒரு முக்கியமான விஷயம், அவரது பிடிவாதம். 'பணம் எங்கிருந்து வருகிறது, எப்படிப் போகிறது?' என்பதுபற்றி தெரியாமலே - தெரிந்து கொள்ளாமலே - வாழ்ந்தாரோ என்று எனக்கு சந்தேகம். ஏனெனில் அவர் செய்கின்ற தான தர்மங்கள் அளவு கடந்தது. தெருவில் யார் பிச்சைக் காரர் வந்தாலும் வீட்டில் அழைத்து சாப்பாடு போட்டுத் தான் அனுப்புவார். கோயில், குளம், பூஜை, விரதம் எல்லாம் அளவு கடந்து இருக்கும். தம்பிகள் மீது பாசம் மிகுந்த சகோதரி. என் தாய் 65 வயதிலேயே காலமாகி விட்டாலும், என் சகோதரி 80ஐக் கடந்து வாழ்ந்தார்.

நான் "சொந்தத் தொழில் செய்யுங்கள்" என்று நிறைய நூல்கள் எழுதி இருக்கிறேன். ஏனெனில் எங்கள் குடும்பங்கள் எல்லாம் வியாபாரம் செய்தவர்கள்தான். ஒரு சிலர் தான் விவசாயம் செய்து பணக்காரர்களாக இருந்தவர்கள். பலரும் மளிகைக் கடை, துணிக்கடை, காசுக் கடை அதாவது தங்க, வெள்ளி நகை வியாபாரம் செய்தவர்கள். ஒரு விஷயம் இன்றும் நினைவுக்கு வருகிறது. வியாபாரம் செய்வதில் ஏற்படுகின்ற ஏற்ற இறக்கம், லாப நஷ்டம் எங்கள் சொந்தக்காரர்கள் பலரை யும் பாதித்தது. சிறுவனாக இருந்த நான் அதை அப்போது பூரணமாக உணரவில்லை.

வேலைக்குப் போனவர்கள் ஒரு சிலரே; அதில் என் ஒன்று விட்ட மாமா என் மனைவியின் தந்தையும் ஒருவர். எனது மாமா அவர்கள் தாலுகா அலுவலகத்திலிருந்து ஓய்வு பெற்ற போது; நான் மளிகைக் கடை வைத்திருந்த என் தந்தையைப் பார்த்து "ஏன் நீங்களும் ரிடையர் ஆகவில்லை?" (அவருக்கு அப்போது 65க்கு மேல்) என்று கேட்டேன். என் தந்தையும் தாயும் சிரித்தார்கள்! எங்கள் சொந்தக்காரர்கள் அனைவரும் தஞ்சை மாவட்டத்துக் காரர்கள். அங்கே கொஞ்ச நிலம் இருந்தால் கூடப் போதும் சாப்பாட்டுக்கு வந்துவிடும். வீடு சொந்த வீடு - ஒரு தோட்டம் இருக்கும். ஓரளவு சுகமாக வாழ்ந்து விடலாம். அப்படித்தான் குடும்பம் நடந்தது.

சொந்தமாகத் தொழில் செய்வது சுலபமல்ல. நான் அமெரிக்காவில் தொழில் துவங்கி இரண்டு முறை தோற்று, மறுபடியும் மூன்றாவதுமுறை துவங்கி வெற்றி பெற்றதனால் எனக்குத் தொழில்புரிவோரின் கஷ்டங்கள் நன்கு தெரியும். தொழில் செய்வது பெரிய சவால். நமது அறிவுக்கும் திறமைக்கும், சூழ்நிலை விடுக்கும் சவால். இன்று நினைத்துப் பார்க்கும்போது என் தந்தை விதைப் பண்ணை வியாபாரத்திலிருந்து எண்ணெய் வியாபாரத்தி லிருந்து, நர்சரி வியாபாரம் வரை பல துறைகளையும் காலத்துக்கேற்றவாறு செய்து தொழில் நடத்தியதை எண்ணி வியக்கிறேன். தொழிலில் தான் ஒரு மனிதனுடைய எல்லாவித திறமைகளும் தேவைப்படு கின்றன; வெளிப்படுகின்றன. அவ்வளவும் சாந்தமே உருவான என் தந்தையிடம் இருந்தது. அவருடைய உடலும் உள்ளமும் ஆன்மீகம்; அவருடைய தொழில்தான் வியாபாரம்.

என் தந்தையும் தாயும் தெய்வ பக்தி மிகுந்தவர்கள். எங்கள் உறவினர் ஒருவர்தான் நான் பிறந்த கிராமமாகிய விளநகரில் உள்ள பாடல்பெற்ற கோயிலைப் புதுப்பித்து கும்பாபிஷேகம் செய்தார். அதேபோல தில்லையாடியில் என் பெரியம்மாவின் தந்தை அங்கே ஒரு அழகிய பிள்ளையார் கோவிலைக் கட்டி கும்பாபிஷேகம் செய்தவர்கள். செல்வத்துடனும், செல்வாக்குடனும் வாழ்ந்த குடும்பம்.

தில்லையாடிக்கு என் பெரியம்மா வீட்டுக்கு சென்ற சமயத்தில் அவர்களுடன் அந்தப் பிள்ளையார் கோவிலுக்கு சென்றிருக்கிறேன். கோயிலுக்கென்று நிலம் இருந்தது. கோயிலுக்குப் பின்னால் தென்புறத்தில் அழகிய குளம் இருந்தது. கோவிலுக்கு வட புறத்தில் உப்பனாறு ஓடிக் கொண்டிருந்தது. என் பெரியம்மாவுக்கு வாரிசாக இருந்த அவரது இரண்டாவது மகளும் இளவயதில் விதவையாக, என்னை அவர்கள் தங்களது சுவீகார புத்திரனாக தத்தெடுத்துக் கொண்டார்கள்.

அவர்கள் தவறிய பின் இது என் பொறுப்பில் வந்தது.



தில்லையாடியில் பெரியம்மா வீட்டு பிள்ளையார் கோவில் சமீபத்தில் கும்பாபிஷேகம் செய்தோம்.

இதனால், நான் அமெரிக்காவிலிருந்து திரும்பிய பிறகு அந்தப் பிள்ளையார் கோவிலை புதுப்பித்து கட்டி அதற்கு கும்பாபிஷேகம் செய்தேன். எனக்கே இது வியப்பைத் தந்தது. இது ஏதோ சம்பந்தமில்லாத விஷயம் என்று நான் நினைக்கவில்லை என் அண்ணன் மகள் இந்திரா என்னிடம் ஒரு தரம் சொன்னாள் "அப்பா! சின்ன வயதில் வீட்டில் கோயில் கட்டினீர்கள். இப்போது இந்த வயதில் நிஜக் கோவில் கட்டி கும்பாபிஷேகமே செய்து விட்டீர்கள்!" என்றாள்.

நான் சிறுவனாக இருந்த போது நானே எங்கள் வீட்டு பின்பக்கக் கொல்லையில் சிமெண்டால் ஒரு சிறு கோயில் கட்டியிருந்தேன். திருக்குளம் கட்டினேன். பின்னால் என் அண்ணன் குழந்தைகள் எல்லாம் அங்கே விளையாடினார்கள்.

என் பெரியம்மா வீட்டில் நான் நிறைய கற்றுக் கொண்டேன். வீட்டுத் தோட்டத்தில் அருமையாகக் கா கறி பயிர் செய்தார்கள். நிலத்தை ஆள் வைத்து நன்

நிர்வகித்தார்கள். கோயிலைப் பார்த்துக் கொண்டார்கள். கோடை காலத்தில் தண்ணீர் பந்தல் வைத்து மோர் குடிக்க கொடுப்பார்கள். அந்த ஊரில் இருந்த ஒரே ஒரு மாடி வீடு (மெத்தை வீடு என்பார்கள் அந்த காலத்தில்) அவர்களுக்கு சொந்தம். அதிலே வரிசையாக கீழ்தளத்தில் நான்கு கடைகள் கட்டி இருந்தார்கள்.

அவர்கள் தான் எனது கல்லூரிப் படிப்பிற்கு பணம் கொடுப்பார்கள். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தேன். பல்கலைக்கழக படிப்புக்கான ஆண்டு செலவு 200 ரூபாய் தான். ஆனால் ஹாஸ்டலில் தங்கிப் படிக்க ஆண்டுக்கு 600 ரூபாய்க்கு மேலாகும். இது தான் பெரிய சுமை.

எனது பெரியம்மா கையினால் ஒரு ரூபாய் வாங்கினால் கூட போதும். "பணம் பெருகும். யாரும் குறையில்லாமல் வாழ்வார்கள்" என்று ஜனங்கள் வருவார்கள். என் விஷயத்திலும் அது பலித்தது.

7

# என்னைத் தவிட்டுக்கு விற்றார்கள்!

சின்ன வயதில் எத்தனையோ சம்பவங்கள் நிகழ்கின்றன. அவற்றிற்கெல்லாம் அப்போது அர்த்தம் தெரிவதில்லை. ஆனால் காலப்போக்கில் வளர்ந்த பிறகு, பின்னோக்கிப் பார்க்கும்போது, அந்தச் சம்பவங்கள் நம்மை எப்படி வளர்த்திருக்கின்றன என்பது தெரிகிறது.

விடியற்காலையில் ஐந்து மணிக்கு என் தந்தை எழுந்து விடுவார். ஒரு மண்ணெண்ணெய் விளக்கைக் கொளுத்தி வைத்துக் கொண்டு, மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்டு, தேவாரம் - திருவாசகம் பாடல்களைப் பாடிக் கொண்டிருப்பார். சிறுவனான நானும் காலையில் விழித்துக் கொள்வேன். அவர்கள் பாடுகின்ற பாடல்கள் பலவும் இன்றும் எனக்கு எங்கோ எப்போதோ படித்தது போல - தெரிந்தது போலத் தோன்றும்; நினைவுக்கு வரும்.

ஒரு பாட்டு:

"கந்துக மதகிரியை வசமாய் அடக்கலாம்
காடி வெம்புலி வாயைக் கட்டலாம்
ஒரு சிங்க முதுகிற்மேற் கொள்ளலாம் --
சிந்தையை அடக்கியே
சும்மா இருக்கின்ற திறம் அரிது.
என்சித்தமிசை குடிகொண்ட அறிவான தெய்வமே
தேஜோ மயானந்தமே."

என்ற தாயுமானவரின் பாடல். இப்படி நான் கேட்ட பாடல்களையும் படித்த சில பாடல் வரிகளும் திரும்பத் திரும்ப நான் இரண்டு மூன்று நாட்கள், அதையே காலையில் எழுந்திலிருந்து படுக்கப் போகும் வரை பாடிக் கொண்டிருந்ததும் நினைவுக்கு வருகிறது.

"மதம் கொண்ட யானையை அடக்கலாம்

கரடியின் வாயையும் புலியின் வாயையும் அவை கடிக்காதபடி மந்திரத்தால் கட்டி விடலாம்.

சிங்கத்தின் மேல் சவாரி செய்லாம்"

என்பது பாடல். நினைத்துப் பார்த்தால் யானையை அடக்கலாம். புலியின் வாயைக் கட்டலாம். சிங்கத்தின் மீது சவாரி செய்யலாம் என்ற பாடல் வரிகள்தான் 'முடியும்! முடியாத காரியமும் முடியும்!' என்று எங்கள் இயக்கத்தின் இன்றைய தாரக மந்திரப் பாடல்களாக மலர்ந்திருக்கின்றனவோ என்று எண்ணுகிறேன்.

எப்போதாவது என் தாய், எனக்குக் கதை சொல் வார்கள். ஒரே மாதிரிக் கதைகள். அதாவது ஒருவன் வெளிநாட்டுக்குக் கப்பலில் போகிறான். நிறைய சம்பாதித்து வருகிறான்; ஊர் திரும்பும்போது அவன் வாழ்ந்த வீட்டையும் பெற்றோர்களையும் கண்டுபிடிப் பதே கஷ்டமாயிருக்கிறது. அவ்வளவு ஏழையாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். அவன் வந்ததும் வீடே பணக்கார வீடாக மாறுகிறது. இதுதான் கதை!

எங்கள் பெரியம்மா வசித்தது தில்லையாடியில். அங்கிருந்து எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டுக்காரரும் மற்றும் பலரும் தென் ஆப்பிரிக்காவில் உள்ள ஜோகன்னஸ் பர்க்கிற்குச் சென்றிருந்தார்கள். எங்கள் விள நகருக்கு அருகிலுள்ள வடகரையில் பல முஸ்லிம்கள் - எங்களுக்குச் தெரிந்தவர்கள் - பினாங்கு என்றும் செய்கோன் என்றும் போயிருந்தார்கள். அவர்கள் பணக் காரர்களாகத் திரும்பி வந்தார்கள். செய்கோன், பினாங்கு, சிங்கப்பூர், ஜோன்ஸ்பர்க் என்பனவெல்லாம் அப்போது அடிக்கடி பேசப்படுகின்ற வார்த்தைகள். எங்கள் பெரியம்மா ஊரான தில்லையாடியிலிருந்துதான் வள்ளி யம்மை ஜோகன்ஸ்பர்க்குக்கு போயிருக்கிறார் என்று சத்திய சோதனை படித்து அறிந்து கொண்டபோது எனக்குப் பெருமகிழ்ச்சியும் பெருமையும் ஏற்பட்டது.

சிவாஜிக்கு ராமாயணமும், காந்திஜிக்கு அரிச் சந்திரா நாடகமும் உதவியது என்றால், இளவயதில் நான்

கேட்டவை ஆன்மீகப் பாடல்களும், வெளிநாட்டுக்குச் சென்று பணக்காரர்களான கதையும்தான்.

எங்கள் உறவினர்கள் பெருமளவில் தில்லையாடியிலும், காரைக்காலிலும், பூம்புகாரிலும் வாழ்ந்திருக்கிறார்கள். எல்லாமே வணிகம்தான். வீட்டிலே உத்தரத்திலிருந்து ஒரு சமயம் பழங்காலத்துப் பெரிய கை ராட்டையை எடுத்து என் தந்தை காட்டினார்கள். எனினும் ராட்டை நூல் நூற்று நெசவு செய்து வாழ்ந்த தாகச் சரித்திரம் இல்லை. எல்லாமே பஞ்சு வியாபாரம், வணிகம்தான். தில்லையாடியில் வாழ்ந்த என் பெரியம்மா வீட்டில் தங்கம், வெள்ளி நகைகள் மற்றும் நவரத்தினக் கற்கள் வியாபாரம் செய்து வந்தார்கள். நிலபுலன் இருந்தது.

என் தந்தை கிராமத்தில் மளிகை வியாபாரம் செய்து வந்தார்.

எங்கள் குலத்தில் பிறந்த ஒருவர் சில தலைமுறைகளுக்கு முன் தருமபுர மடத்தில் குருபீடம் பெற்று பட்டம் ஏற்றார் என்று என் தந்தை சொல்லக் கேட்டிருக்கிறேன். எங்களுக்கு தருமபுர மடம் குருபீடம். இன்றும் மார்கழி மாதத்தில் ஒருநாள் பூஜை வழிபாடு செய்யும் முறை எங்களுக்கு இருக்கிறது. இன்று தருமபுர மடத்தின் குருவாக இருக்கும் தவத்திரு ஷண்முக தேசிக பரமாச்சார்ய சுவாமிகள், 'எங்களது உறவினர் ஒருவர் அங்கு குரு பீடம் ஏற்றது உண்மைதான்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன்.

**ந**ல்ல வாலிப வயதுடைய எங்கள் உறவினர் குரு ஞானசம்பந்தரால் ஈர்க்கப்பட்டு மடத்தில் துறவியாகப் போய் விட்டார். அப்போது அவருக்கு ஒரு பெண்ணைத் திருமணம் செய்விக்க நிச்சயதார்த்தமும் செய்து விட்டார்கள். ஆனால் மணமகனே, துறவியாகிவிட்ட நிலையில் பெண்ணைப் பெற்றவர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. சில காலம் கழித்து அங்கே குரு பீடத்தில் இருந்த அந்தத் துறவியிடம் அந்தப் பெண்ணை அவர் பெற்றோர் அழைத்துச் சென்றிருக்கிறார்கள். "இது உங்கள் மனைவி. இவள் உங்கள் பொறுப்பு" என்று கொண்டு விட்ட போது, அந்த மடத்துத் தலைவரான குரு மகாசந்நிதானம் அந்தப்

பெண்ணை நேராக, தான் தினமும் பூஜை செய்யும் சொக்கலிங்கப் பெருமான் சன்னதிக்கு அழைத்துச் சென்றிருக்கிறார். பின், அந்தப் பெண் வெளியே வரும்போது நரை திரையுடன், வயதேறிய தோற்றத்துடன் வெளி வந்தார். இப்படிப்பட்ட ஒரு சம்பவம் நடந்தது என்று என் தந்தை சொல்லக் கேட்டிருக்கிறேன்.

இன்றும் கூட தருமபுரம் மடத்தின் குரு பீடத்தை அலங்கரித்த அந்த மகான்களின் சமாதி பீடங்களில் நாம் உட்கார்ந்து தியானம் செய்தால் ஒரு அசாதாரண அமைதி கிடைக்கிறது. அமைதியும் அருளும் நிறைந்த இடங்கள்.

**நா**ன் பிறந்த குழந்தையாக இருந்தபோது “என் தாய் என்னை தவிட்டுக்கு விற்று விட்டார்” என்றால் கேட்பவர்கள் ஆச்சரியப்படுவார்கள்! எங்கள் குடும்பம் ஏழையாக இல்லை - விற்பதற்கு! என் பெற்றோருக்கு ஏழு குழந்தைகள். நான்தான் கடைசி. எங்கள் அனைவருக்கும் மூத்தவர் என் சகோதரி பட்டம்மாள். அவருக்கு அடுத்து பிறந்த நான்கு குழந்தைகள் - மூன்று வயதிலும் நான்கு வயதிலும் பிறந்த சில மாதங்களிலும் தவறி விட்டார்கள்.

இது என் பெற்றோரை மிகவும் பாதித்தது. அருகிலுள்ள கருவாழைக்கரையில் வள்ளுவர் என்ற இனத்தினர் - திருவள்ளுவர் பரம்பரை - இருந்தார்கள். நன்கு படித்தவர்கள். சோதிடம் தெரியும்.

‘குடும்பத்தில் நாகதோஷம் இருக்கிறது’ என்று சொல்லி விட்டார் வள்ளுவர், ராஜகோபால்.

நாகதோஷம் நீங்கப் பரிகாரம், பூஜை வழிபாடு, பாம்பு புற்றுக்கு தொடர்ந்து பூஜை, பால் வார்த்தல் போன்ற பல காரியங்களைச் செய்திருக்கிறார்கள்.

அந்தக் காலகட்டத்தில் ஒரு பரவலான நம்பிக்கை இருந்தது. அதாவது நமக்குப் பிறந்த குழந்தையை விற்று விட்டால் அந்தக் குழந்தைகள் வாங்கியவர்களுக்கு சொந்தமாகி விடுகின்றன; அதனால் அந்த தோஷம் - சாபம் - குழந்தைகளை அணுகாது என்பது. அதன்படி எங்களை விற்று விட்டார்கள்! எங்கள் வீட்டுக்கு அடுத்த வீட்டில் முத்துக்கண்ணு என்ற தேவதாசிக் குடும்பத்தில்

பிறந்த பெண்மணி - மனைவியை இழந்த எங்கள் உறவினருடன் அடுத்த வீட்டில் முறையாக வாழ்ந்து வந்தார். எனினும் அவருக்குக் கோயில் மான்யமும் சாப்பாடும் உண்டு. கோயிலுக்குச் சென்று ஆண்டவனுக்குச் சில பணி விடைகள் செய்து வருவார். இரவு நேரத்தில் கோயில் பட்டை சாதம் ஒரு தட்டில் பட்டுத் துணியால் போர்த்தப் பட்டு அடுத்த வீட்டுக்கு வரும்.

இப்படி எங்கள் வீட்டில் குழந்தைகள் இறந்து போவதைப் பார்த்த எங்கள் உறவினரில் ஒருவராகி விட்ட முத்துக்கண்ணு, என் அண்ணன் பிறந்தபோது தனக்கு வந்த கோயில் பட்டுத் துணியை குழந்தை மீது போர்த்தி, எங்கள் கோயில் சுவாமி பெயரான வள்ளலார் என்ற பெயரை என் அண்ணனுக்குச் சூட்டினார். கோயில் சாதத்தையும் பட்டுத் துணியையும் கொடுத்துவிட்டு குழந்தையை எடுத்துக் கொண்டார்!

நான் பிறந்தபோது எங்கள் வீட்டில் வீட்டு வேலை செய்து வந்த பெண்மணி நாகம்மாள் என்பவர். நாகம்மாள், மிகப் பெரிய உருவம் கொண்டவர். எப்போதும் சிரித்த முகம்.

என் தாய், என்னை நாகம்மாளிடம் விற்று விட்டார்கள். நாகம்மாளிடம் என்ன இருக்கும்? அவர் வீட்டில் மாட்டுக்குப் போடும் தவிடு இருந்தது. அதைக் கொடுத்து விட்டு அவர் குழந்தையை எடுத்துக் கொண்டு போனார். பல ஆண்டுகள் அவர் என்னை இடுப்பில் தூக்கிக் கொண்டு போனது, அவர் வீட்டில் - அவர் வீடு கல் வீடு - அதில் நான் உட்கார்ந்திருந்தது எல்லாம் என் நினைவில் இருக்கிறது. அடிக்கடி அவர் என்னைத் தன் வீட்டுக்கு தூக்கிக் கொண்டு போவார்.

நாகம்மாள், "இது என் புள்ளே. நான் தவிட்டுக்கு வாங்கினேன்!" என்று சொல்லி நான் பெரியவனான வுடன் என் கன்னத்தில் தன் இரண்டு கைகளையும் வைத்து திருஷ்டி கழித்த சம்பவங்களை எல்லாம் நன்றி யுடன் நினைத்துக் கொள்கிறேன்.

நாகம்மாள் என்ற பெயரைக் கவனியுங்கள். எங்கள் குடும்பத்திற்கு நாகதோஷம் இருந்ததையும் என்னை

நாகம்மாளிடம் விற்று விட்டதையும் எண்ணினால் ஏதோ எதிர்பாராது நிகழும் சம்பவங்களாகத் தோன்றுகின்றன.

கார்ல் கஸ்டவ் யங் என்ற புகழ்பெற்ற மனவியல் பேராசிரியர் சொல்கிறார். இப்படி ஒன்றுக்கொன்று சம்பந்தமுள்ள சம்பவங்கள் எதிர்பாராத சம்பவங்களாக நிகழ்கின்றன என்றால் நீங்கள் செல்லும் பாதை சரியான பாதைதான் என்று ஏதோ ஒன்று தெரிவிக்கிறது என்ற ஒரு கண்டுபிடிப்பை வெளியிட்டார்.

நம் எல்லோருடைய வாழ்விலும் இத்தகைய எதிர் பாராத சம்பவங்கள் நிகழ்கின்றன. நமக்கு மேற்பட்ட ஒரு சக்தி நமக்குப் பின்னால் இருந்து நம்மை வழிநடத்துகிறது என்பதுதான் உண்மை.






**8**

# பாம்புடன் சினேகிதம்

என் தாய்க்கு கையெழுத்துக் கூடப் போடத் தெரியாது. எனினும் படிப்பின் மேன்மையை உணர்ந்தவர். எனது ஆசிரியர் ரமணி அய்யர் வீட்டுக்கு வரும் போதெல்லாம் முதலில் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலை போடுவார். வீட்டில் உள்ளவர்களிடம் பேசிக் கொண்டிருப்பார். என் தாய், "ஐயா அவன் கண்களைத் திறந்து விடுங்கள். அவன் நன்றாகப் படிக்க வேண்டும்" என்பார்கள்.

அவர்கள் அதிகம் படிக்கவில்லையே தவிர அவர்களுக்கு உலக ஞானம் அதிகம். பிற விஷயங்களைப் பற்றி முடிவெடுப்பதில், நல்லவர்கள் கெட்டவர்கள் என்று புரிந்து கொள்வதில் மிகுந்த திறமை கொண்டவர். எல்லா வித முடிவுகளும் என் தாய் சொல்லிவிட்டால் சரி. என் தந்தை கடை விஷயங்களையும் ஊர் விஷயங்களையும் மட்டுமே கவனிப்பார்.

எங்கள் வீட்டில் ஒற்றை மாட்டு வண்டி இருந்தது. மாயவரம் போய் விட்டு நானும் என் தாயும் வந்து கொண்டிருந்தோம். இரவு மணி எட்டு இருக்கும். வண்டியை ஓட்டுபவன் ஒரு சிறு இளைஞன். அவனைப் பார்த்தாலே, மாடு அவனை ஓட்டப் பார்க்கும்! பின்னால் பஸ் வந்து கொண்டிருந்தது. பஸ்ஸிற்கு இடம் கொடுப்பதற்காக வண்டியை இடதுபுறம் ஓட்டினான். மாடு கேட்கவில்லை. அது வலதுபுறம் போயிற்று! பஸ்ஸோ மிக அருகில் வந்து விட்டது. வேகமாக வந்த டிரைவர் சட்டென்று பஸ்ஸை நிறுத்தினார். நேராக கடுங் கோபத்துடன் இறங்கி வந்தார். கிராமங்களில் எல்லாம் பஸ் என்பது பெரிய விஷயம். அவர் வண்டி ஓட்டுபவனை நாலு அறை விட்டிருப்பார்!

"ஏய்!" என்று சொல்லிக் கொண்டு வந்தபோது என் தாய் கையெடுத்துக் கும்பிட்டு, "ஐயா அவன் சின்னப் பையன். மாடு அவன் சொன்னபடி கேட்கவில்லை. நீங்கள் மன்னிக்கணும்" என்றார். அவ்வளவுதான். பஸ் டிரைவரும் கண்டக்டரும் அப்படியே ஒருகணம் நின்றார் கள். திரும்பிப் போய்விட்டார்கள். வண்டியை ஒரு பக்கமும் ஓட்டாமல் நிறுத்து என்று என் தாய் சொன் னார்கள். பஸ் எங்களைக் கடந்து போயிற்று.

சமயோசிதமாக அவர் அந்த சம்பவத்தைக் கை யாண்ட விதத்தை இன்றும் என்னால் மறக்க முடிய வில்லை.

எங்கள் தெருவில் யார் வீட்டில் பிரசவம் ஆனாலும் என் தாயைத்தான் கூப்பிடுவார்கள். பிரசவத்திற்குத் துணையாக உதவுவார். அதே போல அவர்கள் வீட்டில் குழந்தைகளுக்கு ஏதாவது நோய் என்றாலும் அங்கே போய் இரவு பூராவும் அவர்களோடு கண் விழித்துக் கொண்டிருப்பார்; தைரியம் சொல்லிக் கொண்டிருப்பார்.

அதே போல என் மனைவியும் இருந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. எங்களுக்குப் பின்னால் அமெரிக்காவுக்கு வந்த திருமணமான பெண்கள் பலருக்கும் பிரசவித்த குழந்தையை எப்படிக் குளிப்பாட்டு வது, வளர்ப்பது என்பதெல்லாம் தெரியாது. என் மனைவி தான் கூப்பிட்ட வேளைக்குப் போய் நிற்பார். அந்தப் பெண் குழந்தை பெரியவர்களாகி அமெரிக்காவில் திருமணம் ஆனபோது நாங்கள் போனோம். அவர்கள் தாய் என் மனைவியின் உதவியைச் சொல்ல, அவர்கள் என் மனைவியை வளர்த்த தாய் என்று வாஞ்சையுடன் பழகினார்கள்.

ஒரு சமயம் அருகிலுள்ள என் நண்பன் பொன்னு சாமி வீட்டில் பாம்பு உள்ளே வந்து விட்டது. பெரிய பாம்பு. ஐந்தாறடி நீளம் இருக்கும். நாங்கள் சிறுவர்கள். எங்களால் அடிக்க முடியவில்லை. ஓர் இருண்ட அறைக் குள் புகுந்து விட்டது. எனக்குப் பத்து வயது இருக்கும். கையில் ஒரு கழியை எடுத்துக் கொண்டு உள்ளே போ னேன். இடுப்பளவு உயரமுள்ள மரப்பெட்டிக்குப் பின்னால்தான் பாம்பு வேகமாகச் சென்றது. ஒரு கழி

யால் அதைக் குத்தினேன். ஆனால் கண் மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் பாம்பு என் கால்களுக்கிடையே புகுந்து வெளியேறி விட்டது. என்னை அது கடித்திருக்கலாம். எனக்கு வியர்த்து விறுவிறுத்து விட்டது. பயந்து போய், வெளியே ஓடினேன். என் தாயிடம் சொன்னேன்.

என் படபடப்பையும் நான் பயந்ததையும் கண்ட என் தாய் என்னை அணைத்துக் கொண்டு திட்டினார்கள்.

"பாம்பைப் போய் அடிக்கலாமா? நம் குடும்பத்தில் நாக தோஷம் இருக்கிறதென்று நாக பூஜையெல்லாம் செய்தோமே. உனக்கும் அண்ணனுக்கும் முன்னால் நான்கு குழந்தைகள் செத்துப் போனார்களே. பாம்பு நமக்கு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறதே, நமக்கு ஒரு தீங்கும் செய்யாது என்று. நீ போய் அதை அடிக்கலாமா?" என்று கோபித்துக் கொண்டார்கள். எனக்குப் பயம் தெளிய, 'கொழு மோர்' காய்ச்சி குடிக்கச் சொன்னார்கள். அதாவது அடுப்பு நெருப்பில் இரும்புக் கரண்டியை அது கனிந்து சிவப்பாகும் வரை சொருகி இருப்பார்கள். பின் அதை எடுத்து ஒரு தம்ளர் மோரில் சொருகுவார்கள். 'புஸ்'ஸென்று நீராவி கிளம்பும். அதுதான் கொழு மோர். அந்தக் காலத்தில் பயத்தைப் போக்குவதற்கு செய்யும் பரிகாரம் இது.

அதன் பிறகு நான் பாம்பை அடிப்பதில்லை. கொல்லையில் எப்போதாவது பாம்பு தென்பட்டால் என் தாயிடம் போய்ச் சொல்வேன். அவர் உடனே வந்து பார்த்துக் கும்பிடுவார். "போ! போ! யாருக்கும் கெடுதல் செய்யாதே போய் விடு" என்று சொல்வார். அது பாட்டுக்குப் போய் விடும்.

எங்கள் கொல்லையின் கோடியில் ஒரு பாம்புப் புற்று இருந்தது. கொல்லையில் பாம்பைப் பார்த்து விட்டால் அன்று அதற்கு பால் வைத்து பூஜை செய்கிற வழக்கம் எங்கள் குடும்பத்தில் இருந்தது.

**ச**மீபத்தில் நான் வார்தாவுக்குச் சென்றிருந்தேன்.

மகாத்மா காந்தி வாழ்ந்த இடம். அதற்கு முன் வெறும் புதராக இருந்ததாம். அதை எல்லாம் அழித்து

அவர்கள் வாழ்வதற்கு வீடு கட்டி இருக்கிறார்கள். காந்தி வாழ்ந்தது நமது ஊர் போல ஓட்டு வீடு. அங்கே பாம்பு நடமாட்டம் ஆரம்ப காலத்தில் அதிகமாக இருந்திருக் கிறது. அங்கே வாழ்ந்த ஒரு பெரியவர் சொன்னார். "பாம்பை யாரும் அடிக்கக் கூடாது என்று காந்தி சொல் வார். பாம்புக்காக ஒரு பெட்டியை வீட்டுக்கு அப்பால் வைத்திருந்தார்கள். பாம்பைப் பிடித்து அந்தப் பெட்டியில் போட்டு விடுவார்கள். பிறகு அந்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு போய்த் தொலைவில் உள்ள காட்டுப் பிரதேசங்களிலே விட்டு விடுவார்கள்" என்றார்.

அஹிம்சையைக் கடைப்பிடிப்பவர் - "பாம்பைக் கூட அடிக்கக் கூடாது" என்று சொல்லக் கேட்கும் போது, நாம் நமது அனுபவ அறிவைக் கடந்து எங்கோ போய் விடுகிறோம். என்னுடைய தாயார் சொன்ன வாசகம், "பாம்பு சத்தியம் செய்து கொடுத்திருக்கிறது" என்பது இன்றும் என் மனத்தை விட்டு அகலாத வாக்கியம். அதே சமயம் எனது விஞ்ஞான அணுகுமுறை பாம்புக்கு பய உணர்வும் பத்திரமாக ஓட வேண்டும் என்ற உணர்வும் இருப்பது போல நியாய உணர்வு, தீர்மானிக்கும் உணர்வு எல்லாம் இருக்கிறதா என்று கேட்டுக் கொண்டேயிருக் கிறது.

**நா**ங்கள் அப்போது அமெரிக்காவில் குடியிருந் தோம். பெரிய வீடு. புதிய வீடு. லூசியானாவில் லாப யெட் என்ற நகரம் வீட்டின் விருந்தினர்களை வர வேற்கும் ஹாலில் உட்கார்ந்தால் அழகாகத் தோற்ற மளிக்கும். தோட்டத்தைப் பார்க்கலாம். பின் பக்கம் பூராவும் கண்ணாடிக் கதவுகள், ஜன்னல்கள்.

புதிய வீட்டிற்குக் குடிபுகுந்த மறுநாள். நான் வெளிச்சம் பெற வேண்டி காலையில் கண்ணாடி ஜன்னலுக்கருகே உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தேன். ஏதோ "டொக் டொக்"கென்று சப்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தேன். ஒரு பாம்புக் குட்டி கண்ணாடி ஜன்னல் என்று தெரியாமல், "என்னை உள்ளே விடு" என்று கண்ணாடி ஜன்னலைக் கொத்திக் கொண்டிருந்தது. நான் பாம்பைப் பார்த்த அதிர்ச்சியில் எழுந்து ஓடினேன்.

ஒரு கணத்தில் சுதாரித்துக் கொண்டேன். என் இளைய மகன் அசோகனைக் கூப்பிட்டேன். இரண்டு பேருமாக அதை ஓர் அட்டைப் பெட்டியில் பிடித்துப் போட்டோம். காரின் 'டிக்கி'யில் வைத்து வெகு தொலைவில், காட்டுப் பிரதேசத்தில் கொண்டு விட்டு வந்தோம்.

ஒரு சமயம் பாண்டிச்சேரிக்குப் போயிருந்தேன். எனது நண்பர் வழக்கறிஞர் பெருவழுதி ஒரு குறி சொல்லும் தன்மை கொண்ட இளைஞரை அறிமுகப் படுத்தினார். என் மனைவி அப்போதுதான் அமெரிக்கா வில் புற்றுநோய்க்காக அறுவை சிகிச்சை செய்து கொண்டு திரும்பி வந்திருந்தார்.

அந்தப் பாண்டிச்சேரி இளைஞர் கண்களை மூடிக் கொண்டு தியானம் செய்தார் ஒருகணம். எடுத்த எடுப்பில், "ஐயா! உங்கள் மனைவிக்கு கனவில் பாம்பு வந்ததா?" என்று கேட்டார். "அதெல்லாம் ஒன்றுமில்லை யே!" என்று பதில் சொன்னேன். அவர் தொடர்ந்து சொன்ன விஷயங்கள் எல்லாம் எனக்குச் சம்பந்தமில்லா தவையாக - தவறாகப்பட்டன. நான் எழுந்து விட்டேன். அதன் பிறகு அதை மறந்தே போய் விட்டேன்.

ஒரு பத்துப் பதினைந்து நாள் கழித்து காரில் செல்லும் போது என் மனைவியைப் பார்த்துக் கேட் டேன். "நீ ஏதாவது கனவு கண்டாயா?"

"ஆமாம். ஒரு பத்து நாட்களுக்கு முன் ஒரு பெரிய பாம்பு வந்தது. வீட்டை விட்டு வெளியே போயிற்று. வீட்டுக்கு வெளியே போட்டிருக்கும் தென்னங்கூரை போட்ட சாய்ப்பில் படுத்துக் கொண்டது. அதன் அருகில் இரண்டு குட்டிகள் குண்டு குண்டாக இருந்தன."

எனக்குத் திக்கிட்டது. பாண்டிச்சேரி மனிதர் சொன்னது நினைவுக்கு வந்தது.

என் மனைவியின் உடல்நிலை காரணமாக நாங்கள் மீண்டும் அமெரிக்கா சென்றபோது, என் மனைவிக்கு வேறிடத்தில், மூச்சுக் குழலுக்கு அருகில் மீண்டும் கட்டி வளர்ந்திருப்பதாகவும் அதை அறுவை சிகிச்சை செய்ய முடியாதென்றும் சொல்லி விட்டார்கள்.

என் மனைவி சகஜமாக கனவு காண்பவரோ அது பற்றிப் பேசுபவரோ அல்ல. ஆனாலும், "ஏதோ ஒன்று" நமக்கு சில விஷயங்களை ஆழ்மனத்தின் மூலம் - கனவு மூலம் - சில அடையாளங்களின் மூலம் - நமக்கு ஏதோ ஒன்றை சொல்லிக் கொண்டிருக்கிறது.

நமது நாட்டில் பதஞ்சலி யோகசூத்திரம் எழுதிய பதஞ்சலி முனிவரின் உடலின் அடிப்பகுதி பாம்பின் வடிவில் இருக்கும் என்பதிலிருந்து, வழிபடும் சிவன் கோவிலில், சிவனைச் சுற்றி பாம்பு வடிவத்தில் ஒரு செப்பு உருவ அமைப்பை அணிவிப்பது வரை - எல்லாம் பாம்பு சம்பந்தப்பட்டிருக்கிறது. ஆற்றங்கரையோரத்தில் பாம்புச் சிலை பதித்த கற்களைப் பார்க்கிறோம்.

இன்று மனவியல் அறிஞர்கள் நம ஆழ்மனத்திற்கும் நமது பிரபஞ்ச மனம் எனப்படும் ஏதோ ஒரு சக்திக்கும் தொடர்பிருப்பதைப் பற்றி ஆச்சரியமான விஷயங்களைச் சொல்கிறார்கள். இதுபோன்ற நமது நம்பிக்கைகளை "சமுதாய மனத்தின் அறிவாற்றல் (Collective Consciousness) என்று குறிப்பிடுகிறார்கள். அவை அடையாளங்களாக (symbols) வந்து நமக்கு உதவுகின்றன என்கிறார்கள். பாம்பு போன்ற தீமை செய்யும் ஜீவன்களையும் தனது நண்பர் களாகப் பாவித்து, இப் பிரபஞ்சத்தின் எல்லா ஜீவன் களுடனும் பொருள்களுடனும் மனிதன் இசைந்து வாழக் கற்றுக் கொண்டதன் அடையாளங்கள் - செயல்முறைகள் தான் - பாம்பு வழிபாடு.

"காக்கை குருவி எங்கள் ஜாதி – நீள்
கடலும் மலையும் எங்கள் கூட்டம்." –

என்கிறார் பாரதி.





9

# சோப்பு சொன்ன பாடம்!

எங்கள் எதிர் வீட்டில் நாங்கள் "மாமா" என்று மரியாதையுடன் அழைக்கும் பெரியவர் முத்தையா பிள்ளை குடி இருந்தார். சின்ன வயதில் எங்கள் கடையில் என் தந்தையிடம் வேலை பார்த்தவர். பின்னால் எனக்கு நினைவு வந்த காலத்தில் பணக்காரராக நிலம் நீச்சுடன் வாழ்ந்து வந்தார்.

அவர் எப்படிப் பணக்காரரானார் என்பது ஓர் அற்புதமான விஷயம். அப்போது "சன்லைட் சோப்" என்ற துணிக்குப் போடும் பார் சோப்பும் வில்லை சோப்பும் மிகவும் பிரபலம். சன்லைட் சோப் கம்பெனி ஒரு பெரிய அகில இந்திய கம்பெனி.

முத்தையா பிள்ளை அவர்கள் சோப் தயாரிக்கத் தெரிந்திருந்த ஒரு சொந்தக்காரப் பையனை வைத்துக் கொண்டு, 'கிரவுன் மார்க்' சோப் என்று தயாரித்தார். அது விலை குறைவு, பார்ப்பதற்கும் அழகாக, சுத்தமாக இருந்தது. துணியை வெளுப்பதில் சன் லைட் சோப்பை விட சக்கை போடு போட்டது. எனவே ஒரு கிராமத்தில் துவங்கிய அந்த கம்பெனியின் 'சோப்' தஞ்சை மாவட்டம் பூராவும் பிரபலமாகி விட்டது இரண்டாண்டுகளில்.

அவர் போட்டி போட்டதோ, ஒரு அகில இந்திய கம்பெனியுடன். சன்லைட் சோப் கம்பெனிக்காரர்களால் தஞ்சை மாவட்டத்தில் அவர்கள் பொருளை விற்க முடிய வில்லை. சோப் விளம்பரத்திற்காக, மகாத்மா காந்தி, நேரு போன்றவர்களின் படங்கள் போட்ட காலண்டர்களை எல்லாம் அவர் எல்லோருக்கும் கொடுத்தார். சோப்புக் கட்டிகளை பாக்கெட்டில் போடும் வேலையை அந்த தெருவிலிருந்த பெண்களுக்குக் கொடுத்தார். இது எனக்கு

ஆச்சரியத்தையும் பெருமதிப்பையும் என்னுள் அவர்பால் ஏற்படுத்தியது.

நிறைய சம்பாதித்தார். இரண்டாவது உலக மகா யுத்தத்தின் போது (1932 வாக்கில்) தேங்காய் எண்ணெய்த் தட்டுப்பாடு காரணமாக சோப்பு கம்பெனியை மூடி விட்டார்.

பார்ப்பதற்கு ராஜாஜி போல இருப்பார். அதே நிறம், உருவம் எல்லாம். ஒரு சமயம் நான் காலேஜில் படித்துக் கொண்டிருந்த போது, ஒரு நாற்பது பக்க நோட்டில் என்னென்ன காரியங்கள் செய்தால் இந்த நாடு முன்னேறும் என்று சட்டதிட்டங்களை எழுதி, என்னிடம் படித்துக் காட்டினார். எனக்கு வியப்பாக இருந்தது. "என்ன மாமா! நீங்கள் இங்கே குக்கிராமத்தில் இருந்து கொண்டு இவ்வளவு பெரிய விஷயங்களை எல்லாம் சொல்லிக் கொண்டிருந்தால் என்ன பயன்? இவைகளை எல்லாம் சென்னையிலும் டெல்லியிலும் உள்ள தலை வர்கள் அல்லவா எடுத்துக் கொண்டு செய்ய வேண்டும்" என்பேன். அவ்வளவு புத்திசாலி அவர்.

இன்று அவரை நினைக்கும்போது கூட "இவ்வளவு சிறந்த புத்திசாலிகள் இன்னும் கிராமங்களிலே காட்டில் மலர்ந்த ரோஜாவாய், ஆழ்கடலில் விளைந்த முத்துக் களாய்ப் போய் விடுகிறார்களே" என்ற ஆதங்கம்தான் என்னுள் எழுகிறது.

அன்று தீபாவளி நாள். எங்கள் கடைக்கெதிரே நின்று கொண்டிருந்தார். அவரைச் சுற்றி என்னை விட வயதில் மூத்த - என் அண்ணன் வயது கொண்ட இளைஞர்கள். எனக்குப் பத்து வயது இருக்கும். "ஒரு கணக்குப் போடுகிறேன். யார் சரியாகச் சொல்கிறார்கள் பார்க்கலாம்! ஒரு மரத்தில் நூறு குருவிகள் இருந்தன. ஒரு வேடன் துப்பாக்கியால் அதைச் சுட்டான். ஒரு குருவி செத்துக் கீழே விழுந்தது. மீதி எத்தனை குருவிகள்?" என்றார்.

நான் உடனே, சட்டென்று "மீதி 99" என்று மகிழ்ச்சி யோடு கூவினேன். ஆனால் மற்ற எல்லோரும் சிரித் தார்கள். எனக்கு விஷயம் புரியவில்லை. முத்தையா

பிள்ளையோ, "நீ தான் சரி. நீதான் கெட்டிக்காரன்!" என்று என்னைத் தட்டிக் கொடுத்தார்.

பின்னால்தான் தெரிந்தது. "பதில் அதுவல்ல, மற்ற குருவிகள் அனைத்தும், பறந்து ஓடி இருக்கும்! மரத்தில் பாக்கி ஒரு குருவியும் இருக்காது. என்பதுதான் சரியான விடை" என்று!

என் புத்திசாலித்தனத்தைக் கண்டு நானே மெச்சிக் கொண்டேன், வெட்கத்துடன்!

**நா**ன் எட்டாவது படித்ததும் என்னைக் மளிகைக் கடையில்தான் போட வேண்டுமென்று பேச்சு எழுந்தது. எட்டாவது வரை நான் படித்த பள்ளி சுவாமிநாத ராவ் நடத்தி வந்த பள்ளி. செம்பொனார் கோவிலில் - இரண்டு மைல் தொலைவில் இருந்தது.

ஒரு நாள் நான் என் தந்தையுடன் கடை விஷயமாக மாயவரம் சென்றபோது, என் உறவினரின் பெரிய மளிகைக் கடையில் நின்று கொண்டிருந்தேன். அவர் சொன்னார், "ஏய்! இங்கேதானே வரப்போகிறாய்? இந்தப் பட்டியலில் உள்ள சாமான்களின் விலையைக் கூட்டி சரி பார்!" என்று சொல்லி என் கையில் சாமான் பட்டியலைத் தந்தார்.

அவ்வளவு தூரம் என் எதிர்காலம் மளிகைக் கடை தான் என்று நிச்சயித்த பிறகும் எப்படி நான் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தேன்? எனக்குப் படிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தது. அதைவிடத் தெருவில் உள்ளவர்கள் எல்லாம் "சின்னவன் நன்றாகப் படிக்கிறான்; அவனை நன்றாகப் படிக்க வையுங்கள்" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். நான் மாயவரம் தேசிய உயர் நிலைப் பள்ளியில் மீண்டும் அதே எட்டாவது வகுப்பி லும், பிறகு மாயவரம் முனிசிபல் உயர்நிலைப் பள்ளியில் 9, 10, 11 வகுப்புகளிலும் படித்தேன்.

மாயவரம் தேசிய உயர்நிலைப் பள்ளியில் படித்த போது ஒரு சம்பவம். ஆறாவது படித்த ஒரு சிறுவனைப் பள்ளி ஆசிரியர் கண்டபடி திட்டிவிட்டார். பையனுக்குக் கோபம் வந்து விட்டது.

பள்ளிக்குள்ளேயே உள்ள கிணற்றில் கை காலைக் கழுவிக் கொண்டு தன் பூணூலைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான். உட்காருமுன், "உங்களை என்ன செய்கிறேன் பாருங்கள்!" என்று சவால் விட்டு விட்டு வகுப்பை விட்டு வெளியே வந்திருக்கிறான். சிறிது நேரத்தில் கண்களை மூடிக் கொண்டு உட்கார்ந்திருந்த அவனைச் சுற்றி ஏராள மாணவர் கூட்டம்! கடைசியாகத் தலைமை ஆசிரியர் வந்து அவனை சமாதானப்படுத்தி அழைத்துப் போனார்!

இந்தச் சம்பவம் "ஏதோ ஒரு சக்தி மனிதன் கைக்குள் - நம் கைக்குள் - இருக்கிறது" என்ற ஓர் உணர்வை எழுப்பியது. இது என் மனத்தில் ஆழப் பதிந்து விட்டது.

**மா**யவரம் உயல்நிலைப் பள்ளி புகழ் பெற்ற பள்ளிக் கூடம். ராகவ அய்யங்கார், என்.எஸ். கிருஷ்ணமூர்த்தி அய்யர் போன்ற ஜாம்பவான்கள் தலைமை ஆசிரியர் களாகப் பணியாற்றிய பள்ளி. பின்னால் ஜனாதிபதியான தத்துவப் பேராசிரியர் டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன், எங்கள் பள்ளியின் ஆண்டு விழாவில் வந்து பேசி இருக் கிறார். பிரிக்கப்படாத சென்னை ராஜதானியில், எங்கள் பள்ளி, மாணவர் தேர்வில் முதலிடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தது.

உயர் நிலைப் பள்ளியில் அப்போது இஷ்ட பாடம் என்று, சரித்திரம், கணக்கெழுதுதல் (Book Keeping), வேதியல் (Chemistry), இயல்பியல் (Physics) என்று பாடங்கள் இருந்தன. நான் வேதியல் பாடம் எடுத்துக் கொண்டேன். மாடியில் இருந்த ஆய்வுக் கூடத்தின் வேதியல் உபகரணங்கள், மற்றும் கண்ணாடிக் கூண்டில் வைத்திருக்கும் எடை பார்க்கும் கருவி இதெல்லாம் என்னை மிகவும் கவர்ந்தன. ஆனால் வேதியல் ஆசிரியரோ "ஏண்டா, இந்த வேதியல்? நீ என்ன கம் பவுண்டராகவா போகப் போகிறாய்?" என்று கேட்டார். அவரது ஆலோசனைகளையும் மீறி நான் அதில் சேர்ந் தேன். பள்ளிப் படிப்பு முடியும் போது வேதியலில் முதல் மார்க் வாங்கினேன்! ரவீந்திரநாத் தாகூர் எழுதிய 'இருண்ட அறையின் அரசன்' (KING OF THE DARK CHAMBER) புத்தகம் ஒன்றைப் பரிசாக அளித்தார்கள்.

எனது பதினோராவது வகுப்பு ஆசிரியர் ராமசாமி அய்யர். எளிமையானவர், அன்பானவர். நன்றாகப் பாடம் சொல்லிக் கொடுப்பார். வகுப்பில் ஒரு சமயம் கேட்டார். "கறுப்பாயிருக்கிற பையன் சிவப்பாய் இருக்கிற பெண்தான் வேணுமென்றால் எங்கே போவது? இவனோ கறுப்பு. இது என்ன நியாயம்?" என்று கேட்டார். மாண வர்களுக்குள்ளே அவருக்கு வீட்டில் நிறைய பெண்கள் என்ற பேச்சு!

தங்கவேல் பிள்ளை கணக்கு ஆசிரியர். கடுமை யானவர். ஒரு சமயம் வகுப்பில் ஒரு மாணவன் வீட்டுக் கணக்கைப் போட்டுக் கொண்டு வரவில்லை.

"ஏண்டா வீட்டுக் கணக்கைப் போட்டுக் கொண்டு வரவில்லை?"

"நான் நேற்று பள்ளிக் கூடம் வரலை சார்!"

"ஓகோ! நீங்க வரலிங்களா? செருப்பிலே வெத்தலைப் பாக்கு வச்சு உங்க வீட்டுக்கு கணக்கைக் கொண்டாந்து கொடுத்திருக்கணுங்களா? கழுதை! ஏறுடா பெஞ்சி மேலே!" - இதுதான் தங்கவேல் பிள்ளை!

**மா**யவரம், கொரநாடு பள்ளியில் தேவசகாயம் என்ற தலைமையாசிரியர் இருந்தார். அவரிடம் ஒரு பெண் அழுது கொண்டு போனாள்.

"என்னம்மா, ஏன் அழறே?"

"சார்! அவன் என்னிடம் காதல் கடிதம் குடுக் கிறான் சார்!" என்று மாணவன் எழுதிய காதல் கடிதத்தை தேவசகாயத்திடம் அந்தப் பெண் நீட்டினாள். படித்தார் அதை. பிறகு சொன்னார்.

"இதோ பார்! அந்தப் பையன் இப்போ என்ன செய் துட்டான்? உன் பேரில் ஆசை என்று எழுதி இருக்கிறான். வேறு ஒன்றும் இல்லையே. பதிலுக்கு உனக்கு அவன் மீது ஆசையா, இல்லையா என்று சொல்லிவிடு! அவ்வளவு தானே! அதற்குப் பிறகு அவன் உன்னிடம் ஏதாவது வாலாட்டினால் என்னிடம் சொல்! போ!" என்றார்.

இந்தச் சம்பவம் எங்கள் பள்ளி மாணவர் களிடையே வெகுவாகப் பரவியது. என்ன (PRACTICAL

APPROACH?) யதார்த்தமான உலக இயல்பை உணர்ந்த பதில்? தேவசகாயத்திற்கு நல்ல பெயர்!

**"நா**ன் பள்ளிக் கூடத்தில் யாரையாவது காதலித்தேனா?" இது என்னைச் சந்திக்கும் பத்திரிகைக்காரர்கள் பலர் சில சமயங்களில் கேட்கும் கேள்வி.

பள்ளியிலும் சரி, கல்லூரியிலும் சரி எத்தனையோ அழகான பெண்கள் இருந்தார்கள். என்னுடன் படித்தார்கள். அவர்கள் எண்ணிக்கை மிகக் குறைவு. மனத்தில் ஆசை இருந்தது உண்மை. ஆனால் அது அத்துடன் போயிற்று. காரணம் கல்லூரியில், எங்கே மாணவர்கள் சகஜமாக மாணவிகளுடன் பேசிப் பழகலாமோ அங்கே கூட நான் அப்படி முனைந்ததில்லை. மாணவர்கள் அப்படி என்னதான் சொல்வார்களோ எனக்குத் தெரியாது, இந்தப் பெண்கள் எது சொன்னாலும் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அப்படி என்னதான் சொல்கிறார்கள் என்பது எனக்கு ஆச்சரியமான விஷயம். ஏனெனில் நான் மிகவும் சீரியசான மாணவன். "என்னை நீ காதலித்துத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்" என்று விட்டிருந்தால் என்னால் யாரை யாவது காதலித்து வசப்படுத்தியிருக்க முடியுமா என்பது எனக்கு இன்னும் சந்தேகம்தான்! நல்ல வேளை எனக்கு என் மாமன் மகளைக் கல்யாணம் செய்து வைத்தார்களோ, பிழைத்தேனோ!

**ந**கைச்சுவை கலந்த ஒரு முக்கியமான விஷயத்தை இங்கே சொல்ல வேண்டும். வாழ்வில் முன்னேற்றம் எப்படி ஏற்படுகிறது? காரணம் என்ன?

என்னைச் சின்ன வயதிலிருந்தே "இவன் கெட்டிக்காரன்" என்று சொல்லி வளர்த்தார்கள். துணிக்கடைக்கு என் அம்மாவுடன் போனால் "குப்பாடம்பேட் போட்ட வேஷ்டியை எடுங்கள்" என்பேன். நான் அப்போது எட்டாவது வகுப்பு மாணவன். என் தாய், மகனுடைய இந்த 'ஞான'த்தைக் கண்டு அசந்து போய் விடுவார்கள்! இப்படி சின்ன வயதிலிருந்து தன்னைப் பற்றியே சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் ஏற்படும் தன்னம்பிக்கை - தன்னைப் பற்றிய பெருமை - தன்னைப் பற்றிய உணர்வு

தான், காலப்போக்கில் மனிதனை உயர்த்துகிறது என்று மனவியல் அறிஞர்கள் எழுதுகிறார்கள்.

கலிபோர்னியா பல்கலைக் கழகத்தில் ஐந்து ஆண்டு ஒரு ஆராய்ச்சி செய்தார்கள். அதன்படி ஒரு இளைஞ னுக்கு தன்னைப் பற்றி ஏற்படும் பெருமை, தான் கெட்டிக் காரன் என்ற நினைவு, தான் பிறரால் மதிக்கப்படுகிறோம். அழகுக்காக, படிப்பிற்காக, குணத்திற்காக, போட்டி பந்தயத்தில் ஜெயிப்பதற்காக என்று ஏதாவது ஒன்றில் மாணவனுக்கு ஏற்படும் ஒரு பெருமை உணர்வுதான் (Self Esteem) இளைஞனை, பெண்களை சாதனையாளர் களாக்குகிறது என்று கண்டு பிடித்தார்கள்.

இந்த எண்ணம் எப்படி என்னை உருவாக்கியது என்று என்னை நானே எண்ணிப் பார்க்கிறேன்.

அந்த எண்ணம் அவனை அதே போல - அதே ரீதியில் செயல்படத் தூண்டுகிறது என்கிறார்கள். என் அம்மா சின்ன வயதில் "உனக்கு தெய்வம் சரஸ்வதிதான்" என்று சொல்லி ஓர் அழகான சரஸ்வதி பொம்மையை வாங்கிக் கொடுத்தது இன்னும் நினைவில் இருக்கிறது. அவர்கள் என் மீது வைத்த நம்பிக்கையின் அடையாள மாக எங்கள் வீட்டில் நெடுங்காலம் இருந்தது.





10

# பெயர் எனும் மந்திரம்

"உங்கள் பெயர் சற்று அசாதாரணமானது!'' என்றார் என்னைச் சந்தித்த நண்பர். நான் பதில் ஒன்றும் சொல்லவில்லை. சிரித்துக் கொண்டேன்!

சென்னை வீட்டில் டெலிபோன் வைத்தபோது, என் பெயர் டைரக்டரியில் இருக்கிறதா என்பதற்காகப் புரட்டிப் பார்த்தேன். உதயமூர்த்தி என்ற பெயரில் ஒரே ஒரு பெயர் - என் பெயர் மட்டுமே இருந்தது! 'இவ்வளவு பெரிய சென்னையில் வேறு ஒருவருக்குக் கூட இந்தப் பெயர் இல்லையா?' என்ற சிந்தனை ஓடியது. குறைந்த பட்சம் பெயரிலாவது ஒரு தனித்தன்மை இருப்பதை இது எனக்கே உணர்த்தியது!

ஆனாலும் மனிதர்கள் பழக்கத்திற்கே அடிமை யாகிப் போயிருக்கிறார்கள். மாறுபட்ட எதையும் எளிதில் ஏற்றுக் கொள்ளாத சமுதாயம் என் பெயரையும் ஏற்றுக் கொள்ளவில்லை!

எனது ஏழாவது வகுப்பு ஆசிரியர் வாஞ்சிநாத அய்யர், "ஏய் அஸ்தமனமூர்த்தி! எழுந்திருடா!'' என்றார். எனக்குத் தூக்கிவாரிப் போட்டது; சற்று வெட்கமாகவும் இருந்தது!

மேல்நாடுகளில், "ஒருவர் பெயரை எப்படி எழுது வது? எப்படி உச்சரிப்பது?'' என்று அவர்களைக் கேட்டு நன்கு தெரிந்து கொண்டுதான் அழைப்பார்கள். பெயர் என்பது ஒரு மதிப்புக்குரிய விஷயம்; கிண்டல் செய்கிற விஷயமல்ல! நல்லவேளை, எனது சக மாணவர்கள் அப்படி என்னை அழைக்க முற்படவில்லை. நான் நன்றாகப் படிப்பவன் என்று பெயர் வாங்கி இருந்தது ஒரு காரணமாயிருக்கலாம்.

என் பெரியம்மாவுக்கும் என் பெயர் பிடிக்க வில்லை. தில்லையாடியில் வாழ்ந்து வந்த என் பெரியம் மாவுக்கு வாரிசுகள் இல்லை. அவர்களுடைய மகளும் இளவயதிலேயே விதவையாகி விட்டார். எனவே அவர்கள் என் பெற்றோரின் அனுமதி கேட்டு, என்னை அவர்களது சுவீகார புத்திரனாக எடுத்துக் கொண் டார்கள். அவர்களுக்கு என் மீது அபாரமான பிரியம்; மிகுந்த நெறிகளோடு வாழ்ந்தவர்கள்; சாப்பாட்டிலிருந்து எல்லாம் அந்தந்த நேரத்திற்குத்தான் நடக்கும். அவர்கள் ஒரு ரசம் வைத்தாலும் மணக்கும்.

விடுமுறை நாட்கள் வரும்போதெல்லாம் அவர்கள் வீட்டில் ஒரு வாரம் அல்லது இரண்டு வாரம் தங்கி இருப் பேன்.

அவர்கள் வீட்டிலே ஒரு விஷயம். வீடு பெரிய இரண்டு கட்டு வீடு. வீட்டின் பின் கட்டிலே வாழ்ந்த, வயதானவர்கள் இரண்டு பேர் காசிக்குப் போனார்கள். போனவர்கள் திரும்பவே இல்லை. போகுமுன்பாக, வீட்டின் அறைக்குள் பூமியிலோ, சுவரிலோ எல்லா நகை களையும் பணத்தையும் புதைத்து வைத்து விட்டுப் போனார்கள் என்பதுதான் முக்கியமான விஷயம்.

அது சம்பந்தமாகச் சொல்லப் போனால் "புதையல்" என்று நான் ஒரு கதை எழுதியதுதான் மிச்சம்! பல இடங்களில் தோண்டியும் புதையல் கிடைக்க வில்லை!

அவர்கள் தாத்தா சின்னக்கண்ணு கட்டியிருந்த பிள்ளையார் கோயில் மிக அழகானது! பக்கத்தில் ஆறு. அந்த ஆற்றின் குறுக்கே இப்போது பாலம் கட்டப்பட்டு விட்டபடியால் கோயில், ஊரின் நுழைவாயிலில் அமைந்து எல்லோரையும் வரவேற்கிறது.

தெருவில் உற்சவமூர்த்தியாக விநாயகர் ஊர்வலம் வர, ஸ்தபதியை ஒரு பெரிய செப்புச் சிலை வடிக்கச் சொல்லிப் பணம் கொடுத்தார்கள். பல ஆண்டுகளாகியும் சிலை வரவில்லை. ஒரு சின்ன, அழகிய பிள்ளையாரின் செப்புச் சிலையைக் கொடுத்து, "இதை வைத்துக்

கொள்ளுங்கள், பிறகு பெரியதை செய்து தருகிறேன்'' என்று சொல்லி விட்டார். பெரிய சிலை வரவே இல்லை!

அந்தப் பிள்ளையார் சிலையை என் பெரியம்மா தன் அந்திமக் காலத்தில் என்னிடம் கொடுத்தார்.

நெடுநாள் வரை அதை என் தந்தை பூஜித்தார். அவருக்குப் பின் என் அண்ணி பூஜித்தார்கள். இன்று அது எங்கள் வீட்டு பூஜை அறையில் இருக்கிறது!

எனது பல்கலைக்கழகப் படிப்புக்கு என் பெரியம்மாதான் பணம் கொடுப்பார்கள். இருந்தாலும் அவர்களுக்கு ஒரு குறை. அதாவது என் பெயர்!

“இது என்ன பெயர்? பெயரை மாத்தி வெச்சுக்க. மாணிக்கம்னு மாத்திக்க'' என்றார்கள். நான் ஒன்றும் சொல்லவில்லை. ‘மாணிக்கம்’ என்ற பெயரை அவர்கள் குறிப்பிட்ட காரணம், அந்த ஊரில் மிகவும் பணக்காரரும், செல்வாக்கும் உள்ளவரது பெயர் மாணிக்கமாக இருந்ததுதான்! மேலும் எங்கள் பெரியம்மா குடும்பத்திற்கு வேண்டியவர் அவர். நான் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்த போதும் என் வகுப்பில் நான்கு கிருஷ்ண மூர்த்திகள், இரண்டு ராமமூர்த்திகள் ஒரு தட்சிணா மூர்த்தி, ஒரு அகோர மூர்த்தி என்று இருந்தார்களே தவிர உதயமூர்த்திகள் யாரும் இல்லை, என்னைத் தவிர!

இது என்னைப் பாதித்தது.

“பெயர் பிறந்தது எப்படியோ?'' என்ற ஆராய்ச்சியில் இறங்கினேன்.

நான் பள்ளிக்கூடத்தில் பரீட்சை எழுதிவிட்டு வரும் போதும் பள்ளித் தேர்வில் ரிசல்ட் பார்க்கும்போதும் எனக்கு அச்சம் ஏற்படும்.

அப்போதெல்லாம் என் தாய் கோயிலுக்குப் போய் விட்டு வருவார். வந்து என்னிடம் சொல்வார்: “கோயிலில் வேண்டிக் கொண்டேன். சாமி உத்தரவு கொடுத்து விட்டது!''

அவர் சொல்கிற தோரணை, தொனி எல்லாம் எனக்குப் பெரிய நம்பிக்கை தரும்.

"சாமி எப்படி வந்தது? எப்படி உத்தரவு கொடுத்தது?" என்றெல்லாம் கேட்கத் தேவையில்லாத அளவுக்கு, என் தாயின் குரலில் நம்பிக்கை தெறிக்கும்!

என் தாய் ஆவணி மாதத்தில் ஒரு நான்கு நாட்களும், கார்த்திகை மாதத்தில் நான்கு நாட்களும் சூரிய நாராயணமூர்த்தி விரதமிருப்பார்கள். தினமும் காலையில் குளித்து பூஜை செய்து பின் சூரியனுக்கு நைவேத்யம் செய்துவிட்டு ஒருவேளைதான் சாப்பிடுவார்கள். இப்படி ஆண்டுக்கு இரண்டு முறை செய்வார்கள்.



பிறந்த வீடு
மயிலாடுதுறைக்கு அருகில் விளநகர் கிராமத்தில் நானும் என் மனைவியும் என் அண்ணன் அண்ணியுடன்

"நமது வீட்டில் நீ பிறந்த அறை கிழக்குப் பார்த்த அறை. நீ பிறந்த போது அப்போது தான் சூரியன் கிளம்பி வீட்டுக்குள் வந்தது. அதுவுமன்றி அன்று ஞாயிற்றுக் கிழமை. ஞாயிறு என்றால் சூரியன் என்று பொருள். எனவேதான் நம் தாய் உனக்கு உதயமூர்த்தி என்று காரணப் பெயரிட்டு சந்தோஷப்பட்டார்கள்!" என்று என் அண்ணன் சொன்னார். இதை என் தாயும் பலமுறை சொல்லக் கேட்டிருக்கிறேன்.

பெயர் என்பது ஒரு மந்திரம். உயர்ந்த எண்ணம் கொண்டு பெற்றோர் இடும் பெயர். "சாகும்போதாவது சிவன் பெயரைச் சொல்ல வேண்டுமென்று மகனுக்கு "சிவா என்று பெயரிட்டேன்" என்பார்கள். பெயர்களின் அர்த்தம் எதுவோ, அதற்கேற்ற வகையில் பெரும்பாலான பெயர்களின் பொருள், மனிதர்களின் தன்மையாக மலர்ந் திருப்பதைப் பார்த்திருக்கிறேன்.

நான் கல்லூரியில் படிக்கும்போது ஒரு வாசகம் தென்பட்டது. அதை என் டயரியில் குறித்து வைத்தேன். என் பெயரை விமர்சிப்பவர்களிடையே சொல்ல அது எனக்குப் பெரிதும் பயன்பட்டது.

"பெயரில் என்ன இருக்கிறது?

ரோஜாவை எந்தப் பெயரிட்டு அழைத்தாலும் அது மணக்கத்தான் போகிறது"

என் பெயரே அரிதான ஒன்றாக இருக்கும்போது எனக்கு ஏன் எம்.எஸ். என்ற இரண்டு 'இனிஷியல்கள்'? அதே பெயரில் மற்றொருவர் இருந்தால் மட்டுமே இரண்டு எழுத்துக்களை பெயரின் முன் போடுவார்கள். ஆனால் என் விஷயம் வேறுபட்டது. என் தாத்தா பெயர் முத்து. என் தந்தை பெயர் சிங்காரம். எனது ஆசிரியர் ரமணி அய்யர், இதன் காரணமாகவே எம்.எஸ். என்ற எழுத்துக்களை என் பெயருக்கு முன்னால் எழுதி விட்டார். அதே போல நான் பள்ளியில் சேர்க்கப்பட்ட போது ஆசிரியர் ஆண்டை மட்டும் நினைவு வைத்துக் கொண்டுதான் பிறந்த தேதியை எழுதினாரே தவிர, நான் பிறந்த சரியான தேதியை அல்ல!

எனக்கு நினைவு தெரிந்தபோதிலிருந்து இந்த 'எம்.எஸ்.' என்ற இனிஷியலிலே ஒரு தனிப் பெருமை! காரணம் எம்.எஸ். என்று சொல்லப்படும்போது, அது ஒரே ஒரு இனிமை கொண்ட உயர்ந்த பாடகி அவர்களை மட்டுமே அன்றும் குறிப்பிட்டது, இன்றும் குறிப்பிடுகிறது என்பதுதான்!

சில ஆண்டுகளுக்கு முன் எனது நண்பர், தொழில திபர் ஏ.ஸி. முத்தையா வீட்டுக்குச் சென்றிருந்தேன்.



என் மனைவி எம்.எஸ். அவர்களைப் பார்க்க வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். எம். எஸ். அவர்களும் சதாசிவம் அவர்களும் எங்களை அன்புடன் வரவேற்றார்கள்; ஆசி கூறி வாழ்த்தினார்கள்.

அவரது மூத்த மகளுக்குச் சுமார் மூன்று அல்லது நான்கு வயதிருக்கும்.

"உன் பெயர் என்ன?" என்று கேட்டேன்.

"எம் பேரு அபிராமி" என்று குழந்தை சொன்ன போது, நான் "திருக்கடையூர்..." என்று சொல்ல முனைந் தேன். உடனே அந்தக் குழந்தை, "எம் பேரைத்தான் திருக் கடையூர் அபிராமிக்கும் வச்சிருக்காங்க!" என்றது! நான் அசந்து போனேன்.

அது போல என் பெயரைத்தான் சூரியனுக்கும் வைத்திருக்கிறார்கள் என்று எனக்குப் பட்டது!

என் நண்பர்கள் வீட்டு பூணூல் போடும் வைபவங் களுக்குப் போனபோது சிலர் காயத்ரி மந்திரத்தை எனக்கு விளக்கினார்கள். பாரதியார் காயத்ரி மந்திரத்தை மிக அழகாக மொழிபெயர்த்திருக்கிறார்.

"அறிவைத் தூண்டுகிற சுடர்க் கடவுளைத் தியானிப் போமாக!" என்று. "அறிவைத் தூண்டுகிற" என்ற அந்த

வாசகம் என்னை மிகவும் சிந்திக்க வைத்தது; அதுதான் எனக்குத் தேவை. சூரியனிடம் இப்போதெல்லாம் அதைத் தான் கேட்கிறேன்!

ஒரு சமயம் ஒரு நண்பர், "நீங்கள் ஆதித்ய ஹிருதயத்தைப் படிக்க வேண்டும்" என்று சொல்லி என்னிடம் ஒரு சிறு நூலைக் கொடுத்தார்.

ராமபிரானே ஒரு கடவுள். அந்த ராமபிரான் ராமேஸ்வரத்தில் சிவலிங்கத்தைப் பூஜை செய்கிறார். ராமர் ராவணனுடன் யுத்தம் செய்யத் தயாராக இருந்த சமயம், "ஜெயிப்போமா?" என்ற சோர்வுடன் உட்கார்ந் திருக்கிறார் ராமர். அப்போது ராமராவணயுத்தத்தைப் பார்க்க வந்த பெரியவர்களில் (தேவர்கள்) ஒருவர், - அகத்தியர், "ராமா! இங்கே வா! இந்தச் சூரியனைப் பூஜிக்கும் மந்திரத்தை உனக்குச் சொல்லித் தருகிறேன். நீ இதை ஒரு நாளைக்கு மூன்று முறை சொல். நீ ராவணனை வெல்வாய்!" என்று சொல்லிக் கொடுக் கிறார்.

"ராமர் இதைக் கேட்டவுடன் துயர் நீங்கியவரா னார்" என்று எழுதுகிறார்கள். ஆதித்ய ஹிருதயம் பூராவும் ஆதித்தனுடைய (ஆதித்தன் என்பது சூரியனுக்கு ஒரு பெயர்) வலிமையைப் போற்றுகின்ற, வாசகங்கள்தாம். "வலிமையைப் பற்றி சிந்தித்தால், படித்தால் வலிமை நம்மிடம் கூடுகிறது" என்ற (தத்வமஸி) உபநிடத வாசகப் படி நமக்கும் எடுத்த காரியத்தில் வெற்றி கிடைக்க வைக்கும் மந்திரமாக இது போற்றப்படுகிறது.

மனிதர்களாகப் பிறந்த நாம், எங்கெங்கெல்லாம் நமக்குச் சாதகமான விஷயங்கள் - நமக்குப் பொருத்த மானவை இருக்கின்றனவோ அவற்றை எடுத்துக் கொள்வது நல்லது.

நமது பெயரின் பொருளில் அமைந்திருக்கும் ஓர் உயர்ந்த குணத்தை ஏன் நாம் நமக்குச் சொந்தமானதாக எடுத்துக் கொள்ளக்கூடாது? தாராளமாக எடுத்துக் கொள்ளலாம்!

என் பெயரும் அதன் அர்த்தமும் என்னை எப்போதும் செதுக்கி, உயர்த்திக் கொண்டிருக்கிறது என்பது உண்மை.

11

## வாழ்க்கையே அவர் தந்த செய்தி!

எங்கள் கிராமத்தை நினைத்து விட்டால் மனத்தில் ஒரு மகிழ்ச்சி; ஒரு அசாதாரணமான பாதுகாப்பு, ஒரு அமைதி போன்ற எண்ணங்கள் நிறைகின்றன.

அன்புடன் எங்களை எங்கள் பெற்றோர் வளர்த்தார்கள்; உருவாக்கினார்கள். அந்தப் பாதுகாப்பும் பாசமும்தான் அடித்தளம் அமைத்தது. அதற்கு மேலும் ஒரு அற்புதமான சூழ்நிலை எங்கள் ஊரில் இருந்தது. ஒரு சிவன் கோயில், ஒரு பெருமாள் கோயில், காவிரி பாயும் ஊர் என்றும், காவலுக்கு அய்யனார் கோவில், மழைக்கு மாரியம்மன் கோவில், வேதபாராயணங்களுக்கு அக்கிரஹாரம், அதேபோல பூஜை செய்பவர் வாழ்கின்ற பூசாரித் தெரு, தச்சர் தெரு, கொல்லர் தெரு, உடையார் தெரு, செட்டித் தெரு, இடையர் தெரு, இசை வேளாளர் தெரு என்று ஒரு அழகிய கிராமம்.

ஊரைச் சுற்றி ஹரிஜனக் குடியிருப்புக்கள். அதன் பெயரைக் கேட்டாலே ஆச்சரியமாயிருக்கும். ஒரு ஹரிஜன குடியிருப்புக்குப் பெயர் மேல் அக்ரஹாரம்!

காவிரியில் தண்ணீர் வருகிறது என்றால் அந்த நுங்கும் நுரையுமாக வரும் புதுவெள்ளத்தைப் பார்க்கவே கூட்டமாய் ஓடுவோம். ஊரின் நடுவே காவிரியிலிருந்து பிரிந்து வரும் சத்தியவாணன் வாய்க்கால் பெயரைக் கவனியுங்கள்! சத்தியமாக வாழ்பவர்கள் வாழும் ஊர்! எப்படி!

எங்கள் இனத்திற்கென்று ஒரு குரு பீடம். அதுதான் குரு ஞான சம்பந்தர் தோற்றுவித்த தருமபுரம் மடம். என் பெற்றோருக்கெல்லாம் தீட்சை கொடுத்துக் குரு உபதேசம் செய்த இடம் அதுதான்.

இப்படி எங்கள் ஊரை ஒரு லட்சிய கிராமம் என்று சொன்னால் மிகையாகாது.

திருஞான சம்பந்தர் வருகிறார். காவிரியில் வெள்ளம். காவிரியைக் கடந்துதான் ஊருக்கு உள்ளே வர வேண்டும். 'எந்த இடத்தில் இறங்கினால் ஆழமில்லாமல் சுழல்கள் இல்லாமல் இருக்கும்' என்று தவிக்கிறார். அப்போது அங்கே ஒரு பிராமணச் சிறுவன் வருகிறான். அக்கரையில் நிற்கும் சிறுவன் "அந்த விழல் - (ஒருவகை தர்ப்பை போன்ற புல்) - வளர்ந்திருக்கிறதே அதன் வழியாக இறங்குங்கள்'' என்று கூறுகிறான். ஞான சம்பந்தர் வெகு எளிதாக இறங்கி ஆற்றைக் கடக்கிறார். வழி காட்டிய சிறுவன் காவிரி கரை வழியே தன் வேலையைப் பார்த்துக்கொண்டு போய் விடுகிறான். கரையேறி வந்த திருஞானசம்பந்தர் "அப்பனே! சரியாக வழி காட்டினாய்! என்று நன்றி சொல்ல ஆளைத் தேடுகிறார். பையன் இல்லை! தேடுகிறார். ஆளைக் காணோம். "அடடா! இப்படி நான் என் அப்பனைக் கோயிலில் காணத் தவித்துக் கொண்டிருந்தபோது, ஆண்டவனே சிறுவனாக வந்து எனக்கு வழி காட்டி இருக்கிறான்!'' என்று நெஞ்சமெல்லாம் நன்றியால் நிறைய, கை கூப்புகிறார். எனவே தான் கோயில் சுவாமிக்கு - மூலவருக்கு - துறைகாட்டும் வள்ளலார் என்று அடை மொழியுடன் பெயர் ஏற்பட்டது.

இன்னமும் கோயிலிலே தலவிருட்சமாக கோயில் உள் பிராகாரத்தில் விழல் அங்கே வளர்க்கப்பட்டு வருகிறது. விழல் என்றாலே விழலுக்கு இறைத்த நீர் ஆகாது! விழலும் வழிகாட்டும்! கோயிலுக்கு வரும் பக்தர்கள் அனைவரும் அங்கே 'தனக்கும் வழி காட்ட வேண்டும்' என்று வேண்டிக் கொண்டு விழலில் ஒரு முடிச்சைப் போட்டு விட்டுப் போவார்கள்.

**ந**ம்பிக்கைதான்! நம்பிக்கையை லேசாக எண்ணி விடாதீர்கள். ஒரு எண்ணமானது மனத்தில் வேர் விட்டு ஆழமான நம்பிக்கையாகும் போது எண்ணச் சக்திக்கு வலிமையேற்படுகிறது. நாளடைவில் எண்ண சக்தி புலன்களுக்குப் புரியும் வகையில் பொருள் வடிவம் பெறுகிறது. - நமது எண்ணங்கள் இந்தப் பொருளாலான

உலகில் இப்படித்தான் நிறைவேறுகின்றன என்று நம்பிக்கையின் வலிமை பற்றி ஹார்வர்டு பல்கலைக் கழக மனவியல் ஆராய்ச்சியாளர் ஹெர்பர்ட் பென்சன் கூறுகிறார்.

என் தந்தைக்குச் சொந்த ஊர் விளநகரிலிருந்து மூன்று கிலோமீட்டர் தொலைவில், காவிரிக்கு மறுகரையில் உள்ள, கருவாழைக்கரை. அந்த ஊர் ஆற்றங்கரையில் என் தந்தை நிறுவி வழிபட்ட பிள்ளையார் சிலை பல காலம் இருந்தது. இப்போது ஊருக்குள் அதற்கு ஒரு கோயில் கட்டி வைத்திருக் கிறார்கள். இதனால் அந்தப் பிள்ளையாரை என் தந்தையின் பெயர் சூட்டி அவர் வழிபட்ட பிள்ளையார் என்றே சொல்லி வந்திருக்கிறார்கள்.

எனது பெரியப்பா துரைசாமி மிகுந்த கெட்டிக் காரர் என்றும், சுமார் ஐம்பது கிலோமீட்டர் சுற்று வட்டாரத்தில் மளிகைக் கடைப் பொருளை விற்கும் மொத்த வியாபாரம் செய்து வந்தார் என்றும், நிறைய சம்பாதித்தார் என்றும் சொல்லி இருக்கிறார்கள். தன் தம்பிக்கு உள்ளூர் வியாபாரம் செய்யச் சொல்லி அருகிலுள்ள விளநகரில் கடை வைத்துக் கொடுத்தார்.

என் தந்தை மிகுந்த சாந்த குணம் கொண்டவர். எனினும் வியாபாரத்தின் நுணுக்கம் தெரிந்தவர். விளையும் காலத்தில் நெல்லானாலும், கடலை, துவரை, உளுந்து, எள் என்று எது ஆனாலும் நல்லதாகப் பார்த்து வாங்கி ஒரு ஏழெட்டு மாதம் கழித்து அதை விதை நெல்லாக, விதை எள்ளாக விற்பார்கள். அதுவன்றி ஊரில் எங்களுக்கு மளிகைக் கடை இருந்தது.

ஒரு சமயம் இப்படிக் கடலையை (மணிலாக் கொட்டை) பெரிய அளவில் வாங்கி வீட்டிலே தூண்களில் மரச் சட்டம் அடித்துக் கொட்டி வைத்திருந்தார்கள். துரதிர்ஷ்டவசமாக வாங்கிய கடலை பிஞ்சுகடலையாகிப் போக - முழுக்கடலையும் பூசாணம் பிடித்து வீணாகிப் போயிற்று.

முதலீடோ எழுநூறு ரூபாய். 1920ல் மிகப் பெரிய பணம். இரண்டு மூன்று மாதங்களில் கொள்முதலுக்குப்

பணமில்லை. நெருக்கடி. பொருளைக் கொடுத்தவர் களுக்கும், பணத்தைக் கடனாகப் பெற்றவர்களுக்கும் பணம் கொடுக்க வேண்டிய பொறுப்பு.

மிகுந்த பண நெருக்கடியையும், மன நெருக்கடி யையும் அவர் சமாளித்திருக்க வேண்டும் - "என் தந்தையால் இனி வியாபாரம் செய்ய முடியாது" என்று எண்ணிய சிலர், பணத்தை உடனடியாகத் தங்களுக்கு முதலில் கொடுத்து பைசல் செய்யுமாறு நம்பிக்கையின்றி நெருக்கி இருக்கிறார்கள். என் தந்தை எல்லோருக்கும் கொடுக்க முற்பட்டு, எதிர்வீட்டில் இருந்த முத்துக்குமரன் என்பவருக்குத் தான் பெற்ற கடனுக்கு ஈடாகத் தான் அணிந்திருந்த மூணு பட்டை வெள்ளி அரைஞான் கயிற்றைக் கொடுத்ததாகவும், அவர் அதை வாங்க மறுத்து, "ஐயா, உங்கள் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது. மெதுவாகக் கொடுங்கள்!" என்று சொல்லி விட்ட தாகவும் என் அண்ணன் கூறினார்கள்.

ஊரிலுள்ள சிலரும் மற்றும் எங்கள் நெருங்கிய உறவினர்களும் உடனே உதவிக்கு வந்து என் தந்தையின் பக்கம் நின்றிருக்கிறார்கள். ஆனால் இதைப் பெரிதாக ஒருநாளும் என் தந்தை சொல்லியதில்லை, சிரித்துக் கொண்டே சொல்வார்.

என் தந்தைக்கு அளவு கடந்த நிதானம்; அளவு கடந்த பொறுமை. பிறரைப் பெருந்தன்மையுடன் மன்னிக்கும் மனோ பாவம். கடையில் பற்று எழுதுப வர்கள் திருப்பிக் கொடுக்கா விட்டாலும் - இரண்டு முறை கேட்பார்கள் - பின் விட்டு விடுவார்கள். "அவனால் கொடுக்க முடியாது. போனால் போகிறான்" என்று சொல்வார்கள்.

எங்கள் ஊரில் இசை வேளாளர் தெரு இருக்கிறதென்று சொன்னேன். அந்தக் காலத்தில் அங்கே நடனக் கலைஞர்கள் - பெண்கள் இருந்தார்கள். பல நாதஸ்வர வித்வான்கள் இருந்தார்கள். அவர்கள் அனைவரும் மிகக் கௌரவமாக சிறப்பாக வாழ்ந்த குடும்பங்கள்.

இந்த இசை வேளாளப் பெண்மணிகள் கல்யாண காலங்களில் - கல்யாண வீடுகளில் - இன்று பாட்டுக்

கச்சேரி நடத்துவது போல - அந்தக் காலத்திலே சதிர்க் கச்சேரி செய்வார்கள்.

இசைக் கருவிகள் முழங்க, பெண்கள் அழகாக ஒப்பனை செய்து கொண்டு கல்யாண வீட்டிற்கு முன் போடப் பட்டிருக்கும் பந்தலில் பெரிய ஜமுக்காள விரிப்பின் மீது சதிர்க் கச்சேரி செய்வார்கள். பெண்கள் முழுக்கால் சட்டை போட்டு நான் அதுவரை பார்த்ததில்லை. இவர்களோ வெல்வெட்டில் செய்த முழுக்கால் சட்டையை அணிந்து அதன் மீது புடைவை அணிந்து நடனமாடுவார்கள். சபையில் ஆண்களே அதிகமிருப்பார்கள். பெண்கள் வீட்டுத் திண்ணைகளில் இருந்து பார்ப்பார்கள்.

நடனம் ஆடும்போது, ஆண்கள் வெள்ளிக் காசுகளையும் நோட்டுக்களையும் ஒவ்வொரு நடனத்தின் போதும் வீசி எறிவார்கள்.

ஆகவே இந்தக் கல்யாண சீசனில் மட்டுமே அவர்களுக்கு வருமானம் இருக்கும். மற்ற மாதங்களில் வருமானம் இருக்காது.

வருமானமில்லாத அந்த ஆறுமாத காலத்தில் எங்கள் கடையில் பற்று இருக்கும். ஆறுமாதம் கழித்து கல்யாண காலம் வந்ததும் அத்தனையும் கொடுத்து விடுவார்கள். எனினும் அவர்களும், எங்கள் இனத்தவர் களும் கொண்டிருந்த அன்பும், பரஸ்பர மரியாதை யையும் எண்ணிப் பார்க்கும்போது வியப்பாகவே இருக்கிறது. என் தந்தை அவர்கள் மீது வைத்திருந்த நம்பிக்கையை அவர்கள் நன்றியோடு பாராட்டினார்கள்.

அது மட்டுமல்ல - எங்கள் ஊர் மேல் - அக்ரஹாரத்திலிருந்த ஒரு நபர் மொரிஷியஸ் நாட்டிற்குப் போய் பட்லராக ஒரு வெள்ளைக்காரத் துரையிடம் வேலை பார்த்தார். அவருடைய மனைவி ஒரு இரண்டுங் கெட்டான் - அவ்வளவு விஷயம் தெரியாத பெண்மணி. எந்தக் கூலி வேலையும் செய்யத் தெரியாது. அவர் குடும்பத்திற்காக மாதா மாதம் பணம் - என் தந்தைப் பெயருக்கு வரும். என் தந்தை பணத்தை அவர்களிடம்

கொடுப்பார். சில ஆண்டுகளில் அவர் மொரிஷியஸ் நாட்டிலேயே காலமானார். அவருடைய குடும்பத்திற்கு அங்கிருந்து வந்த பணம் நின்று போன போதும் என் தந்தைதான் உதவி வந்திருக்கிறார்.

ஊர் மக்களுக்குப் பிராமிசரி நோட்டு எழுதிக் கொடுப்பதிலிருந்து, கோயில் பூஜைகளுக்கு உள்ளூரிலிருந்து வெளியூர் சென்றவர்கள் அனுப்பும் மாதா மாதப் பணம் பட்டுவாடா செய்ததிலிருந்து என் தந்தைதான் செய்து வந்தார்.

நான் அமெரிக்கா சென்ற ஆறு மாதத்தில் என் தந்தை காலமானார். எனக்குச் செய்தியை தபாலில் எழுதி இருந்தார்கள். நான் அங்கு சென்ற ஆறு மாதத்தில் உடனே திரும்பி வர முடியாத நிலை. கண்ணீருடன் என் அண்ணனுக்குக் கடிதம் எழுதி இருந்தேன். "நான் அருகில் இல்லையே! நான் இல்லையே என்று அப்பா வருத்தப் பட்டார்களா?" என்று கேட்டு.

எனது அண்ணன் எழுதி இருந்தார்கள். "நீ அப்படிக் கவலைப்பட வேண்டிய அவசியமே இல்லை. யார் வந்தாலும் உன்னைப் பற்றிக் கேட்டால் அவன் குபேர நாட்டில் இருக்கிறான்" என்று சொல்லி சந்தோஷப் படுவார்களே தவிர வேறெதும் நினைத்ததில்லை."

நான் மேல் படிப்புக்கு அமெரிக்கா செல்லத் தீர்மானித்த போது, என்னை அனுப்பிய எனது பேராசிரியர் டாக்டர் தியாகராஜன் மிகவும் கவலைப் பட்டார். "உன் தந்தைக்கு வயது எண்பத்தி எட்டு ஆகிறது என்று சொல்கிறாய். இந்தத் தள்ளாத வயதில் உன்னை எப்படி அனுப்ப மனம் வரும்?" என்று சொன்னார்.

நான் என் தந்தையிடம் போனேன். என் தந்தை திண்ணையில் உட்கார்ந்திருந்தார்கள். அருகில் உட்கார்ந்து கொண்டு விஷயத்தைச் சொன்னேன். "நீ சந்தோஷமாகப் போய் வா!" என்றார்கள். எனக்குக் கண்களில் கண்ணீர் தளும்பியது. "நீங்கள் இந்த வயதில் இருக்கிறீர்களே. உங்களுக்கு ஒன்று ஆகிவிட்டால்...." என்றேன். பேச முடியவில்லை.

"நீ இருந்தால் என்ன, என் உயிரைப் பிடித்துக் கொள்ள முடியுமா? - நீ போய் வா. நீ பெரியவனாக வேண்டும்!" என்று வாழ்த்தினார்கள்.

அந்தத் திண்ணை, அவர்கள் சொன்னது எல்லாமே நேற்று நடந்தது போலிருக்கிறது.

அவர் ஒரு தெய்வீக ஆத்மா!






12

# எம்.ஜி.ஆர். கொடுத்ததை மறுத்தேன்!

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில், இண்டர் மீடியட் - (பட்டப்படிப்புக்கு முன் இரண்டாண்டு படிக்கும் -) வகுப்பில் நான் சேர்ந்தேன்.

நான் கிராமத்துப் பையன். பல்கலைக் கழகப் படிப்பு என்பது பெரிய விஷயம். கனவு கூட காண முடியாத விஷயம். எனினும் படித்தேன்; காரணம் என் மாமா விருத்தாசலம் அவர்கள். அவர்கள் அப்போது சிதம்பரத்தில் வருவாய்த்துறை இலாகாவில் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். கம்பீரமான உருவம்; நல்ல சிவப்பு; கிராமத்தில் எங்களைப் பார்க்க வந்தார்களானால் - நான் எட்டு வயதுச் சிறுவன் அப்போது - அண்ணாந்து பார்ப்பேன். அந்தத் தெருவையே நிறைத்துக் கொண்டு நடந்து வருவார்கள். எப்போதும் பெரிய கை; தாராள உள்ளம். சேலத்து மாம்பழங்களைப் பை நிறைய வாங்கி வருவார்கள்.

எனவே நான் மயிலாடுதுறை உயர்நிலைப் பள்ளியில் ஆறாவது படிவம் (பதினோராம் வகுப்பு) முடித்தவுடன் என்னை மாமா அவர்கள் சிதம்பரத்திற்கு அழைத்துக் கொண்டு போய் விட்டார்கள்.

இதற்கு முன் எனது சிதம்பர விஜயத்தை சொல்லவேண்டும். மயிலாடுதுறைப் பள்ளியில் நான் பத்தாவது படித்துக் கொண்டிருந்தபோது, என் அண்ணன் திருமண அழைப்பை எடுத்துக்கொண்டு நான் சிதம்பரம் சென்றேன். என் மாமாவின் இரண்டாவது மகன் திரு பாலசுந்தரம் அப்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தார். இயல்பியல் படிப்பில் (ஆனர்ஸ்) சிறப்பு வகுப்பு,

மூன்றாண்டுப் படிப்பு. அவர் படிப்பில் அசகாய சூரர். அவருடைய அறிவும் ஞாபக சக்தியும் இன்றும் அபாரமானது. ஆரம்பப் பள்ளியில் ஒன்றாம் வகுப்பிலிருந்து மூன்றாம் வகுப்பிற்கும், மூன்றாம் வகுப்பிலிருந்து ஐந்தாம் வகுப்பிற்கும் 'டபுள் பிரமோஷன்' பெற்றவர். 'ஆனர்ஸ்' படிப்பில், அவர் வகுப்பில், அவர்தான் முதல் மாணவர். அவர் வயதில் உள்ள எங்கள் எல்லோருக்கும் அவர்தான் எடுத்துக்காட்டு.

நான் அங்கு சென்றிருந்த போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தை சுற்றிக் காட்டினார். முதலில் நான் பார்த்த இடம் சாஸ்திரி ஹால் எனப்படும் பட்டமளிப்பு விழா மண்டபம். எதிரே மிக அழகான புல்வெளி. மலர்த் தோட்டம், நீரூற்று. கட்டடத்தை நிமிர்ந்து பார்த்தால் வானுயர நிற்கும். கட்டி அணைக்க முடியாத வெண்மையான தூண்கள். படிகளைக் கடந்து உள்ளே சென்றேன். எங்கும் வெள்ளை வெளேரென்ற சலவைக் கல் பதித்த ஹால்கள். "அதன்மீது கால் பதித்து நடக்கலாமா?' என்று கேட்டேன்! உள்ளே ஒரு பக்கம் நடராஜர் சிலையும், மறு பக்கம் சயனித்திருக்கும் கோவிந்தராஜப் பெருமாள் சிலையும், நடுவில் மேடையுமாக; பெரிய கனவுலகம் என் கண் முன் தெரிந்தது.

'சின்னண்ணன்' என்று நாங்கள் பாசத்துடன் அழைக்கும் பாலசுந்தரம் என்னை மேலே உள்ள 'செனட்' ஹாலுக்கு அழைத்துச் சென்றார். நான் மயிலாடுதுறையில் ஆசிரியர் உட்காரும் மர நாற்காலியைத் தான் பார்த்திருக்கிறேன். அங்கே சித்திர வேலைப்பாடு செய்த நாற்காலிகள். அதில் உட்காரவும் சாய்ந்து கொள்ளவும் பஞ்சு வைத்து வெல்வெட்டினால் இருக்கை. நான் பிரமித்துப் போனேன்.

"அண்ணே, இங்கே படிக்க நீங்கள் பாக்கியம் செய்தவர்கள்!" என்றேன். 'அடாடா! இங்கே படிக்கக் கொடுத்து வைத்திருக்க வேண்டும்' என்று எண்ணினேன். படிப்பதற்கு நான் அங்கே வருவேன் என்றோ, வர முடியும் என்ற நினைப்போ, ஏதும் இல்லை. அந்தக்

கல்விக் கோயில் என் மனத்தில் அழியாத இடம் பெற்றது. அதைக் கட்டி வளர்த்த ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அவர்களைப் பார்த்திருக்கிறேன். நான் மயிலாடுதுறையில் தேசீய பள்ளியில் படித்தபோது அதன் ஆண்டு விழாவுக்கு வந்திருந்தார். பின்னால் நான் திரு ஏ.சி. முத்தையாவுக்கு, தனியாக பாடஞ்சொல்லிக் கொடுக்கும் ஆசிரியராக இருந்த போது "உங்கள் தாத்தா நிறுவிய அண்ணாமலைப் பல்கலைக் கழகம் அங்கே இல்லாவிட்டால் நான் படித்திருக்க முடியாது" என்று கூறுவது உண்டு.

**நா**ன் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சேர்ந்த இரண்டாவது ஆண்டு. வழக்கமாக நானும் எனது நண்பர்கள் இருவரும் மாலைவேளைகளில் ரயில்வே லயனை ஒட்டி காலாற நடப்பதுண்டு. அங்கே பாலமான் ஆறு ஓடுகின்ற இடத்தில், மதிலில் உட்கார்ந்தபடி பேசிக் கொண்டிருப்பதுண்டு.

அப்போது தற்செயலாக "நீ என்ன ஆக விரும்புகிறாய், படித்தபின்?" என்றொரு கேள்வி எங்களுக்குள் எழுந்தது. ஒரு நண்பர் "நான் கடை வைத்துத் தொழில் செய்யப் போகிறேன்!" என்றார், மற்றவர் "எனக்கு எதுவும் திட்டமில்லை" என்றார். நான் "நிறையப் படித்தவனாக வர வேண்டும் என்பதுதான் என் ஆசை" என்றேன்.

இந்த எண்ணம் எங்கிருந்து வந்தது? ஏன் வந்தது? காரணம், எனது ஆசிரியர் ரமணி அய்யர் அவர்களா? கல்கி அவர்களா? அல்லது மயிலாடுதுறைப் பள்ளிச் சூழ்நிலை தந்ததா? என்னைச் செதுக்கிய எண்ணம்!

அதை நான் அப்போதே மறந்து விட்டேன். நான் வேதியலில் இளநிலைப்பட்டம், பி.எஸ்ஸி பெற்று ஓராண்டு சீர்காழியிலும் ஐந்தாண்டு குடந்தை அரசினர் கல்லூரியிலும் பின் கிண்டியிலும் வேலை பார்த்து, படித்து அமெரிக்கா சென்றேன்.

அமெரிக்காவில் நான் டாக்டர் பட்டம் பெற்று பேராசிரியராக வேலை பார்த்துப் பத்தாண்டுகள் இருந்து, விகடனில் மனவியல் சம்பந்தமான கட்டுரைகள் எழுதிய

போது, மனவியலில் டாக்டர் பட்டம் பெற வேண்டும், மேலும் படிக்க வேண்டும் என்ற ஆசை விடவில்லை. ஹார்வர்டிற்கு விண்ணப்பிக்கத் தீர்மானித்தேன். வீட்டில், ஒருநாள் இரவுச் சாப்பாட்டை மேஜையில் உட்கார்ந்து அனைவரும் சாப்பிட்டுக் கொண்டிருந்த போது இதைச் சொன்னேன். என் மூத்த மகன் சித்தார்த்தன் பட்டம் பெற்று அப்போது வேலை பார்த்துக் கொண்டிருந்தான். அவன், "அப்பா! உங்களிடம் இப்போது ஐந்து பல்கலைக் கழகப் பட்டங்கள் இருக்கின்றன! முதலில் இதைக் 'கேஷ்' பண்ணுங்கள்!" என்றான். எனக்கு சற்று அதிர்ச்சி! நான் ஒன்றும் பதில் பேசவில்லை. யோசித்துப் பார்த்தேன். குடும்பத்தை எல்லாம் விட்டு விட்டு இனியும் நாம் நான்காண்டுகள் மேல் படிப்புப் படிக்கச் செல்வது சரியல்ல. நாமே படித்துக் கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தேன். பிரணவ மந்திரத்தை தந்தைக்கு உபதேசித்த சுவாமிமலை முருகன் போல அவன் தோன்றினான். நானும் பார்த்திருக்கிறேன். அவன் எப்போதுமே எல்லாவற்றையும் சரியாக, திருந்தச் செய்யவேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை கொண்டவன்; சொல்லப் போனால் நாம் ஏதோ முந்திப் பிறந்து விட்டோம்! நமக்குப் பின்னால் பிறந்த பிள்ளைகள் எல்லாம் அறிவில் சில சமயம் நம்மைவிட கெட்டிக்காரர்களாய் இருப் பார்கள்.

**எ**ன் படிப்பும் என் ஆசிரியத் தொழிலும், என்னிடத்தில் சில தனி குணங்களைத் தோற்றுவித் திருந்தன. அதாவது பேசுவது, விளக்குவது, மேலும் படிப்பது, பல விஷயங்களைத் தெரிந்து கொள்வது போன்ற பல குணங்கள். இந்த குணங் களின் தாக்கம் என்னை நடைமுறை உலகிலிருந்து பெரிதும் அப்புறப் படுத்தி வைத்திருந்தது என்பதை உணர்ந்தேன். (Ivory Tower People) தந்தத்தினால் செய்யப்பட்ட உச்சிமாடத்தில் அமர்ந்திருப்பவர்கள் என்று சொல்வார்கள் ஆங்கிலத்தில். "அடிக்கடி மாணவர்களது பரீட்சைத் தாளைத் திருத்துவ தினால், எங்கே குறைகள் இருக்கின்றன என்று பார்க்கும் குணம் ஏற்படுகிறது" என்று சொல்வார் எனது மைத்துனர், பேராசிரியர் பாலசுந்தரம். அது என்னுள்ளும் ஏற்பட்டது!

அதைவிட ஒரு விஷயத்தை என்னுள் ஆழமாக நான் உணர்ந்தேன். எனது முழுத்திறமைகளும் இங்கே வர, வாய்ப்பில்லை என்பதை நன்கு உணர்ந்தேன். பெறும் சம்பளமும் போதுமானதாக இல்லை;

அத்துடன் வாழ்க்கை செக்குமாடாகப் போய்க் கொண்டிருப்பது போன்ற ஒரு சலிப்பு. என் வாழ்வில் ஒரு மாற்றத்தின் தேவையை உணர்ந்தேன்.

தொழில் சம்பந்தமான நூல்களைப் படிக்க ஆரம்பித்தேன். தொழிலில் வெற்றி பெற்றவர்களின் வாழ்க்கை வரலாறுகளைப் படித்தேன். தொழில் துவங்குபவர்கள் தனித்தன்மை கொண்டவர்கள் என்றும் சுதந்திரத்தை அதிகம் நாடுபவர்கள் என்றும் அதில் முக்கியமாகக் குறிப்பிட்டிருந் தார்கள். முன்னாள் முதல்வர் எம்.ஜி.ஆர். எனது நண்பர். அவர் முதல்வர் பதவிக்கு வருமுன் நான் அவரை அமெரிக்கா விலுள்ள பல்கலைக் கழகங்கள் அழைக்க ஏற்பாடு செய்தேன். அவர் முதல்வர் பதவிக்கு வந்தபின் எனக்கு எவ்வளவோ பதவிகள் அளிக்க முன் வந்த போதிலும் நான் அவற்றை மறுத்துவிட்டேன்; காரணம் என்னுள் ஆழமாக ஓடிக் கொண்டிருக்கும் தனித்தன்மையும் சுதந்தர உள்ளமும் தான்.

நாடு இன்று கேவலங்களாலும் அவலங்களாலும் நசித்துக் கொண்டிருக்கிற நிலையில், வாழ்க்கை நெறிகள் தலை கீழாகப் போய்விட்ட நிலையில் நாம் அடிப்படைகளைச் சரி செய்தால் தவிர இந்த நாடு மீளாது. "இன்று தேவைப்படுவது இன்றிருக்கும் நிலையிலிருந்து மாறுபட்ட தனித்தன்மையும் சுதந்தர உணர்வும் துணிவும் தான்" என்று எனது தனித்தன்மை பற்றி எனக்கு எழுதிய வாசகர் ஒருவருக்கு எழுதினேன். அவர் கேட்டிருந்தார், "ஏன் நீங்கள் ஒரு கட்சியில் சேர்ந்து எளிதாக எல்லாக் காரியங்களையும் செய்யலாமே? என்று.

இப்பிரபஞ்சம் தனித்தும் இயங்குகிறது; இணைந்தும் - ஒன்றை ஒன்று சார்ந்தும் - இயங்குகிறது. அப்படித்தான் நம் வாழ்க்கையும் அமையவேண்டும். எனினும் நமது

தனித்துவத்தையும் சுதந்தரத்தையும் பறிகொடுத்துவிட்டுச் செயல்படுவது நாம் நமது ஆன்மாவுக்குச் செய்யும் இழுக்காகும். அப்படிப் பார்க்கும் போது ஓரளவுக்கு ஆசிரியர்களும் சரி, சொந்தமாகத் தொழில் செய்பவர்களும் சரி, தனித் தன்மையிலும் சுதந்திரத்திலும் அதிகம் பழகி விட்டார்கள் என்று தான் நான் நினைக்கிறேன்.

அமெரிக்காவில் நான் கற்றுக் கொண்ட இந்தத் தனித்தன்மையும் சுதந்திரமும் என்னை வெகுவாக செதுக்கி உருவாக்கின என்றால் அது உண்மை.



13

# காதல் கல்யாணம்

என் மனைவியின் தந்தை அவர்கள் அந்தக் காலத்திலேயே சென்னை பச்சையப்பன் கல்லூரியில் இண்டர் மீடியட் படித்தவர். அவர்களுடைய குடும்பம் பணக்காரக் குடும்பம். என் மாமாவின் தந்தை நல்லதம்பி அவர்களுக்கு குத்தாலத்தில் பெரிய ஜவுளிகடை இருந்தது. அப்போது நடந்த கம்யூனிஸ்ட் கலவரத்தில் கடை சூறையாடப்பட்டது. தெருவில் துணிகள் தூக்கி எறியப் பட்டு பலரும் தூக்கிக் கொண்டு போனார்கள் அதனால் பெருமளவில் பாதிக்கப்பட்டார்கள்; நஷ்டம்.

அதேபோன்று தில்லையாடியில் எனது பெரியம்மா அவர்கள் சிறுமியாக இருந்த போது அவரது தாத்தா நல்லக் கண்ணு இருந்த காலத்தில் அவர் வீட்டில் ஒரு நாள் இரவில் தீவட்டிக் கொள்ளைக்காரக் கும்பல் வந்து வீட்டில் நகை நட்டு பணத்தை எல்லாம் கொள்ளை யடித்துக் கொண்டு போயிருக்கிறார்கள். தீவட்டி கொள்ளைக் காரர்கள் வீட்டின் ஓட்டுக் கூரை மீது நின்று கொண்டு கவண்டிக் கல்லைச் சுற்றுவார்களாம், யாரும் அணுகாதபடி.

என் மனைவியின் தந்தையின் பெயர் விருத்தாசலம் (எனது மாமா, மற்றும் பின்னால் மாமனார்). அவர்கள் என்னுடைய தந்தையின் சொந்த அக்காள் மகன். அதாவது எனது மாமா விருத்தாசலம் அவர்களுக்கு என் தந்தை சொந்த மாமா.

எனது மாமா விருத்தாசலம் அவர்களின் இள வயதில் பெற்றோர் இறந்து விட என் தந்தை தான் அவரை வளர்த்திருக்கிறார். இதனால் அவர்களுக் கிடையே இருந்த பாசம் மிக அதிகம். அந்தக் காலத்தில் எங்கள் சாதியில் பெண்கள் குறைவு. பெண்கள்

திருமணத்திற்கு கிடைக்க மாட்டார்கள். கிடைக்கா தவர்கள் வேறு சாதியில் தான் பெண் எடுக்க வேண்டும். அப்படிப் பெண் எடுத்தால் சாதியிலிருந்து ஒதுக்கி விடுவார்கள்.

என் மாமா நல்ல பணக்கார வீட்டில் திருமணம் செய்து கொண்டு மூன்று ஆண் குழந்தைகளையும் நான்கு பெண் குழந்தைகளையும் பெற்றபோது, "என் பெண்ணை என் மாமா மகனுக்குத்தான் கொடுப்பேன்" என்று அவர்கள் சொல்லிக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஆக நான் உயர் நிலைப் பள்ளியில் ஒன்பதாவது படித்துக் கொண்டிருந்த போதே என்னைச் சிதம்பரத்திற்கு அழைத்துச் சென்று அங்கே படிக்க வைப்பதாக என் மாமா கேட்டார்கள். "இங்கே மாயவரத்தில் படிப்பு முடியட்டும் அதன் பிறகு நீ அழைத்துச் செல்" என்று என் பெற்றோர் சொன்னார்கள்.

நான் உயர்நிலைப்பள்ளிப் படிப்பினை முடித்த வுடன் என் மாமா என்னை மேற்படிப்பு படிக்க அழைத்துக்கொண்டு போய்விட்டார்கள்.

மாமா அந்தக்காலத்திலேயே கல்லூரியில் படித்த வராதலால், தன் பையன்களை எல்லாம் நன்கு படிக்க வைக்க வேண்டும் என்பதில் மிக அக்கறையாக இருந்தார். அதேபோல என்னை அழைத்துக் கொண்டு போனதற்குக் காரணம் அவர்கள் பெண்ணை தன் மாமா மகனுக்கு கொடுக்கப் போகிறோம் என்கிற எண்ணம். இது பெரியவர்களுக்குள் இருந்த பேசாத உடன்பாடு.

எனக்கோ, 17வயது. படிப்பில் இருந்த ஆர்வம் என்னை மாமா வீட்டிற்குப் போக தூண்டியதே தவிர அவர்கள் பெண்ணைக் கல்யாணம் செய்த கொள்ள வேண்டும் என்கிற எண்ணம் சிறிதும் இல்லை.

என் மனைவியாகப் போகிற சீதா அப்போது பதின் மூன்றுவயதுப் பெண். உண்மையில் எனக்கு கல்யாண நினைப்பே இல்லை. எனவே எங்கள் வீட்டில் எனது திருமணம் பற்றிப் பேச மாமா வந்தபோது என் தாயிடம் கேட்டேன். "அவர்கள் வீட்டில் இருந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பதற்காகும் செலவைப் பின்னால் நாம் கொடுத்து விடலாமல்லவா?"

என் தாய் உடனே "அதெல்லாம் கொடுத்து விடலாம் நீ கவலைப்படாதே. போய்ப் படி!" என்று சந்தோஷமாகச் சொல்லி வழியனுப்பினார்கள். அவர்கள் மனத்தில், "எல்லாம் அங்கே போகப் போக சரியாய்ப் போய்விடும். அப்போது பார்த்துக் கொள்ளலாம்!" என்று எண்ணியிருக்க வேண்டும்.

ஏனெனில் எங்கள் மாமா வீட்டுக்குப் போன இரண்டாண்டில் எனக்கு சீதாவை மிகவும் பிடித்துப் போய்விட்டது! வீட்டில் மாமி இல்லாத சமயத்தில் இவள்தான் எனக்கு உணவு பரிமாற வருவாள். பேசமாட்டாள். நானும் பேசமாட்டேன். சாதம் பரிமாறியவுடன் ஓடிப் போய் விடுவாள். நன்கு வளர்ந்த பெண்; அழகாக இருந்தாள். வீட்டிலே இருந்த மற்ற பெண்களுக்கு அவள் தான் தலைமை. நமது ஊரில் கல்யாணம் செய்து கொண்டபின் காதல் என்பார்கள். நான் கல்யாணத்துக்கு முன்பே துவங்கிவிட்டேன்!

"அவளை எனக்குப் பிடித்திருக்கிறது" என்று நான் அம்மாவிடம் சொன்னபோது என் தாய் சிரித்தார்கள். எனக்குத்தான் வெட்கமாயிருந்தது!

எனது மாமாவின் கம்பீரத்தைப் பற்றி நான் சொல்ல வேண்டும்.

நல்ல சிவப்பு. ஆஜானுபாகுவான உயரம் ஆறடி இருப்பார்கள். எங்கள் கிராமத்திற்கு ஆறுமாதத்திற்கொரு முறை தனது மாமாவைப் பார்ப்பதற்கு வருவார்கள். அவர்கள் தெரு முனையில் வரும்போதே, ஏதோ அந்த தெருவையே நிறைத்துக் கொண்டு வருவது போல் தோன்றும். கம்பீரம் நிறைந்த மனிதர். மனைவி மீது அபார அன்பு. அடிக்கடி மனைவியுடன் நகைச் சுவை யுடன் பேசிச் சிரிக்கவைப்பார். ஆனால் எங்களுடன் அதிகம் பேசமாட்டார். ரொம்ப 'ரிசர்வ்ட் டைப்'. பல்கலைக்கழகம் திறக்கும்போது சிதம்பரத்திற்குப் போ வேன். அப்போது ஒரு வார்த்தை கேட்பார்கள். "மாமா நன்றாக இருக்கிறார்களா?" என்று. அடுத்த முறையாக அவர்கள் என்னுடன் பேசுவது அந்த குவாட்டர்லி விடு முறைக்கு நான் ஊர் செல்லக் கிளம்பும்போது. "இதை மாமாவுக்கு கொடு" என்று மல் துணியிலான இரட்டை

மடிப்பு வேஷ்டியைக் கொடுத்து அனுப்புவார்கள். அவ்வளவுதான் பேச்சு!

போன புதிதில் நான் ஓய்வு நேரத்தில் தக்ளியில் நூல் நூற்றேன். "படிப்பதைக் கவனி" என்றார்கள். நான் நூல் நூற்பதை விட்டு விட்டேன்.

அடுத்து நான் குடந்தை அரசினர் கல்லூரியில் வேலைக்குப் போனபோது, பால் மணம் மாறாத பாலகனாக இருந்தது எனக்கே கண்ணாடியில் நன்கு தெரிந்தது. சுமாரான உயரம், மெலிந்த உடல். என்னைப் பார்த்துப் பலர் "நீங்களா? கல்லூரியிலா? பாடமா? சொல்லியா? தருகிறீர்களா?'' என்று கேட்டபோது எனக்கு விஷயம் நன்கு புரிந்தது! ஜட்கா வண்டி வாடகைக்குப் பேசப் போனால் கூட நான் கல்லூரி ஆசிரியர் என்பது தெரியாமல் "தம்பீ! ஏறு!" என்பார். அதாவது "சின்னப் பையா! ஏறிக் கொள்'' என்ற அர்த்தத்தில். இதற்காகத்தான் நான் பாரதியார் செயத காரியத்தைச் செய்தேன். அதாவது மீசை வளர்க்க ஆரம்பித்தேன். அடுத்த முறை குடந்தைக்கு தன் மகனைப் பார்க்க வந்த மாமா, மறைமுகமாக "என்ன இது மீசை எல்லாம்!" என்று சொன்னார்கள். நான் அதை கேட்ட தாகவே காட்டிக் கொள்ளவில்லை.

பாரதி காட்டிய கொம்பு மீசை தான் எனக்கு மிகுந்த தைரியத்தைக் கொடுத்தது. எனக்கும் கொஞ்சம், "மாமாவையே எதிர்த்து விட்டோம்!" என்று மனதுக்குள் பெருமை!

எனது மாமா வீடு போகப் போக மிகவும் பிடித்து விட்டது என் எதிர்கால மனைவி இருந்ததனால்! அதே சமயத்தில் அவர்கள் வீடு ஒரு விதத்தில் எனக்கு வித்தியாசமாக இருந்தது. அங்கே, என் மாமாவின் குமாரர்கள் யாரும் அப்பாவிற்கு எதிரே உட்கார மாட்டார்கள். எல்லோரும் நின்று கொண்டுதான் பேசு வார்கள். அப்படி பழக்கம்.

ஆனால் எங்கள் வீட்டிலோ, என் தந்தை எனக்கு ஒரு நண்பர் போல. என் தந்தை மூக்குப் பொடி போடுவார். வெள்ளியிலான மூக்கு-டப்பி இடுப்பில் தொங்கிக் கொண்டிருக்கும். அவர் மூக்குப் பொடி

போடும்போது நான் அவர் அருகில் உட்கார்ந்து கொண்டு "நானும் போட்டுக் கொள்கிறேன்" என்று கேட்பேன். கொடுப்பார். "பழக்கமாகி விடும் - சும்மா போட்டால்" என்று, இரண்டாவது முறை கேட்கும்போது சொல்லுவாரே தவிர, வேறு ஒன்றும் சொல்ல மாட்டார். அப்பாவுக்கு எதிரே நிற்பது எனக்கு என்னவோ வேலையாள் செய்கிற காரியம் போலிருந்தது.

எனது மாமி ராஜம்மாள் அவர்கள் கள்ளங்கபடில்லாத பெண்மணி. ஒரு சூதுவாது தெரியாது. பையன்கள் எல்லாம் செல்லம். பெண் குழந்தைகளை ஓட ஓட விரட்டுவார்கள். என்னவோ தனது மூத்த மகளிடம் அப்படிச் செய்வதில்லை. அருமையாக சமைப்பார்கள். கொல்லையிலிருந்து முருங்கைக் கீரையைப் பறித்து வந்து ஒரு புளியில்லா குழம்பு செய்தார்களானால் கூட மிக நன்றாக இருக்கும்.

மாமி சமயம் கிடைக்கும் போதெல்லாம் நடராஜர் கோயிலுக்குப் போவார்கள். எங்களுக்கு பரீட்சை சமயம். மாமி கோயிலுக்குப் போய் வேண்டிக் கொண்டு வந்தார்கள். அவர்கள் என்ன வேண்டிக் கொண்டார்கள் என்று நினைக்கிறீர்கள்? "நடராஜப் பெருமானே! இந்தப் பிள்ளை - அவர்கள் வீட்டுப் பிள்ளை இங்கே படிக்க வந்திருக்கிறது. எங்கள் வீட்டு பிள்ளை பெயிலானாலும் பரவாயில்லை. ஆண்டவனே அவர்கள் வீட்டுப் பிள்ளை பாசாக வேண்டும்" என்று. நான் இதைப்பற்றித் தெரிந்து கொண்டபோது என் உடல் சிலிர்த்தது. எனக்குத் தெரியும். அது தான் மாமி, வெள்ளை உள்ளம் படைத்தவர்கள்.

## 14

# ரோமில், ரோமனாக இரு!

**எ**ன் மனைவி ஓர் அசாதாரணமான பெண். திருமணமாகி 48 ஆண்டுகள் வாழ்ந்தோம். அதற்கு முன்பே அவளை எனக்குத் தெரியும். மேல் படிப்புக்காக என் மாமா என்னை அழைத்துச் சென்றார்கள். அவர்கள் வீட்டில் எனக்கான பெண் இருப்பது எனக்குத் தெரியும். என் மாமா பெண் சீதா அப்போது விளையாடுகின்ற சிறு பெண்.

பின்னால் என் தாய் சொல்லக் கேட்டிருக்கிறேன். என் மாமா திருமணம் செய்து கொண்டு பெண்களைப் பெற்ற போதே, "என் மாமா மகனுக்குத்தான் என் பெண்ணைக் கொடுக்கப் போகிறேன்'' என்று சொல்வார்களாம்.

"இது என்னை கட்டுப்படுத்துமா?" என்று என் தாயை நன்கு கேட்டுவிட்டுத்தான் நான் அங்கே போனேன். ஆனால் போன இரண்டாண்டுகளில் எல்லாமே தலைகீழாக மாறிவிட்டது!

சீதா என்ற என் மாமா மகள் முழுப்பெயர் சீதாலட்சுமி - அழகு தேவதையாக வளர்ந்திருந்தாள்! படிப்பை ஆறாவது வகுப்புடன் நிறுத்தி விட்டாள். என் மாமாவும், மாமியும் சொந்த ஊரான வைத்தீஸ்வரன் கோயிலில் புதியவீடு கட்டிக் கொண்டிருந்ததால் வீட்டில் எல்லாவற்றையும் இவள் பொறுப்பில் விட்டு விட்டு அடிக்கடி போய் விடுவார்கள். கல்லூரிக்குச் செல்லும் எங்களுக்கு உணவு பரிமாறுவது இவள்தான்.

"இன்னொரு இட்லி போட்டுக் கொள்ளுங்கள்'' என்று சொல்கிறாற்போல இட்லி தட்டுடன் வந்து நிற்பாள்.

"நான் வேண்டாம், வேண்டாம்" என்று சொல்கிறாற்போல கைகளால் மறைப்பேன். இதுதான் நாங்கள் பேசிக் கொள்ளும் பாஷை.

"இப்படி வயது வந்த பெண்ணைத் தனியாக விட்டு விட்டுப் போகிறோமே?" என்று என் மாமி, மாமாவிடம் கேட்டிருக்கிறார்கள்.

"என் மாமா மகன் நல்ல பையன்" என்று என் மாமா சொல்லி இருக்கிறார்கள்.

எனவே என் மனைவியுடன் நான் வாழ்ந்த 48 வருடங்களும் அதற்கு முன் அவளைத் தெரிந்து கொண்ட இரண்டாண்டுகளையும் சேர்த்தால் கடந்த 97 மே மாதம் பொன்விழா கொண்டாடினோம் என்றே சொல்ல வேண்டும். அதற்குச் சில ஆண்டுகள் முன்பு எங்கள் அறுபதாண்டு மணி விழாவை ஹூஸ்டன் மீனாட்சி அம்மன் கோவிலிலும், இந்தியாவில் திருக்கடையூரில் இரண்டு முறை கொண்டாடினோம்.

குடந்தையில் ஐந்தாண்டுகள், கிண்டி பொறியியல் கல்லூரியில் நான்காண்டுகள் என்று நான் வேலை பார்த்தேன். அப்போது நான் வேதியியலில் இரண்டு முதுகலைப் பட்டங்கள் பெற்றிருந்தேன். உயர் அதிகாரிகளுக்கு கொடுக்கப்படும் தனி வீடு எனக்குக் கொடுத்திருந்தார்கள். நான் மேல் படிப்புக்கு புல்பிரைட் அறிஞர் (Fulbright Scholar) என்ற திட்டத்தின் கீழ் அமெரிக்க அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டேன். இரண்டு பையன்களையும், ஓர் ஒன்றரை வயதுப் பெண் குழந்தையையும் என் மனைவியின் பொறுப்பில் விட்டு விட்டு நான் கிளம்பினேன். ஓராண்டில் என் அண்ணனின் மூத்த மகன் ஜெகதீசனை பொறியியல் கல்லூரியில் எங்கள் பொறுப்பில் சேர்த்ததனால், அவனையும் கவனித்துப் படிக்க வைக்கும் பொறுப்பு அவளுக்குச் சேர்ந்தது.

இரண்டாண்டுகளில் படிப்பு - பரீட்சை என்று எல்லா வற்றிற்கும் முற்றுப்புள்ளி வைத்து ஆராய்ச்சியைத் துவங்கிய போது, எனக்கு ஓர் எண்ணம். "இன்னும் இரண்டாண்டுகளில் டாக்டர் பட்டம் எடுத்து ஊர்

திரும்புவோம். அப்போது நாம் அமெரிக்காவைப் பற்றிச் சொன்னால் நம் மனைவிக்கு எதுவும் புரியாதே. எனவே அவளை இங்கு இரண்டாண்டுகள் அழைத்து வந்தால் நல்ல அனுபவமாயிருக்குமே" என்ற எண்ணம்.

அமெரிக்காவில் குளிர் நாற்பது டிகிரி வரை கீழே போகும், என்று பலரும் சொன்ன போது எனக்கு அதிசயமாக இருக்கும். எப்படி மனிதன் அவ்வளவு குளிரில் - ஐஸ் பெட்டிக்குள் இருப்பதைப் போல இருந்து - வாழ முடியும்?" என்பது போன்ற சந்தேகங்கள். சின்ன வயதில் கடல் எப்படி ஒரு கரை - திருக்குளப்படிகள் போன்ற படிக்கட்டுக்கள் - இல்லாமல், தண்ணீர் நிற்கிறது என்று தோன்றுமே, அது போன்ற சந்தேகங்கள்!

அது மட்டுமின்றி ஊர் திரும்பி வந்து நான் அமெரிக்காவைப் பற்றிச் சொன்னால், என் மனைவி எதுவும் புரிந்து கொள்ள முடியாது! ஆதலால் "போதும் அமெரிக்கா! சாப்பிட வாருங்கள்!" என்பாள். பல சமயம் நான் எழுதிய கதைகளை எழுதி முடித்ததும் நான் அவளிடம் படித்துக் காட்ட ஆர்வமாகச் செல்வேன். அவள், "எனக்கு வேலை கிடக்கிறது! தோசைக்கு அரைக்க வேண்டும். வீடு கூட்டப்படாமல் இருக்கிறது!" என்பது போன்ற பொன் மொழிகளை உதிர்ப்பாள். எனவே அவள் அமெரிக்காவைப் புரிந்து கொள்ளா விட்டால்.... நிலைமை எப்படி இருக்கும் என்று சிந்தனை ஓடியது.

ஆனாலும் இதைவிட பெரிய விஷயமாக - தியாகமாக - எனக்குப்பட்டது, அவள் அங்கே இருந்து கொண்டு ஒரு பெரிய குடும்பத்தை நிர்வகித்த பொறுப்பு தான். குழந்தை வளர்ந்திருப்பாள் என்று எண்ணம் ஓடும்; பையன் படிக்கிறானா? என்று கேள்வி ஓடும். அவளுக்கு நான் எதுவும் செய்து விடவில்லை. நான் எழுதிய கதைகளுக்கு வந்த 'அன்பளிப்'பில் அவளுக்கு ஒரு 'தொங்கட்டான்' - காதணி வாங்கிப் போட்டது ஒன்றுதான் நான் செய்தது. என் மாமா அவர்கள் எல்லாச் செலவுகளையும் செய்து என் மனைவியைக் கன்னிகா தானமாக எனக்குக் கொடுத்துத் திருமணம் நடத்தினார்கள்.

இளம் மனைவி. நமக்காக உழைக்கும் பெண். அவள் பொறுப்பில் குழந்தைகள், குடும்பம். "கல்யாணம் கார்த்திகை என்று அவள் போகக்கூட முடியாது" என்ற சுமை மிகுந்த நினைவுகள்.

அப்போது ஒரு வாசகம் படித்தேன். அது என் மனைவிக்குப் பொருத்தமான எழுத்துக்கள். அவளுக்குக் கடிதம் எழுதினேன்.



1967ல் கல்லூரி பேராசிரியர் பதவி பெற்று குடும்பத்துடன் லேடி ஸ்மித் நகரில் விஸ்காங்கின் மாநிலம்
மேலே இடது :
சித்தார்த்தன் – மூத்த மகன், மனைவி சீதாலட்சுமி, நான்
கீழே :
அசோகன் – இரண்டாவது மகன், கமலா – (மூன்றாவது) பெண்

"தந்தது உன் தன்னை
கொண்டது என் தன்னை
யார் கொலோ சதுரர்?
யாது நீ பெற்றது என்பால்?"

'நீயோ உன்னை எனக்கு முழுமையாகக் கொடுத்து விட்டாய். என்னையோ நீ ஆட்கொண்டு விட்டாய்.

இதில் யார் வெற்றி பெற்றார்கள்? நீ என்ன பெற்றாய் என்னிடமிருந்து?" - இதுதான் அதன் பொருள். இதை ஆண்டவனிடம் கேட்கிறார் பக்தர்.

ஒரு முடிவுக்கு வந்தேன்.

"நாம் எதுவும் நம் மனைவிக்குச் செய்து விட வில்லை. நாம் அவளுக்குச் செய்யக்கூடிய, மிகப் பெரிய காரியம் அவளை இங்கு அழைத்துக் கொண்டு வந்து காட்டுவதுதான். இதுதான் நான் திருப்பிச் செய்யக்கூடிய காரியம்."

உடனே நான் அயல்நாட்டு மாணவர்களுக்கான ஆலோசகரிடம் இதற்கான அனுமதி பெற்றேன். அவர்களே ஓரளவு கடன் உதவியும் செய்தார்கள். மிகுதி என் பணத்தைப் போட்டு அவளுக்கு விமான டிக்கெட் வாங்கி அனுப்பினேன்.

அவள் வருவது ஒன்றும் அப்படி சுலபமாயில்லை. குழந்தைகளைத் தனியே விட்டு விட்டு வருவது என்பதில் அவளுக்குத் தயக்கம். எனினும் என் மைத்துனர்கள் எனக்கு எழுதினார்கள். "நீ வீட்டைப் பற்றி - மனைவியைப் பற்றி நினைத்துக் கொண்டிராதே. சனி ஞாயிறில் இப்படி வெளியூர் என்று எங்காவது போய் வருவாயானால் இந்த எண்ணம் - மனைவி தாகம் ஏற்படாது" என்று.

என் மனைவி அமெரிக்கா வருவது எனது சுய தேவைகளுக்காக அல்ல என்பதைப் புரிய வைப்பது கஷ்டமாக இருந்தது. கடைசியில் அவர்கள் பிரம்மாஸ் திரத்தையும் உபயோகித்துப் பார்த்திருக் கிறார்கள். அதாவது "விமானத்தில் லண்டனில் அல்லது ஐரோப்பாவில் மாறி ஏற வேண்டும். நீ அங்கே காணாமல் போய்விடுவாய்!" என்று. இப்படி யாராவது பயமுறுத் தினால், அந்தச் சமயங்களில் அவள் ஏதும் பதில் பேச மாட்டாள். "நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்று அமைதியாகப் பதில் சொல்வாள். "வயிரமுடைய நெஞ்சு வேணும் அது வாழு முறைமையடி பாப்பா" என்ற பாரதியின் பாட்டுத்தான் எனக்கு அவளைப் பற்றி நினைவுக்கு வரும்.

அவள் சிகாகோ விமான நிலையத்தில் வந்து இறங்கிய போது கண்டேன். எலும்பும் தோலுமாய் இருந்தாள். எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அவள் இங்கே வருவதற்கிருந்த எதிர்ப்பில், "நீ உனக்கு வேண்டிய சில துணி மணிகளை மட்டும் எடுத்து வா. மற்றவை இங்கு பார்த்துக் கொள்ளலாம்" என்று எழுதி இருந்தேன்.

ஒரு சமயம் இந்தியப் பாடம் சொல்லிக் கொடுக்கும் மூன்று அமெரிக்கப் பேராசிரியர்களை வீட்டுக்கு விருந்துக்கு அழைத்திருந்தேன். அவர்கள் வந்தார்கள். உணவு வகைகளைப் பார்த்து விட்டு, "ஓ! இட்லி!" என்றார்கள்! "இட்லிப் பானை கொண்டு வந்தாயா?"

"இல்லை" என்றாள் என் மனைவி.

"பின் எப்படி இட்லி செய்தாய்?"

"கடைகளுக்குப் போனேன். அங்கே உடைத்த முட்டையை வேகவைக்கும் (Egg Poacher) தட்டு இருந்தது. அதில் இட்லி தட்டு போன்ற ஆறு வட்டங்களும் அந்த வட்டத்தில் உடைத்த முட்டையை வேகவைக்கும் கிண்ணங்களும் இருந்தன. அதை எடுத்துக் கொண்டு வந்து கிண்ணங்களில் ஆணியால் ஓட்டை போட்டேன். அதன்மீது ஈரத்துணியைப் போட்டு இட்லி சுட்டேன்!" என்றாள்.

"ஆ!" என்றார்கள் பேராசிரியர்கள். "இத்தனை நாள் இது எங்களுக்குத் தெரியாமல் போச்சே!" என்றார்கள் ஒரே குரலில்! இப்படி அவள் பல புதுமையான அணுகு முறைகளைக் கையாண்டாள். எனது மூத்தமகன் பல்கலைக் கழகம் சென்ற போது அவனுக்கு வேண்டிய வத்தல் குழம்பு, சாம்பார் என்பனவற்றையெல்லாம் வீட்டிலேயே கண்ணாடி பாட்டில்களில் போட்டு நீராவியில் வைத்து சீல் செய்து அனுப்புவாள். தக்காளி மலிவாக விற்கும் காலத்தில் தக்காளியை சீல் செய்யக் கற்றுக் கொண்டாள்.

"அதிகம் படிக்கவில்லையே, புதுமையை எப்படி ஏற்றுக்கொள்வாள், அமெரிக்க கலாசாரத்தை எப்படிப் புரிந்து கொள்வாள்?" என்று நான் யோசித்ததுண்டு.

வீட்டில் அப்போது இரண்டாவது மகன் அசோகனும், எனது மகள் கமலாவும் உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தார்கள். அந்த வயதில் சனி, ஞாயிறில் பல இடங்களில் பள்ளி இளைஞர்கள் கலந்து கொள்ளும் பார்ட்டிகளும் நடனங்களும் இருக்கும். எல்லா இளைஞர்களும் பெண்களும் தாமே காரை ஓட்டிக் கொண்டு சென்று இரவு பன்னிரண்டு மணி சுமாருக்கு வீடு திரும்புவார்கள்.

இந்த விஷயம் நம் வீட்டுக்கு வந்த போதுதான் எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

"அப்பா, இரவு வர பன்னிரண்டு மணி ஆகும்" என்றாள் என் மகள்.

நான் சொன்னேன். "அம்மா! இதெல்லாம் நமக்குச் சரிவராது. என்ன செய்வாயோ எனக்குத் தெரியாது. நீ வீட்டுக்கு ஒன்பது மணிக்கெல்லாம் வந்துவிட வேண்டும்" என்றேன்.

"அது எப்படி முடியும்? அப்போதுதான் 'டான்ஸ்' ஆரம்பமாகும். எல்லோரும் இருப்பார்கள். நான் மட்டும் கிளம்பி வந்தேனானால் எல்லோரும் என்னை ஒருவிதமாகப் பார்ப்பார்கள்."

"அதெல்லாம் முடியாது...."

"அப்பா, எதற்காகக் கவலைப்படுகிறீர்கள்?" என்றாள் கண்கலங்க.

"உன் பாதுகாப்புதான்."

"உங்கள் நண்பர் பிரின்சிபாலுடைய மகள்தானே என் சினேகிதி ஆன். அவளுடன்தானே போகிறேன். என்ன பயம்? நான் வேண்டுமானால் போன் நம்பரைக் கொடுத்துவிட்டுப் போகிறேன். போனில் கூப்பிடுங்கள்."

"இதோ பாரம்மா! நான் இந்தியாவில் வளர்ந்தவன். பெண்களை எல்லாம் பொழுது சாயறதுக்குள்ளே வீட்டுக்கு வந்து விட வேண்டுமென்று சொல்வார்கள், நாங்கள் எல்லாம் அதற்குத்தான் பழக்கப்பட்டிருக் கிறோம்" என்றேன். என்னிடம் காரணகாரியம் காட்டி விவாதத்தைத் தொடர விஷயமில்லை என்பது புரிந்தது!

என் மகள் அழ ஆரம்பித்தாள். பின்னாலிருந்து ஒரு பெண் புலியின் உறுமல் கேட்டது! வேறு யாருமல்ல என் மனைவி சீதாதான்!

"இதோ பாருங்கள்! நீங்கள்தானே எழுதுவீர்கள், ரோம் நகரில் இருக்கும்போது ரோமன் போல இருக்க வேண்டும் என்று. இப்போது என்னடா என்றால் இந்தியா அது இது என்கிறீர்கள். அவள்தான் பத்திரமாய்ப் போய் வருகிறேன் என்கிறாளே அதற்குப் பின் என்ன?"

"அது பாரு நாளைக்கு ஒண்ணு...." என்று நான் இழுத்தேன்.

"அவ ஒண்ணும் குழந்தையில்லே. அவன் (அசோகன்) போயிட்டு ராத்திரி ரெண்டு மணிக்கு வர்றான். இவ போறேன்னா போகக்கூடாது? இது என்ன, ஆணுக்கொரு சட்டம், பெண்ணுக்கொரு சட்டம்? இந்த வீட்டில்..." என்றாள் சீதா.

என்னால் பதில் பேச முடியவில்லை. என் தவறை உணர்ந்தேன். மனிதன் எப்படிப் பழக்க வழக்கங்களுக்கு அடிமையாகி இருக்கிறான் என்பதை உணர்ந்தேன். யதார்த்தங்களை, எப்படிப் பெண்கள் புரிந்து கொள்கிறார்கள், அதை ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதைக் கண்டு வியந்தேன். என் மகள் காரை எடுத்துக்கொண்டு கிளம்பி விட்டாள்!

எதையும் ஆழமாக உணர்ந்து அதைச் சாதாரணமாக - இயல்பாக - எடுத்துக் கொள்ளும் குணம் அவள் நோய் வாய்ப்பட்ட போதும் தெரிந்தது. வலியையோ, கஷ்டத்தையோ ஒருவரிடம் சொல்ல மாட்டாள்.

"தந்தது உன்தன்னை
கொண்டது என் தன்னை"

என்ற பாட்டை என் வாய் முணுமுணுத்தது.



15

## ராமர் இருக்குமிடமே அயோத்தி!

"என்ன ரொம்ப நாள் ஆச்சே நீ அடைச் சுட்டு?" என்று கேட்டால் போதும்.

"மசக்கைப் பொம்மணாட்டி தேவலாம்! நீங்க என்னண்ணா அது வேணும் இது வேணும்னு கேக்குறீங்க" என்பாள். "சரிதான் அவ்வளவு தான் நம்ம அதிர்ஷ்டம்" என்று போய்விடுவேன்! அன்று மதியமே வீட்டில் அடை மேஜைக்கு வரும். "அடேயப்பா! அடையா?" என்று அதிசயப்படும்போது அதை எதிர்பார்த்தவளாய் அவளிடம் சிரிப்பு மலரும். யாராவது ஏதாவது கேட்டுவிட்டால் போதும். அதை உடனே செய்து கொடுக்கும் வரை அவளுக்குத் தூக்கம் வராது.

குழந்தையிலிருந்து பெரியவர்கள் வரை யாருக்கு எது பிடிக்கும் என்பது அவளுக்கு அத்துபடி. யார் வீட்டுக் குழந்தைக்கு என்ன பிடிக்கும் என்று தெரிந்து ஒரு சமயம் வீட்டில் எங்கள் சொந்தக்கார குழந்தைகளுக்காக 'கப் கேக்' செய்து வைத்திருந்தாள். அவர்களுக்கு பெரும் ஆச்சரியமாக இருந்தது. சமையல் மிக அற்புதமாக இருக்கும். அமெரிக்காவில் என் நண்பர்கள் சாப்பிடுவதற்கென்றே 200 மைல் பயணம் செய்து வருவார்கள். நம் நாட்டு சைவ உணவு என்றில்லை. மாமிச உணவுகூட அவளே அருமையாக வீட்டில் செய்வதுண்டு. வீட்டில் வாரத்தில் ஓரிரு நாள் அயல்நாட்டு உணவு சமைப்போம். இதில் நான்தான் தலைமை உதவியாளன் என்று சொல்லிக்கொண்டு சில சமயம் உள்ளே நுழைவேன். "இங்கு வந்து கச்சுமிச்சும் காட்டாமலிருந்தாலே போதும். உங்கள் வேலையைப் பாருங்கள்" என்று சில சமயத்தில் உத்தரவு வரும். ஆனால் அமெரிக்க, இத்தாலிய உணவு

என்றால் என்னை செய்யச் சொல்வாள். சின்ன வயதிலிருந்தே உணவின் ருசி எல்லாம் எனக்கு நல்ல பரிச்சயம். எனவே என் தாய், - வீட்டுக்கு விருந்து வரும்போது - என்னைக் கூப்பிட்டு தான் பதம் பார்க்க, ருசிபார்க்கச் சொல்வார். பிரமாதமாக, என் மனைவி போல், என்னால் சமைக்க முடியாவிட்டாலும் இந்த ருசி பார்க்கும் திறன்—சமையலில் எதைதை ஏற்ற இறக்கம் செய்ய வேண்டும் என்று யோசனை சொல்லும் திறன்—என்னை அமெரிக்காவின் பில்லியன் டாலர் கம்பெனி யில் உணவுத்துறையில் ஆலோசகர் பதவியை அளித்தது. இந்த ஆர்வமும் நானாக மேற்கொண்டு உணவு பற்றிப் படித்ததும் சேர்ந்து பின்னால் ஒரு பெரிய உணவு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாக நான்கு ஆண்டுகள் பணியாற்றினேன். புதிய உணவுப் பொருட்களை விற்பனைக்குக் கொண்டு வந்தேன். எங்கு ஆலோசகனாகப் போனாலும் என் மனைவியும் கூட வருவாள்; நல்ல யோசனை சொல்வாள். நான் நினைப்பதை செய்து காட்டுவாள்.

இன்னும் கூடப் பல சமயங்களில் ஓட்டலில் உணவு பிரமாதமாக இருக்கும்போது உள்ளே சென்று அங்குள்ள சமையல்காரரை மிகவும் பாராட்டிவிட்டு வருவேன்.

ஒரு சமயம் வீட்டில் நானில்லாதபோது என் உறவினர்கள் என்னைப் பற்றி ஏதோ சொல்லி இருக்கிறார்கள். அங்கிருந்த எனது இரண்டாவது மருமகள் மாலா "நீங்கள் எல்லாம் பெண்களை அடிமையாக நடத்துபவர்கள். நீங்கள் என்றாவது எங்கள் மாமா போல உங்கள் மனைவியைப் பாராட்டி இருக்கி றீர்களா சொல்லுங்கள் பார்க்கலாம்!" என்றிருக்கிறாள்! நான் எப்போதுமே எல்லோரையும் பாராட்டுவேன். என் மனைவி உட்பட. இந்த பாராட்டுக் கலை எல்லாம் நான் பேராசிரியர் கல்கி அவர்களிடமிருந்து கற்றுக் கொண்டது. என் மனைவி சீதா ஏதாவது அபிப்ராயம் சொன்னால் அவர்கள் வீட்டிலும் சரி, எங்கள் வீட்டிலும் சரி எல்லோருமே கேட்பார்கள். அவ்வளவு நியாயமாக இருக்கும்.

மற்றொரு விஷயம் என்னை அதிசயிக்க வைத்தது. அவளது சகோதரிகள் குறிப்பாக சகோதரர்கள் வீட்டுக்கு வந்து விட்டால் அவளுக்கு வீட்டில் கணவன என்றொரு நபர் இருப்பது கூடத் தெரியாது! அவர்களுக்கு அவ்வளவு உபசாரம் நடக்கும். அவ்வளவு பாசம்.

அமெரிக்கா சென்ற மறுஆண்டே, 1963லேயே நான் தீர்மானித்து விட்டேன், "இந்தியா திரும்பிவிட வேண்டும், நம்நாட்டுக்குப் பணி புரிய வேண்டும்" என்று. அதனால் நான் 1963லிருந்து கடைசிவரை இந்திய பாஸ் போர்ட்டைத்தான் வைத்திருந்தேன். அமெரிக்கக் குடிமகன் ஆகி இருந்தால் பல சௌகரியங்கள் கிடைத்திருக்கும், எனினும் நான் ஆகவில்லை.

அடிக்கடி நான் என் மனைவியிடம் இந்தியாவுக்கு திரும்பிச் செல்ல வேண்டியதன் அவசியத்தைப் பற்றியும், மகாத்மா காந்தி பற்றியும் பாரதி பற்றியும், வ.உ.சி. பற்றியும் நம் தேசியத்தலைவர்கள் பற்றியும் மணிக் கணக்கில் பேசிக் கொண்டிருப்பேன்.

**1987**ல் நான் அமெரிக்காவிலிருந்து திரும்பினேன். ஆனால் அதற்கு முன், 1984லேயே திரும்பிவிட வேண்டுமென்று திட்டமிட்டிருந்தேன். அப்போது அமெரிக்காவில் சொந்த ரசாயன நிறுவனத்தை நடத்தி வந்தேன். அப்போதெல்லாம் பல சமயம் இந்தியா திரும்புவது பற்றிப் பேச்சு வரும். பேச்சு வரும்போது கவனித்தேன். ஊருக்குத் திரும்புவதில் - தான் வருவதில் அவளுக்கு இஷ்டமில்லை என்று புரிந்தது.

கொஞ்ச நாளில் இப்படிப்பட்ட விவாதம் மூன்று மாதத்திற்கொருமுறை என்கிற ரீதியில் தீவிரமாகத் தொடர ஆரம்பித்தது. என் மனைவி "நான் வரவில்லை" என்று சொன்னதும் பேச்சு நிறுத்தி விடுவேன், "பேச இது சரியான தருணமல்ல" என்று. ஆனாலும் எப்படி அவளுக்கு, "அவள் இந்தியா திரும்ப வேண்டியதை" எடுத்து நியாயமாகச் சொன்னாலும் கேட்பதாக இல்லை; வருவதாக இல்லை.

"இதோ பாருங்கள்! நீங்கள்தான் நாடு நாடு என்கிறீர்கள். நீங்கள் போய் வாருங்கள். நான் வர முடியாது. எனக்கு வரப் பிரியமில்லை. இத்தனை நாளும்

நான் உழைத்தேன். குருவி மூக்கால் சேர்ப்பது போல பலவற்றையும் சேர்த்து வைத்திருக்கிறேன். இப்போது போய் நீங்கள் மீண்டும் ஆனா ஆவன்னாவில் ஆரம்பிப்பது போல மறுபடியும் அங்கு போய் வாழச் சொல்கிறீர்கள். குழந்தைகள் எல்லாம் இங்கிருக் கிறார்கள். என்னால் வர முடியாது. நான் அடிக்கடி வந்து உங்களைப் பார்த்துக் கொண்டு போகிறேன்'' என்றாள்.

எனக்கு வியர்த்தது. மறுபக்கத்தில் "விஷயம் உச்ச கட்டத்திற்குப் போய் விட்டது. அவள் இனி வரமாட்டாள்'' என்று தெரிந்தபோது நான் கடைசியாக, அவளிடம் குற்ற உணர்வைத் தூண்டும் பிரம்மாஸ்திரத்தை பிரயோகித்தேன்.

"இதோ பார்! நீ சும்மா வந்து கிராமத்தில் நின்றால் கூட எத்தனையோ பெண்களுக்கு எவ்வளவோ தெம்பு ஏற்படும். நமக்குக் கொஞ்சமாவது தேசப்பற்று வேண்டாமா? எவ்வளவு பேர் ஏழைகள் அங்கே கஷ்டப்படுகிறார்கள்'' என்றேன்.

"உங்களுக்கே எல்லா தேசப் பற்றும் இருக்கட்டும். நான் வரப்போவதில்லை. என்னால் முடியாது. குழந்தை குட்டிகளை விட்டுவர'' என்றாள். அவள் கண்கள் கலங்கி இருந்தன.

நானும் பேசுவதை நிறுத்திக் கொண்டேன். அவளுடன் அப்படிப் பேசி புண்படுத்தி இருக்கக்கூடாது என்று என் மனம் என்னை சாடியது. "அவள் ஒரு ஆத்மா. அவள் பணியைச் செய்ய அவள் வந்திருக்கிறாள். நீ இப்படிப் பேசுவது தவறு'' என்று எனக்குள்ளே யாரோ சொல்லிக் கொண்டிருந்தார்கள். அருகில் சென்று அமர்ந்தேன்.

''கோபித்துக் கொள்ளாதே. மன்னித்துவிடு. நீ வராவிட்டால் பரவாயில்லை. நான் அடிக்கடி வந்து உன்னைப் பார்த்துக் கொள்கிறேன். நீயும் சௌகரியப்பட்டபோது வா!'' என்று அவள் கண்களைத் துடைத்தேன்.

அது தான். நான் கடைசியாக நான் அவளை இந்தியா வரும்படிக் கேட்டது. அதற்குப் பிறகு ஓராண்டு

ஓடிவிட்டது. தொழிலில் பல வேலைகள் இருந்தன. நான் அதில் மூழ்கி விட்டேன். இது விஷயமாக அவளிடம் எதுவும் பேசுவதில்லை. அவள் வராதது பற்றி நான் சமாதானமடைந்து விட்டேன்.

ஒருநாள் காலை அவள் சொன்னாள்.

"என்ன இது? ஊருக்குப் போகவேண்டும் என்று சொல்லிவிட்டு இங்கே உட்கார்ந்து கொண்டு அக்கப்போர் பண்ணிக் கொண்டிருக்கிறீர்களே. கிளம்புவதைப் பாருங்கள்!" என்றாள்.

எனக்கு ஏதோ பொறியில் தட்டினாற்போல இருந்தது. அவள் சாதாரண மனிதப் பெண்ணல்ல. தான் வராவிட்டாலும் தன் கணவன் ஆசை நிறைவேற வேண்டும் என்பதில்தான் எவ்வளவு அக்கறை! எண்ணி எண்ணி, அசந்து போனேன்.

அதன்பின் வேகமாக ஊர்திரும்பும் முயற்சியில் இறங்கினேன். அவள் வராததில் எனக்குக் கொஞ்சம் கூட வருத்தமில்லை. வாழ்ந்ததெல்லாம் வாழ்ந்தாயிற்று. இனி நாம் செய்ய வேண்டிய பணியை..... வானப்பிரஸ்தம் என்பார்களே அது இதுதானோ என்றெண்ணினேன்.

நான் தனியே தமிழ்நாடு திரும்பினேன். திருவான்மியூரில் ஒரு சிறிய தனி வீடு. எங்கள் ஊர் இளைஞர்கள் இருவர். வைரம் என்ற இளைஞர் வீட்டோடு இருந்தார். கார் ஓட்டுவார். குமார் என்ற இளைஞர் எனது சகலர் மகன். வீட்டு வேலைகளிலிருந்து சமையல் வரை. ஒரு போன், ஒரு கார். வாழ்க்கை ஓடிக் கொண்டிருந்தது. இயக்கம் துவங்குவது சம்பந்தமாக சில வேலைகளைச் செய்து கொண்டிருந்தேன்.

ஓராண்டு ஓடியிருக்கும். என் மனைவி சீதா அமெரிக்காவிலிருந்து என்னைப் பார்த்துவிட்டுப் போக இந்தியா வந்திருந்தாள்.

பெண்ணில்லாத வீட்டின் அலங்கோலத்தைப் பார்த்தாள். எனக்குப் பிடித்ததைச் செய்து கொடுத்தாள்.

இப்படி எல்லாம் சாப்பிட்டு ஓராண்டுக்கு மேல் ஆயிற்று" என்றேன். பிறகு அவள் இருந்த ஒரு மாதமும்

விதவிதமாகச் சமைத்துப் போட்டாள். வீட்டை ஒழுங்கு படுத்தினாள். வீடு மீண்டும் களை கட்டியது.

ஒருநாள் அமெரிக்காவிலிருந்து போன் வந்தது. எனது இரண்டாவது மகன் அசோகன் பேசினான். என் மனைவி போனை எடுத்தாள்.

"என்ன அம்மா! எல்லாம் எப்படிப் போவுது?"

"நல்லாப் போவுது!"

"என்ன ஏப்ரல் 19ம்தேதி தானே திரும்பி வர்றே?"

"இல்லை நான் வர்றதா இல்லை."

"என்னம்மா இது? ரிடர்ன் டிக்கெட் வாங்கிருக்கே. வல்லியா?"

"ஆமாம். ஆமாம்."

"ஏன் வரலே?"

"அப்பா இங்கே ரொம்ப கஷ்டப்படறாங்க. நல்ல சோறு கிடையாது; சாப்பாடு கிடையாது. கஷ்டப்படறாங்க. அதான் இங்கேயே தங்கறதா தீர்மானிச்சுட்டேன்."

இதைக்கேட்ட எனக்கு ஆச்சரியமாய் இருந்தது. இப்படி ஒரு முடிவு எடுப்பாள் என்று நான் நினைக்கவில்லை. அவள் என்னிடம் சொல்லவும் இல்லை. நான் வேறு ஒரு அறையில் உட்கார்ந்திருந்தேன். போனில் மகனுடன் பேசிக் கொண்டிருந்ததை நான் கேட்டுத் தெரிந்து கொண்டது தான் இந்த விஷயம். எனக்கு ஒரு பக்கம் மகிழ்ச்சி பிடிபடவில்லை. இந்தப் பெண் இப்படி நமக்குத் தெரியாமல் ஒரு முடிவெடுத் திருக்கிறாளே என்ற ஆனந்த அதிர்ச்சி. தான் விரும்பியதையெல்லாம் துறந்து இங்கு வருகிறாளே, ரிட்டர்ன் டிக்கெட் எடுத்த ஒரு பெண்- என்ற எண்ணம் என் கண்களில் நீரை வரவழைத்தது.

ராமர் இருக்குமிடமே அயோத்தி என்று அவள் தீர்மானித்திருக்கக் கூடும்.

ஏனெனில் அவள் பெயர் சீதை!

# 16

## "மனித உருவில்...."

பெண்களுக்கு அனுமான உணர்வு அதிகம். என் மனைவிக்குத் தன் உணர்வுகளை வார்த்தைகளில் அழகாக வெளிப்படுத்தத் தெரியாது. தன் அன்பை செயலிலே காட்டுவாள். அதேபோலத்தான் என் மூத்த மகன் சித்தார்த்தனும். ஆனாலும் விஷயங்களைத் தீர்மானித்து முடிவெடுப்பதில் அவள் கூறுகின்ற முடிவுகள் சரியாக இருக்கும். இதைப் பின்னால் உணர்ந்திருக்கிறேன்.

அதேபோல மனிதர்களை எடை போடுவதிலும் அவள் மகா கெட்டிக்காரி. "நான் யாரையும் நம்பி எளிதில் ஏமாந்து போகிற ஆள்" என்பதில் அவளுக்குப் பூரண நம்பிக்கை! அது உண்மையுங்கூட! பலமுறை, நான் பலரிடம் ஏமாந்து போயிருக்கிறேன்; கஷ்டப் பட்டிருக்கிறேன். முதலில் ஏமாற்றியவரே திரும்ப வந்து என்னிடம் வளைந்து குழைந்து பேசினால் ஏமாந்து விடுவேன்!

"உங்களுக்கு நாலு வார்த்தை நல்ல விதமாகப் பேசி விட்டால் போதும்! ஏமாந்து விடுவீர்கள்'' என்று அடிக்கடி சொல்வாள். "நான் சொன்னால் கேட்க மாட்டீர்கள்!" என்று குறைபட்டுக் கொள்வாள். அவளை திருப்திப்படுத்த பலநாளாக யோசித்து ஒரு 'ஸ்டாக்' பதிலைக் கண்டு பிடித்தேன்.

"இதோ பார்! நீ சொல்கிற முடிவுகள் சரியாக இருக்கின்றன. ஆட்சேபமில்லை. உண்மைதான். ஆனால் அலுவலகத்தில் போர்டு மீட்டிங் நடந்து கொண்டிருக்கும் போது, அங்கே, நான் "இருங்க! இருங்க! என் மனைவியைக் கேட்டுவிட்டு வருகிறேன் என்று ஓடிவர முடியுமா? என்ன நினைப்பார்கள் என்னைப் பற்றி?"

என்று சரியான பதிலைச் சொல்லி விட்ட திருப்தியில் பெருமிதமாகப் பார்த்தேன்.

முகத்தைத் திருப்பி ஒரு இடி இடித்துக் கொண்டு "இப்படி வக்கணையாப் பேசறதில் ஒண்ணும் குறைச்சல் இல்லை!" என்றாள்.

பிறகு சமாதானப்படுத்தினேன்.

"ஒவ்வொரு விஷயத்திற்கும் எப்படி நான் உன்னிடம் ஓடி வர முடியும். நான் தவறு செய்யலாம். தவறு செய்து, செய்து நான் தான் திருத்திக் கொள்ள வேண்டும். நான் தவறு செய்தால்தான் நான் வளர முடியும். என்னை வளர விடு" என்றேன்.

புரிந்ததோ புரியவில்லையோ பேசாமல் போய் விடுவாள். என் தாயும் சரி, என் மனைவியும் சரி. எங்கோ ஒரு மூலத்தைத் தொட்டு தங்கள் உள்ளுணர்வைக் கண்டார்கள். அதை உபயோகித்து வாழ்ந்தார்கள். படிப்பு, விஞ்ஞானம் என்ற தர்க்கவாத அறிவு - என் உள்ளுணர்வை மட்டுப்படுத்தி விட்டதோ என்ற சந்தேகம்.

**ப**ல ஊர்களைப் பார்க்க வேண்டும் என்பதில் என் மனைவிக்குப் பெரும் ஆசை. அவள் ஜெர்மனி, சுவிட்சர் லாந்து, ஜப்பான், மலேசியா, சிங்கப்பூர், கனடா என்று பல நாடுகளுக்குச் சென்றிருக்கிறாள்.

எங்கள் கல்லூரியில் என்னுடன் வேலை பார்த்த கன்னிமாதா ஒருவர் மேல்படிப்புக்காக பிரான்ஸ் போயிருந்தார். அவர் எங்களுக்கு மிகவும் வேண்டியவர். எனவே "பிரான்சுக்கு வாருங்கள்" என்று அழைப்பு விடுத்திருந்தார். பாரீஸ் மிகவும் அழகான நகரம். பளிங்கிலும், சலவைக் கல்லிலும் செய்யப்பட்ட சிற்பக் கலைக்கூடங்களை அங்கே பார்த்தோம். பிரான்சின் அடையாளச் சின்னமான 'ஈபிள் டவரி'ல் ஏறினோம். ஓவியர்கள் கூட்டமாக திறந்த வெளியில் நின்று கொண்டு தொழில் நடத்தும் ஓவியக்கூடம் பார்த்தோம்.

நாங்கள் மிக முக்கியமாக, பாரிசின் இரவு கேளிக்கை நடனங்களைப் பார்க்க வேண்டுமென்று எங்கள் சகோதரி கன்னிமாதா எங்களை ஒரு கேளிக்கை

ஹாலுக்கு அழைத்துச் சென்று எங்களை முதல் வரிசையில் உட்கார வைத்து விட்டு, தான் வெளியே வந்து விட்டார். அரைகுறை ஆடையுடன் அழகான பெண்கள் ஆடும் நடனங்கள்! பாரீசுக்குப் போய் இதைப் பார்க்க வில்லை என்று சொன்னால் நீங்கள் பாரீசைப் பார்க்க வில்லை என்றுதான் அர்த்தம் என்பார்கள். இப்படிப் பட்ட நடனங்களை நானே இதுவரை பார்த்ததில்லை. அதைப் பார்த்தோம்; ரசித்தோம். பாரீஸ் நகரை ஒரு பின் மாலை வேளையில் சுற்றி வந்தபோது, 'ஜேஜே' என்று தெருவில் வித்தியாசமான உடையில் பெண்கள் வழி நெடுக நின்று கொண்டு பேசிக் கொண்டிருந்தார்கள். ஒரு பெண் என்னைப் பார்த்து சிரிக்கவும், எனக்கு விஷயம் தட்டுப்பட்டது. "ஓகோ! இது பாரீஸ்! இது இரவு நேரம். சுருட்டைத் தலை மயிருடன் அரைக் கால் சட்டையுடன் அங்கங்களைக் காட்டிக் கொண்டு அழகாக நெளியும் பெண்கள்! இதற்குத்தான் பாரீஸ் பெயர் போனது!" என்று என் மனைவியிடம் சொல்லி விளங்க வைத்தேன்.

அவர்களைப் பார்த்தாள் என் மனைவி மீண்டும் ஒருமுறை.

"இதோ பாருங்கள்! இன்று எனக்கு உடம்பு சரியில்லை...." என்றாள் அவள்.

"நீங்கள் வேண்டுமானால் அங்கே போய் வாருங்கள்!" என்றாள். நான் சிரித்தேன், அவள் என்னைக் கிண்டல் செய்கிறாள் என்று நினைத்து. மீண்டும் அவள் என்னைப் பார்த்து 'சீரியசாக' அதையே சொன்னபோது எனக்குத் தூக்கி வாரிப் போட்டது; "என்ன உளறுகிறாய்? என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?" என்றேன்.

என் மனைவி யதார்த்த உலகை உணர்ந்தவள் என்பது எனக்குத் தெரியும். ஆனால் இப்படிப்பட்ட யதார்த்தமா? மேலும் இங்கு சுற்றுவதில் அர்த்தமில்லை என்று எண்ணி உடனடியாக ஒரு டாக்ஸியில் ஏறி ஓட்டலுக்கு வந்தோம். இப்படியும் பெண்கள் இருப்பார்கள் என்பதை நான் எண்ணிக்கூடப் பார்க்க வில்லை. அவள் சாதாரணப் பெண்ணல்ல என்பதை

உணர்ந்தேன். அதன்பின் எங்கள் இயக்க இளைஞர் களிடம் நான் கூறுவது:

"உங்கள் மனைவி ஏதோ ஒரு சுகம் கொடுக்க வந்த பெண் என்று நினைத்து விடாதீர்கள். அது ஒரு ஆத்மா. உங்களுடன் வாழ வந்திருக்கிறது; உங்களுக்காக வாழ்கிறது. அவர்கள் நின்றால் அவர்கள் திரும்பி நிற்கும் போது அவர்கள் நின்ற இடத்தைத் தொட்டுக் கண்களில் ஒற்றிக் கொள்ளுங்கள்" என்பேன்.

**வீ**ட்டில் கார் இருந்தது. டிரைவர் இல்லை எங்கள் வீட்டில். எனினும் கூப்பிட்டால் டிரைவர்கள் உடனே வந்து உதவும் தூரத்தில்தான் இருந்தார்கள். இருந்தாலும் என் மனைவி ஒருநாள்கூட "நான் காரை எடுத்துக் கொண்டு போகிறேன்'' என்று சொல்வதில்லை. அவளுக்கு நன்கு கார் ஓட்டத் தெரியும்; அமெரிக்காவில் நிறைய ஓட்டி இருக்கிறாள். ஒரு பையை எடுத்துக் கொண்டு 'விண்'ணென்று கிளம்பி விடுவாள், பஸ் ஸ்டாண்டிற்கு, தெருவில் சந்திப்பவர்கள் "என்ன இது? நீங்கள் அமெரிக்காவில் இருந்தவர்கள், வீட்டில் கார் இருக்கிறது. ஏன் இப்படி நடந்து போகிறீர்கள்?" என்று கேட்பார்கள். "நடந்தால் என்ன? உடம்புக்கு நல்லதுதானே!" என்பாள். வீட்டுக்கு பஸ் நிலையத்தி லிருந்து திரும்பும் போது சாமான்கள் இருந்தால் சைக்கிள் ரிக்ஷாவில் வந்து இறங்குவாள்.

"ஏன் ஒரு ஆட்டோவை வைத்துக் கொண்டு வரக் கூடாதா?" என்று கேட்டால் ரிக்ஷாக்காரன் பாவம். சும்மா உட்கார்ந்திருக்கிறான். அதே ஆட்டோ பணத்தை அவனிடம் கொடுத்தால் எவ்வளவு சந்தோஷப் படுகிறான்!" என்பாள்.

**எ**ன் மனைவிக்குக் கடவுள் பக்தி அதிகம். என்னால் மறக்க முடியாத சம்பவம். நான் சீர்காழி பள்ளியில் ஆசிரியர் பணியில் இருந்தபோது எனக்குப் பெரியம்மை வார்த்து விட்டது. கல்யாணம் ஆன முதல் வருடம். நோயின் கொடுமை; வெப்பம் மிக அதிகம். என்னால் தாள முடியவில்லை. அப்போது யாரோ சொன்னார்கள் என்று ஊரின் எல்லையில் தள்ளி இருந்த மாரியம்மனுக்கு தினமும் குடம் குடமாக தண்ணீர் ஊற்றி "வெம்மை

தணிய வேண்டும்'' என்று பிரார்த்தித்துக் கொண்டிருந்தாள்.

"யத் பாவம் தத்பவதி'' என்பது உபநிடதம். எதைப் பாவனை செய்கிறோமோ அப்படியே நடக்கிறது என்ற அந்த வாசகத்தை இன்று படிக்கும்போது அவள் வெம்மை தணியச் செய்த காரியங்களின் உண்மை புரிகிறது.

நான் விஞ்ஞான மாணவன். எனவே இந்த சாமியார்களை, யோகிகளை எல்லாம் அதிகம் அணுகுவதில்லை. ஆனால் ஒரு சமயம் எனது நண்பர்; பேராசிரியர் வெங்கடேசனுடைய வற்புறுத்தலுக்காக நான் யோகி ராம்சுரத்குமாரைப் பார்க்கச் சென்றேன். அவர் முன் உட்கார்ந்திருந்தேனே தவிர எனக்கு எந்தவிதமான ஈடுபாடும், பெரிய மரியாதையும் ஏற்படவில்லை.

ஆனால் மூன்று மாத காலத்திற்குள் என் அண்ணன் மகள் குடும்பத்தில் ஒரு பிரச்னை எழ, எனக்கு எங்கே போவதென்று தெரியவில்லை. திடீரென்று யோகிராம் சுரத்குமார் ஒருவர் தான் உதவ முடியும் என்று அங்கே அழைத்துச் சென்றேன். அங்கே அதிசயம் நிகழ்ந்தது. அதிலிருந்து நானும் என் மனைவியும் அடிக்கடி சுவாமியைச் சென்று பார்த்து வருபவர்களானோம். அவர் பெரிய மகான். "இந்தப் பிச்சைக்காரனுக்கு ஒன்றும் தெரியாது'' என்பார் அவர். ஆனாலும் அவர் செய்கிற சித்து வேலைகளெல்லாம் நம்மை அதிசயத்தில் ஆழ்த்துபவை. அவர் முன்னிலையில் எப்போதும் எங்களுக்கு பேரமைதி கிட்டும்.

என் மனைவிக்கு உணவுக்குழலில் ஒரு கட்டி. புற்றுநோய் என்றார்கள் மருத்துவர்கள். அமெரிக்காவில் அறுவைச் சிகிச்சை நடந்தது. ஒரு வருடம் வரை வேறு இடங்களில் வராமல் இருக்கவேண்டும். வந்தால் ஆபத்துதான்'' என்றார்கள் மருத்துவர்கள்.

என் மனைவி பூரண குணம் பெற்று என்னுடன் இந்தியா திரும்பியபோது நேரே திருவண்ணாமலை சென்றோம். சுவாமியிடம் சொன்னாள். "குணமாகி திரும்பி வந்தால் இங்கு ஆசிரமத்தில் ஒரு வாரம் வேலை செய்வதாக வேண்டிக் கொண்டேன். என் உடலில் முன்பு

போல் சக்தி இல்லை. நான் சமையலறையில் காய்கறி நறுக்கி கொடுத்து உதவுகிறேன்" என்றாள் அவள். அங்கே ஒரு வாரம் தங்கினோம்.

என் மனைவியின் குணங்களை - பிடிவாதம் உட்பட - நான் ரசிப்பதுண்டு; என் பிடிவாதத்தை விட்டுக் கொடுப்பதுண்டு. எங்கள் உறவினர் கூட்டத்தில் எல்லோரும் உட்கார்ந்திருக்கும்போது என் மனைவியை எதற்காகவாவது யாராவது பாராட்டும்போது நான் சொல்வதுண்டு:

"என் தந்தையிடம் நான் தெரிந்து கொண்ட மிகப் பெரிய பாடம் என்ன தெரியுமா? மனைவி சொல்வதைக் கேள் என்பதுதான். நான் இன்று வரையில் அதைத்தான் கடைப்பிடித்து வருகிறேன்!" என்று ஜோக் அடிப்பேன். எல்லோரும் சிரிப்பார்கள். அப்படிப்பட்ட ஒரு உற்சாக கட்டத்தில் ஒருநாள் அவளிடம் சொன்னேன். "எனகது இன்னும் எத்தனை பிறவி இருக்கிறதோ தெரியாது. மீண்டும் பிறந்தால் இன்னும் ஏழெழு ஜென்மத்திற்கும் உன்னுடன் தான் வாழ விரும்புகிறேன்!" என்று சிரித்துக் கொண்டே சொன்னேன்.

அவள் சொன்னாள். "எனக்கு இனி ஒரு ஜன்மமும் வேண்டாம். எனக்கு இந்த வாழ்க்கையே பிடிக்கவில்லை. இது என்ன குடும்ப வாழ்க்கை, கல்யாணம் கார்த்திகை என்று. எனக்கு சுத்தமாகப் பிடிக்கவே இல்லை. எனக்கு இனி பிறவியே வேண்டாம்" என்றாள் வேகத்துடன்.

"வேடிக்கையாகத்தான் இதைச் சொல்ல வேண்டும்" என்று எண்ணி வேடிக்கையாகவும் ஆசையாகவும் நான் கேட்கப் போய் அவள் இப்படிச் சொன்னது என்னுள் பெருத்த ஏமாற்றத்தை ஏற்படுத்தியது; துக்கம் ஏற்பட்டது. ஆனால் அவள் ஏதோ துறவி போலப் பேசினாள்.

பின்னால் ஒருநாள் எனது நண்பர் பிரபல ஜோதிடர் வித்வான் லட்சுமணன் அவர்களை என் வீட்டுக்கு அழைத்திருந்தேன்.

எனது பேரக் குழந்தைகளுக்கு ஜாதகம் குறித்துக் கொடுத்த அவர், "எல்லாவற்றையுமே நான் சற்று பார்த்து விடுகிறேனே" என்று சொன்னார். தற்செயலாக முதலில், என் மனைவியின் ஜாதகத்தை எடுத்தார். எடுத்த உடன்

அவர் சொன்ன முதல் வாசகம் "அம்மாவுக்கு இனி பிறவி இல்லை!"

நான் ஒரு கணம் அசந்து போனேன். அதற்குப் பிறகு அவர் என்ன சொன்னார் என்பதே எனக்கு நினைவில்லை.

பிறவியே இனி வேண்டாம் என்ற என் மனைவியின் ஆத்ம விருப்பம், எனக்கு மட்டுமே தெரியும். ஆனால் வித்வான் அதையே சொன்னபோது சிந்தனையில் ஆழ்ந்தேன்.

''ராமரும் சரி, புத்தரும் சரி, காரைக்கால் அம்மையாரும் சரி - எத்தனையோ உயர் ஆத்மாக்கள் மனித உருவில்தான் இவ்வுலகில் நம்மோடு வாழ்கிறார்கள். நாம்தான் உணர்ந்து கொள்வதில்லை. காரணம், அவர்கள் மனித உருவில் இருப்பதால்தான்!'' என்று எண்ணம் ஓடியது.





17

## வாழ்வை உயர்த்தும் மந்திரச் சொற்கள்

நமது பாரம்பரியம் நமக்கு சில குணங்களைத் தருகிறது. "அவர்கள் குடும்பமே எல்லோரும் அப்படித் தான், சாதுவானவர்கள்! என்று சொல்கிறோம். 'அவர்கள் பாரம்பரியமே நன்கு படித்தவர்கள், நல்ல கல்விமான்கள்' என்கிறோம். அது அவர்களது பாரம்பரியம் தந்த பரிசு. நம்முடைய தந்தை, தாய், நமது பாட்டனார் என்று அவர் களுடைய குணங்கள் நம்மிடம் பிரதிபலிப்பதை நாம் காணலாம். ''விதை ஒன்று போட சுரை ஒன்று முளைக்குமா?'' என்று கேட்கிறார்களே அதுதான் இந்தப் பாரம்பரியம். சோளம் போட்டால் சோளம்தான் விளையும் என்கிற அடிப்படை; அதுதான் பாரம்பரியம்.

அடுத்து சூழ்நிலை. நம் வாழ்வில் ஏற்படுகின்ற பல சூழ்நிலைகளால் நாம் ஒரு புதிய பாதையைத் தேர்ந்தெடுக்க வேண்டி இருக்கிறது. பழைய பாதை இனி உதவாது என்ற கடினமான முடிவுக்கு வருகிறோம். அதாவது நமது வாழ்வைத் திருப்பும் - திசை திருப்பும் முடிவுகளை எடுக்கிறோம். சூழ்நிலை நம்மை உருவாக்கு கிறது.

நான் சீர்காழி சபாநாயக முதலியார் இந்து உயர்நிலைப் பள்ளி ஆசிரியராகப் போய்ச் சேர்ந்தேன். ஓராண்டு, பி.எஸ்.ஸி பட்டம் எடுத்த பின். எல்லாம் நன்றாக இருந்தது. புதிய அனுபவம். நல்ல ஆசிரிய நண்பர்கள் இருந்தார்கள். ஆறாவது வகுப்பிலிருந்து பதினோராவது வகுப்பு வரை விஞ்ஞான பாட ஆசிரியர் வேலை. மாணவர்கள் - சிறுவர்கள், இளைஞர்கள். எனக்கோ வீடு நாலு மைல் கடந்து வைத்தீஸ்வரன் கோவிலில். ஆனாலும் அந்தப் பள்ளியில் நான் தொடர்ந்து ஆசிரியர் வேலை பார்க்க முடியாது.

காரணம் நான் ஆசிரிய பயிற்சி பெறவில்லை. என்னிடம் பி.டி. பட்டம் இல்லை. அது இருந்தால் தான் நிரந்தரமாக ஆசிரியர் வேலை பார்க்கலாம். எனவே நான் மேலே 'பி.டி.' படிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இப்படித்தான் வாழ்வின் ஒவ்வொரு கட்டமும் என் முன்னேற்றத்தில் அக்கறை கொண்டு என்னை நெருக்கியதைப் பார்க்கிறேன்.

நான் வேறு வேலை தேடிக் கொண்டிருந்தேன். அடுத்த ஆண்டு அரசாங்க வேலை கிடைத்தது. தபால் இலாகாவில் வேலை கிடைத்தது. வேண்டாமென்று சொல்லி விட்டேன். மற்றொரு வேலை குடந்தை அரசினர் கல்லூரியில் வேதியலில் ஆய்வுக்கூடத்தில் பாடம் சொல்லிக் கொடுப்பவராக. இது கல்லூரி; ஆக உயர்நிலைப்பள்ளியிலிருந்து ஒரு படி மேலே. மகிழ்ச்சியுடன் போய்ச் சேர்ந்தேன்.

ஆய்வுக்கூடத்தில் மாணவர்களுக்குச் சோதனை களைச் செய்துகாட்ட வேண்டும். சோதனைக் கூடத்தில் பல பரிசோதனைகள் மூலம் நாம் ரசாயனப் பொருள்களின் குணங்களை அறிந்து கொள்ளலாம். வேதியல், அதிகம் செய்முறைப் பாடம்.

நான் அங்கே ஐந்தாண்டுகள் வேலை பார்த்தேன். அங்கும் ஒரு பிரச்னை. அதாவது பி.எஸ்ஸி பட்டத்துடன் இருந்தால் ஆயுள் பூராவும் நாம் அதே நிலையில் சோதனைக்கூட ஆசிரியராகக் காலத்தைக் கழிக்க வேண்டியதுதான்! இது என்னை மீண்டும் பிடித்துத் தள்ளியது - அதாவது மேலே உயர வேண்டிய கட்டாயத்தில்!

இதன் விளைவாக நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் வேதியலில் முதுநிலைப் படிப்புக்காக போய்ச் சேர்ந்தேன். அங்கே சேர்ந்ததும் அங்கே எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்த பேராசிரியர் பாலையாவைப் பார்த்தேன். அவர் அமெரிக்கா சென்று புகழ் பெற்ற 'ஸ்டான்போர்டு' பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டம் பெற்று விட்டு வந்திருந்தார். அவர் பாடம் சொல்லிக் கொடுத்த விதம் என்னை மிகவும் கவர்ந்தது.

இதுவரையில் நான் படித்த விதம் ஆசிரியர்கள் புத்தகத்தில் இருப்பதைத் தெளிவாக விளக்கிச் சொல்லிக் கொடுப்பாாகளே தவிர, வேறெந்த வித தாக்கமும் இருந்ததில்லை. ஆனால் பாலையா அவர்களோ நம் மனத்தில் வேதியல் பொருள்களில் இருக்கும் எலக்ட்ரான்களை ஓட விட்டார்! ஆட விட்டார்! இதை அதுவாக மாற்றினார்! அதாவது எலக்ட்ரான் என்பது அணுவிற்குள், அணு மையத்தைச் சுற்றி ஓடும் மிகச் சிறிய அலை போன்ற துகள். மைக்ராஸ்கோப்பினால்கூட நாம் பார்க்க முடியாது. இப்படி கண்ணுக்குத் தெரியாத அணுத் துகள்கள், எப்படி மேகக் கூட்டம் போல் - வால் நட்சத்திரம் போல் - சுற்றுகின்றன, மற்ற பொருள்களின் எலக்ட்ரான்களுடன் சேர்கின்றன, பிரிகின்றன என்று அவர் சொன்னால் நேரம் போவதே தெரியாது! ஆர்வத்துடன் சொல்வார்; பேசுவார். அவரது கண்களிலும் பேச்சிலும் அந்த ஒளி, அந்த உற்சாகம் இருக்கும்! ஏதோ ஒரு மனிதன், அவற்றுடன் உறவாடுவது போலவும் - நாம் உறவாட முடியும் என்பது போலவும் - அவற்றை நாம் விரும்புகிறபடி கையால் எடுக்கலாம், மற்றவற்றுடன் சேர்க்கலாம் என்பது போன்ற பிரமையில் எல்லோரையும் ஆழ்த்தி விடுவார். நான் சொக்கிப் போனேன்!

எனது பேராசிரியரை அமெரிக்கா சென்று இந்தியா திரும்பி, இந்தியப் பல்கலைக் கழகங்களில் வந்து பாடம் சொல்லிக் கொடுக்கும் ஒரு முதல் தலைமுறை என்று சொல்லலாம். 1950ன் துவக்க காலம் அது. அதற்கு முன் நான் இளநிலைப் பட்டம் படித்தபோது அண்ணா மலையில் வேதியலில் ஆராய்ச்சி என்று யாரும் செய்ய வில்லை. ஆனால் இவர் வந்தவுடன், அங்கே பல மாணவர்கள் புதிய புதிய விஷயங்களைக் கண்டுபிடிக்கும் ஆர்வத்தில் இரவு பகலாக ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார்கள். ஆராய்ச்சிக்கூடத்தில் விடிய விடிய மின் விளக்கு எரியும். ஏதோ மனிதத் திறமைகளின் புதிய எல்லைகளைத் தொடும் தேவலோகம் போல ஒளிமயமாக அது காட்சியளித்தது.

இதைப் பார்த்ததும் "படிப்பு இத்துடன் முடிவடை பதில் அர்த்தமில்லை. படித்தால் டாக்டர் பட்டத்திற்குப்

படிக்க வேண்டும். அதுவும் அமெரிக்காவில் படிக்க வேண்டும்'' என்ற எண்ணம் என்னுள் விழ ஆரம்பித்தது.

ஆசிரியர்கள் ஒரு மாணவனது வாழ்க்கையை எப்படி மாற்றி விடுகிறார்கள், கவனியுங்கள். ஒரு சொல், ஒரு உற்சாகம், ஒரு சிறு பாராட்டு, அவர்கள் செய்த சாதனையின் ஒரு சிறு விளக்கம் - அதுதான் ஒரு இளம் உள்ளத்தில் எத்தகைய பெரும் மாற்றத்தை ஏற்படுத்துகிறது!

சமீபத்தில் ரீடர்ஸ் டைஜஸ்ட் பத்திரிகையில் படித்தேன். ஒரு பத்திரிகாசிரியர் எழுதி இருந்தார். பள்ளியில் படிக்கும்போது ஒரு கதையைப் படித்துச் சொல்லி அதன் கடைசி அத்தியாயத்தை மாணவர்களை எழுதச் சொன்னார்களாம். அந்த இளைஞர் எழுதி இருந்த பரீட்சைத்தாளில் ஆசிரியர் ஒரு குறிப்பு எழுதி இருந்தார். என்ன தெரியுமா? "இது மிக நல்ல கற்பனை" என்று. "நான்கு வார்த்தைகள்! மறக்க முடியாத வார்த்தைகள். நான் எழுத்தாளன் ஆனேன்!'' என்று எழுதி இருந்தார். அந்த பிரபல பத்திரிகாசிரியர்.

சூழ்நிலை - அண்ணாமலைப் பல்கலைக் கழக சூழ்நிலை - எப்படி என் எண்ணங்களை உருவாக்கியது என்று எண்ணிப் பார்க்கிறேன். அங்கே சிறந்த பேராசிரியர் இருந்தார்; நல்ல ஆராய்ச்சி மாணவர்கள் இருந்தார்கள். இதைத்தான் சத்சங்கம் என்று கூறுவார்கள். தேடலில் ஈடுபட்டிருக்கும் ஒத்த உள்ளம். ஞானிகள், கொண்டதுதான் சத்சங்கம். ஞானிகள் தன்னை அறியும் அறிவின் தேடலில் ஈடுபடுகிறார்கள். இங்கே விஞ்ஞானிகள் பொருளின் தன்மையை அறியும் தேடலில் ஈடுபடுகிறார்கள்.

பாரம்பரியம் மட்டும் நம்மை உருவாக்குவதில்லை; சூழ்நிலையும் உருவாக்குகிறது. நமது பாரம்பரியத்தை நாம் அறிந்து கொள்வது நல்லது; அவசியம். அதேபோல நம் சூழ்நிலையைப் புரிந்து கொள்வது அவசியம். இதைத் தான் ஆங்கிலத்தில் (Awarness) "விழிப்புடன் இருக்கும் நிலை'' "விழிப்புணர்வு'' என்பார்கள். அதாவது சூழ்நிலையைப் புரிந்து கொண்டு நாம் அத்துடன் ஒன்றாக வேண்டும்.

சூழ்நிலை என்பது பிரபஞ்ச ஓட்டம்; பிரபஞ்ச லயம். அதுவும் நமது மன ஓட்டமும் - அதாவது நமது மனோலயமும் சூழ்நிலையும் ஒன்றாகும்போது நாம் விரும்பும் காரியங்கள் நிகழ்கின்றன. நமது லட்சியங்கள் எளிதாக நிறைவேறுகின்றன. ''எளிதாக'' நிறைவேறு கின்றன என்று சொல்வதே தவறு. முயற்சி இல்லாமல் தானே நிறைவேறுகின்றன (Effort Less Effort) என்று சொல்கிறார்கள் இதை, தீபக் சோப்ரா போன்ற பிரபல அமெரிக்க எழுத்தாளர்கள்.

முயற்சி வேண்டியதில்லை என்று சொன்னால் நாம் சும்மா உட்கார்ந்து கொண்டிருந்தால் எல்லாம் தானே நடக்கும் என்பதல்ல இதன் பொருள். நாம்தான் தீர்மானிக்கிறோம். "இந்த சூழ்நிலையில் நாம் என்ன செய்ய வேண்டும்? எது நல்லது?" என்று நாம்தான் தீர்மானிக்கிறோம். இந்த முடிவு நம்முடைய முடிவு. சொல்லப்போனால் நம் விதியை நாம்தான் நிர்ணயிக் கிறோம். நாம் எடுக்கும் முடிவுதான் நம் வாழ்வை நிர்ணயிக்கிறது. நாம் முடிவு எடுத்த பின், சூழ்நிலை தானாக நகர்ந்து வந்து நமக்கேற்ப நம்மைச் சுற்றி அமைகிறது.

சூழ்நிலை எப்படி நம்மை நோக்கி நகர்ந்து வரும்? அதை ஏற்படுத்துவதுதான் மனஓட்டம்; நம் மனத்தில் ஓடும் எண்ணங்கள். அது ஒரு ஒழுங்கில் ஜீவதாகமாக ஓடும்போது அங்கே நம்மைக் கறைபடுத்தும் எந்த எண்ணங்களும் இல்லை. அப்போது உலக நன்மையை நாடி ஓடும் பிரபஞ்ச லயத்துடன் நம்முடைய மன ஓட்டம் - மனோலயம் - ஒன்றுகிறது.

ஜே. கிருஷ்ணமூர்த்தி எழுதுகிறார், இளவயதில் தமக்குக் கற்பிக்கப்பட்ட அறிவுரைகளை. அதில் "மேல் நோக்கிய பரிணாம வளர்ச்சியில்தான் இப்பிரபஞ்சம் செல்கிறது, அதுதான் கடவுளின் திட்டம்'' என்று எழுதுகிறார்.

நமக்கு ஏற்படும் அறிவுத் தாகம் தவறல்ல. அறிவின் வளர்ச்சியில் - ஞானப் பெருக்கில்தான் - பரிணாம வளர்ச்சி நடைபெறுகிறது. நாம் அறிவின் தேடலில் ஈடுபடுவது உயர்ந்த காரியம்தான்.

"ஆனால் நாம் நம்மை உயர்த்திக் கொள்ளும் போது மேல் நிலைக்கு, - ஞானியின் சீடனாகவும் - போகிறோம்." இது சுயநலமல்லவா? என்று சிலர் கேட்கக் கூடும். நாம் புரிந்து கொள்ள வேண்டும். "பிறர் நலத்தில் என் சுயநலமும் அடங்கி இருக்கிறது. இந்த ஊரும் நாடும் நன்றாக இருக்க வேண்டும் என்று நாம் பாடுபடுகிறோம் என்றால் அதில் நாமும் அடக்கம். நாடு நன்றா யிருக்கும்போது நாமும், அதன் விளைவாக நல்வாழ்வு பெறுகிறோம்.

வேலைக்காகத்தான் பத்திரிக்கை நிருபர்களாகச் சேர்கிறார்கள். ஆனால் அதில் நாட்டு நலமும் அடங்கி இருக்கிறது. வேலைக்காகத்தான் தாலுகா ஆபீசில் சேர்கிறார்கள். மக்களுக்கு உதவும் பணியும் அதில் பரந்து நிற்கிறது. மகான் அசிசி எழுதுகிறார். "பிறருக்காக வாழ்வதில், தியாகம் செய்வதில்தான் நான் அமரத் தன்மை எய்துகிறேன்" என்று.

கதைக்கு வருவோம்! எனது பேராசிரியர் பாலையா அவர்கள் கொடுத்த உந்துதல்தான் நான் மேலே எம்.எஸ்ஸி என்ற மற்றோர் முதுநிலைப் பட்டம் பெறவும், அமெரிக்கா செல்லவும் காரணமாயிற்று.

அமெரிக்கா சென்றதும், பாரம்பரியமும் சூழ்நிலையும் என்ன செய்தது என்று நீங்கள் கேட்கலாம். அந்த பாரம்பரிய பலம்தான் என்னை சொந்தத் தொழிலில் இறக்கியது என்று முன்பே எழுதி இருக்கிறேன்.

அமெரிக்காவில் நான் விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் சேர்ந்தேன் டாக்டர் பட்டம் படிக்க; ஆராய்ச்சி செய்ய. படிப்பு சவாலாக இருந்தது. காரணம் நமது ஊர் படிப்பின் அணுகுமுறையும், அவர்களது அணுகு முறையும் வேறுபட்டிருந்தது. எல்லாவற்றிலுமே அவர்கள் நம்மை சுயமாகச் சிந்திக்க வைக்கிறார்கள். நமது ஊர்ப் படிப்போ பெரும்பாலும் சொல்லிக் கொடுத்ததை ஞாபகத்துடன் திரும்பச் சொல்லும் முறையாக - விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் கல்வியாக இருக்கிறது.

ஆய்வுக்கூடத்தில் காலையில் 9 மணிக்குப் புகுந்தால் வீடு திரும்ப சகஜமாக இரவு 10-11 மணி ஆகும். சிலசமயம்

இரவு இரண்டு மணி நேரம் வரை கூட இருக்கும்படி இருக்கும். புதிய பொருள்களைப் பிரித்தெடுக்க அங்கே 'குளோரோபாம்' (Chloroform) 'மிதிலின் குளோரைடு' (Methylene Chloride) போன்ற வேதியல் திரவங்களை உபயோகிக்க வேண்டும். இதற்கான தனி அறைகள் உண்டு. கொஞ்ச நேரத்தில் அறை பூராவும் 'குளோரோபா'மினுடைய ஆவி நிறைந்துவிடும். நம்மை அறியாமலே நமக்கு உணர்வு மங்கிப் போகும்; லேசான மயக்கம் ஏற்படும். இப்படி, நான் டாக்டர் பட்டத்திற்கான படிப்பை முடித்து ஆராய்ச்சியில் இறங்கியபோது எனது ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று வெளிவந்தது.

எனினும் என் மனத்தில் சில எண்ணங்கள் எழுந்தன; புதிய கண்டுபிடிப்புக்கள் எல்லாம் எதில் அடங்கி இருக்கின்றன? சோதனைக் கூடத்தின் உடல் உழைப்பிலா? அல்லது விஞ்ஞானியின் மனத்தில் ஏற்படும் புதிய புதிய எண்ணங்களிலா, அணுகுமுறை களிலா?

இதுதான் கேள்வி. உண்மையிலேயே பெரிய கேள்வி! சோதனைக் கூடத்தின் உடல் உழைப்புதான் புதிய பொருளைத் தருகிறது என்பதிலும், அதன் தன்மை களையும் விளக்கும் ஆதாரங்களைத் தருகின்றன என்பதிலும் சந்தேகமில்லை.

எனினும் இதற்குப் பின்னால் இருக்கும் மனித மனமும், அதன் சிந்திக்கும் திறனும், அணுகுமுறையும் தான் வெற்றிக்கு அடிகோலுகின்றன. இதுதான் பெரிய உண்மை என்று எனக்குப் பட்டது.

உடலால் உழைப்பவர்கள் கொத்தவால் சாவடி யிலும் கோயம்பேட்டிலும் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். அதுவும் தேவைதான். ஆனால் மனித முன்னேற்றத்திற்குப் பெரிதும் காரணமாயிருப்பது மனித மனம்தான்!

எனது ஆராய்ச்சியை முடித்துப் பட்டம் பெற்று வெளியே வந்தபோது இந்தச் சிந்தனைதான் என்னுள் மேலோங்கி நின்றது.

"விஞ்ஞானிகள் எப்படிக் கண்டு பிடிக்கிறார்கள்? அவர்களது எண்ண ஓட்டம் என்ன? அவர்களுக்குள் படிப்படியாகச் செல்லும் சிந்தனா முறை - அணுகுமுறை - என்று ஒன்று இருக்கிறதா?

இந்த எண்ண ஓட்டத்தில் - இந்த ஆராய்ச்சியில் இறங்கினேன் வாழ்வின் அடுத்த கட்டமாக. இதுதான் நான் மனவியலில் புகக் காரணம். எண்ணம், என்னைச் செதுக்கிய எண்ணம்!



18

## திசை திருப்பிய சம்பவங்கள்!

நான் நண்பர் மணியன் அவர்களைச் சந்தித்ததே ஒரு அலாதியான சம்பவம்.

அப்போதுதான் சென்னைப் பல்கலைக் கழகத்தில் மற்றுமோர் முதுநிலைப் பட்டப் படிப்பை முடித்திருந்தேன். எனது வேதியல் பேராசிரியர், அமெரிக்காவில் டாக்டர் பட்டம் எடுத்த டாக்டர் சுவாமிநாதன். அவருக்கு சீர்காழி சொந்த ஊர். விஞ்ஞான ஆராய்ச்சியில் மிகுந்த ஈடுபாடு. எதையும் அனாயாசமாக எடுத்துக்கொள்ளும் மனோபாவம். பல மாணவர்கள் அவரிடம் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தார்கள்.

வேதியலிலும் மற்ற துறைகளிலும் வெளிவந்து கொண்டிருந்த பல புதிய கண்டுபிடிப்புகளும் தொழில் நுட்பங்களும் என்னைப் பிரமிக்க வைத்தன. அந்த வாரத்து ஆனந்த விகடனைப் படித்துக் கொண்டி ருந்தேன். திடீரென்று ஒரு நினைப்பு; ஓர் உத்வேகம். விகடன் ஆசிரியருக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

"ஐயா! இந்த நாடு முன்னேற வேண்டுமானால் தமிழன்னையின் கையிலே அணுவியல் நூலும், வேதியியல் கண்டுபிடிப்புகளின் தொகுப்பும், உயிரியல் நூலும் இடம் பெற்றிருக்க வேண்டும். மாறாக நாட்டில் ஒரு சினிமா நடிகையை அறிந்திருக்கும் அளவுக்கு ஒரு விஞ்ஞானியை அறியவில்லை. ஒரு தமிழறிஞரை அறியு மளவுக்குப் பலருக்கும் வாழ்வளிக்கும் ஒரு தொழிலதிபரை மக்கள் அறியவில்லை. நாம் முன்னேற, வளம் பெற, தொழில்வளம் பெற விஞ்ஞானிகளை முன்னிறுத்துங்கள். அப்படிப்பட்ட விஞ்ஞானிகள் இன்று தமிழ்நாட்டின் பல பல்கலைக் கழகங்களிலே

இருக்கின்றனர். ஏதோ இதை நான் எழுதித் தருவதற்காக இங்கே குறிப்பிடவில்லை. நீங்களே உங்கள் நிருபர்களைக் கொண்டு இதைச் செய்யலாம்'' என்று ஒரு கடிதம் எழுதினேன்.

ஒரு வாரம் கழித்து எனக்கு விகடன் அலுவலகத்திலிருந்து ஒரு கடிதம் வந்தது. "ஆசிரியரைச் சந்திக்க முடியுமா?'' என்று கேட்டு. நான் இதை எதிர்பார்க்கவில்லை. அங்கே ஆசிரியர் தேவனுக்குப் பிறகு கோபு இருந்தார். ஆனால் அவர்தான் ஆசிரியரா அல்லது வேறு யார் என்பதோ எனக்கு அப்போது தெரியாது. விகடன் அலுவலகத்தின் உள்ளே சென்றதும் கைகாட்டினார்கள். இடதுபுறம் திரும்பி கடைசி அறைக்குள் நுழைந்தேன். ஒரு சின்ன அறையில் மணியன் உட்கார்ந்திருந்தார். எதிரே நான் அமர்ந்தேன். துடிப்பான மனிதர். பேச்சிலும் அது தெறித்தது.

''எங்கள் ஆசிரியர் குழு கூட்டத்தில் உங்கள் கடிதத்தை விவாதித்தோம். நீங்கள் சொல்வது சரிதான். உங்களுக்கு எழுத வருமா?''

எனக்கு ஏற்பட்டது சற்று அதிர்ச்சி. ''கல்கி பத்திரிகையில் கடந்த இரண்டு மாதமாக எனது 'விஞ்ஞான குவிஸ்' வெளிவந்து கொண்டிருக்கிறது. கடந்த ஓராண்டாக தினமணி கதிரில், எனது விஞ்ஞானக் கட்டுரைகள், 'நெய்வேலி நிலக்கரி,' 'சேலத்து அலுமினியம்,' 'எதற்கெடுத்தாலும் எவர்சில்வர்' என்று கட்டுரைகளை எழுதிக் கொண்டிருக்கிறேனே, நீங்கள் பார்க்கவில்லையா?'' என்றேன்.

"பார்க்கவில்லை!'' என்றார்.

உடனே அடுத்த வார்த்தையாக-

"ஒரு மூன்று கட்டுரைகள் - விஞ்ஞானிகளைப் பற்றி எழுதிக் கொடுங்கள். நன்றாக இருந்தால் போடுகிறோம்'' என்றார்.

எனக்கு மேலும் அதிர்ச்சி.

ஊமையன் கண்ட கனா போல ஏதோ 'சரி' என்று தலையசைத்து வந்தேன்.

அலுவலகத்தை விட்டு மவுண்ட் ரோட்டில் காலடி எடுத்து வைத்ததும், என் அதிர்ச்சி எண்ணங்கள் தலை தூக்கின.

'என்ன இது! கல்கியிலும் தினமணி கதிரிலும் தொடர்ந்து எழுதி வருகிறோம். அது கூடப் பார்க்காமல் இவர் இருக்கிறார்! நம்மை எழுத வருமா என்று கேட்கிறார்!'

கால்கள் நடந்தன.

'நான் போய் விகடனில் வரப் போகிறது என்று சொல்லி பிரபல விஞ்ஞானிகளைப் பேட்டி கண்டு விட்டு வருவேன். நாளைக்கு இவர் நன்றாக இல்லை என்று சொல்வார். நான் மதிக்கும் அந்த மனிதர்களிடம் போய் எந்த முகத்தோடு விழிப்பேன்?'

'சேச்சே! அப்படி நாம் எழுத வேண்டிய அவசியமில்லை!'

ஒரு கோபம். வெறுப்பு. மவுண்ட்ரோடில் பல தெருக்களைக் கடந்தேன். அண்ணாந்து பார்த்தேன். ஜெமினி ஸ்டுடியோஸ்! விகடனின் மற்றோர் ஸ்தாபனம்! மனம் மீண்டும் யோசித்தது.

'ஆனந்த விகடனில் எழுதச் சொல்கிறார்கள். இது பெரிய வாய்ப்பு. இவருக்கு நம்மைப் புரியவில்லை. நாம் எழுதுவதன் மூலம் இவருக்கு நம்மைப் புரிய வைக்க வேண்டும்.

இதை ஒரு வாய்ப்பாக எடுத்துக்கொள்ள வேண்டும்!' என்று மனம் சொல்லியது; ஒரு தெளிவு.

இதன் விளைவாக 'தமிழகத்து விஞ்ஞானிகள்' என்ற தொடரை 1962-ல் நான் அமெரிக்கா செல்லுமுன் எழுதினேன். ஒரு எட்டு விஞ்ஞானிகளைப் பற்றி; எட்டு வாரம். கட்டுரைகளுக்கு நல்ல வரவேற்பு.

மறுமுறை நான் அண்ணாமலைப் பல்கலைக் கழக வேதியல் துறை கட்டடத்திற்குள் நுழைந்ததுமே என்னைச் சுற்றி எல்லோரும் கூடி விட்டார்கள். எங்கள் பேராசிரியர் பாலையாவைப் பற்றி அப்படிச் சிறப்பாக எழுதியிருந்தேன். பேராசிரியர் பாலையா என்னை உட்காரச் சொல்லி பேசிக் கொண்டிருந்தார்! அப்போது

தொழில் நுட்பக் கல்லூரியின் இயக்குனராக இருந்த டி. முத்தையன் அவர்களை நான் சந்தித்த போது அவர் என் கட்டுரைகளைப் படித்து என் மீது வைத்திருந்த மதிப்பைக் கண்டு அயர்ந்தேன்.

அதைவிட விசேஷம்: பொறுப்பாசிரியர் மணியனை மீண்டும் சந்தித்த போது அறுநூறு ரூபாய்க்கான ஒரு காசோலையை நீட்டினார்; சொன்னார்.

"வழக்கமாக நாங்கள் இந்த கட்டுரைகளுக்கு 400 ரூபாய் தான் கொடுப்போம். திரு. வாசன் அவர்கள் உங்களுடைய கட்டுரைகளை மிகவும் பாராட்டி 600 ரூபாய் கொடுக்கச் சொன்னார்."

'உச்சிகுளிர்ந்ததடி, உடம்பும் நேராச்சு' என்று பாரதி பாடுவாரே அப்படி இருந்தது எனக்கு. எனினும் ஒரு சின்ன ஆசை.

"திரு. வாசன் அவர்களைச் சந்திக்க முடியுமா?"

"இல்லை. சாத்தியமில்லை."

அடுத்த சில மாதங்களில் நான் அமெரிக்காவுக்குச் சென்று விட்டதால் திரு. வாசன் அவர்களைச் சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்காமலே போய் விட்டது.

புல்பிரைட் அறிஞர் என்ற திட்டத்தின் கீழ் அமெரிக்காவுக்கு மேல் படிப்புக்கு விண்ணப்பித் திருந்தேன். சாதாரண கணக்கிலிருந்து ஆங்கில இலக்கணம் வரை எனக்கு பரீட்சை. உலக நாடுகளிலிருந்து கம்யூனிசம் வரை கேள்விகள். ஒரு ஆறு பேர் கொண்ட குழு. இரண்டு இந்தியர்கள். மற்றவர்கள் நான்கு பேர் அமெரிக்கர்கள். சென்னைப் பல்கலைக் கழக தாவரவியல் ஆராய்ச்சிப் பேராசிரியர் டாக்டர் சதாசிவம் அவர்களுள் ஒருவர். பேட்டி முடிந்து, டாக்டர் சதாசிவம் வெளியே வந்தார். அவரை நான் சந்தித்திருக் கிறேன்.

"என்ன முடிவு? நான் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறேனா?" என்றேன் ஆவலோடு.

"உங்களைத் தேர்ந்தெடுக்காமல் வேறு யாரைத் தேர்ந்தெடுக்க முடியும்?" என்று சொல்லிச் சிரித்தார்.

நன்றி சொன்னேன். "எங்கே போக வேண்டும்? காரில் போகலாம் வாருங்கள்!" என்று என்னை அழைத்துக் கொண்டு போனார்.

மணியனுடைய சந்திப்பின் விளைவும் சரி, அமெரிக்க புல்பிரைட் திட்டத்தில் நான் தேர்ந்தெடுக்கப்



**1966ல் உயர்திரு ஏ.சி. முத்தையாவும் அவர் மனைவி திருமதி தேவகி அம்மாவும் தொழில் பயிற்சி பெற அமெரிக்கா வந்தபோது மேடிசன் நகருக்கு நான் டாக்டர் பட்டம் எடுத்ததைப் பாராட்ட வந்தார்கள்**

பட்டதும் சரி - என் வாழ்வை திசைதிருப்பிய சம்பவங்கள்.

நானும் மணியனிடம் அதே பாணியில், "நன்றாக எழுத வருமோ, இல்லையோ எனக்குத் தெரியாது! பெரிய விஞ்ஞானிகளிடம் கட்டுரை வரும் என்று சொல்லிவிட்டு, பின்னால் என்னால், 'மொக்கணம்' பட முடியாது. நீங்களே உங்கள் நிருபர்களை வைத்து எழுதிக் கொள்வது நல்லது" என்று சொல்லி இருக்கலாம். அப்படிச் சொல்லும் மனப்பக்குவத்தில்தான் நான் இருந்தேன். ஆனால் சொல்லவில்லை.

அமெரிக்கா செல்வதற்காக பி.எஸ்ஸி., பட்டத்துடன் ஒருமுறையும் முதுநிலைப் பட்டங்களுடன்

ஒருமுறையும் நான் முயன்று தோற்றதினால் நான் வேறு ஆயத்தங்களையும் செய்து கொண்டிருந்தேன்.

நான் தனிப்பட்ட முறையில் அமெரிக்காவில் உள்ள 17 பல்கலைக் கழகங்களுக்கு விண்ணப்பித்திருந்தேன். அவற்றில் மூன்று பல்கலைக் கழகங்கள் என்னை மேல் படிப்புக்கு ஏற்றுக் கொள்வதாக எழுதியிருந்தன.

நான் அப்போது திரு. ஏ.சி. முத்தையாவுக்கு ட்யூஷன் ஆசிரியர். எனக்கு அமெரிக்கப் பல்கலைக் கழகங்களிலிருந்து வந்த கடிதங்களை அறிந்த அவர் உடனடியாக என் விமான செலவுக்காக நாலாயிரம் ரூபாயைக் கடனாக வாங்கிக் கொடுத்தார். அவர் ஒரு இளைஞர். பொறியியல் கல்லூரியில் இரண்டாமாண்டு மாணவர். இந்த இளவயதில் 'அப்பா அம்மாவைக் கேட்க வேண்டும்' என்று ஒரு வார்த்தை சொல்லாமல், பிறரிடமிருந்து எனக்குப் பணம் ஏற்பாடு செய்து கையில் கொடுத்ததை இன்றும் என்னால் மறக்க முடியவில்லை; வியக்காமல் இருக்க முடியவில்லை. மாணவ நிலையைக் கடந்த 'மனிதம்', 'பக்குவம்' இவற்றைக் கண்டேன், அங்கே அவரிடம்! அமெரிக்கத் திட்டத்தில் நான் தேர்ந்தெடுக்கப் பட்டதால் நான் அந்தப் பணத்தை உடனடியாகத் திருப்பிக் கொடுத்து விட்டேன்.

ஆனால் நான் அமெரிக்க அரசின் திட்டத்தை மட்டுமே நம்பிக் கொண்டிருக்கவில்லை. 'செல்ல வேண்டும்' என்ற தீவிரம் - இதுதான் என்னை இயக்கிக் கொண்டிருந்தது.

எனது அனுபவத்தில் நான் கண்ட உண்மை - மார்ஷா சைனிடார் என்ற பிரபல மனசிகிச்சை நிபுணர் கூறிய அதே வாசகம் தான்:

'உனது ஜீவதாகம் எதுவோ அதன் பின்னால் செல்: மற்றவை தானே உன்னைத் தொடரும்'.

இடம் அமெரிக்கா. விடுமுறை நாட்கள். கனடாவி லிருந்து டாக்டர் முத்து சிதம்பரமும் மில் வாக்கி விஸ்கான்சின் பல்கலைக் கழகப் பேராசிரியர் டாக்டர் சங்கரும் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தார்கள். எல்லோருமாக சீட்டு விளையாடிக் கொண்டிருந்தோம்.

வெயில் நேரம். காலை பதினோரு மணி இருக்கும். தமிழக முதல்வர் அண்ணா அமெரிக்கா வருவதாக வந்த செய்தி பற்றி பேசிக் கொண்டிருந்தோம். அண்ணா அமெரிக்காவில் எங்கிருந்தாலும் சரி, சென்று பார்த்து வருவது என்று நான் தீர்மானித்திருந்தேன். “நீங்கள் அவசியம் சென்று பார்த்துவிட்டு வரவேண்டும்” என்று என் நண்பர்கள் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

எங்கள் சீட்டு விளையாட்டு ஆரவாரத்திற்கிடையே தொலைபேசி மணி ஒலித்தது.

“ஆனந்த விகடன் மணியன் பேசுகிறேன். நமது முதல்வர் அண்ணா அமெரிக்கா வருகிறார். அவர் விஜயத்தை விகடனுக்கு பிரத்யோகமாக நீங்கள் ‘கவர்’ செய்ய வேண்டும்!”

எனக்கு இன்ப அதிர்ச்சி! வந்த செய்தி; மணியனின் குரல்; அறிஞர் அண்ணாவுடன் சுமார் இருபது நாட்கள்!



19

# அலாஸ்கா பயணமும் அழியாத நினைவுகளும்

பத்திரிகாசிரியர் மணியனை அமெரிக்க நாட்டை அறிந்து கொள்ள - அமெரிக்க அரசு அழைத்திருந்தது. அதுதான் அவரது முதல் பயணத் தொடர் என்று நினைக்கிறேன். "அமெரிக்காவைப் பார்" என்று சோம. லெ. அவர்கள் ஒரு புத்தகம் எழுதி இருந்தார். அதைப் பாடப் புத்தகமாக வைத்திருந்தார்கள். இருந்தாலும் மணியன் எழுதியது மிகுந்த சுவாரஸ்யமாக இருந்தது. அவர் கட்டுரைத் தொடரை, பாஸ்போர்ட் வாங்குவதி லிருந்து விசா பெறுவதிலிருந்து விமானப் பயணம் என்றெல்லாம் எழுத மாட்டார்.

எது மிகவும் சுவாரஸ்யமான - ஆச்சரியமான - பிரமிப்பு ஊட்டும் சம்பவமோ அதிலிருந்து துவங்குவார். கற்பனை மிக்க கதாசிரியர்கள் எழுதும் விஷயத்திற்கும் மற்றவர்கள் எழுதுவதற்கும் வித்தியாசம், வாசகனைப் பிடித்து வைத்திருக்கும் இந்த விறுவிறுப்பு, சுவாரஸ்யம் தான்.

தம் கட்டுரைத் தொடரில் தமிழர்களிடம் காணப்படும். "நம்மிடம் இல்லாதது எது?" என்று பேசும் குணத்தை 'மமதை' என்று குறிப்பிட்டுச் சாடி இருந்தார். தற்செயலாக இதை அமெரிக்காவில் படித்த எனக்கு இது ஏதோ மனித நாடியை, நரம்பைத் தொட்டாற் போலிருந்தது.

அவருக்கு ஒரு கடிதம் எழுதினேன். "நமது வளர்ச்சிக்குக் குறுக்கே நிற்பது இந்த மனோபாவக் கோளாறுதான்" என்று பட்டியலிட்டு என் ஆதங்கத்தைக் கொட்டியிருந்தேன்.

இது நான் அவருக்கு எழுதிய தனிப்பட்ட கடிதம். ஆனால் மறுவாரமே, கடிதப் பகுதியில் கூடப் போடாமல், தன் கட்டுரையின் பகுதியாக என் முழுக் கடிதத்தையும் பிரசுரித்திருந்தார்.

மற்றொரு சம்பவமும் நிகழ்ந்தது. எனது 'எண்ணங்கள்' என்ற முதல் நூலுக்கு அணிந்துரை எழுதித் தந்த திரு. ஏ.சி. முத்தையா இந்தக் கடிதத்தினால் ஈர்க்கப் பட்டு இதை முழுவதுமாகத் தமது அணிந்துரையில் குறிப்பிட்டிருந்தார்.

இந்த அடிப்படையை உணர்ந்த சென்னை வானொலித் தலைவர் செல்வம் அவர்கள், "மாறட்டும் மனோபாவம்" என்கிற தலைப்பில் பதின்மூன்று வாரம் வானொலியில் என்னைப் பேச ஏற்பாடு செய்தார்.

நம் வளர்ச்சிக்குத் தடை நமது மனோபாவக் கோளாறுதான் என்பது அனைவருக்கும் தெரிகிறது. எனினும் அதை மாற்ற நாம் என்ன செய்கிறோம், என்ன திட்டம், யார் பொறுப்பு - இவையெல்லாம் இன்னும் அடிப்படையில் நிகழ வேண்டிய முக்கியக் காரியங்கள். ஆனால் அதற்கான செயல்தான் இல்லை.

ஒன்பது ஆண்டுகள் கழித்து, நான் 1971ல் அமெரிக்கா விலிருந்து இந்தியா வந்தபோது, 'பத்தாண்டுகள் கழித்து நாடு எப்படி இருக்கிறது என்று எழுதுங்கள்' என்றார் மணியன். எழுத்துக்கள் எல்லாம் ஒரு விழிப்புணர்வையும் எதிர்பார்ப்பையும் ஏற்படுத்தியது உண்மை. ஆனால் அதற்கு அடுத்தக் கட்டத்திற்கு நாம் போகவில்லை; காரணம் நாம் திட்டமிடவில்லை; செயல்படவில்லை. ஆட்சிப் பொறுப்பில் இருந்த தலைவர்கள் இதன் ஆழத்தை உணரவில்லை.

வெளிநாட்டுப் பயணம் மணியனை ஒரு மாறுபட்ட மனிதராய் ஆக்கியிருந்தது என்றால் அது மிகையல்ல. அவர் கட்டுரைகள் பிற நாட்டுப் பண்பாடுகளையும் நடப்பு விவரங்களையும் மட்டும் பேசவில்லை; அத்துடன் அவர்களை எது உயர்த்தி இருக்கிறது என்பதையும் அடிக்கடி குறிப்பிட்டுக் காட்டியது. இதன் விளைவாக சில மாணவர்கள் அவரது பயணக் கட்டுரையை

ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வதற்தாக அவரிடம் பேச வந்தார்கள்.

பயண இலக்கியம் என்ற பிரிவு பிறந்தது. மதுரை காமராஜர் பல்கலைக் கழகத்தில் பயண இலக்கியம் பற்றிய கருத்தரங்குகள் பல நடத்தப்பட்டன. "சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந் திங்கு சேர்ப்பீர்" என்றாரே பாரதி. அதைத் தன் பாணியில் செய்து கொண்டிருந்தார் மணியன். இதனால் உலகம் சுருங்கியது.

**நா**ன் இது பற்றி அடிக்கடி யோசிப்பதுண்டு. "இந்தியாவில் உள்ள ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரு தமிழ்நாட்டுப் பிரதிநிதி அல்லது குழு நிரந்தரமாக இருக்க வேண்டும். அங்கு இயற்றப்படும் சட்டங்களை நடைமுறைகளை நமது நாட்டுத் தலைவர்களுக்கும், மக்களுக்கும் தெரிவித்துக் கொண்டிருக்க வேண்டும்" என்று. மங்களம் சீனிவாசன் என்று நமது ஊர்ப் பெண் மணியை ஆந்திர முதல்வர் என்.டி. ராமராவ் ஆந்திராவின் வாஷிங்டன் பிரதிநிதியாக நியமித் திருந்தார். அதேபோல முக்கியமான ஜப்பான், ஜெர்மன், பிரான்ஸ், மலேசியா, கொரியா போன்ற நாடுகளிலும் நமது மாநிலத்து தமிழர் பிரதிநிதி இருந்தால் அங்கு ஏற்பட்டிருக்கும் புதிய தொழில் நிறுவனங்கள், புதிய கண்டுபிடிப்புகள், அந்நாட்டுக் கல்விமுறை, நாம் எடுத்துக்கொள்ள வேண்டிய கலாசார குடும்பப் பண்புகள், சமுதாய இணக்க வாழ்வு முறை என்று பலவற்றிலுமிருந்து நாம் நிறைய தெரிந்து கொள்ள முடியும்; வளர முடியும். ஜப்பானில் முதன் முதலாக கூட்டணி ஆட்சி ஏற்பட்டு பிரச்னைகள் வந்தபோது ஜப்பானிய அரசு உடனே ஒரு பல்துறை அறிஞர் குழுவை ஐரோப்பாவுக்கு அனுப்பி, கூட்டணி ஆட்சியை அவர்கள் எப்படிச் சமாளித்தார்கள் என்று கண்டறியச் செய்தது. மொரார்ஜி காலத்திலிருந்து கூட்டணியில் வாழும் நாம் என்ன செய்தோம்? நம்மைச் செதுக்க வேண்டிய புதிய எண்ணங்கள் என்ன என்று அறிய வேண்டாமா? மனிதன் தனக்குத் தெரிந்ததை வைத்துக் கொண்டு வாழ்ந்து விடலாம் என்று எண்ணுகிறவரை எங்கே விமோசனம்?

இந்த சமயத்தில்தான் நான் அமெரிக்காவில் புதிய பொருளைக் கண்டுபிடிக்கும் விஞ்ஞானிகளின் சிந்தனா முறை பற்றிய (Thought process to discovery) ஒரு நான்காண்டு ஆராய்ச்சியை முடித்து, பின் மூன்றாண்டுகள் அதைப் பாடமாக சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தேன்.

ஓர் எண்ணம் எழுந்தது. "நம் நாட்டில் அரசியலிலும், அதிகார வர்க்கத்திலும் சமுதாய வாழ்விலும் அவல எண்ணங்கள் தனி மனித வாழ்வை சீக்குப் பிடிக்கச் செய்து சீரழித்துக் கொண்டிருக்கின்றன. நமக்கு இப்போது புதிய நோக்கு, புதிய கருத்து, புதிய மனிதர்கள் தேவை. எண்ணங்கள் என்ற ஒரு தொடரை எழுதலாமா என்று நினைக்கிறேன். உதவுமா, பாருங்கள்!" என்று மணியனுக்கு எழுதினேன். "மேடை காத்திருக்கிறது" என்று பதில் எழுதினார் மணியன்.

இப்படித்தான் எனது "எண்ணங்கள்" என்ற மனவியல் தொடர் முதன்முதலாக சுமார் 26 வாரங்கள் விகடனில் வெளிவந்தன. "தொடர்ந்து எழுதுங்கள்" என்று மணியன் கூற சில கட்டுரைத் தொடர்களை எழுதினேன். அக்கட்டுரைகளுக்கு கிடைத்த வரவேற்பு தான் தொடர்ந்து எழுதப் பெருங்காரணம்.

மனம், பிரார்த்தனை, மந்திரம் எனும் நூலில் பிரார்த்தனை எப்படிப் பலனளிக்கிறது என்று; தலைவனை இயக்கும் மனவியல் உண்மைகள் என்ன என்று தலைவனைப் பற்றிய தொடரில்; உயர் மனிதனை உருவாக்கும் மனவியல் தத்துவம் எது என்று - இப்படி எல்லாவற்றையுமே மனவியல் நோக்கில் பார்க்கத் துவங்கினேன்.

மணியன், உலகின் முக்கியமான எல்லா நாடுகளையுமே பார்த்து விட்டு வந்த நிலையில் அலாஸ்கா செல்ல வேண்டும் என்று கூறினார். எனது நண்பர் தொழிலதிபர் சங்கர் ரமணியிடம் சொந்த ஜெட் விமானம் இருந்தது. மணியனுக்கு அவரை அறிமுகம் செய்து வைத்தேன். அவருடன் அலாஸ்கா பயணம் சென்றார். நான் அப்போது ஒரு உணவு நிறுவனத்தில் தலைமை நிர்வாகியாக இருந்தேன். வேலை அதிகம்.

எனினும் நண்பர் சங்கர் ரமணியின் நிர்ப்பந்தம் காரணமாக நானும் அவர்களுடன் சென்றேன். அலாஸ்கா பயணத்தின் சிறப்பு என்னவென்றால், அவர் எங்களை வடதுருவத்தின் எஸ்கிமோ மக்கள் வாழும் கடைசி கோடிக்கு - "பாயிண்ட்ஸ் பரோ" எனப்படும் எஸ்கிமோ ஊருக்கே அழைத்து சென்றார். அங்கே செல்ல விமான சர்வீஸ் கிடையாது. சங்கர் ரமணியிடம் தனி விமானம் இருந்தது. மேலும் அரசின் தனி அனுமதி பெற்றுத்தான் அங்கே செல்ல முடியும். மணியனைப் பற்றிச் சொல்லி எளிதாக அனுமதி வாங்கி இருந்தார் சங்கர் ரமணி. அலாஸ்கா பெரிய அனுபவம். வட துருவத்திற்கு அருகில் இருப்பதால் இரவில் கூட சூரியன் இருக்கும்!

இப்படிப் போன்ற பல சம்பவங்களால் நான் மணியனைப் பல்வேறு கோணங்களில் பார்க்க முடிந்தது. எங்கு சென்றாலும் தமிழ்ப் பாட்டுக்கள் கொண்ட - குறிப்பாக மதுரை சோமுவின் கேசட்டுகளை எடுத்துக் கொண்டு வந்து விடுவார். கேசட் முடிந்தவுடன் தானும் பாடுவார். இனிமையானது அவர் குரல். உபநிடதக் கதைகளைச் சொல்வார். அயர்ந்து போவேன் - நான் உபநிடதம் படித்ததில்லை. இடையில் தமிழ்நாட்டிலிருந்து அவர் குரல் வரும். "அமெரிக்கா வருகிறேன். உங்கள் வீட்டில் ரஸம் சாதம் கிடைக்குமல்லவா? என்பார். சாப்பாட்டுப் பிரியர். சுவாமி சின்மயானந்தா மீது அவருக்குத் தனி மரியாதை. அவருடன் சர்வசகஜமாக, ஒரு நண்பருடன் பேசுவது போல் பேசுவார். ஒருசமயம் சுவாமி சின்மயானந்தாவின் காலில் விழுந்தபோது சின் மயானந்தா சொன்னார். "மணியன் மணியன்! நீ என் காலில் விழாதே! உன்னை என்னால் தூக்க முடியாது!"

மணியனுக்கு பெரிய்ய்ய தொப்பை!

ஒருசமயம் சொன்னார் மணியன். "கன்கார்டு விமானத்தில் முதல் முறைப் பயணம் செய்த தமிழன் என்று பெருமையுடன் அட்டைப்படக் கட்டுரை ஒன்றை எழுதியிருந்தேன். மறுநாள் ஒரு கடிதம் வந்தது ஒரு பெண்மணியிடமிருந்து.

"நீங்கள் என்ன கன்கார்டில் போவது? ஒரு நாய்க் குட்டியை வைத்தால்கூட போய் வரும்! இதில் உங்கள் சாதனை என்ன?'' என்று கேட்டிருந்தார் என்று சொல்லிச் சிரித்தார். தன்னைப் பார்த்தே சிரிக்கும் பண்பு.

எனது எண்ணங்கள் அவரைப் பாதித்தது உண்மை. இதன் வெளிப்பாடு தான் அவர் துவங்கிய மயன் பத்திரிகை. அதோபோல அவருடைய தெளிவும், சரியாக, சட்டென்று முடிவெடுக்கும் அபாரத்திறனும் என்னை அசர வைத்தது. எனக்கு அருமையான யோசனைகள் சொல்வார். 1962 என்று நினைக்கிறேன். சி.எஸ். அவர்கள் எழுதிய "நான் சென்ற சில நாடுகள்" என்ற நூலின் வெளியீட்டு விழா, ஒரு பொங்கல் திருநாளில்.... முக்கியமான வி.ஐ.பிக்களையும் சில எழுத்தாளர்களையும் அழைத்திருந்தார்கள். மொத்தம் ஒரு நூறு பேர் இருக்கும். விகடன் அலுவகம் முன். அப்போது விகடன் ஆசிரியர் வாசன் இருந்தார். "இக்கூட்டத்தை இவ்வளவு சிறப்பாக ஏற்பாடு செய்த மணியனைப் பாராட்டுகிறேன்" என்று ஆசிரியர் வாசன் அவர்கள் பாராட்டினார்.

நான் முதன்முறை மணியனைச் சந்தித்த இரண்டு மாதத்தில் நடந்த நிகழ்ச்சி இது. விருந்து முடிந்த பின் வெளியே வந்தேன். அவரது நிர்வாகத் திறமை பற்றிய வியப்புத் தான் என்னுள் நிறைந்திருந்தது!

'மயன்' பத்திரிக்கை ஆரம்பித்த சமயம். அமெரிக்காவிலிருந்து இந்தியா வந்திருந்தேன். அமெரிக்காவிலிருந்த போது ஒரு செய்தி படித்தேன். இந்திராகாந்தி பிரசாரத் துறை அமைச்சராக இருந்த போது, தமிழ்நாட்டு ஜோசியர் ஒருவர் அவர் விரைவில் இந்தியாவின் பிரதமராவாரென்று ஜோசியம் சொன்ன தாகவும், இந்திராகாந்தி அவரைப் பார்த்து சிரித்ததாகவும், பின்னால் அப்படியே நடந்த போது அவரை டெல்லிக்கு அழைத்துப் பாராட்டியதாகவும் செய்தி வந்திருந்தது.

"இவ்வளவு கணக்காக சொல்லி இருக்கிறாரே அவரைச் சென்று பார்க்கவேண்டும்" என்ற ஆவலை இது என்னுள் எழுப்பி இருந்தது. இந்தியா வந்தபோது நான் மணியனிடம் இதுபற்றி சொன்னேன்.

"உடனே அவர் இதற்கென்ன! ஏற்பாடு செய்தால் போயிற்று!" என்று உடனே வித்வான் லட்சுமணன் அவர்களிடம் சொன்னார்.

வித்வான் லட்சுமணன் அவர்களை எனக்கு நன்கு தெரியும். எங்கள் ஊர்ப்பக்கம். அவரே ஒரு ஜோசியர். எனவே அவரிடம் பார்க்காமல் அவர் மூலமாக வேறொருவரை ஏற்பாடு செய்யச் சொல்ல நேர்ந்தது எனக்கு மிகவும் தர்மசங்கடமாக போய்விட்டது!

ஆனால் வித்வான் இதைப் பொருட்படுத்தவில்லை. உடனே ஏற்பாடு செய்துவிட்டு சொன்னார்:

"அவருக்கு ஆறு மாத காலத்திற்கு பார்க்க நேரமில்லை. எனினும் ஏற்பாடு செய்து விட்டேன்! நாளை காலை வரச் சொல்லி இருக்கிறார். காலையில் குளித்து பகவதி பூஜை முடித்து முதல் காரியமாக உங்கள் ஜாதகத்தைப் பார்க்கிறேன் என்கிறார்" என்று சொன்னார்.

நான் மறுநாள் காலை பகவதி பூஜை செய்பவர் வீட்டுக்குப் போனேன். ஒரு அரைமணி நேரம் சொன்னார்; கேட்டேன். இதில் விஷயம் என்ன வென்றால் அவர் சொன்னது ஒன்று கூட என் விஷயங்களுக்கு சரியில்லை. நடந்த சம்பவங்களைச் சொன்னது தவறு; நடந்து கொண்டிருப்பதைச் சொன்ன போதும் அவை சரியல்ல. நான் விடைபெற்றுக் கொண்டு வீடு வந்து சேர்ந்தேன்.

வித்வான் ஆவலுடன் அவர் வீட்டில் எனக்காக காத்திருந்தார். நான் விஷயத்தைச் சொன்னேன். அவர் எந்தவித பாதிப்புமின்றி விஷயத்தைக் கேட்டார். பின் சொன்னார். "மணி பன்னிரண்டாகப் போகிறது. இப்போது நம் வீட்டில் சாப்பிடுவோம். பின் நானே உங்கள் எல்லா ஜாதகத்தையும் பார்த்து சொல்கிறேன்" என்றார். நல்ல விருந்து. என் மகன்களையோ மகளையோ அவர் பார்த்ததில்லை. ஆனால் சுமார் என் குழந்தைகளின் குணங்கள் எல்லாம் தெள்ளத் தெளிவாக அவர் சொல்வதைக் கேட்டு மலைத்துப் போனேன்.

தமிழாசிரியராக, பத்திரிகாசிரியராக, சினிமை கதை வசன கர்த்தாவாக, அதன்பின் திரு மணியனுடன்

சினிமா தயாரிப்பாளராக மாறிய அவர் தன் வாழ்வின் முக்கியமான கால கட்டத்தில் ஆன்மீகத்திலும் சோதிடத்திலும் ஆழ்ந்து போய்விட்டார். திண்டுகல்லுக்கு அருகில் ராஜமாகாளியம்மன் கோயில் கட்டினார். இப்போது மேற்கு மாம்பலத்தில் பூஜை ஹோமம் எல்லாம் செய்யும் இடத்தையும் சோதிட ஆராய்ச்சி நிலையத்தையும் இணைத்து ஒரு புதிய அமைப்பை ஏற்படுத்தி வருகிறார். அவர் தொடர்ந்து 40 ஆண்டுகளுக்கு மேலாக 'பால ஜோதிடம்' என்ற பத்திரிக்கையையும் வெளியிட்டு வருகிறார்.

அவரது அனுபவமும், அவரது ஆன்மீக ஈடுபாடும் அவரை உயர்ந்த ஞான நிலைக்கு எடுத்துச் சென்றிருக்கிறது. இன்று அவர் சோதிடத்தின் அருட்பழமாக, அருள்வாக்கு வழங்குகிறார்.



20

## "ஞானத்தேடல்...."

---

நண்பர் மணியன் தன் வாழ்க்கையில் ஏற்பட்ட பல சம்பவங்களையும் சொல்வார்; சிறிதுநேரம் அதிலேயே தோய்ந்திருப்பார். அடுத்தகணம். அவசரம், "அடுத்து, என்ன, என்ன?" என்ற அவசரம். ஆனால் அது நிதானம் தவறாத அவசரம்.

மாணவனாக இருந்த இளவயதில், தனக்கேற்பட்ட காதல் அனுபவத்தை, - தன் அம்மாவிடம் அடி வாங்கியதை, - விகடனில் வேலை பெறுமுன் எப்படி ஆசிரியர் வாசன் அவர்களது காரை அவர் வீட்டு வாசலிலேயே மடக்கி, வேலைகேட்டு திட்டு வாங்கி, பின் வேலை பெற்றது வரை கதை கதையாகச் சொல்வார். பல அரசியல் தலைவர்களிடமும் மற்றும் பெரிய வி.ஐ.பிக் களிடமும் அவருக்கு நெருங்கிய பழக்கம் இருந்தது.

மணியனிடம் நான் போற்றியது, அவரது தெளிந்த சிந்தனை, அருமையாக முடிவெடுக்கும் - ஆலோசனை கூறும் - திறன். அவருடைய தந்தை இளவயதிலேயே காலமாக அவருடைய தாயின் அரவணைப்பில் வளர்ந்தவர். தாயைத் தெய்வமாகப் போற்றியவர். ஜெமினிவாசன் அவர்களைத் தன்னை உருவாக்கிய குருவாக, ஆசானாக, வழிகாட்டியாக, தந்தையாக, (Boss) தனது முதலாளியாக வார்த்தைக்கு வார்த்தை போற்றினார். ஆவடி காங்கிரஸ் மாநாட்டை சென்னையில் பிரமாதமாக ஏற்பாடு செய்தவர் ஜெமினி வாசன் அவர்கள். அதுபோல எல்லாவற்றையுமே பெரிதாகச் செய்யவேண்டும் என்கிற மனோபாவம் மணியனிடம் அடி நீரோட்டமாய் இருந்தது. ராஜாஜியைப் பற்றி கூறுவார்; அதிகம், காமராஜரைப் பற்றி பேசுவார். காமராஜரின் குரலையும் பேசும்

பாணியையும் அப்படியே 'மிமிக்ரி' செய்வார். அதே போல எம்.ஜி.ஆரைப் பற்றி. சமநிலையில் எம்.ஜி.ஆருடன் மணியன் பழகினாலும் அவரிடம் பேசும்போது ஒரு பவ்யமும் மரியாதையும் இருக்கும். எம்.ஜி.ஆரைப் பற்றி ஆழமாக அறிந்தவர். எம்.ஜி.ஆர் அவருக்கு சுற்றுலா துறையில் அமைச்சர் பதவியை எடுத்துக் கொள்ளுமாறு சொன்னபோது மறுத்துவிட்டார். எம்.ஜி.ஆர் முதல்வ ராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட போது உடனடியாக அரசின் மூத்த அதிகாரிகள் சிலரைத் தன் வீட்டுக்கு அழைத்து எம்.ஜி.ஆருக்கு அரசு பற்றிய பல விஷயங்களையும் விளக்கும்படி ஏற்பாடு செய்தார்.

நான் விகடனில் ஆரம்பகாலத்தில் கட்டுரை எழுதிக் கொண்டிருந்த போது அமெரிக்க அரசின் கல்வித் திட்டத்தின் கீழ் அமெரிக்கப் பேராசிரியர்களது குழுவுடன் சென்னை வந்திருந்தேன். அப்போது எம்.ஜி.ஆர். தி.மு.கவில் இருந்தார். அவரது தனிப் புகழும் செல்வாக்கும் எனக்கு பிரமிப்பூட்டின. எம்.ஜி.ஆர். எங்களுக்காக 'நினைத்ததை முடிப்பவன்' என்ற, தான் நடித்த படத்தைப் போட்டுக் காட்டினர்.

அப்போதுதான், மணியன் என்னை எம்.ஜி.ஆருக்கு அறிமுகம் செய்து வைத்தார்; அவர் பக்கத்தில் என்னை அமர்த்தினார்.

பல முக்கிய பிரமுகர்களிடமும் விகடனில் தீபாவளி மலருக்கு கட்டுரை எழுதச் சொல்லிக் கேட்பார்கள்; அப்படி எம்.ஜி.ஆரைக் கேட்பதற்காக, சகஜமாக சென்றிருக்கிறார் மணியன். எம்.ஜி.ஆர், தீவிரமாக மறுத்து விட்டார் எழுத; அது மட்டுமல்ல தி.மு.க. பற்றிய விகடனுடைய அபிப்ராயத்தை அவர் மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற தன் அதிருப்தியை கடுமையாகத் தெரிவித்திருக்கிறார். பின்வாங்க விரும்பாத மணியன் "ஏன் நீங்கள் உங்கள் கருத்துக்களை எழுதலாமே" என்று சொல்லவும்.... இப்படித்தான் அவர்களுடைய உறவு மோதலில் துவங்கியது. அதன்பின் சில ஆண்டுகள் கழித்து "நான் ஏன் பிறந்தேன்?" என்ற எம்.ஜி.ஆரின் வாழ்க்கைத் தொடர் விகடனில் வெளிவந்தது.

அதன்பின் ஒருநாள் மணியனைப் பார்த்து "நீங்கள் எவ்வளவு சம்பளம் வாங்குகிறீர்கள்?'' என்று கேட்டிருக்கிறார். அவர் பதில் சொல்லவும், "உங்கள் இதய வீணை நாவலை நான் படமாக்கலாம். எடுத்து வாருங்கள். நீங்களும் வித்வான் லட்சுமணனும் தலைக்கு ஐயாயிரம் போடுங்கள்'' என்று சொல்லி படம் எடுப்பது நிச்சயமானவுடன் ஒரு படவினியோஸ்தரிடமிருந்து தலைக்கு ஒரு லட்சம் ரூபாய் வாங்கி அவர்களிடம் கொடுத்திருக்கிறார் எம்.ஜி.ஆர். இவையெல்லாம் மணியன் சொன்னவை.

எம்.ஜி.ஆர் பதவி ஏற்கு முன்னும், பதவி ஏற்ற பின்னும் அவருக்கு நெருங்கிய ஆலோசகராக இருந்தார் மணியன். ஒரு இக்கட்டான கால கட்டத்தில் உலக தமிழ் மாநாடு மதுரையில் நடக்க இருந்தபோது - எம்.ஜி.ஆருக்கும் இந்திராகாந்திக்கும் பாலமாக இருந்தார். இதன் விளைவாக மணியனுடைய முயற்சியால் இந்திரா காந்தி உலகத் தமிழ்நாட்டின் கடைசி நாளன்று மதுரை வந்தார்.

மணியன் அப்போது தமிழ்நாட்டின் ஒரு முக்கிய பிரமுகர், சந்தேகமில்லை. விகடன் ஆசிரியராக கன்கார்டு விமான பயணம் செய்த போது தன்னுடைய படத்தை விகடனின் மேலட்டையில் பிரசுரித்திருந்தார். இப்படி சகஜமாக பத்திரிகாசிரியர்கள் தங்களை விளம்பரப் படுத்திக் கொள்வதில்லை!

சினிமா தயாரிப்பாளர், எம்.ஜி.ஆரின் அரசியல் ஆலோசகர், அகில இந்திய ரீதியில் இந்திராகாந்தி ராஜீவ் காந்தி மற்றும் பல டெல்லித் தலைவர்களுடன் தொடர்பு வெளிநாடுகளுக்கெல்லாம் சென்று வந்தவர் என்று அவர் உலகம் விரிந்து கொண்டிருந்தது.

விகடன் பத்திரிகையில் இதன் தொய்வு தெரிந்ததாக என் அனுமானம்.

திரு. ஏ.சி. முத்தையா மாணவராக இருந்த காலத்திலிருந்தே அவரிடம் "உங்களுக்கென்று ஒரு பத்திரிகை வேண்டும்; உங்களுக்கென்று ஒரு பல்கலைக் கழகம் வேண்டும். பத்திரிக்கை இருந்தால்தான் புதிய பாதையில் நாட்டை அழைத்துச் செல்லமுடியும். முக்கிய

கட்டங்களில் உங்களுடைய கருத்துக்களையும் அபிப்ராயங்களையும் கூற ஏதுவாக இருக்கும்'' என்று நான் அடிக்கடி சொல்வதுண்டு.

ஸ்பிக் நிறுவனம் ஆரம்பித்த சில ஆண்டுகளில், நான் வழக்கம் போல இதைத் திரு முத்தையாவிடம் சொன்ன போது "சார், ஆரம்பித்து விடுவோம். என்ன செய்ய வேண்டும்?'' என்றார். எனக்கு உற்சாகம். நான் திரும்பி அமெரிக்காவுக்கு போகுமுன் பல முக்கிய மனிதர்களிடம் தொடர்பு கொண்டேன். பத்திரிக்கை எப்படி இருக்க வேண்டும் என்று பல டம்மிகளை அவர்கள் தயார் செய்தார்கள். திரு. முத்தையா இதற்காக ஐந்து லட்சம் ரூபாய் ஒதுக்கி இருந்தார். "இங்கு யாராவது ஒரு நல்ல ஆசிரியர் நடத்தட்டும். இன்னும் சில ஆண்டுகளில் நிரந்தரமாக திரும்பி வந்த பின் நான் முழுமையாக ஈடுபடுகிறேன்'' என்ற அடிப்படையில் இதில் ஈடுபட்டோம்.

நான் உடனடியாக அமெரிக்கா சென்று விட்டதால் இதை வேகமாக - அதுவும் அங்கிருந்து கொண்டு - என்னால் நகர்த்த முடியவில்லை.

ஓராண்டு காலம் கடந்திருக்கலாம். மணியன் விகடன் பத்திரிகையிலிருந்து ஒரு மாதகாலம் லீவு எடுத்திருப்பதாக அறிந்தேன். நான் இதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை. பின்னால்தான் அவர் விலகியதும் தனிப் பத்திரிக்கை துவங்க இருப்பது பற்றியும் அவர் டெலிபோனில் சொன்னார்.

நான் உடனே திரு முத்தையாவுக்கு, "பத்திரிக்கை ஆரம்பிப்பதற்காக நாம் செய்த ஏற்பாடுகளை பின்னால் பார்த்துக்கொள்ளலாம். அந்தப் பணத்தை அவருக்கு கொடுத்து உதவ முடியுமானால் நல்லது'' என்று எழுதினேன். திரு. முத்தையாவையும் என்னையும் குறிப்பிட்டு மணியன் இந்த விஷயத்தை தனது 'குமுதம்' கட்டுரையில் நன்றியுடன் எழுதி இருந்தார்.

இரண்டாண்டுகளில் ''இதயம் பேசுகிறது'' பத்திரிக்கை 'ஓகோ' என்று போயிற்று. ஒரு லட்சத்து எண்பதினாயிரம் காப்பிகள் போயின. நான் அவரிடம் பாலுணர்வை முன்னிறுத்தி அவர் கதைகள் எழுதுவது;

பற்றி கிண்டல் செய்வேன். அவர் சொல்வார். "முதலில் வாசகர்களின் மடியில் இடம் பிடித்துக் கொள்கிறேன். அதன்பிறகு நீங்கள் சொல்ல வேண்டியதைச் சொல்லுங்கள்" என்பார். பாலுணர்வின் தாக்கம் இதயம் என்றில்லை குமுதம் போன்ற பத்திரிக்கைகளிலும் இருந்தது.

அடுத்த ஆண்டு என்று நினைக்கிறேன். "மணியன் மாத இதழ்" என்ற ஒரு பத்திரிக்கையைக் கொண்டு வந்தார். அதன்பின் அடுத்த ஆண்டு நான் தமிழகம் வந்த போது 'மயன்' என்ற பத்திரிக்கையைத் துவக்கினார். மயன் என்ற வார்த்தை வானுலக படைப்பாளியைக் குறிக்கும். உற்றுநோக்கினால் மணியன் பெயரில் உள்ள 'ணி' என்ற எழுத்தை எடுத்தாலும் வரும்!

அமெரிக்காவில் நான் அப்போது ஒரு உணவு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் பொறுப் பேற்றிருந்தேன். வேலை கடுமை. பொறுப்பு அதிகம். பிரச்சினைகளோ பெருஞ் சவால்கள். நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருந்த நிறுவனத்தைத் தூக்கி நிறுத்தும் பொறுப்பு எனக்கு.

எனவே மணியனிடம் கூறினேன். "நான் இங்கு வந்த பிறகு இளைஞருக்கான பத்திரிக்கையைத் துவங்குவோம். இப்போது லவலேசமும் என்னால் முடியாது." என்று சொல்லிப் பார்த்தேன். அவர் கேட்பதாக இல்லை. அப்போதுதான் எனக்குப்பட்டது. மனிதர், "இந்தியன் எக்ஸ்பிரஸ் குரூப் போல," பல பத்திரிகைகளைத் துவக்க விரும்புகிறார் என்பது. பின்னால் அதே போல ஞான பூமி, ஆடியோ கேசட் விற்பனை ஹிந்தியில் பத்திரிக்கை 'உங்கள் நலம்' என்று பல பத்திரிக்கைகளைத் துவங்கினார்.

மயன் பத்திரிக்கைக்கு நான்தான் கௌரவ ஆசிரியர்; உழைக்கும் முக்கிய ஆசிரியரும் நான்தான்! ஆனால் அதன் பொறுப்பாசிரியராக விகடனில் இருந்த திறமை மிக்க நண்பர் சாலி இருந்தார். சுமார் ஆறுமாத காலம், நான் சுமார் நாற்பது சதவிகித முக்கிய விஷயங்களை அமெரிக்காவிலிருந்து எழுதி அனுப்பிக்

கொண்டிருந்தேன்! இது என்னால் தாளவில்லை. என் தொழில், குடும்பம், அமெரிக்க வாழ்க்கை, இத்துடன் இப்படிப் பத்திரிக்கை வேலை.

இதற்கிடையில் மயனின் ஆசிரியர் சாலி நீக்கப்பட்டார்; திரு நாராயணஸ்வாமி என்பவர் பொறுப்பில் நியமிக்கப்பட்டார்; அடுத்த மூன்று மாதத்தில் அபஸ்வரம் ராம்ஜி மயனின் ஆசிரியரானார். திரு ராம்ஜி ஒரு பேட்டியில் குறிப்பிட்டிருந்தார். “உதயமூர்த்தியின் வாசகர்கள் என்னை ஏற்றுக்கொள்ள வில்லை”! என்று. மணியன் எனக்கு எழுதிய கடிதத்தில் “நஷ்டத்தில் ஓடுகிறது” என்றெழுதினார். “மூடிவிடுங்கள்” என்று பதிலெழுதினேன்.

எழுதுவது என்பது ஒரு மனநிலை. மனம் அதிலேயே ஊறிக் கொண்டிருக்கவேண்டும். அந்த அமைதி, அந்த அவகாசம், இப்போதெல்லாம் எனக்கு அரிதாய்விட்டது. தொழிலிலும் சரி இயக்கத்திலும் சரி, மனிதன் ஒரு நிர்வாக யந்திரத்திற்கு ஈடு கொடுக்க வேண்டி இருக்கிறது. எழுத்தாளர்கள் பத்திரிகாசிரியர்களாக மாறும்போது அவர்களது கற்பனை வளம் காய்ந்து போய் விடுகிறதோ என்றொரு சந்தேகம் எனக்கு.

மணியன் மாபெரும் மனிதர். “ஒரு மனிதனுடைய வெறும் சாதனைகளையோ தோல்விகளையோ வைத்து ஒரு மனிதரை எடை போடக்கூடாது. அவருடைய “மனிதம்” “உண்மை” “ஞானம்” என்ற விஷயங்களை வைத்தே தீர்மானிக்க வேண்டும் என்று எண்ணுபவன் நான். எனது நண்பர் ஓகேஸ். கந்தசாமி அவர்கள் ‘நான் எல்லோரையும் ‘ஆத்மா’வாகப் பார்க்கிறேன்’ என்பார். அப்படி ஒன்றும் மனிதர்களை முழுமையாக என்னால் எடை போட முடிவதில்லை என்பது வேறு விஷயம்!

அவரது பத்திரிகையின் ஆண்டு விழாவில் மணியன் என்னை கௌரவிக்க விரும்பினார். “கௌரவிப்பதை விடுங்கள். நான் வந்து பேசுகிறேன்” என்றேன். பத்திரிகாசிரியர் சாவியின் பாராட்டு விழா, இந்தியன் வங்கித் தலைவர் எம். கோபாலகிருஷ்ணனுக் கான விழா என்று பல நிகழ்ச்சிகளிலும் நானும் அவருடன் பங்கு கொண்டிருக்கிறேன்.

"ஒரு பெரிய முக்கியமான மனிதரின் முன்னிலையில் இருக்கிறோம்; எதையும் சாதிக்கும் மகத்தான திறமையின் உருவம் அது" என்ற எண்ணங்களே அவர் முன்னிலையில் என் மனத்தில் ஓடும். ஒரு சமயம் அவரது பயண இலக்கியத் தொண்டுக்காக, அமெரிக்காவிலுள்ள கொலம்பியா பல்கலைக்கழகத்து இதழியல் பிரிவுக்கு அவரை கௌரவிக்க வேண்டும் என்று எழுதத் தீர்மானித்து திரு மணியனுக்கு அக்கடித நகலை அனுப்பி இருந்தேன். அதை வாங்கி உள்ளே வைத்துவிட்டார்!

மணியன் காலமாவதற்கு ஒரு இரண்டு மாதம் முன்பாக மணியனைச் சென்று பார்க்கவேண்டும் என்ற எண்ணம் அடிக்கடி ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

சமீப காலத்தில் அவர் அடிக்கடி நோய்வாய்ப் பட்டுக் கொண்டிருந்தார். ஆனால் அப்படி ஏதும் நான் இப்போது கேள்விப்படவில்லை; எனினும் அவரைப் பார்க்கும் எண்ணம் திரும்பத் திரும்ப என்னுள் எழுந்தது.

அவரது வீட்டைக் கூப்பிட்டேன். தேவகி மருத்துவ மனையில் அட்மிட் செய்யப்பட்டிருப்பதாகவும், அடிக்கடி மருத்துவமனைக்கு செல்வதால், ஒவ்வொரு முறையும் எல்லோரும் பார்க்க வருவதால், "இம்முறை யாருக்கும் சொல்லவேண்டாம்" என்று அவர் சொல்லி இருப்பதாகவும் சொன்னார்கள்.

மாலை 6-30 மணி. தேவகி மருத்துவமனைக்கு நானும் என் நண்பர் விகடன் ராவ் அவர்களும் சென்றோம். டாக்டர் சொக்கலிங்கம் நின்று கொண்டிருந்தார். அவரருகே மணியனுக்கு உடனே ரத்தம் செலுத்த வேண்டுமென்ற தேவையினால், தன் ரத்தத்தையே உடனடியாக எடுத்துச் செலுத்தி விட்டு, மணியனை பரிசோதித்துக் கொண்டிருந்தார் அவர். "பிழைத்துக் கொள்ள வாய்ப்பு இருக்கிறது" என்றார் டாக்டர் சொக்கலிங்கம். திடீரென்று மணியன் படுக்கையைச் சுற்றியிருந்த சீலைகளை இழுத்து மூடினார்கள். அவர் இருந்த இடத்தை ஒரு தனி அறையாக ஆக்கினார்கள். இதயத்தை வேலை செய்ய வைக்க மார்புக்கு 'மசாஜ்' செய்யும் பணியில் டாக்டர்கள் ஈடுபட்டார்கள். "நேற்றும் இப்படித்தான் நடந்தது" என்றார் ஸ்ரீராம்.

இந்தக் கடைசி நேரத்தில் பல ஊர்களுக்கும் சென்று கொண்டிருந்த என்னை எது அங்கே அன்று கொண்டு நிறுத்தியது? எண்ணிப் பார்க்கிறேன்.... ஆத்மாவின் அழைப்பு?

மணியன் ஒரு சம்பவத்தை பலமுறை என்னிடம் கூறி இருக்கிறார். "எனக்கொரு கனவு அடிக்கடி வருகிறது. ஏதோ காட்டில் பர்ணசாலை (ரிஷிகள் வாழும் குடில்) போன்ற ஒரு தோற்றம். அங்கே பல ரிஷிகள். அங்கே நான் பாடம் கேட்கும் மாணவன் போல உட்கார்ந்திருக்கிறேன். இந்தக் கனவு அடிக்கடி வருகிறது."

"பாலிடெக்னிக்கில் ஒரு டிப்ளமோ எடுத்துவிட்டு, ஒரு நூலகத்தில் உதவியாளராகப் பணிபுரிந்து விட்டு இன்று ஒரு பத்திரிகாசிரியராக புகழுடன் இருக்கிறீர்கள். உங்களுடைய கனவுக்கும் இன்றைய வாழ்வுக்கும், "கல்வி," "ஞானம்" சம்பந்தமாக இருக்கும் தொடர்பைக் கவனியுங்கள்.

''ஞானத்தேடலில் முன்பும், இப்போதும் ஈடுபட்டிருக்கிறீர்கள். அது தான் கனவு" என்றேன்.

அந்த ஞானத்தேடல் தான் 'ஞானபூமி'யாக அவர் வாழ்வில் மலர்ந்ததோ?

அந்த ஞானத்தேடலில் தான் தன் நெடும் பயணத்தை மேற்கொண்டு இருக்கிறாரோ?



# 21

## மார்க் - 32

வாழ்வில் சில மாற்றங்கள் ஏற்படுகின்றன.

புதிய சூழ்நிலையில் நாம் தள்ளப்படுகிறோம். புதிய பிரச்னைகள் எழுகின்றன.

அப்போது நாம் என்ன செய்கிறோம்?

இதுவரை நாம் பெற்ற அறிவையும், நாம் வளர்க்கப் பட்ட விதத்தையும், நாம் படித்ததையும் வைத்துக் கொண்டு இவற்றைச் சமாளிக்கப் பார்க்கிறோம். வாழ்வில் நெருக்கடி ஏற்படும் போது வாழ்வின் கடைசி நிலைக்கே நாம் தள்ளப்பட்டிருப்பதாகக் கற்பனை செய்கிறோம். வாழ்வின் ஜீவப் போராட்டம். அப்போது நமது பழைய அனுபவங்களும், பழைய வழிமுறைகளும் உதவுவதில்லை. நம்மை நாமே ஆராய்கிறோம். வாழ்வில் நமது லட்சியம் எது என்ற முக்கியமான அடிப்படைக்கே செல்கிறோம். (First things first) "முக்கியமான முதல் காரியம், முதலில் செய்யப்பட வேண்டும்" என்ற தலைப்பில் நிர்வாகக் கலைப் பேராசிரியர் ஸ்டீபன் கோவி ஒரு புத்தகமே எழுதி இருக்கிறார்.

இதன் விளைவாக நமது சிந்தனைகளிலே பெரும் மாற்றம் ஏற்படுகிறது. இது நம் வாழ்க்கை முறையிலே பிரதிபலிக்கிறது. நாம் நம் - புதிய எண்ணங்களால் - புதிய சிந்தனைகளால்தான் மாறுகிறோம்.

இப்படிப்பட்ட ஒரு போராட்டத்தில் நான் சிக்கிக் கொண்டேன். நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் முதுநிலைப் படிப்பில் சேர்ந்தபோது.

வேதியல் மேல் படிப்பை 'இண்டர் மீடியட்'டிற்குப் பிறகு நான் தொடர்ந்து முதுநிலை சிறப்பு வகுப்பில் படித்திருந்தேனானால் எளிதாக முடிந்திருக்கும்.

அதிகமாக ஓராண்டு ஆகியிருக்கும். ஆனால் இப்போது மீண்டும் இரண்டாண்டுகள் படிக்கும் நிலை. இடையிலே வேலை பார்த்ததினால் ஐந்தாண்டுகள் மேற்படிப்பின் தொடர்பு இல்லாமல் போய்விட்டது - முன்பு நான் பிரம்மச்சாரியான மாணவன். இப்போது மனைவி குழந்தை என்று குடும்பஸ்தன். அதை விட சோதனை யான விஷயம் பல்கலைக் கழகத்தில் பாடங்கள் துவங்கி கிட்டத்தட்ட இரண்டு மாதங்கள் கழிந்த பின் நான் மாணவனாகச் சேர்ந்தேன். ஒரு இருபது நாட்களில் காலாண்டுத் தேர்வு வந்துவிட்டது. "ஏதோ கடந்த மூன்று மாதங்களில் சொல்லிக் கொடுத்ததை ஆசிரியர் கேட்பார்" என்று நான் படித்து வைத்திருக்க, அவரோ முந்திய ஆண்டில் தாம் நடத்திய பாடங்களிலிருந்தும் கேள்விகளைக் கேட்டிருந்தார்.

காலாண்டுப் பரீட்சையில் பல்கலையில் சேர்ந்த வுடன் பேராசிரியர் பாலையா அவர்கள் நடத்திய பாடத்தில் நான் பெற்ற மதிப்பெண்கள் 32. எவ்வளவு மதிப்பெண் வாங்கி இருக்கிறேன் என்பது எனக்குத் தெரியாது. என்னைவிட மோசமாக 17, 11, 8 என்று என வாங்கியவர்கள் அதில் இருந்தார்கள்! அதுவும் எனக்குத் தெரியாது.

பேராசிரியர், பரீட்சை எழுதிய விடைத் தாள்களை எடுத்து வந்தார். எல்லோருக்கும் கொடுக்க ஆரம்பித்தார். பகல் மணி 12.30 இருக்கும், அவருடைய வகுப்பு, காலை நேரத்தின் கடைசி வகுப்பு. சில பேருக்கு அவர்களது விடைத்தாள்களைக் கொடுத்தபின், துரதிர்ஷ்ட வசமாக, என்னுடைய விடைத்தாளை எடுத்ததும் அவர் பெரிய 'லெக்சரே' கொடுக்க ஆரம்பித்து விட்டார். என் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டார்; கையில் என் விடைத் தாளை வைத்துக் கொண்டு பேச ஆரம்பித்துவிட்டார்.

அதாவது ஆசிரியராக இருந்துவிட்டு பாடம் படிக்க வருபவர்கள் அக்கறை இல்லாதவர்கள், ஆசிரியராய் இருந்த அனுபவத்தில் பாடங்களைக் கடமைக்காகப் படிக்கிறார்களே தவிர படிப்பில், ஆராய்ச்சியில் ஆர்வம் இருப்பதில்லை என்று துவங்கினார்.

எனக்கு உடம்பு சில்லிட்டது. குடந்தையில் என்னிடம் மாணவர்களாக இருந்தவர்களே இப்போது என்னுடன் சகமாணவர்களாக வகுப்பில் அமர்ந்திருக் கிறார்கள். நான் பல்லைக் கடித்துக் கொண்டேன்.

பேராசிரியர் தன்னோடு வேலை பார்த்த தன் நண்பர் எப்படி மேல் படிப்புக்காகத் தன்னிடம் மாணவ ராகச் சேர்ந்தார் என்றும், அவருக்கிருந்த குடும்பப் பிரச்னைகளையும், தன் மாணவருக்கும் பேராசிரியர் பாலையாவுக்கும் ஏற்பட்ட பிரச்னைகளையும் சாங்கோ பாங்கமாக சொல்லிக் கொண்டே போனார். எல்லாம் என்னையே மறைமுகமாக விமர்சிப்பது போலிருந்தது, எனக்கு.

என் இதயத் துடிப்பு அதிகமாகிக் கொண்டிருந்தது. ஒரு மணி ஆயிற்று. வகுப்பு முடிய வேண்டிய நேரம். பேராசிரியர் தன் மாணவ விமர்சனத்திலே ஆழ்ந்து போனார்.

மனவியல் சம்பந்தமான ஒரு விஷயம் எனக்குப் புலப்பட்டது. அதாவது இப்போது நாம் குறுக்கிடக் கூடாது. இவரை முழுக்க முழுக்கப் பேசவிட வேண்டும். எல்லாம் கொட்டி முடித்தபின் எழுந்து தாக்க வேண்டும் - அதாவது பதிலளிக்க வேண்டும் என்ற எண்ணம், என்னுள் வலுப்பட்டுக் கொண்டே இருந்தது.

மணி மதியம் ஒன்றே காலும் ஆயிற்று. பேச்சை நிறுத்தினார். எனது விடைத்தாளை மீண்டும் கையிலெடுத்தார்.

நான் அமர்ந்த இடத்திலிருந்து எழுந்தேன். உணர்ச்சி பொங்க, "நீங்கள் என்னை அவமானப்படுத்துகிறீர்கள். (You are insulting me) உங்கள் நண்பர் போல ஆவேன் என்று சொல்கிறீர்களா?" என்றேன்.

அவ்வளவுதான்! அங்கே பூமியே அதிர்ந்தாற் போலிருந்தது! இத்தனை நாளும் இப்படி ஒரு மாணவன் வகுப்பிலே எழுந்து பேராசிரியரை நேரே எதிர்த்துப் பேசிய தில்லை! பேராசிரியர் அதிர்ச்சி அடைந்தார். படபடப்புடன், "நான் அவரை அவமதித்தேனா?" என்று திரும்பத் திரும்ப எல்லோரையும் - 16 மாணவர்களையும்

கேட்டார். மாணவர்கள் என்ன சொல்வார்கள்? "ஆம்!" என்றா சொல்ல முடியும்? "இல்லை. இல்லை!" என்று தலையாட்டினார்கள்; முனகினார்கள். அவ்வளவுதான்! வெகு வேகமாக மற்ற விடைத்தாள்களை - 17, 11, 8க்களை எல்லாம் எவ்வித பேச்சு மூச்சின்றி விநியோகித்தார்; வேகமாக மேடையிலிருந்திறங்கி, தம் அறைக்குப் போனார்.

நான் மற்ற மாணவர்களுடன் பேசும் நிலையில் இல்லை. அவர்கள் என்னை மேலும் பயமுறுத்தியிருக்கக் கூடும்.

**எ**டுத்துக் கொண்டு வந்திருந்த மதிய உணவைச் சாப்பிட்டேன். மனமெல்லாம் நடந்ததைப் பற்றியே எண்ணிக் கொண்டிருந்தது.

"என்ன நினைத்துக் கொண்டிருக்கிறார் இந்த மனிதர்?" என்ற எண்ணமும், "நன்றாகக் கொடுத்தோம்" என்ற திருப்தியும், வேகமும்தான் என் மனத்தில் இருந்தன.

Honours எனப்படும் சிறப்புப் படிப்பு - முதுநிலைப் படிப்பு முழுக்க முழுக்க பேராசிரியரை ஒட்டியதாகவே இருக்கும். அவர்தான் எல்லாம். அவர் விரும்பினால் கீழே இருப்பவர்களை, மேலே தூக்கி குறைந்த பட்சம் வேலை பெறத் தகுதி உள்ள இரண்டாம் வகுப்பு பட்டத்துடன் அனுப்ப முடியும். அவருக்குப் பிடிக்கவில்லை என்றால் நீங்கள் முதல் வகுப்பு பெறும் மாணவராயிருந்தாலும் மூன்றாம் வகுப்பு கொடுத்து உங்கள் மீது பழி தீர்த்துக் கொள்ள முடியும்.

அன்று மதிய உணவுக்குப் பிறகு என் பாட வகுப்பிற்காக ஆய்வுக் கூடத்திற்கு சென்றபோது எனக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

வேதியல் துறை ஆசிரியர்கள் அனைவரும் ஆராய்ச்சி மாணவர்களும் காலையில் வகுப்பில் நடந்த என் சம்பவத்தைப் பற்றித் தான் கூட்டம் கூட்டமாகப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

ஆங்கில நாவல் ஒன்றில் ஆலிவர் டுவிஸ்ட் என்ற அநாதைச் சிறுவனைப் பற்றி ஒரு கதை வரும். ஆலிவர் டுவிஸ்ட் அநாதைப் பள்ளியில் சேர்கிறான். அங்கே

அவன் சொன்னதைச் செய்ய வேண்டும். போட்டதைச் சாப்பிட வேண்டும்; எழுந்திருக்க வேண்டும். இப்படிப் பட்ட சூழ்நிலையில் ஆலிவர் டுவிஸ்ட் சாப்பிட்டு முடித்தவுடன் "எனக்கு இன்னும் கொஞ்சம் சாப்பாடு" என்கிறான். சாப்பிடுகின்ற மாணவர்களிலிருந்து பரிமாறுபவர்கள் உட்பட எல்லோரும் அதிர்ந்து போகிறார்கள். இது நாள் வரை இப்படி ஒருவன் கேட்டதில்லை! எல்லோருமே அவனைப் பார்க் கிறார்கள். ஏதோ மாபெரும் குற்றஞ் செய்தவனைப் போல!

இந்தக் கதைதான் எனக்கும் நிகழ்ந்தது.

"நீ பேராசிரியரை எதிர்த்துப் பேசினாயாமே?"

"நீ எவ்வளவு மார்க் வாங்கினாய்?"

"உன் எதிர்காலம் தொலைந்தது. போ!" என்ற பேச்சுக்கள், யாரும் என்னை வீரனாகப் பார்க்கவில்லை. சாதாரண மாணவனாகக் கூடப் பார்க்கவில்லை. கோயிலுக்கு அழைத்துச் செல்லும் பலிகடாவாகப் பார்த்தார்கள்.

எனக்கு மீண்டும் உடம்பு சில்லிட்டது. இப்போது தான் நான் பேசியதன் விளைவுகள் என் முன் பிரம்மாண்டமாகக் காட்சி அளித்தன.

என் எதிர் காலத்தையே நான் பாழாக்கிக் கொண்டதை உணர்ந்தேன். அன்றிலிருந்து பேராசிரியர், நான் உட்கார்ந்திருக்கும் பெஞ்சில் உள்ள யாரையும் கூட எந்தக் கேள்வியும் கேட்க மாட்டார். மற்ற எல்லா பெஞ்ச் மாணவர்களிடமும் கேள்விகள் கேட்பார்.

என் எதிர் காலமே என் மேற்படிப்பில் இருக்கிறது. அதில் வாங்கும் மதிப்பெண்களில் இருக்கிறது. தப்பித் தவறி மூன்றாம் வகுப்பு பெற்று விட்டால் எனக்கு விரிவுரையாளராகப் பதவி உயர்வு கிடைக்காது. மூன்றாம் வகுப்பு வாங்கினால் யாரிடம் போய்ச் சொல்ல முடியும்? "நான் நன்றாகப் படிப்பவன். எனது பேராசிரி யருக்கும், எனக்கும் சண்டை அதனால்தான்..." என்று இழுத்தால் யாராவது நம்புவார்களா?

நானோ எல்லாவித கஷ்டங்களுடன் கடன் வாங்கி, கஷ்டப்பட்டு அட்மிஷன் வாங்கி, படிக்க வந்திருக்கிறேன். இதை எல்லாம் உணராது நான் பேராசிரியரை முறைத்துக் கொள்ளலாமா? இப்படி மூன்றாம் வகுப்பு பெற்று, மீண்டும் கீழ் நிலைக்குப் போகவா இங்கே வந்திருக்கிறேன்? ஆயுள் பூராவும், அவர் மூன்றாம் வகுப்பு மாணவர் என்று அது அல்லவா எல்லோர் ஞாபகத்திலும் நிலைதது நிற்கும்? என்ன காரியம் செய்தேன்?

இந்த எண்ணங்கள் அடுத்தடுத்த வாரங்களில் என்னைப் படாதபாடு படுத்தின. நான் வீட்டில் இதை யாரிடமும் சொல்லவில்லை. என் மனைவியிடமும் கூட. நான் இதை யாரிடமாவது சொல்லி அனுதாபம் தேடி இருந்தேனானால், நிச்சயம் அவர்கள் எனக்கு அனுதாபமோ, ஆதரவோ காட்டி இருக்க மாட்டார்கள். யதார்த்த உலகைப் பார்க்கும் அவர்கள், மேலும் என்னை பயமுறுத்தி இருக்கக் கூடும்.

"நான் என்ன செய்தேன், என்ன செய்ய முடியும்?" என்றும் யோசித்தேன்.

இரண்டு விஷயங்கள் புலப்பட்டன.

ஒன்று: கடுமையாக உழைக்க வேண்டும். நன்கு படிக்க வேண்டும். நல்ல மதிப்பெண்கள் வாங்க வேண்டும் என்ற தீர்மானம்.

இரண்டாவதாக: எனது மனித உறவுகள் சரி யில்லை.; பழகும் தன்மை சரியில்லை. "எது முக்கியம்? எதற்காக இங்கே வந்தோம்?" என்பதை உணராமல் இப்படி ஒரு காரியம் செய்யலாமா? போன்ற சிந்தனைகள் என் வாழ்வை மாற்றி அமைத்தன.

இதன் விளைவாக அரையாண்டுத் தேர்வில் நான் 72 மதிப்பெண்கள் பெற்று மூன்றாவது மாணவனாக இருந்தேன். எனது முது நிலைப்பட்டப் படிப்பில் முதல் வகுப்பில் தேறினேன். வேதியல் படிப்பில் அபரிமிதமான ஆர்வம் ஏற்பட்டது.

அடுத்த ஓரிரு மாதங்களிலேயே சிறப்பு வகுப்பில் என்னுடன் படிக்கும் மாணவ மாணவிகளை ஒன்று சேர்த்து (Honours Club) சிறப்பு வகுப்பு மாணவர் சங்கம்

ஒன்றைத் துவங்கினோம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமை மாலையும் ஒரு மாணவர் வேதியல் சம்பந்தமான ஒரு தலைப்பில் பேசுவார். மற்றொரு மாணவர் அனைவருக்கும் தேநீர் அளிக்கும் செலவை ஏற்றுக் கொள்வார். இப்படி அங்கு படித்த இரண்டாண்டுகளும் இதைத் தொடர்ந்து நடத்தினேன். என் முழு முயற்சிதான் இதன் பின்புலம்.

வாழ்வில் நெருக்கடிகளும் பிரச்னைகளும் வருகின்றன. அப்போது நாம் மாறுகிறோம். நம் சிந்தனைகளையும் அணுகு முறையையும் மாற்றி அமைத்துக் கொள்கிறோம். அதன் மூலம் வளர்கிறோம்; உயர்கிறோம்.

"ஓம் என்பது ஒரு பாலம்" என்பதைப் போல 'சிந்தனைகளை சீரமைத்துக் கொள்" என்பதை ஒரு மகா வாக்கியமாக நான் கருதுகிறேன்.



22

## அமெரிக்க அனுபவம்!

நம் உள்ளங்களிலே புகுகின்ற எண்ணங்கள்தான் நம்மைக் கவர்கின்ற கருத்துக்கள் தான் - நம் வாழ்வையே மாற்றி அமைக்கின்றன. இதுதான் உண்மை. இந்த விஷயத்தில், என் தாய்தான் எனக்கு முதல் ஆசான். அவர் எனக்குக் கொடுத்த தைரியம் இருக்கிறதே, அது எனக்குத் துணிவைத் தந்தது. தைரியமாக எதையும் செய்யும் ஒரு மனோ பலத்தைத் தந்தது.

எல்லோர் வீட்டிலும் தந்தைதான் அறிவுரைகள் வழங்குவார்; கண்டிப்பார்; மேலே "இன்னது படி" என்பார். பாடஞ் சொல்லிக் கொடுப்பார். ஆனால் எங்கள் வீட்டிலோ எல்லாமே என் தாய்தான். துணிவு, வீட்டு நிர்வாகம்; வருகிறவர்களை உபசரிப்பது, வரவேற்பது; உறவினர்களுக்குச் செலவு செய்வது என்கிற எல்லாம் என் தாய்தான். என் தந்தை மிகுந்த சாது; பேச மாட்டார். 'கனிவு' என்ற குணம் அவருடைய உடலிலிருந்து, பரவி எல்லோரையும் ஊடுருவிக் கொண்டிருக்கும் என்று சொன்னால் மிகையாகாது. அவருக்குத் தொழில் - கடை - வியாபாரம். அதில் கவனம். அதிலும் ஏதோ ஒரு நியாயமான தொழிலைச் செய்து வரும் திருப்தியோடு ஈடுபட்டிருந்தாரே தவிர, வேறெந்த உந்துதலும் அவருக்கு இல்லை. பெரிதாகப் புத்திமதி கூற மாட்டார்; கண்டிக்கமாட்டார். மயிலாடுதுறை உயர் நிலைப் பள்ளியில் படித்தபோது மதிப்பெண் பட்டியலைக் கொடுப்பார்கள்; அதைப் பெற்றோரிடம் காட்டி கையெழுத்துப் பெற்று வர வேண்டும். "நேற்று என் தந்தை பிச்சி வாங்கி விட்டார். நல்ல உதை" என்றெல்லாம் மதிப்பெண்களுக்கு நடந்த

மரியாதையைக் கதை கதையாக மற்ற பையன்கள் பள்ளியில் கூறுவார்கள்!

என் தந்தையிடம் மதிப்பெண் பட்டியலைக் காட்டினால், "எங்கே கையெழுத்துப் போடவேண்டும்?" என்பார்.

"மதிப்பெண்களை எல்லாம் பார்த்தீர்களா? பாருங்கள் அப்பா!" என்று சொன்னால், "எனக் கென்னடா தெரியும்! எவ்வளவு வாங்க வேண்டுமோ அவ்வளவு வாங்கி இருக்கிறாய் அல்லவா?" என்பார்.

நான் மதிப்பெண்களைச் சுட்டிக் காட்டி 52, 61 என்று சொல்வதுண்டு. "சரி நல்லது" என்பார்.

மற்ற மாணவர்கள் தாங்கள் பெற்ற குறைந்த மார்க்குக்காக அடி உதை என்று சொல்லும்போது எனக்கு 'சப்'பென்று இருக்கும்! என் அப்பா கடுமையாக கோபித்துக் கொண்டார் என்று கூட என் நண்பர்களிடம் பெருமையாகக் கூற முடியாது!

அதாவது எங்கள் வீடு சற்று வித்தியாசமான குடும்பம்.

**நா**ன் அமெரிக்கா செல்வதற்கு ஓராண்டிற்கு முன் என் தாய் காலமாகி விட்டார்கள். அவர்கள் சொல்வார்கள். "நான் போன பிறகு நீங்கள் எல்லாம் நன்றாக இருப்பீர்கள்!" என்று வாழ்த்துவார்கள். ஏன் அப்படிச் சொன்னார்கள்? இருந்து பார்த்துவிட்டுப் போகக் கூடாதா?"

நான் இப்போதெல்லாம் என் குழந்தைகளிடமும் நண்பர்களிடமும் "நடக்க வேண்டிய நல்லதை எல்லாம் இருந்து பார்த்துவிட்டுத்தான் போகப் போகிறேன்!" என்று சொல்வதுண்டு!

நம் எண்ணங்கள்! நம் எண்ணங்கள்தான் நம்மை வாழ வைக்கின்றன!

அமெரிக்கா சென்றபோது என்னுள் ஒரு பெரிய மாற்றம் ஏற்பட்டது. என் மனோ பாவம், மாறியது. அமெரிக்காவுக்கு மேற்படிப்புக்குச் செல்ல, விண்ணப்பித்த மூவாயிரம் பேரில், நூற்றி ஐந்து பேரை அகில இந்தியாவிலிருந்து தேர்ந்தெடுத்திருந்தார்கள்.

அமெரிக்காவில் என்னை ஒரு அமெரிக்க மருத்துவர் வீட்டில் 15 நாட்கள் தங்க ஏற்பாடு செய்திருந்தார்கள். சர்வ தேச மாணவர்களுக்கு அமெரிக்காவை அறிமுகப்படுத்தும் பணியை, இப்படி ஒரு திட்டமாக ஏற்பாடு செய்திருந்தார்கள். அவர் தோல் நோய் சம்பந்தமான மருத்துவர், "ஏதாவது அவசரமாக மருத்துவ மனைக்குப் போயிருந்தீர்களா?" என்று கேட்டால், "என் தொழிலில் தோல் வியாதியினால் யாருமே அவசரமாகச் சாகமாட்டார்கள்" என்பார்.

அவருடைய மனைவி என்னைப் பெரிய மளிகைக் கடைகளுக்கு அழைத்துச் சென்று எது வாங்க வேண்டும் என்று ஒவ்வொன்றையும் காட்டி விளக்கிச் சொல்வார்.

ஒரு முறை வீட்டுக்கு வந்ததும் சொன்னார். "வேறு நிறத்தவன் ஒருவனுடன், ஒரு அமெரிக்கப் பெண்மணி சகஜமாகப் பழகிக் கொண்டு போவதை - கடைக்குப் போகும் வழியில் பிறர் நம்மை உற்று நோக்கியதைக் கவனித்தாயா?" என்றார்.

"நான் கவனிக்கவில்லை. நான் கறுப்பாக இருப்பதே எனக்கு மறந்து போய்விட்டது. அந்த நினைவே இல்லை" என்றேன்.

"வெந்த காய்கறிகளை மட்டுமே தின்று எப்படி ஒரு மனிதன் ஜீவிக்க முடியும்?" என்று சைவ உணவு பற்றி அங்கலாய்ப்பார். எங்களை விருந்துக்கு அழைக்கும் எல்லோருக்கும் அன்று இது பெரிய பிரச்னை.

கடைசியில் பார்த்தால் ஒரு பெரிய உணவு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் போய்ச் சேர்ந்தேன். அங்கே உணவு தயாரிப்பில் மாமிசம்தான் - மாட்டிறைச்சி, பன்றி இறைச்சிதான் முக்கிய 'அயிட்டம்.' நான் அதன் ருசி, மணம், வாயில் போட்டதும் ஏற்படும் மிருதுத்தன்மை, என்று எல்லாவற்றையும் தரம் பார்த்து அனுப்ப வேண்டும். பதம் பார்த்த அதன் தரத்தைத் தீர்மானிக்கும்போது எனக்கே ஆச்சரியம் ஏற்படும். பரம்பரை பரம்பரையாக சைவ உணவு சாப்பிட்டவனாகிய என் முகத்தைப் பார்த்து எனது நிறுவன நிர்வாகிகள் மாமிசத்தின் தரத்திற்குத் தீர்ப்புக் கூறுகிறார்களே என்கிற விஷயம்!

பள்ளிப் படிப்பின்போது என் மூத்த மகன் சித்தார்த்தன் பகுதி நேர வேலையாக ஒரு மளிகைக் கடை போன்ற பெரிய கடையில் சேர்ந்தான். சில நாட்களில் அவனைத் தூக்கி மாமிசப் பொருள்களை விற்பனைக்குத் தயார் செய்யும் மாமிச இலாகாவில் போட்டார்கள்!

மனம் உறுத்தியது.

கொங்கண முனிவர் ஒரு வீட்டுத் தலைவியிடம் மொத்துப்பட்டு கடைசியில் ஒரு கசாப்புக் கடைக்கார ரிடம் போய் ஞானம் பெறும் சம்பவம்தான் நினைவுக்கு வருகிறது.

எண்ணங்களும், நம்பிக்கைகளும், வாழ்க்கையும் எப்படி இணைக்கப்படுகின்றன மற்றும் நம்மைச் சோதிக்க வருகின்றன என்று சிந்திக்கிறேன்.

என் மனைவிதான் இதில் விசேஷம்.

எங்காவது அமெரிக்கர்கள் வீட்டில் விருந்துக்குப் போனால் எதை எடுத்துக் கொள்வது என்பது அவளுக்கு நன்கு தெரியும். எனினும் சில சந்தேகத்துக்குரிய அயிட்டங்களும் அங்கே இருக்கும்.

"இந்த 'கேக்'கை எப்படிச் செய்கிறீர்கள்?" என்பாள். ஆசையுடன் கேட்பவள் போல. அவர்கள் சர்வ சாதாரணமாக "ரொம்ப சுலபம்! இரண்டு முட்டை, நாலு கப் மாவு..." என்பார்கள். அவ்வளவுதான்! சிரித்து விட்டு, அந்த 'கேக்' பக்கமே போக மாட்டாள்!

**1950**லும் சரி 60தின் ஆரம்ப ஆண்டுகளிலும் சரி, மேற்படிப்பு படிக்க வரும் மாணவர்கள், எல்லோரும் வேகமாகப் படித்துவிட்டு, ஊர் திரும்பி விடுவார்கள். யாரும் தங்கள் மனைவியை அழைத்து வரும் பழக்கம் இல்லை.

முதன் முதலாக மேடிசனில் (பல்கலைக் கழகம் இருந்த நகர்) சமீபத்தில் பாரதிதாசன் பல்கலைக் கழகத்தில் துணை வேந்தராக இருந்த டாக்டர் முத்துக் கருப்பன் அவர்கள் தான் 1963ல் தன் மனைவியை அழைத்துக் கொண்டு வந்தார். அவர் தம் மனைவியை அழைத்து வருவதில் எல்லோருக்குமே சந்தோஷம். ஏனெனில் எல்லா தமிழ் மாணவர்களுக்கும் அவர்கள்

வீட்டில் அருமையான தமிழ் விருந்தை அளிப்பார்— அவர் மனைவி சரோஜா அவர்கள். அடுத்து என் மனைவி. அடுத்த ஆண்டு வந்தாள்.

அமெரிக்க வாழ்க்கை ஒன்றும் சொகுசான வாழ்க்கை அல்ல; தஞ்சாவூர் மிராசுதார் வாழ்க்கை போன்ற சுகவாசி வாழ்க்கை அல்ல. தஞ்சாவூரில் அந்தக் காலத்தில் தொழில் என்ற பகுதியில் 'சுகவாசி' என்று எழுதுவார்களாம்!

அமெரிக்காவில் கடுமையான உழைப்பு. உழைப்பதற்கும் ஏராள வாய்ப்பு. உழைத்தால் நன்றாக வாழலாம். அடித்தள மக்கள் கூட சாப்பாட்டுக்குக் கஷ்டமின்றி போக்குவரத்திற்கு ஒரு பழைய காரை வைத்துக் கொண்டு திருப்தியுடன் வாழ்வார்கள்.

நான் இரண்டாண்டுகள் பாடப்படிப்பை எல்லாம் முடித்து டாக்டர் பட்டத்திற்கான - ஆராய்ச்சியை முழு நேரமாக மேற் கொள்ளும் தகுதிக்கான - பரீட்சையை எழுத வேண்டும். இதில் தேற வேண்டும். இதில் சில சமயம் சிலரை வடிக்கட்டி விடுவார்கள். "சராசரி மாணவனுக்கு மேலாகப் படிக்கிறோம்" என்ற தன்னம்பிக்கை இருந்தாலும் "பரீட்சை என்ன ஆகுமோ?" என்கிற பயம் இருக்கத்தான் செய்தது. ஆனாலும் என் பேராசிரியர் அடுத்த ஆண்டும் நான் அங்கிருக்க ஆராய்ச்சி செய்ய அனுமதிக்கும் ஓர் ஒப்பந்தக் கடிதத்தை அளித்திருந்தார்

அப்போதுதான் நான் என் மனைவியை அழைத்து வரத் தீர்மானித்தேன். "டாக்டர் பட்டம் எடுத்தாலும் எடுக்காவிட்டாலும் எப்படி இருந்தாலும் இன்னும் ஓராண்டு இங்கிருக்கலாம். எனவே மனைவியை அழைத்து வந்து அமெரிக்காவைக் காட்ட வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. என் மனைவி அமெரிக்கா வுக்கு வருகின்ற முதல் நாள்தான் எனக்குப் பரீட்சை.

வந்து சேர்ந்ததுமே, என் மாணவ நண்பர் அவளை ஒரு முதியோர் இல்லத்தில், உணவு பரிமாறும் பகுதியில் அமர்த்தினார். என் மனைவி வேலை பார்த்ததனால் தான் நான் மாணவனாயிருந்த போதே என் இரண்டு மகன்களையும் அமெரிக்காவுக்கு அழைத்து வர முடிந்தது.

ஒரு புதிய கார் வாங்கவும் முடிந்தது. புதிய காரில் 1400 மைல் பயணம் செய்து என் மகன்களை நியுயார்க் விமான நிலையத்திலிருந்து அழைத்து வரவும் முடிந்தது.

என் பரீட்சை முடிவு வெளி வந்தது. எனது பேராசிரியர் ஆராய்ச்சிக் கூடத்தின் நடை பாதையில் என்னைப் பார்த்து, "நீ தேறிவிட்டாய்!" என்று மகிழ்ச்சியுடன் பாராட்டினார்.

எனக்கு ஒரே குதூகலம்!

நம்மைப் ட:ற்றி நமக்குள்ளே ஓரளவு தெரியும். ஆனாலும் அதற்கு வெளி உலக அங்கீகாரம் கிடைக்கும் போதுதான், நமக்கு நம்மைப் பற்றிய பெருமை மகிழ்ச்சி பூரணமாகிறது.

இன்னும் என் நினைவில் நிற்கிறது. அது நல்ல குளிர் காலம். விஸ்கான்சின் பகுதியில் 7-8 மாதம் குளிர் இருக்கும். ஐந்து மாதம் பனிக்கட்டி இருக்கும், பூமியின் மீது.

என் மனைவிக்கு குளிருக்கான 'கோட்டு' வாங்க கடையின் மாடிக்குச் சென்றோம். வாங்கினோம். திரும்பி மாடிப்படியிலிருந்து இறங்கி வரும்போது இடதுபுறம் சுவர் பூராவும் முகம் பார்க்கும் கண்ணாடியைப் பதித்திருந்தார்கள். நான் அதைப் பார்த்தேன். என் உருவம் தெரிந்தது. என் மனைவியிடம் கேட்டேன்.

"இங்கே பார்! அங்கே என்ன பார்க்கிறாய்?" என்றேன்.

"ஏன், நம் உருவம்தான் தெரிகிறது."

"நீ அங்கே ஒரு சாதனையாளனைப் பார்க்க வில்லை?"

அவள் சிரித்தாள். 'எப்போதும் போல்தான் இருக்கிறீர்கள்!" என்றாள்.

நான் பதில் பேசவில்லை. நானும் சிரித்துக் கொண்டேன். என்னுள் நிகழ்ந்திருக்கும் மாற்றம் எனக்கு மட்டுமே தெரியும். நான் கடந்த பாதை, பட்ட சிரமம், உழைத்த உழைப்பு நானே என்னை வளர்த்துக் கொண்டது, திருத்திக் கொண்டது.

அமெரிக்காவுக்குச் சென்றபோது மேடிசனில் எஸ்.எஸ். கிரெஸ்கி என்றொரு 'எதெடுத்தாலும் பத்துக் காசு' என்ற 'டைம்'(Dime) ஸ்டோர் இருந்தது. உயர்நிலைப் பள்ளி மாணவர்களுக்கு வாழ்க்கை பற்றிய அறிவுரை கூறும் ஒரு பாட நூல் ஒன்றை. 57 காசுக்குப் போட்டிருந்தார்கள். நான் அதை வாங்கி வந்தேன். அதில் மாணவர்கள் எப்படி சமுதாயத்தில் பழகுவது, ஆண் பெண் சிநேகிதத்தில் கடைப் பிடிக்கும் விதிகள் என்ன என்பதிலிருந்து, தங்களுடைய 'பர்சனாலிட்டி'யையும், தங்களது கம்பீரத்தையும், தலைமைக் குணங்களையும் எப்படி வளர்த்துக் கொள்ள வேண்டும் என்பது வரை எல்லாம் அற்புதமாக எழுதப்பட்டிருந்தது. அதை அங்கே உயர்நிலைப் பள்ளியில் எல்லோரும் படிக்க வேண்டிய நிரந்தர பாடமாக 'பர்சனாலிடி டெவலப்மெண்டை'யும் வைத்திருக்கிறார்கள். அந்தப் புத்தகத்தை நான் படித்தேன்; பல முறை படித்தேன். அதற்குப் பின் 'ஸ்டேட்' தெருவில் பால் என்பவர் வைத்திருக்கும் பழைய புத்தகக் கடைக்கு அடிக்கடி போவேன். மணிக்கணக்கில் செலவிடுவேன். பழைய புத்தகங்களை வாங்குவதையும் படிப்பதையும் பழக்கமாக்கிக் கொண்டேன். என்னை நானே வளர்த்துக் கொண்டேன்; அந்த வளர்ந்த மனிதனைத்தான் அன்று அங்கு கண்ணாடியில் பார்த்தேன். என்னைச் செதுக்கிய நூல்களும் எண்ணங் களும் கண்ணாடியில் முகமாக தெரிந்தன!



23

## மனிதக் குறைபாடுகள்

---

மன்னிக்க வேண்டும்! எண்ணத் தொடரில் ஓர் இடைச் செருகல்!

கடைசியில் எழுத வேண்டியதை இப்போதே எழுதி விடுகிறேன்! காரணம் இந்த என் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதில் ஏற்படும் மன உறுத்தல்; நெருடல். சுய சோதனை.

யாருமில்லை சாட்சியாக மனமே கேள்வியாக!

நண்பர் மணியன் 1980 வாக்கில் என்னை எனது வாழ்க்கை வரலாற்றை எழுதுமாறு பலமுறை சொன்னார். "விளநகரிலிருந்து விஸ்கான்சின் வரை" என்று தலைப்பும் கொடுத்தார். நான் எழுதவில்லை; எழுத மறுத்தேன்.

"என்ன இது! எல்லாம் தெரிந்தவன் போல, என்னை நான் காட்டிக் கொள்ளவா இது? என்னைப் போய் எழுதச் சொல்கிறீர்களே! இது செய்யக் கூடாத விஷயம்; நான் செய்யப் போவதில்லை." என்று மறுத்தேன். இரண்டாவதாக அவர் அடிக்கடி சொல்லும் விஷயம், "நீங்கள் சதா எழுதிக் கொண்டிருக்க வேண்டும். எழுதாமல் விட்டு விட்டால், மக்கள் மறந்து போய் விடுவார்கள்" என்பது. நான் சிரிப்பதுண்டு.

அதிலும், அவர் சொன்னதை நான் கடைப்பிடிக்க வில்லை. 1987-ல் இந்தியா திரும்பியதும் நான் ஏதோ ஓரிரு தொடர்கள் எழுதினேனே தவிர, வாய்ப்புக்கள் இருந்தும் நான் முனையவில்லை. நான் ஆன்மீக சம்பந்தமான நூல்களைப் படிக்கத் துவங்கியதில், "என்னை நானே அறிந்து கொள்ள வேண்டியது நிறைய இருக்கிறது; இந்த

நிலையில் உபதேசம் செய்வதா? அபசாரம்!'' என்ற எண்ணம் வலுத்தது.

இந்த என்னுடைய தேடல் கடந்த பத்தாண்டு களுக்கு மேலாக தொடர்ந்து கொண்டிருக்கிறது. சரியான குரு தோன்றுவாரா, வருவாரா, ஞானோபதேசம் செய்வாரா என்ற தேடல், எதிர்பார்ப்பு; ஏக்கம்.

சீடன் தயாராக இருந்தால் அல்லவா குரு தோன்றுவார்? நான் இன்னும் தயார் நிலைக்கு வரவில்லை போலும்! இந்தியா பூராவும் சுற்றும் பைராகிகள் போல் என் மனம் ஒவ்வொரு தத்துவங்களி லும் யோக மார்க்கங்களிலும் அலைபாய்கிறதே தவிர நிலைத்து ஒரு ஞானம் பெற்ற நிலை — ஒன்றைப் பிடித்துக் கொண்ட நிலை — வரவில்லை.

சென்ற ஆண்டு ஏற்பட்ட என் மனைவியின் பிரிவு என்னைப் பெரிதும் பாதித்தது.

இந்த நிலையில் கல்கியில் கேட்டபோது, சற்று யோசனைக்குப் பிறகு, நான் இதை எழுத ஒத்துக் கொண்டேன். நாம் அடைந்த அனுபவங்கள் எல்லாம் கடும் உழைப்பினாலும் விடாமுயற்சியாலும், மனத்தில் எழுந்த ஆழமான எண்ணங்களாலும் முன்னேற வேண்டும் என்ற ஆர்வத்தாலும் எழுந்தவை. அவை எல்லாம் பிறருக்குப் பயன்படக் கூடும்; தைரியத்தைக் கொடுக்கக்கூடும். சளைக்காத மனத்தை அளிக்கக் கூடும் என்ற எண்ணம்தான் காரணம். "தலையைப் போடுமுன் இதைச் செய்து விட வேண்டும்'' என்ற எண்ணம் தலைதூக்கியது.

இதில் என்ன குறை என்றால், வாழ்க்கை வரலாறு பற்றி எழுதும் ஓர் அறிஞர், "இதில் பாதி சுயவிளம்பரம் தான்'' என்கிறார். அது என்னைச் செதுக்கிய எண்ண மானாலும், யார் எழுதினாலும் நமது குற்றங் குறைகளை நாம் எழுதப் போவதில்லை; எழுதுவதில்லை. "தவறுகளை வெளிப்படையாக ஒப்புக் கொள்வது ஆத்மாவுக்கு நல்லது தான்; ஆனால் அது அவர்களது புகழுக்குக் கேடு'' என்றொரு ஆங்கில வாசகம் உண்டு. நமது புகழுக்கு, நல்ல பெயருக்குக் கேடு வருவதை யார் விரும்புவார்கள்? எனவேதான் எழுதுவதெல்லாம்,

செய்வதற்கு நியாயம் சொல்லி சமாதானப்படுத்தும் முயற்சியாக முடியுமே தவிர உண்மைகள் - முழு உண்மைகள் வெளிவருவதில்லை.

மேலும் எழுதுபவன் தன்னுடைய குறைகளையோ அல்லது அவர் பழகிய மனிதர்களின் செயல்களை, தன்னுடைய பார்வையில் விமர்சனம் செய்வதோ நியாயமாகாது. உண்மை ஆகாது. விமர்சனம் செய்யப்படுபவருக்கோ, அல்லது உண்மை என்பது மனித உரு எடுக்குமானால் அந்த உண்மைக்கோ நான் மற்றவர்களைப் பற்றி என் அபிப்ராயத்தைச் சொல்ல எந்தவித நியாயமும் இல்லை. எனக்குக் கிடைத்த மேடை இது; அதை ஒரு மனிதன் தனக்காகவே உபயோகிக்கிறான். தன் சுயநலத்திற்கே உபயோகிக்கிறான்.

மனிதனை வாழவைப்பதே (self esteem) எனப்படும் 'சுயகௌரவம்' தான் என்று மனவியல் அறிஞர்கள் எழுது கிறார்கள். இதனால்தான் நமது துறவிகள் தங்கள் பூர்வோத்திரம் பற்றி எங்கு வளர்ந்து வாழ்ந்து எந்த சம்பவத்திற்குப் பின் துறவியானார்கள் என்று சொல்வதில்லை. நாம் யோசிக்கவேண்டும். ரிஷிமூலம் நதிமூலம் என்பார்கள். நதி மூலத்தைப் போல ரிஷி மூலத்தைக் கண்டு பிடிப்பது கஷ்டம். சரியல்ல.

மற்றோர் விஷயம் அதாவது தன் குறைகளை யெல்லாம் ஒருவன் எழுதி அதிலிருந்து மீண்டேன் என்று எழுதுவானானால் படிப்பவர்களும் "அதே போல தவறு செய்து விட்டு நான் திருந்திக் கொள்ளலாம்" என்று நினைக்கக்கூடும். தான் தவறு செய்வதற்கு தவறு செய்ய விரும்புவதற்கு - நியாயம் கற்பிக்கக்கூடும்.

ஒரு பெண் ஒரு கடிதம் எழுதி இருந்தார் யோசனை கேட்டு. "ஒரு சினிமாவில் ஒரு பெண் தன் பெயர் போடாமல் ஒருவனுக்கு ஒரு கடிதம் எழுதுகிறாள். அதைப் பார்த்தவுடன் அது என் நினைவில் திரும்பத் திரும்ப வந்தது. 'ஏன் நாமும் அப்படிச் செய்யக் கூடாது?' என்ற ஒரு கிறுக்குத்தனம் தோன்றியது. எனக்குப் பிடித்த ஒரு மாணவனுக்கு எழுதினேன். அதன் விளைவு - பெரிய பிரச்னை" என்று எழுதியிருந்தார்.

எழுத்துக்களாலும், சினிமாவினாலும், இசையினா லும், வாழ்வில் நிகழும் சம்பவங்களாலும் நாம் தூண்டப் படுகிறோம் என்பது மனவியல் உண்மை. தூண்டப்படும் பலர் எது நியாயம், எது சரியில்லை என்று தீர்மானிக்கிற விவேகம் கொண்டவர்கள் அல்ல. சில நேரங்களில் உணர்வு களால் ஈர்க்கப்படுபவர்கள்; இழுத்துச் செல்லப் படுபவர்கள்.

அப்படிப்பட்ட சில அரசியல் தலைவர்கள் அல்லது தலைவிகளது செயல்கள் தம் நாட்டை லஞ்சக் காடாக மாற்றி விட்டது. சமீபத்தில் அவர்களது செயல்கள் "அடியாட்களை வைத்துப் பிடிக்காதவர்களை ஒழிக்கலாம்" என்ற அளவிற்கு சென்று நாட்டை அராஜகக் காடாக மாற்றி விட்டிருக்கிறது.

'நாடும் மக்களும் எப்படிக் குட்டிச்சுவராய்ப் போகிறார்கள்' என்பதற்கு அங்கு விதைக்கப்படும் எண்ணங்களும், விவேகமின்மையும், சுயநலமும் அதன் விளைவாக எழும் செயல்களும்தான் காரணம். தவறு செய்பவர்கள் வாழ்க்கை வரலாறு மூலமும், அரசியல் செல்வாக்கு மூலமும், முக்கியத்துவம் பெறும்போது, கொள்ளைக்காரி - பூலான் தேவி கூட நோபல் பரிசு கேட்கும் நிலைதான் உருவாகும். அதுதான் உருவாகி இருக்கிறது.

எனவேதான் வள்ளுவர் கூறுகிறார்.

**"சொல்லுக சொல்லில் பயனுடைய சொல்லற்க**
**சொல்லில் பயனிலாச் சொல்"**

இங்கேதான் நாம் வள்ளுவர் சொல்வதை ஆழ்ந்து கவனிக்க வேண்டும்.

"இது உண்மை என்று உண்மையைச் சொல்வது மட்டும் போதாது. அந்த உண்மை நன்மை பயக்குமா அல்லது தீமை பயக்குமா என்று பார். நன்மை பயக்குமானால் மட்டுமே சொல். மற்றபடி வாயைத் திறக்காதே!"என்கிறார்.

எனவே வாழ்க்கை வரலாறு என்பதில் நன்மை பயக்குமானால் மட்டுமே - நல்ல விஷயங்கள் மட்டுமே - எழுதப்பட வேண்டும்.

அப்படி எழுதும் போதும், "பற்றுநீக்கித் தொழில் செய்" என்று பகவத்கீதை சொல்வது போல், நாம் நம்மை மூன்றாம் மனிதனாக வைத்து எல்லா விஷயங்களையும் பார்க்கும் பக்குவத்துடன் எழுத வேண்டும். அதாவது பல சம்பவங்களுக்கும் நாம் சாட்சியாக – பார்வையாளனாக விலகி நின்று எழுத வேண்டும்; பேச வேண்டும்.

அப்படி எழுதுகிறோமா? பெரிய கேள்வி! நம்மைப் பற்றி நம்மாலே தீர்ப்புக்கூற முடிவதில்லை. அந்த மென்மையான சர்க்கஸ் கயிற்றின் மீது நம்மால் நடக்க முடிவதில்லை. முயல்கிறோம். அவ்வளவுதான். ஆகவே நம் மனத்திற்கு நியாயமென்று பட்டதை எழுதுகிறோம் – நம்மை விடப் படித்தவர்கள் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்கிற நினைவுடன் – ஒரு அச்சத்துடன்.

ஒரு கதை எழுதினால், நாம் மூன்றாவது மனிதனைப் போல் எழுதி விடலாம். ஆனால் வாழ்க்கை வரலாறோ, "நான்" "நான்" என்று எங்கு பார்த்தாலும் நான் என்னை இழுத்துச் செல்கிறேன். முன்னிறுத்து கிறேன். இது அகந்தை, ஆணவம், அகங்காரம் என்கிறார்கள் நமது ஞானிகள். சுய விளம்பரம் போய் அகங்காரம் வேறு வந்து சேர்ந்து விடுகிறது!

அடக் கஷ்டமே! என்னை வெளிப்படுத்தி அகந்தையில் விழத்தானா இதை எழுதுகிறேன்? ...சோகம்! இருபது ஆண்டுகளுக்கு மேலாக இவ்வளவு எழுதிய பின் னும் எனக்கு இந்த சுய விளம்பரம் எல்லாம் தேவையா? முற்றும் துறந்த பக்குவம் வராதபோதும் இதையெல்லாம் பொருட்படுத்தாத ஒரு மனநிலையில்தான் வாழ்ந்து வந்தேன். ஆனால் எழுதும்போது, நான் மீண்டும் அந்தச் சம்பவங்களுடன் வாழ்ந்து கொண்டிருக்கும் நிலை ஏற்படுவதால், என்னை அறியாமலே என்னிடம் இந்த அகந்தை, ஆணவம், சுய விளம்பரம், பிறரை விமர்சித்துத் தன்னை உயர்த்தும் பண்பு இதெல்லாம் வந்திருக்கக் கூடும். தென்படக் கூடும். மன்னிக்கவும்.

என்ன சொல்ல முடியும்?

முனிவர்களும், ஞானிகளும் கூட சினத்தை தவிர்த்தவர்களாகவோ, 'தான்' என்பதை மறந்தவர் களாகவோ இருக்கவில்லை என்பதைத்தான் தாருகா

வனத்து ரிஷிகளின் கதை வரை பார்க்கிறோம். விசுவாமித்திரரைப் பார்க்கிறோம்.

இதில் நான் எம்மாத்திரம் என்று என்னை நானே மன்னித்துக் கொள்ள வேண்டியதுதான்!

ஆகவே நீங்களும் முடியுமானால்..... மன்னியுங்கள்!

எனக்கு ஒரு திருவாசகப் பாடல்தான் - அதுபற்றி ஒரு ஆங்கில நூலில் வந்த மொழிபெயர்ப்பு தான் நினைவுக்கு வருகிறது.

"ஓ ஆண்டவனே!

நீ எங்கும் நிறைந்திருக்கிறாய்: சர்வ வியாபி

ஆனால் நானோ உன்னை இங்கே கோயிலில் வைத்து வழிபடுகிறேன்.

உனக்கு ஒரு பெயர், ஒரு நாமம் கிடையாது.

ஆனால் நானோ உனக்கு ஆயிரம் திருநாமம் சூட்டி அழைக்கிறேன்.

நீ என்னைப் பாராட்டு என்று கூறுவதில்லை.

ஆனால் நானோ உன் புகழைப் பாடிப் பரவசப்படுகிறேன்.

ஆண்டவனே, என்னை மன்னித்து விடு. இவை எல்லாம் என் மனிதக் குறைபாடுகள்"

இந்த எண்ணத் தொடரில் தெரியும் மனிதக் குறைபாடுகளுக்கு மன்னிக்கவும்.



24

# நெகிழ வைத்தார் பாலசந்தர்!

என்னுள் நிகழ்ந்த மனவியல் மாற்றங்களையும் அதற்கான அடிப்படைக் காரணங்களையும் எண்ணிப் பார்க்கிறேன். எது என் கற்பனைத் திறனை வளர்த்தது? எந்த விஞ்ஞானப் படிப்பு எனக்கு எதிலும் ஒரு விஞ்ஞான அணுகுமுறையை அளித்தது? ஆழத்தில் இருந்த இந்த இரண்டு தீவிர எண்ணங்களும் ஆசைகளும் எப்படி என்னை ஒரு எழுத்தாளனாகவும் விஞ்ஞானத் துறையிலும் தொழில் துறையிலும் ஈர்த்தன? எப்படி வாழ்வில் அதற்கேற்ப சம்பவங்கள் தானாக நேர்ந்து கொண்டிருந்தன?

எண்ணங்கள் எப்படி ஆசைகளாகி, 'நம்மால் முடியும்' என்ற நம்பிக்கைகளாகி, நம் வாழ்வை நடத்துகின்றன என்பது திருப்பதியில் பல படிகளேறி, பல மைல்களைக் கடந்து ஏழுமலையானைத் தரிசிப்பது போலத்தான். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்த போதே கதைகள் எழுதினேன். மனத்தில் அபரிமிதமான கற்பனை, எழுதப் போகும் ஒவ்வொரு வரியும், என் மனத்தில் ஓடிக் கொண்டிருக்கும். படிப்பை முடித்த முதல் ஆண்டே எனது 'சுயம்வரம்' என்ற சிறுகதை ஆனந்த விகடனில் வெளி வந்தது. அதற்கு முன், பி.எஸ்.ஸி படித்த போதே தினமணி கதிரில் என் விஞ்ஞானக் கட்டுரைகளும், பொன்னி, சுதேசமித்திரன் ஞாயிறு மலர் இதழ்களில் என் கதைகளும் வெளி வந்தன.

தினமணியிலிருந்து 15 ரூபாய்க்கு செக் அனுப்பி இருந்தார்கள். எனது "அறிவுள்ள தாவரங்கள்" என்ற கட்டுரைக்கு. 'லாயிட்ஸ் பேங்க் ஆப் லண்டன்' என்ற அந்த 'செக்' லாயிட்ஸ் வங்கியின் தலைமையகமான லண்டனிலிருந்து வருகிறது என்பதைப் பார்த்த எனக்கு

- ஒரு இண்டர் மீடியட் படித்துக் கொண்டிருந்த மாணவனுக்கு - இருந்த உற்சாகம் பெருமை, அளவு கடந்தது. எனது பேராசிரியர்கள் இதை அறிந்து பெருமைப் பட்டார்கள்.

ஆனால், இந்த கற்பனை உலகம் என்னை நடைமுறை உலகிலிருந்து அப்புறப்படுத்தி விட்டது என்பதைப் போகப் போக உணர்ந்தேன். நான் மனத்தில் கண்டு, வாழ்ந்த கற்பனை உலகம் வேறு; நடைமுறை உலகம் வேறு; எனவே எனக்கு நடைமுறை உலகின் நெளிவு சுளிவுகள் தெரியவில்லை. என்னால் அதை சமாளிக்க முடியவில்லை. ஒரு பூ விற்கின்ற பெண்மணி "வாங்குகிற ஆளைப்பாரு!" என்று சொல்லி விட்டால், 'நான் ஒன்றுக்குமே உதவாதவன்' என்று சுற்று முற்றும் பார்ப்பேன்.

"பூ வாங்கக் கூட நாம் லாயக்கில்லை. நம் மனைவி சொல்வதுதான் சரி" என்று நிழலில் ஒதுங்கினேன்.

பின் ஒரு நாள் நன்றாக உள்ளுக்குள்ளே விசாரணை நடத்தினேன். ஒரு காரியம் செய்தேன். அதாவது, கதை எழுதுவதை குறைத்துக் கொண்டேன்! அல்லது விட்டேன் என்றே சொல்லலாம்! இது ஒரு கட்டம். ஒரு மாற்றம்.

நான் குடந்தையிலிருந்து, விரிவுரையாளராகப் பதவி உயர்வு பெற்று சென்னைக்கு வந்தபோது எனது கதைகள் - மாதம் ஒரு கதை என்கிற ரீதியில் - தினமணி கதிர் பத்திரிகையில் எனது கதைகள் வெளிவந்து கொண்டிருந்தன. அப்போது "துமிலன்," அதன் ஆசிரியர். பெரிய சைசில் போட்டுக் கொண்டிருந்த தினமணி கதிரை விகடன் அளவில் மாற்றிய அந்த முதல் இதழிலும் எனது 'நட்சத்திரக் காதலி' என்ற கதை வெளியாகி இருந்தது.

அப்போது குமுதம் 'ஓகோ' என்று போய்க் கொண்டிருந்த காலம். எனக்கு ரா.கி. ரங்கராஜன், 'கே. மாலதி' என்கிற புனை பெயரில் எழுதுகின்ற நகைச் சுவைக் கதைகளும் ஜ.ரா. சுந்தரேசன் எழுதிய கதைகளும் மிகவும் பிடிக்கும். குமுதத்தில் என்னுடைய கதையும் எனது கல்லூரித் தோழர் கே. பாலசந்தர் அவர்களது

கதையும் ஒரே இதழில் வெளிவந்தது. ஒரு கதாசிரியன் கதை எழுத உட்கார்கிறான். அவனது கதாபாத்திரங்கள் அவனுடன் பேச ஆரம்பிக்கின்றன. கதா பாத்திரங்களின் கதையை நகர்த்த நகர்த்த, கதாசிரியனுககும், கதா பாத்திரங்களுக்கும் நடக்கும் விவாதத்தைக் கற்பனை யுடன் எழுதி இருந்தேன்.

பாலசந்தர் ஹாஸ்யமாக "ஆண்களுக்கு மட்டும்", "பெண்களுக்கு மட்டும்" என்ற தலைப்பில் ஒரு நகைச்சுவைக் கட்டுரையை எழுதி இருந்தார். யோசித்துப் பார்க்கிறேன். இரண்டு இளைஞர்கள். பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றவர்களை, தாங்களே சிருஷ்டித்துக் கொண்ட ஒரு எழுத்துத் துறை அவர்களை எப்படி ஆட்கொண்டது என்பதை எண்ணி வியக்கிறேன். நம் எண்ணங்கள் - நம் ஆழ் மனத்தின் ஆசைகள்தாம் நம் வாழ்வைச் செதுக்குகின்றன.

அடுத்த முறை நான் பாலசந்தரை சந்தித்தது ஆபட்ஸ்பரிக்கு எதிராக - இன்றைய அண்ணாசாலையில் - எதிரும் புதிருமாக சந்தித்தோம் சைக்கிளில். தான் அக்கௌண்டண்ட் ஜெனரல் அலுவலகத்தில் பணிபுரிவ தாகவும், 'ராகினி ரிக்ரியேஷன்ஸ்' என்ற நாடகக் குழுவை நடத்தி வருவதாகவும் சொன்னார். நான் கிண்டி பொறியியல் கல்லூரியில் உதவி விரிவுரையாளராக இருப்பதைச் சொன்னேன்.

அடுத்தமுறை நான் பாலசந்தரைச் சந்தித்தது அவர் சினிமா டைரக்டராகி அவர் எடுத்த சினிமா படங்களை எல்லாம் பார்த்த கால கட்டத்தில் - ஒன்பதாண்டுகள் கழித்து. வளர்ச்சி என்றால் பிரமிக்கத்தக்க வளர்ச்சி! கதை அமைப்பு, நகைச்சுவை, கதையுடன் நம்மை ஒன்ற வைக்கும் அவரது பாணி, கதையின் கருத்து, கற்பனை என்று அவர் எங்கோ போய்விட்டார்! நான் அசந்து போனேன். எல்லாவற்றிலுமே அவர் முத்திரை இருந்தது. அதற்கு முன்பாக "இது சிவாஜி படம்", "இது எம்.ஜி.ஆர் படம்" என்று நடிப்பவர்களை முன்னிறுத்தியே படம் ஓடிக் கொண்டிருந்தது. முதன் முதலாக உள்ளே வேலை செய்யும் ஒரு கலைஞனை - ஒரு படைப்பாளனை -

முன்னிறுத்தி அதாவது "டைரக்டர் பாலசந்தர் படம்" என்று அவர் பெயரைச் சொல்லி அதற்காக மக்கள் படம் பார்க்கப் போனதைப் பார்த்தேன். எப்படிப்பட்ட மாற்றம்!

ஒரு விதையானது, செடியாகி வளர்ந்து பூக்கும் போதுதான் அதன் மணம் எல்லோரையும் கவர்கிறது. ஆனால் அந்த விதைக்குள் அந்த பூ, காய், கனி, இலை, மரம் என்ற எல்லா அம்சங்களும் இருக்கின்றன. அவை உள்ளுக்குள்ளே சதா வேலை செய்து கொண்டுதான் இருக்கின்றன.

அவர் அண்ணாமலையில் படித்தபோது அவர் படித்த இரண்டாவது பாடம் தமிழல்ல. அவர் எடுத்துக் கொண்ட மொழி 'பிரெஞ்சு'. படித்து பி.எஸ்.ஸி பட்டம் பெற்றபோது அவர் ஒருவர் தான் மூன்று பாடங்களில் - பிரெஞ்சு, விலங்கியல், தாவரவியல் என்ற மூன்று பாடங்களில் - முதல் வகுப்பு பெற்றிருந்தார். இது சாதாரண விஷயமல்ல.

என் திருமணத்தின்போது கலை அம்சத்துடன் ஓர் ஓவியம் வரைந்து தன் வாழ்த்துச் செய்தியினைத் தெரிவித்திருந்தார். நான் அவரைச் சந்திப்பதுண்டு. அதாவது எப்போதாவது. ஏதாவது ஒரு குறிப்பிட்ட வேலை, விஷயம் இருக்கும்போது மட்டும் தான் கூப்பிடுவேன். ஏனெனில் அவரை நான் அவரது ஆக்க பூர்வமான கலைத் தொழில் சிந்தனையிலிருந்து அப்புறப் படுத்த விரும்புவதில்லை. இஸ்ரேலில் ஒரு தெருவின் முன் ஒரு வாசகம் வைக்கப்பட்டிருக்கிறதாம்.

"இங்கு நமது கவிஞர் எழுதிக் கொண்டிருக்கிறார். அவரது சிந்தனையைக் கலைக்காதீர்கள். அமைதியாகச் செல்லுங்கள்" என்று!

**எ**ன்னை ஆச்சரியப்பட வைத்த மற்றொரு சம்பவம் பின்னால் நிகழ்ந்தது.

அதாவது மக்கள் சக்தி இயக்கத் துவக்க நாள், 1988 மே 29ம் தேதி. அன்று மாலை எனது நூல் ஒன்றை வெளியிடும் விழாவை எனது பதிப்பாளர் வானதி திரு நாவுக்கரசு அவர்கள் பாரதீய வித்யா பவனில் ஏற்பாடு

செய்திருந்தார். விழாவுக்கு முக்கியப் பிரமுகர்களை நண்பர் திருநாவுக்கரசு அழைத்திருந்தார். கல்கி, ராஜேந்திரன், பாலசந்தர், திருமதி சிவசங்கரி, அமுதசுரபி ஆசிரியர் விக்கிரமன் முதலியோர் பாரதீய வித்யா பவனில் மேடையில் அமர்ந்திருக்கிறார்கள். நல்ல கூட்டம். கல்கி ராஜேந்திரன் என்று நினைக்கிறேன் - பேசிய போது குறிப்பிட்டார். "உதயமூர்த்தியின் கருத்துக்கள் எல்லாம் பொதுமக்களிடையே பரவ வேண்டுமானால், நான் பாலசந்தரை ஒன்று கேட்டுக் கொள்வேன். அவரை சினிமாவில் நடிக்க வையுங்கள்!" என்றார். ஒரே சிரிப்பு. நான் என் வழுக்கைத் தலையின் முன்புறத்தைத் தடவிக் கொண்டேன்!

அடுத்து பேச, பாலசந்தர் எழுந்தார். "என் படத்தில் உதயமூர்த்தி நடிக்கிறார்!" என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டார். சொல்லி விட்டு மேலும் கீழும் மேடையில் நடந்தார். கூட்டத்தைப் பார்த்து சட்டென்று திரும்பினார். ஒரே சஸ்பென்ஸ்! "இதோ பாருங்கள்! உதயமூர்த்தியே நாற்காலியின் முனைக்கு வந்து விட்டார்!" என்றார். விவரம் புரியாத ஆர்வம் என்னுள். நான் பேசி வருகிற பொதுக்கூட்டங்களின், சில காட்சிகளை எடுத்து அவரது சினிமாவில் உபயோ கித்திருக்கக் கூடும்" என்று எண்ணம் ஓடியது.

இதற்கு ஒரு சில மாதங்களுக்கு முன், பாலசந்தர் ஒரு கடிதம் எழுதி இருந்தார். "அன்புள்ள உதய்; உங்கள் கட்டுரைத் தொடரின் தலைப்பை நான் களவாடிக் கொண்டிருக்கிறேன்" என்று. அப்போது தான் "நம்பு தம்பி, நம்மால் முடியும்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரைத் தொடரை ஆனந்தவிகடனில் எழுதி முடித்து இருந்தேன். எனவே, 'உன்னால் முடியும் தம்பி' என்கிற தலைப்பில் படம் பிடிக்கிறார் என்பது மட்டும் ஓரளவு எனக்குத் தெரியும். என்ன சொல்லப் போகிறார் என்று. நான் அவரை நோக்கினேன்.

"உன்னால் முடியும் தம்பி" படத்தின் கதா நாயகனின் பெயர் "உதயமூர்த்தி!" என்று சொல்லி சற்று நேரம் நிறுத்தினார். என் உள்ளத்தில் ஒரு சிலிர்ப்பு: முகத்தில் ஒரு புன்னகை - என்னை அறியாமல். அடுத்து



ஓரிரு மாதங்களில் படத்தின் 'பிரிவியூ'க்காக என்னை அழைத்திருந்தார். நானும் என் மனைவியும் சென்றோம். படத்தில் கமலஹாசன் தான் கதாநாயகன் வேடம். படம் கொஞ்ச தூரம் ஓடிய பின் ஜெமினி கணேசன் - கமலஹாசனின் அப்பா - தன் மகனைக் கூப்பிடுகிறார். உரத்த குரலில் "உதயமூர்த்தி" என்று.

நான் திரை அரங்கில் பார்வையாளனாக அமர்ந்திருக்கிறேன். திரையில் தோன்றுகின்ற மனிதர் என் பெயரைச் சொல்லி என்னை அழைக்கிறார்! நான் எழுந்து மேடையை நோக்கி நடக்காத குறைதான்!... இது சினிமா என்று உணர ஒருகணம் ஆயிற்று!

"நாம் என்ன செய்து விட்டோம்? இப்படி ஒரு மனிதர், தானே முன்வந்து, ஆத்மார்த்தமாக நமக்காகச் செய்திருக்கிறாரே!" என்ற நன்றிப் பெருக்குதான் என் உள்ளத்தில் மேவியது. என்னால் அதை அவரிடம் வெளிப்படுத்த முடியவில்லை. படத்தைப் பாராட்டி விட்டு வெளியே வந்தேன்.

அவர் செய்த மிகப் பெரிய காரியத்தின் கனத்தை முழுமையாக விளக்க வேண்டுமானால் மற்றோர் விஷயத்தைக் குறிப்பிட வேண்டும். 'உன்னால் முடியும் தம்பி' படத்தைத் திரையிடுவதற்கு முன் ஒரு பிரபல அரசியல் தலைவரைப் 'பிரிவியூ' (PREVIEW) படம் பார்ப்பதற்கு அழைத்திருக்கிறார். படம் முடிந்தவுடன் அவரை அணுகி படம் எப்படி இருக்கிறது என்று பாலசந்தர் கேட்டிருக்கிறார். 'படத்தின் கதை அமைப்பையோ, டைரக்ஷனையோ, நடிப்பையோ பற்றி விமர்சிப்பார்' என்று எதிர்பார்த்த பாலசந்தரிடம்

"உதயமூர்த்திக்குப் பாராட்டு விழா எடுத்திருக்கிறீர்கள்!" என்று சொன்னாராம் அந்தத் தலைவர்! அதுதான் அவர் கண்களை உறுத்தியது!

**1997**க்கான ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் விருதினையும், பண முடிப்பையும் அளிக்க என் நூல்களைத் தேர்ந்தெடுத்திருந்தார்கள். அறக் கட்டளையின் தலைவி திருமதி தேவகி முத்தையா அவர்கள் என்னை போனில் கூப்பிட்டார்கள். "உங்களுக்குப் பிடித்த, உங்கள் நண்பர் பாலசந்தரைத் தான் உங்களைப் பாராட்டக் கூப்பிட்டிருக்கிறோம். அவரும் வருவதாக ஒத்துக் கொண்டார்" என்றார்கள். ராஜா அண்ணாமலை மன்றத்தில் அன்று - ஒரு பக்கத்திலே என்னுடைய இனிய மாணவர், 1958லிருந்து நான் பழகிய இனிய நண்பர் மிகப் பெரிய தொழிலதிபர் ஏ.சி. முத்தையா, மறுபக்கத்தில் எனது பெருமதிப்புக்குரிய நண்பர், என் கல்லூரித் தோழர், இந்தியாவின் ஒரு தலை சிறந்த டைரக்டர் பாலசந்தர்.

இதைவிடப் பெருமை, மகிழ்ச்சி ஒரு மனிதனுக்கு வேறு என்ன ஏற்பட முடியும்? வார்த்தைகளினால் வர்ணித்து விட முடியாத, ஒரு வாழ்நாள் அனுபவம்!

நாமும் உயர்ந்து, அவர்களும் உயர்ந்து - ஆத்மாவின் சங்கமம் அங்கே நிகழ்ந்து கொண்டிருந்தது. எங்கும் ஆண்டவன் நிறைந்திருப்பது போன்ற ஒரு உணர்வு. மனம் கை கூப்பியது. ஆண்டவனுக்கு நன்றி கூறிக் கொண்டி ருந்தேன். மனித உருவில் இருந்த என் நண்பர்களுக்கும் சேர்த்து - அவர்கள் கைகளைப் பிடித்துக் கொண்டு.






25

# அக்னீப்பரீட்சை!

ஆசிரியத் தொழில் என்னை வளர்த்தது. நிறைய படிக்க - விஷயங்களைத் தெரிந்து கொள்ள எனக்கு நேரம் கிடைத்தது எனினும் என்னுள்ளே ஒரு அதிருப்தி துவங்கத் தொடங்கியது. இதை (CREATIVE DISSATISFAC TION) ஆக்கபூர்வமான அதிருப்தி என்பார்கள். அதாவது "இங்கே செய்வதெல்லாம் செய்தாய் விட்டது; இனி செய்வதற்கு ஒன்றுமில்லை" என்கிற மனோபாவம். இது வெறும் அதிருப்தி அல்ல; வெறுப்பு அல்ல. நாம் அடுத்த கட்டத்திற்குப் போக வேண்டியதன் அவசியத்தை நமது உள்ளுணர்வு உணர்த்துகிறது.

வாழ்வில் பலரும் இதைப் புரிந்து கொள்வதில்லை. புரிந்து கொண்டாலும் புதிய துறையில் இறங்க ஒரு பயம் ஏற்படும்; "ரிஸ்க்' எடுத்தால் - வேலையை விட்டால் - குடும்பம் நாளைக்குச் சாப்பாட்டுக்கே கஷ்டப்படுமோ." என்கிற பயம். சொல்லப் போனால் மனிதனுக்குத் தன்மீதே நம்பிக்கை இருக்காது; அதனால் சவால்களை எடுக்க முன் வர மாட்டான்.

ஓரிடத்தில் படித்தேன். டைரக்டர் பாலசந்தரின் வாழ்வில் ஒரு கால கட்டம். அதாவது, முழு நேரமாக சினிமாத்துறையில் இறங்க வேண்டும் என்ற ஆர்வம் ஒரு பக்கம். மறுபக்கம் அக்கவுண்ட்ண்ட் ஜெனரல் அலுவலகத்தில் உள்ள வேலையை விட்டு விட வேண்டுமே - இது பத்திரமான, பாதுகாப்பான வேலை ஆயிற்றே, - நல்ல சம்பளம். மேலே பதவி உயர்வுக்கான வாய்ப்புள்ள இடமாயிற்றே - என்ற யோசனைகள்.

ஏ.வி. மெய்யப்ப செட்டியார் அவர்களிடம் போய் யோசனை கேட்கிறார். சற்று நேரம் பேசிய பிறகு இவரது

தயக்கத்தைக் கண்ட ஏ.வி.எம். கூறுகிறார் "உங்களுக்கு உங்கள் மீதே நம்பிக்கை இல்லாவிடில், நாங்கள் உங்களோடு ஒரு ஐந்தாண்டுகளுக்கு சந்தோஷமாக ஒப்பந்தம் செய்து கொள்ள தயாராக இருக்கிறோம்" என்றாராம்.

அதன் பிறகுதான் - தன்னைப் பற்றி ஏவி.எம் வைத்திருக்கும் நம்பிக்கையைப் பார்த்த பின் - பாலசந்தர் துணிந்து இறங்குகிறார்.

நான் புதிய துறையில் இறங்க வேண்டிய அவசியம் என்ன? நான் ஆசிரியத் தொழிலில் சுற்றுப்புறச் சூழல் போன்ற புதிய பாடங்களைச் சொல்லிக் கொடுத்தேன். சிறந்த ஆசிரியர் விருது பெற்றேன். ஆராய்ச்சிப் பேராசிரியராக வேலை பார்த்தேன். வேறு துறையில் - கல்வித் துறையில் மான்யம் பெற்று ஒரு புதிய கல்வித் திட்டத்தை அமெரிக்காவில் அறிமுகப்படுத்தினேன்.

மலை ஏறுகிறோம்; ஏறி முடித்த பின் என்ன இருக்கிறது? வேறு மலைகள்! எதில் ஏறலாம் என்று தேடுவது போல, 'தொழிலில் இறங்க வேண்டும்' என்ற எண்ணம் என்னுள் அரித்துக் கொண்டிருந்தது.

ஆசிரியத் தொழிலில் என் அறிவுத் திறனுக்கு மட்டுமே வாய்ப்பிருந்தது. மற்ற எல்லாத் திறமைகளுக்கும் வாய்ப்பில்லை. மேலும் தொழில் துறையில் வருமானம் - 'வானமே எல்லை' என்பது போல. நானோ என் நண்பர் களைத் தொழிலில் இறங்குமாறு ஆலோசனை கூறிக் கொண்டிருந்தேன். படிப்பை முடித்துவிட்ட எனது மூத்த மகன் சித்தார்த்தனும் எனது மனைவியும் குடும்பமாக ஒரு தொழிலைத் துவங்கி நடத்திய அனுபவமும் இருந்தது. அந்தத் தொழில் விரிவடைந்த வேகத்தைக் கண்டு அதிகக் கடன் வாங்கி, விரிவுபடுத்த அஞ்சி, தொழிலை நிறுத்தி விட்டேன்.

இதுவும் என்னை உறுத்திக் கொண்டிருந்தது. ஆனால் கல்லூரி ஆசிரியத் தொழிலில் இருந்து வேறு தொழிலுக்கு செல்வதில் பெருங் கஷ்டம் இருந்தது. புதிய துறையில் வேலை கொடுக்கப் பெரிதும் தயங்கினார்கள். ஓராண்டு கல்லூரியில் இருந்து கொண்டே முயன்றும் வேலை கிடைக்கவில்லை. நான் ஆசிரியர் வேலையை

விட்டுவிடத் தீர்மானித்தேன். அதாவது அதை விட்டு விட்டால் ஏதாவது கிடைக்கும் என்கிற நம்பிக்கை. "வேலையை விட்டு விடும்வரை நமது முயற்சி முழுமையாக இருக்காது" என்று துணிந்து வேலையை விட்டேன்.

தொழிலில் உச்சக் கட்டத்திற்குத் தலைமை நிர்வாகியாகப் போனவர்கள் எல்லாம் பெரும்பாலும் விற்பனையில் இருந்தவர்கள். அடுத்து வரவு செலவுக் கணக்கைப் பார்த்துக் கொள்ளும், தணிக்கையாளர்கள். மூன்றாவதாக மிகக் குறைந்த நபர்கள் - வழக்கறிஞர் களாக இருந்து, தொழிலுக்கு ஆலோசனை சொன்னவர்கள் தலைமை நிர்வாகியாக வந்திருக்கிறார்கள்.

எனவே நான் விற்பனைப் பிரிவைத் தேர்ந் தெடுத்தேன். வேலையை விட்ட பிறகும், இரண்டு மாதம் வரை எந்த வேலையும் கிடைக்கவில்லை. பல இடங்களில் "உங்கள் படிப்பும் தகுதியும் எங்கள் நிறுவனத்தின் தேவைக்கு ஏற்றதல்ல" என்ற கடிதம் வரும். அது உண்மையும்கூட.

**மூ**ன்றாம் மாதத்தில், ஒரு பெரிய ரசாயன கம்பெனியில் விற்பனையாளர் வேலைக்கு என்னை வந்து சந்திக்குமாறு கடிதம் வந்தது. மாநில நிர்வாகி எழுதி இருந்தார். அவரது மேலதிகாரி இங்கே வருவதாகவும், ஹோட்டலில் தங்கி இருப்பதாகவும் எனவே அங்கே பேட்டிக்கு வருமாறும் எழுதி இருந்தார்கள்.

"இவ்வளவு படிப்பு படித்துவிட்டு விற்பனையாளர் வேலைக்கா......?" என்ற ஒரு தயக்கமும் கூச்சமும் என்னுள் இருந்தது. கம்பெனி நிர்வாகிகள் இரண்டு பேரும் சேர்ந்து என்னைப் பல கேள்விகள் கேட்டார்கள். எதுவும் வேதியல் பாடத்தில் அல்ல. "எப்படி நீங்கள் விற்பனையில், எதிர்ப்பைச் சமாளிப்பீர்கள்?" என்பது போன்ற கேள்விகள். நான் பதில் சொல்லி வந்தேன். கடைசியாக என்னை மடக்குகின்ற மூன்று கேள்விகளைப் பிரம்மாஸ்திரங்களாகத் தொடுத்தார்கள்.

"நீங்கள் அதிகம் படித்திருக்கிறீர்கள். இவ்வளவு படிப்பு இந்த வேலைக்குத் தேவை இல்லை" என்றார்கள்.

"உண்மைதான். ஆனால் என்னுடைய இவ்வளவு படிப்பும் கெமிக்கல் சம்பந்தமான எல்லாவித கேள்விகட்கும் பதில் சொல்லுமே. அதை கவனித்தீர்களா? ஒரு சாதாரண விற்பனையாளர் சம்பளத்தில் இவ்வளவு விஷய ஞானத்தைப் பெறுவது உங்கள் கம்பெனிக்கு உதவுவதாகத்தானே இருக்கும்!"

"நாங்கள் இளைஞர்களைத்தான் தேர்ந்தெடுக்கிறோம். பயிற்சி கொடுத்து தயார் செய்கிறோம். உங்களுக்கோ வயது..."

"இந்த வயதில் எனக்கேற்பட்டிருக்கும் அனுபவங்களைக் கொண்டு நான் சகஜமாக அனுபவ ஞானத்துடன் எனது வாடிக்கையாளர்களிடம் பேச முடியும். ஒரு இளைஞருடன் பேசுவதைவிட எனக்கு அதிக மரியாதை கொடுப்பார்கள் என்று நான் நினைக்கிறேன்."

"விற்பனையில் எந்த அமெரிக்க நிறுவனங்களும் வெளி நாட்டவர்களை எடுப்பதில்லை; நீங்கள் பார்த்திருப்பீர்கள். காரணம் அவர்களால் வாடிக்கையாளர்களது கலாசாரத்துடன், மன நிலையுடன் ஒன்ற முடியாது. எனவே உங்களை ஏற்றுக் கொள்ளாத நிலைதான் எங்கும் இருக்கும்..."

"இல்லை இல்லை! அது அப்படியல்ல! நான் வேறு நாட்டவன்; உண்மைதான். அதனால் என்னை நன்கு நினைவு வைத்துக் கொள்வார்கள். விற்பனையாளரை நினைவு வைத்துக் கொள்வது மிக முக்கியமான விஷயம். அவர்களுக்குத் தேவை ஏற்படும்போது என் நினைவும், எனது தொழில் அனுபவமும்தான் அவர்களுக்கு நினைவு வரும். எனவே அது எனது விற்பனைக்கு சாதகமாகத்தான் இருக்கும்" என்றேன்.

இந்த ஆள் சொல்வது சரிதான் என்று பட்டிருக்க வேண்டும். மேலும் இவர் என்ன பெரிய 'விடாக்கண்டனாக' இருப்பார் போலிருக்கிறதே என்றும் எண்ணியிருக்கக் கூடும்! மூவரும் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தோம்.

"விடாக் கண்டன்' என்றதும் என் நினைவுக்கு வருவது தொழிலதிபர் ஏ.சி. முத்தையா. எனக்கு ஆறு

மாதம் முன்பாக எழுதியிருந்த கடிதம்தான். கடிதத்தின் முதல் வாக்கியமே "நான் உங்களது விடாமுயற்சியையும் சளைக்காத மனத்தையும் கண்டு அதிசயப் படுகிறேன்" என்று துவங்கி இருந்தார். இந்த வாசகம் என் மனத்தில் தேங்கி நின்று கொண்டிருந்தது; எனக்கு மேலும் தன்னம்பிக்கையை அளித்தது; உற்சாகமும் பெருமையும் தந்தது.

"ஏதோ கதை முடிந்தது; வேலை கிடைக்கும்!" என்றெண்ணிய போது, அங்கிருந்த மேலதிகாரி தன் பையிலிருந்த பேனாவை எடுத்தார். என் கையில் கொடுத்தார். "இதை எனக்கு நீங்கள் விற்க வேண்டும். இப்போது!" என்றார்.

நல்லவேளை அந்த ஹோட்டலில் இருந்த டெலிவிஷன் பெட்டியை எடுத்து விற்கச் சொல்லாமல் இருந்தாரே என்று ஆனந்தப் பட்டேன். எனினும் ஒரு கோபம். "நமது படிப்பென்ன, அனுபவமென்ன, என்ன காரியம் செய்கிறார் இந்த மனிதர்?" என்ற ஒரு வேகம். அப்போது எனக்குத் தெரியாது. இந்த நிறைய சம்பளம் வாங்கும் இரண்டு அதிகாரிகளும் பத்தாவதுகூடப் படிக்காதவர்கள் என்பது!

மறுகணமே, "தொழிலில் இறங்க வேண்டும் என்பது தான் நம் லட்சியம். இதற்கு இது ஒரு நுழைவாயில், அதைப் பார். இதைப் பார்க்காதே. நாளைக்கு இவர்கள் எல்லாம் யாரோ? நீ எங்கோ? என்பன போன்ற எண்ணங்கள் எழுந்து எனக்கு ஒரு அசாதாரண தெம்பை, உற்சாகத்தை ஊட்டின.

மேலும் ஒரு எழுத்தாளனுக்குப் பேனாவை விற்பதா பெரிய காரியம்? பேனாவைப் பற்றிய வர்ணனையில் அவர் சொக்கிப் போனாரோ என்னவோ எனக்குத் தெரியாது - அமெரிக்கர்கள் நம்மைப் போல் அவ்வளவு தூரம் உணர்ச்சியை வெளியில் காட்ட மாட்டார்கள் - மேலதிகாரி எழுந்து என்னுடன் கை குலுக்கினார். "வாழ்த்துக்கள்!... எப்போது சேர முடியும்?" என்றார்.

26

## விற்பனை - ஒரு கலை!

ரசாயனப் பொருள்களை விற்கும் ஒரு பெரிய நிறுவனம். ஆண்டு தோறும் அவர்களது விற்பனை நூறுமில்லியன் டாலர் (பத்துக் கோடி டாலர்). அதில் எனக்கு ஒரு மாநில அளவுக்கு விற்பனை செய்யும் வேலை. வாரா வாரம், ஏறத்தாழ 500 மைலிலிருந்து 800 மைல் வரை காரில் பயணம் இருக்கும். ஒரு சில வாரங்களில் ஆயிரம் மைல் கூட போட்டிருக்கிறேன்.

கோகோ கோலா போன்ற பானம் தயாரிக்கும் நிறுவனங்கள், பால், பால் கட்டி, பால் பவுடர் தயாரிக்கும் நிறுவனங்கள், உணவைப் பதப்படுத்தும் நிறுவனங்கள்தான் எங்கள் முக்கிய வாடிக்கையாளர்கள்.

பேராசிரியர் என்ற அறிவு உலகிலிருந்து திடீரென்று அன்றாட விற்பனை உலகில் இறங்குவது ஒன்றும் சுலபமாயில்லை. ஒரு கூச்சம், தயக்கம், எனது படிப்பைப் பற்றிய நினைவு இவை எல்லாம் தடைகளாக இருந்தன.

ஆனால் ஒரு மிகப் பெரிய விஷயம் எனக்கு உதவியது. அதாவது நான் ரசாயனத்தின் ஒரு கோடியிலிருந்து மறு கோடி வரை எல்லாத்துறைகளிலும் - மருத்துவ ரசாயனம், பொறியியல் துறையியல் வேதியல் கல்வி, சுற்றுப்புறச் சூழல், உணவுத் தொழிலில் என்று வெவ்வேறு துறைகளில் பயன்படும் வேதியல் பொருள்களைப் பற்றிய படிப்பும், தெளிவும் இருந்தது. இது எனக்குப் பெரிதும் உதவியது.

எங்கே எந்த நிறுவனத்தில் போய் உட்கார்ந்தாலும் சரி அந்தத் தொழிலைப் பற்றிய "தொழில் பத்திரிகைகள்" விற்பனையாளர்கள் காத்திருக்கும் அறையில் மேஜை மீது இருக்கும். நான் அதைப் படிப்பதுண்டு. சில சமயம்

அவர்களைக் கேட்டு பழைய பிரதிகளை எடுத்துச் செல்வதுண்டு. பல சமயம் எனது தொழில் சம்பந்தமான பல்வேறு துறையிலுள்ள பத்திரிகைகளுக்கும் சந்தா கட்டி வரவழைப்பதுண்டு. இதனால் என்ன பொருளை எதற்காக உபயோகிக்கிறார்கள் என்பது எனக்குத் தெரிந்தது. என்னென்ன புதிய பொருள்கள், மார்க்கெட்டிற்கு வந்திருக்கின்றன என்பது தெரிந்தது. தொழில் பத்திரிகைகளில் வரும் விளம்பரத்தைப் படித்தாலே போதும்; எதெதை எங்கே உபயோகிக்கலாம் என்பதைத் தெளிவாக விளம்பரப்படுத்தி இருப்பார்கள்; புரிந்து கொள்ளலாம்.

இந்த அறிவு - இந்தப் பின்னணிதான் என்னை முன்னணியில் நிறுத்தியது. சிலமாதங்களில் எனது கூச்சத்தை விட்டுவிட்டு எல்லோருடனும் "ஹலோ வால்டர்" என்று அவர்களது முதல் பெயரைச் சொல்லி சகஜமாகப் பழக ஆரம்பித்தேன்.

விற்பனையில் நான் தெரிந்து கொண்ட முக்கிய மான விஷயம் - கடைப் பிடித்த ஒரு நல்ல விஷயம் - எந்தப் போட்டி கம்பெனியையும் அவர்களது பொருள் களையும், குறைவாக, அல்லது தாழ்த்திப் பேசக் கூடாது என்பதுதான்.

"அவர்கள் நல்ல நிறுவனம். அருமையான பொருள்களைத் தயாரிக்கிறார்கள்" என்று சொல்லிய பின் மிருதுவாக எங்கள் பொருள்களின் தரத்தையோ, தனித்தன்மையையோ விளக்குவேன். சகஜமாக பொருளின் விலையைப் பற்றி பேசுவதில்லை; அதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை.

காரணம், ஒரு சமயம் டெங் சோ பிங் என்ற பிரபல சீனத் தலைவர் சொன்னதுதான் நினைவுக்கு வருகிறது.

"எலிப்பொறியின் தொழில் நுட்பங்களை எல்லாம் எனக்கு விளக்காதீர்கள்; அது எலியைப் பிடிக்குமா, என்பதைச் சொல்லுங்கள்!" என்பார். அது போல நமது பொருள், சொன்ன வேலையைச் செய்யுமா என்பதில்தான் அதிக கவனம் செலுத்துவார்கள் அங்கே.

அடுத்ததாக ஒரு முக்கிய விஷயம். அதாவது அங்கே நீங்கள் ஒரு விற்பனையாளருடன் பேச்சுக் கொடுத்தால்

போதும். மார்க்கெட்டில் என்னென்ன புதுமைகள் வந்துள்ளன? மார்க்கெட் எப்படி இருக்கிறது? என்கிற எல்லா விவரங்களையும் ஒரு புத்தகத்தைப் படிப்பதை விட அதிகமாகத் தெரிந்து கொள்ளலாம்!

இதன் காரணமாக நான் எங்கள் நிறுவனத்தின் விற்பனையாளர்களுடனும், மேலதிகாரிகளுடனும் (Technical Advisor) தொழில் நுட்ப ஆலோசகர் என்ற பெயரோடு பெரிய நிறுவனங்களுடன் வியாபாரத் திற்காகச் செல்வேன்.

மூன்று நான்கு மாதம் கழித்து, தொழில் பிடித்துக் கொள்ளத் துவங்கியது. அந்த ஆண்டு முடிந்த போது சிகாகோ தலைமையகத்தில் ஆண்டு நிறைவு நாள் கொண்டாடினார்கள். பெரிய விருந்திற்கும், பலருடனும் கலந்து பேசுவதற்கான வாய்ப்பையும் ஏற்படுத்தி இருந்தார்கள்.

அங்கே, தேசியத் தலைமை விற்பனை நிர்வாகி என்னை அழைத்தார். அவர்களது ரசாயன சோதனைக் கூடத்தை நான் சென்று பார்க்க ஏற்பாடு செய்தார். அங்கே தலைமை ஆராய்ச்சியாளரிலிருந்து சுமார் 25 பேர் தீவிரமான ஆராய்ச்சியில் - புதிய பொருள்களுக்கான முயற்சியில் ஈடுபட்டிருந்தனர். விருந்தில் அவருக்கருகில் என்னை அமரச் சொன்னார். பலவற்றையும் பேசிக் கொண்டிருந்தபோது சொன்னார்: "ஆராய்ச்சிக் கூடம் தனியாக இயங்குகிறது; அதே போல விற்பனைப் பிரிவு தனியாகச் செயல்படுகிறது. ஆராய்ச்சியாளர்களுக்கு மார்க்கெட்டின் தேவை பிடிபடுவதில்லை. ஆகவே இரண்டையும் இணைக்கும் ஒரு புதிய பதவியை உருவாக்க வேண்டும் என நினைக்கிறேன். நீ எடுத்துக் கொள்கிறாயா?" என்றார்.

"மிக நல்ல யோசனை அது" என்றேன். எனது பதவி உயர்வு, அடி மட்டத்தில் விற்பனையாளரிலிருந்து, நேரடியாக தேசிய தலைமை விற்பனை நிர்வாகிக்கு உதவியான பெரிய பதவியாக மாறிற்று. எனக்கு மகிழ்ச்சி, பெருமை. முகமெல்லாம் பல்!

இது எப்படி நிகழ்ந்தது?

இது எப்படி சாத்தியமாயிற்று என்பதை விளக்க அதற்கு முன் நடந்த சில சம்பவங்களைக் குறிப்பிட வேண்டும்.

விஸ்கான்சின் மாநிலத்தில் ல-கிராஸ் என்ற நகரம். அங்கே 'பாட்டிலிங்' - குளிர்பானம் செய்யும் இரண்டு நிறுவனங்கள். ஒன்று சிறியது. மற்றொன்று பெரிய நிறுவனம். இந்தச் சிறிய நிறுவனம் முன்னதாகவே எங்களது வாடிக்கையாளர். இப்போது எல்லோருடைய கண்ணும் அந்தப் பெரிய நிறுவனத்தில்தான்!

மாதம் ஒரு முறை ல-கிராஸ் செல்வேன். அங்கே வரவேற்பறையில் டைப்ரைட்டருடனும் போனுடனும் இருக்கும் பெண்மணியிடம் நமது விலாச அட்டையைக் கொடுக்க வேண்டும். சிரித்துக் கொண்டே "எப்படி இருக்கிறீர்கள்?" என்று கேட்டால் போதும். அவர்களுடன் ஒரு சகஜமான நிலைக்கு வந்து விடுவோம். அதாவது தலைமை நிர்வாகியின் காரியதரிசி உங்களை நன்கு நினைவு வைத்துக் கொள்ள வேண்டும்! அடிக்கடி போவதன் மூலம், பேசிப் பழகுவதன் மூலம், இது சாத்தியம்.

ஆறு மாதம் சென்றிருக்கும். ஒவ்வொரு முறையும், "அவர் நிர்வாகிகளுடன் ஒரு முக்கியமான கூட்டத்தில் இருக்கிறார்" என்ற பதிலோ "இல்லை! இன்று பார்க்க முடியாது" என்ற பதிலோ வரும். எனக்குப் புரியவில்லை. என்னைப் பார்க்க மறுக்கிறாரா? அல்லது உண்மையிலேயே அப்படி அதிக வேலையா அவருக்கு என்பது.

கடைசி முறை சென்றபோது வரவேற்பறைப் பெண்மணியிடம் சொன்னேன். "இதோ பாருங்கள்! இரண்டே நிமிடம்! உங்கள் நிறுவனத்திற்கு உபயோகமான விஷயத்தைச் சொல்ல வேண்டும். அவ்வளவுதான்!" என்றேன். அவருக்கும் இப்படி நான் அலைவதில் அனுதாபம் ஏற்பட்டிருக்க வேண்டும். உள்ளே போனார்.

சிரித்துக் கொண்டே வந்து "உள்ளே செல்லுங்கள்! அவர் காத்திருக்கிறார்" என்றார்.

உள்ளே சென்றேன்.

"ஐயா! உங்கள் நேரத்தை நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. இந்தப் பகுதியில் கிடைக்கும் நீர், மிகுந்த கனமான ரசாயனப் பொருள்களைக் கொண்டது. எனவே பாட்டில்களைக் கழுவ, நீங்கள் ஏராள ரசாயனப் பொருள்களை உபயோகிக்க வேண்டும். முதலில் இந்த நீரை மிருதுவாக்க, சுத்தப்படுத்தும் ஒரு சிறு சாதனத்தை உபயோகித்தீர்களானால் உங்களுக்கு ஆயிரக் கணக்கான டாலர்கள் ஆண்டுதோறும் மிச்சமாகும். இதைத்தான் இந்த ஊரில் உள்ள பக்கத்து நிறுவனத்தில் சிபாரிசு செய்திருக்கிறோம். அதைச் சொல்லிவிட்டுப் போகத்தான் வந்தேன்" என்றேன்.

"அப்படியா? என்றார். பின் "எங்கிருந்து வருகிறீர்கள்?" என்றார். அதன் பின் "எங்கள் ரோட்டரி சங்கத்தில் இருக்கும் பேராசிரியர் சுரேந்திர சிங்கைத் தெரியுமா," என்றார். "ஆம்! அவர் என் நண்பர்தான்" என்றேன் "உட்காருங்கள்" என்றார். அமர்ந்தேன்; அரை மணி நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

"இன்னும் நான்கு மாதத்தில் கட்டடத்தின் அமைப்பையே, உற்பத்திக்காக மாற்றிக் கட்டப் போகிறோம். அப்போது வாருங்கள். ரசாயனப் பொருள்கள் சப்ளையை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்!" என்றார்.

மகிழ்ச்சியுடன் திரும்பினேன். எனினும் "நான்கு மாதங்கள்! எந்த ராஜா எந்த பட்டமோ? வந்த அன்றுதான் நிஜம்!" என்று எனக்கே சொல்லிக் கொண்டு நான் என் வேலையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

அடிக்கடி சென்று அவரைத் தொந்தரவு செய்வதை நான் விரும்பவில்லை.

டிசம்பர் மாதம். அதே ஊரில் உள்ள பிற வாடிக்கையாளர்களைப் பார்க்க அந்த ஊர் ஓட்டலில் தங்கி இருந்தேன். போன் கால்! என் மனைவி கூப்பிட்டார். "உங்களை கோகோ கோலா கம்பெனிக் காரர்கள் கூப்பிட்டார்கள்!"

"என்ன சொன்னாய்?"

"நீங்கள் அதே ஊரில்தான் இருப்பதாகச் சொன்னேன். 'இதே ஊருக்கு வந்திருந்து என்னைப் பார்க்கவில்லையா?' என்று கோபித்துக் கொண்டார்!"

செல்லக் கோபம்!

அவரைப் போய்ப் பார்த்தேன். கட்டடத்தைக் கட்டி முடித்திருந்தார்கள். தண்ணீரை மிருதுவாக்கும் கருவியைப் பொருத்தி இருந்தார்கள். "நமது தொழிற் சாலைக்கான ரசாயன வேலையை நீங்கள் எடுத்துக் கொள்ளலாம்" என்றார்.

உடனே சிகாகோ தலைமையகத்தைக் கூப்பிட்டேன். அவர்களுக்கு ஆச்சரியம்! இது ஒரு பெரிய வியாபாரம். அன்று மத்தியானம் பூராவும் சிகாகோ விற்பனைப் பிரிவில் "இந்த (Silly Indian Nut) இந்தியன், இதை எப்படிச் செய்தான்" என்றே பேசிக் கொண்டதாக அறிந்தேன். பின்னால்தான் எனக்கு விஷயம் தெரிந்தது.

எங்கள் நிறுவனத்திற்கு அந்த கோகோ கோலா நிறுவனத்துடன் முன்பே வியாபாரத் தொடர்பு இருந்ததென்றும், ஒரு விற்பனையாளர் செய்த குளறு படியினால், "இங்கே தலைகாட்ட வேண்டாம்!" என்று சொல்லி இருக்கிறார்கள் என்பதையும் அறிந்தேன்!

நான் தெரிந்து கொண்ட வியாபார நுணுக்கம்: "முதலில் உன் பொருளைப் பற்றிப் பேசாதே. அவர்களுடைய தேவையை உணர்ந்து கொள். அதைப் பூர்த்தி செய்ய முடியுமா பார்!" என்பதுதான்.

**ம**ற்றோர் சம்பவம்:

ஒரு சமயம் பால், வெண்ணெய் பதப்படுத்தும் ஒரு பெரும் நிறுவனத்திற்குச் சென்றேன். பல முறை சென்றிருக்கிறேன் - அவர்களுடன் எனக்கு நல்ல பரிச்சயம், பிரியம் உண்டு. அன்று அந்த நிறுவனத்தின் உற்பத்திப் பிரிவின் நிர்வாகி என்னைத் தம் அறைக்கு அழைத்துச் சென்றார். அவருக்கு என் படிப்பு அனுபவம், எல்லாம் தெரியும்.

"இதோ பார், நெப்ராஸ்கா மாநிலத்தில், தயிரைப் பவுடராக்கும் ஒரு நிறுவனம் விலைக்கு வந்திருக்கிறது.

வாங்குவதாக இருக்கிறோம். அதை நீ நிர்வகிக்க வர முடியுமா?'' என்றார்.

அப்படி அவர்கள் என்னை நினைத்து, என் மீது நம்பிக்கை வைத்திருப்பது எனக்கு ஆச்சர்யமாக இருந்தது. மிகப் பெருமையாக இருந்தது.

இரண்டு வாரம் கழித்து நான் அடுத்த மாநிலத்தில் என் விற்பனைப் பகுதியில் உள்ள மற்ற பாதியில் உள்ள ஒரு பெரிய பால் பவுடர் செய்யும் நிறுவனத்திற்கு விற்பனை விஷயமாக - (சகஜமான விஜயம்) போயிருந்தேன். அவர் என்னை "வாருங்கள்! மதிய விருந்து சாப்பிடுவோம்" என்று அந்த ஊரில் உள்ள பணக்காரர்கள் கூடும் (Country Club) நகர சங்க கட்டிடத்திற்கு அழைத்துச் சென்றார்.

என்னால் நம்ப முடியவில்லை; சொன்னார். "முத்து! நெப்ராஸ்காவில் ஒரு நல்ல கம்பெனியைப் பார்த்துவிட்டு வந்தேன். அது எங்கள் நிறுவனத்தின் பொருள்களுடன், செய்முறைகளுடன் அந்த தொழில் மிகவும் தொடர்பு கொண்டது. அங்கே 'பட்டர் மில்க் பவுடர்' மோர்ப் பவுடர். செய்கிறார்கள். அதைப் பார்த்ததும் எனக்கு உன் நினைவுதான் வந்தது. நீ வருவதாக இருந்தால் மட்டுமே நான் அதை எடுத்துக் கொள்வதாக இருக்கிறேன்!'' என்றார்.

எனக்கு இன்ப அதிர்ச்சி. இப்படி எங்கேயோ உள்ள இரண்டு பேர் ஒரே தொழிலை வாங்க நம்மை விரும்பி, அழைக்கிறார்களே என்ற மலைப்பும், பெருமையும் என்னுள் பிடிபடவில்லை.

அதாவது விற்பனை செய்யப் போகுமிடத்தில் அங்கே நான் அவர்களுடன், விற்பனையைக் கடந்து, அவர்களுடைய மொத்தத் தொழில் பற்றியும் அதன் வளர்ச்சி பற்றியும் நாட்டின் தொழில் நிலைமை பற்றியும் - பல விஷயங்களைப் பேசுவேன். நாம் பேசுவதில் அர்த்தம் இருக்கும்போது அவர்கள் ஆர்வத்துடன் கேட்பார்கள். நீங்கள் வெறும் விற்பனையாளர்தான். ஆனால் விற்பனையாளராக மட்டுமே இருக்க வேண்டிய தில்லை! உண்மையில் தொழிலில் ஈடுபாடும், ஆர்வமும் இருக்குமானால், வாய்ப்புக்கள் தானே வரும் நிறைய!

நான் அந்த நிறுவனத்தின் நிர்வாகத்தை எடுத்துக் கொண்டேனா? இல்லை. அதை விடப் பெரிய ஒரு நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் போய்ச் சேர்ந்தேன்! எப்போது? ஓராண்டு விற்பனையாளராகப் பணியாற்றி முடிவதற்குள்!






27

## எண்ணங்கள் உருவாக்கிய சூழ்நிலை!

நான் ஒரு விற்பனையாளன். என் உள்ளமோ என்னை வெறும் விற்பனையாளனாக நிறுத்திக் கொள்ள வில்லை. அமெரிக்காவில் சிறிய நிறுவனங்கள், பெரிய நிறுவனங்கள், என்று பலவும் ஆச்சரியமான பல பொருட்களை விற்பனை செய்து கொண்டிருந்தார்கள்.

எப்படி இந்த எண்ணம் இவர்களுக்குத் தோன்றியது? ஒரு சிறு எண்ணம் - சாதாரண எண்ணம் - எப்படி ஒரு மிகப் பெருந்தொழிலாக மலர்ந்தது என்று வியப்பேன். அவர்களது பொருள் பற்றியும் அவர்களது போட்டி நிறுவனங்கள் பற்றியும் எனக்கு நன்கு தெரியும். எனவே அங்கே செல்வேன், விற்பனைக்காக.

அங்கே எனது பொருட்களைப் பற்றிப் பேச மாட்டேன். அவர்களது கம்பெனியைப் பார்த்து என் ஆச்சரியத்தை எடுத்து வைப்பேன். அவர்களது பொருட் களைப் பற்றிப் பேசுவேன். போட்டி நிறுவனங்களின் பொருட்களைப் பற்றியும் அவர்களின் அணுகுமுறை பற்றியும் பேசுவேன்.

ஒரு விற்பனையாளரான நீங்கள் உங்கள் பொருளைப் பற்றிப் பேசும்போது நீங்கள் தற்காப்புடன் பேச வேண்டும்; அவர்களுக்குப் பதில் சொல்லும் நிலையில் (Defence) நீங்கள் இருக்கிறீர்கள். ஆனால் அவர்கள் நிறுவனத்தைப் பற்றியோ அல்லது அவர்களது பொருட்களைப் பற்றியோ அர்த்தத்துடன் பேசும்போது நீங்கள் சம நிலையில் பேசுகிறீர்கள்; உறவாடுகிறீர்கள்.

அவர்களது நிறுவனம் பற்றி உங்கள் சந்தேகங்களையோ அல்லது அவர்களது வெற்றிக்கான காரணங்களையோ நாம் கேட்கத் துவங்கும்போது

அவர்கள் ஆர்வத்துடன் பேசுவார்கள். விற்பனைக்குப் போகும்போது, முதலில் மனித உறவுகளை நேர்மையுடன், மரியாதையுடன், அக்கறையுடன் பலப்படுத்திக் கொள்ள வேண்டும்.

அதற்குப் பின் அவர்களே நமது நிறுவனத்தைப் பற்றியும் நமது பொருளைப் பற்றியும் கேட்பார்கள். இதனால் என்ன ஏற்பட்டது?

நான் பொருளை மட்டும் விற்கவில்லை; என்னையும் - என்னை அறியாமல் விற்றுக் கொண்டிருந்தேன் போலும்! பல இடங்களில் என்னை அவர்களது நிறுவனத்தின் வளர்ச்சிக்கு என்ன செய்யலாம், என்று யோசனை கேட்டார்கள். சிறு குறிப்பாக எழுதித்தரச் சொன்னார்கள். முடிவில் அங்கே ஆலோசகராக இருந்து உதவ முடியுமா என்று கேட்டார்கள்.

அது ஒரு சிறிய நிறுவனம். நல்ல நிறுவனம். அசாதரணமான பொருளைத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். அதாவது தீப்பிடிக்காத கூரைக்கான பலகைகளை, மரத்தின் துருவல்களிலிருந்து செய்து விற்றார்கள்.

இரண்டு மூன்று முறை அங்கே சென்று வந்தபோது, அவர்களது தொழிற்சாலையைச் சென்று பார்வையிட என்னை அழைத்துச் சென்றார்கள்; காட்டினார்கள்.

மரங்களை மெலிதாக கூரான உளியினால் இழைப்பதன் மூலம், தேங்காய்த் துருவல் போல - சுருள் கம்பி போல - நெருப்புக் குச்சி அளவில் மரத் துருவல்கள் கிடைக்கின்றன. அதற்குப் பிறகு ஒரு ஏழெட்டு கட்டங்களைக் கடந்து ஈரமான அந்த துருவலை சிமெண்ட் கலந்த தண்ணீரில் நனைக்கிறார்கள். பின், பதப்படுத்துகிறார்கள். கூடு பாய்ந்த மரத்துருவல்களா லான - சப்தத்ததை வாங்கிக் கொள்ளும் - தீப்பிடிக்காத சிமெண்ட் பலகைகள் உருவாயின.

நிர்வாகி வந்தார். "நான் ஒரு பொறியியல் படித்த நிர்வாகி. இந்தச் செய்முறை இருக்கிறதே இதை ஒரு ஜெர்மன் பேராசிரியர் கொடுத்தார். 17 ஆண்டுகளாக இதைத்தான் உபயோகிக்கிறோம். ஏன் இந்த ஏழெட்டு

கட்டங்கள் என்றோ, மற்ற எதுவுமோ சொல்ல மறுக்கிறார். நாங்கள் அவருக்கு ராயல்டி தொகை மாதா மாதம் அனுப்பிக் கொண்டிருக்கிறோம். இந்த செய்முறையை சுருக்கலாம் என்று நான் நினைக்கிறேன். இதை எல்லாம் படித்துப் பார். பிறகு நான் உன்னுடன் பேசுகிறேன்'' என்று சொல்லி ரகசியமான செய்முறை களை எல்லாம் எடுத்துப் போட்டார்!

எனக்கு வியப்பு ஒரு பக்கம்; மலைப்பு ஒரு பக்கம். இப்படி இந்த நிறுவனத்தின் மூலதனமான ரகசிய செய்முறைகளை எல்லாம் நம்மிடம் ஒப்படைக்கி றார்களே என்ற எண்ணத்திலிருந்து என்னால் நெடு நேரம் மீள முடியவில்லை. அந்த மலைப்பு நீங்காமல் அவர்கள் கொடுத்த தாள்களை எடுத்துக் கொண்டு எழுந்தேன்.

வீட்டிற்குச் சென்று படித்துப் பார்த்தேன். அவர்களது தொழிற்சாலையைப் பார்வையிட்டபோதே ஒவ்வொரு கட்டத்திலும் அந்த மரத் துருவல்களுக்கு என்ன நேர்கிறது. என்ன செய்கிறார்கள், ஏன் செய்கிறார்கள் என்பது எனக்குப் புரிந்தது. அந்தச் செய்முறையில் சூட்சுமமான முக்கிய கட்டம் எது என்பதும், அங்கே என்ன செய்ய வேண்டும் என்பதும் எனக்குப் புரிந்தது.

பிரச்னையை மனத்தில் ஊறப் போட்டேன். இரண்டு மூன்று வாரம் கழித்து 'டியுபாண்ட்' என்ற பிரபல ரசாயன நிறுவனத்தின் மாதாந்திர வெளியீடு வந்தது. தற்செயலாக அதைப் புரட்டிக் கொண்டிருந்தேன். எனக்குப் பொறியில் தட்டினாற்போல ஓர் உணர்வு. ஒரு புதிய கண்டுபிடிப்பை அவர்கள் வெளியிட்டிருந்தார்கள். தண்ணீரின் தன்மையை மாற்றும் ஒரு பொருளை அறிமுகப்படுத்தி எழுதியிருந்தார்கள்.

அதை வாங்கினேன். அந்த புதிய பொருளை உபயோகித்து ஏழெட்டுக் கட்டங்களை உதறித் தள்ளி ஒரே கட்டத்தில் அந்த மரத் துருவல்களைப் பதப்படுத்தும் முறையைச் செய்தேன்; அது சரியாக வேலை செய்தது! அந்தப் பொறியியல் நிர்வாகி என்னைப் பாராட்டினார்; 'செக்'கையும் கொடுத்தார்!

அதன் பின் பல நிறுவனங்களில் எனது வேலை யுடனேயே பல ஆலோசனைகளைக் கூறினேன். ஒரு சமயம், நான் தயாரித்திருந்த ஓர் உணவுப் பொருளைக் கண்ட, ருசி பார்த்த, அதன் தன்மைகளை அறிந்த ஒரு நிர்வாகி என்னை ஒரு பில்லியன் டாலர் கம்பெனிக்கு ஆலோசனை கூறி ஒரு புதிய நிறுவனத்தை உருவாக்கும் பணிக்கு அழைத்தார். அது பெரிய கதை. நானும் என் மனைவியும் சில மாதங்கள் அவர்களுக்கான பொருளை உருவாக்கிக் கொடுத்தோம்.

**நா**ன் விற்பனையாளன் என்ற நிலையிலிருந்து எப்படி ஒரு நடுத்தர வருமானம் (medium sized industry) கொண்ட ஒரு பெரிய நிறுவனத்தின் தலைமை நிர்வாகியாகப் பதவி ஏற்றேன் என்பதைச் சொல்ல வேண்டும்.

ஒரு இத்தாலிய உணவுப் பொருளை - 'பிட்சா' எனப்படும் 'ரெடிமேடு' உணவுப் பொருளை - உறைந்த குளிர் நிலையில் (frozen) பெரும் பெரும் கடைகளுக்கு விற்கும் ஓர் நிறுவனம், அது.

இத்தாலிய உணவுப் பொருட்கள் எனக்கு மிகவும் பிடிக்கும். நமது ஊர் உணவின் ருசி போல, அதை ஒத்ததாக இத்தாலிய உணவு இருக்கும். 'நூடுல்ஸ்' எனப்படும் சேமியாவில் செய்யும் உணவு வகைகள் "ஸ்பகெட்டி" என்ற பெயரில் புகழ் பெற்ற இத்தாலிய உணவு. 'பிட்சா' எனப்படும் ஒரு வகை ரொட்டியில் தக்காளிப் பழத்தின் காரக்கலவையையும் 'சீஸ்' எனப்படும். பால்கட்டியையும் சேர்த்து செய்யப்படும். பல்வகை பிட்சா உணவுப் பொருட்கள் - மற்றும் நமது ஊர் சமோசா போன்ற இத்தாலிய உணவுப் பொருட்கள் - இவை எல்லாம் மிகவும் பிரபலமானவை.

வெள்ளிக்கிழமை மாலை வீடு திரும்பும்போது அங்குள்ள இந்த இத்தாலிய உணவுக் கம்பெனியின் தொழிற்சாலைக்குச் செல்வேன். தொழிற்சாலையில் நேரடி விற்பனை உண்டு. அங்கு சென்று எனக்குப் பிடித்த உணவுப் பொருட்களை, வாங்கிச் செல்வேன். வீட்டில் அதை சூடுபடுத்திச் சாப்பிட வேண்டியதுதான்; அவ்வளவு எளிது.

வாங்கிப் போய் சாப்பிட்ட போதுதான் ஒரு விஷயம் எனக்குப் புரிந்தது. அது புகழ்பெற்ற நிறுவனம்; எனினும் பொருளின் தரம் மிக மோசமாய் இருந்தது. இது என்னை மிகவும் பாதித்தது; கோபமூட்டியது.

இரண்டு மாதம் கழித்து, ரசாயனப் பொருளின் விற்பனையாளனாக, அந்த நிறுவனத்தின் தலைமை யகத்திற்குச் சென்றேன். தட்ப வெப்ப நிலையைப் பற்றி விசாரித்த பின் விஷயத்திற்கு வந்தோம். அந்த நிர்வாகி உற்சாகமான மனிதர்; சகஜமாகப் பழகினார். நான் கேட்டேன்.

"உங்கள் நிறுவனத்தின் பொருள்களின் விற்பனை வெகு வேகமாக இறங்கிக் கொண்டு வருமே?" என்றேன்.

"ஆம்! உனக்கெப்படித் தெரியும்?" என்றார்.

"பொருளை வாங்கினேன். தரம் மிக மோசமாய் இருந்தது. ஒவ்வொரு வாரமும் நீங்கள் உற்பத்தி செய்யும் ஒரு லட்சம் பொருளை வாங்குபவர்களும் தங்களுக்குத் தெரிந்த எட்டு பேரிடம் சொன்னால் எட்டு லட்சம் வாடிக்கையாளர்களை நீங்கள் வாரந்தோறும் இழப்பீர்கள்!" என்றேன்.

"ஆம்!" என்றார்.

"இவ்வளவு புகழ்பெற்ற கம்பெனி, இப்படியா செய்வது?" என்று கேட்டேன்.

"முதலில் பொருளின் தரத்தை சரிப்படுத்துங்கள். பின் பிற துறைகளில் குறிப்பாக மெக்சிகன் உணவுப் பொருட்களை கூடவே உற்பத்தி செய்வதில் இறங்குங்கள். அதற்கு மார்க்கெட் வளர்ந்து வருகிறது" என்றேன்.

மனிதர் என்னை இரண்டு மணி நேரம் விடவில்லை. நெடு நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

"இந்த நிறுவனத்தின் சொந்தக்காரரர் பெரிய சந்தேகம் கொண்ட மனிதர். நீ யோசனை சொன்னால், "ஏன் இவன் யோசனை சொல்கிறான்?" என்று சந்தேகிப்பார். எதற்கும் உன் எண்ணங்களை எழுதிக் கொடுத்துவிட்டுப் போ! அவர் மேஜை மீது வைக்கிறேன்" என்றார்.

நான் இதை 'சீரியசாக' - மிக முக்கியமானதாக - எடுத்துக் கொள்ளவில்லை. "நல்லது சொல்லலாம். ஆனால் அதை எடுத்துக் கொள்வதும், எடுத்துக் கொள்ளாததும் நம் கையில் இல்லை. அவர்கள் இஷ்டம்" என்ற ஒரு பற்றற்ற நிலையுடன் எடுத்துக் கொண்டேன்.

"எனினும் ஊதுகிற சங்கை ஊதி வைப்போம்." என்று நான்கு பக்கத்திற்குச் சில யோசனைகளை எழுதி - பொருளின் தரத்தை உயர்த்தவும், பிற துறைகளில் இறங்கவும் - என் கருத்துக்களைத் தெரிவித்து தபாலில் அனுப்பிவிட்டு, மறந்து விட்டேன் அது பற்றி.

"டாக்டர் முத்து!" என்றொரு குரல், ஒரு நாள் போனில். முத்து எனது தாத்தா பெயர்! அமெரிக்காவில் முத்து என்பது எனது முதல் பெயராகவும், உதயமூர்த்தி என்பது குடும்பப் பெயராகவும் மாறியது! அதாவது எனது பெயர் முத்து, சிங்காரம், உதயமூர்த்தி; தாத்தா - தந்தை - மகன் என்ற வரிசையில். சாதிப் பெயர்தான் கடைசிப் பெயராக - குடும்பப் பெயராக இருக்க வேண்டும்; ஆனால் சாதிப் பெயரைத்தான் துறந்து விட்டோமே!

"உன் யோசனைகளைப் படித்துப் பார்த்தேன். மிக நல்ல யோசனைகள். என்னை வந்து சந்திக்க முடியுமா?" என்று கேட்டார்.

அவரை சந்தித்தேன். பேசினோம். அவருக்கு என் மீது நம்பிக்கை ஏற்பட்டது. சொன்னார்: எங்கள் பொருளின் தரம் மிக மோசமாய்த்தான் இருக்கிறது. இதை நீ மாற்றித்தர இயலுமா?" என்றார். "நிச்சயமாக!" என்றேன். பிறகு ஒரு நான்கு மாதங்கள் அவர்களுக்கு ஆலோசகனாக பணியாற்றினேன்.

முதலில் அவர்கள் தொழிற்சாலையைப் பார்வை யிட்டேன். அவர்கள் செய்முறையை அக்கு வேறு ஆணி வேறாகப் புரிந்து கொண்டேன். கோதுமை மாவுப் பொருளின் குணங்கள் பற்றிய ஆராய்ச்சி நூல்களை - நூல் ஒன்று 200 டாலர் - வாங்கினேன். எதைச் சேர்த்தால் வெளியில் முறமுறப்பாக அதே சமயம் உள்ளே மிருதுவாக அவர்களது அடித்தள ரொட்டிமாவு வரும்

என்பதைப் புரிந்து கொண்டேன். பின்னால் தக்காளிப் பழக்கலவையின் சுவையை மாற்றினேன்.

இதில் முக்கியமான விஷயம் என்னவென்றால் ஒருமுறை அவர்கள் பிசையும் மாவு சுமார் 200 கிலோ. மிஷினில் அதற்கேற்ற தண்ணீர், வெண்ணெய், நொதிக்க வைக்கும் 'ஈஸ்ட்,' சர்க்கரை என்று பல பொருட்கள்.

ஒரு தவணையில் நமது கலவை சரியில்லை என்றால் நஷ்டம் 500 டாலர். அது மட்டுமல்ல அந்த அளவு உற்பத்தி நேரம் வீணாகும்; வேலை நடக்காது. இது அதிகம் பரீட்சை செய்கிற விஷயமல்ல; பரீட்சை செய்யாமலும் இருக்க முடியாது!

சிறிய அளவில், குடும்பத் தலைவி ரொட்டி செய்கின்ற அளவுகளை, அப்படியே பெரிய அளவில் எடுத்துச் செய்ய முடியாது; செய்தால் சரியாக வராது.

நான்கு மாதம் கஷ்டப்பட்டேன். யோசித்தேன் - ஆராய்ந்தேன். பல புதிய பொருட்களுடன் பரீட்சை செய்தேன். கடைசியாக ஒரு கலவை என் மனதுக் கேற்றவாறு உயர்தரமாக அமைந்தது. எனக்கு சந்தோஷம். சோதனைக்குத் தயாரானேன்.

இடம் - நிர்வாகத் தலைமையகம். அங்கே சோதனைக்கான சமையலறை - அங்கே (oven) எனப்படும் ரொட்டி சுடும் அடுப்பு. தொழிற்சாலையி லிருந்து இருநூறு கிலோ கலவையிலிருந்து வெளிவந்த நான் செய்த உணவுப் பொருள், விற்பனைக்கேற்ற வகையில் 'பாக்' செய்யப்பட்டு எல்லோர் கண் முன்னும் அடுக்கப்பட்டிருந்தது.

ஒருகணம் யோசனை. தவிப்பு. "என்ன ஆகுமோ? எப்படி இருக்குமோ?" என்ற சந்தேகங்கள். நிறுவனத்தின் தலைவர், மற்றும் தேசிய தலைமை விற்பனையாளர், (ஆறடி உயரம்) நிறுவனத்தின் தலைமைக் கணக்காளர், நிறுவனத் தலைவரின் காரியதரிசிப் பெண்மணி. இப்படி பெரிய மனிதக் கும்பல். அந்தப் பெண்மணி அட்டைப் பெட்டியைப் பிரித்தார். அடுப்பில் வைத்தார். 12 நிமிடங்களில் எடுத்தார்.

அண்ணாந்து பார்த்து, ஆயிரம் கடவுள்களை வேண்டிக் கொண்டிருந்தேன்!

தலைவர் உணவுப் பொருளை உருளும் கத்தியால் வெட்டினார். 'கரகர'வென்ற ஒலி எழுந்தது. ஆவி பறந்து கொண்டிருந்த சூடு! வாயில் போட்டார், "அற்புதம்!" என்றார். ஏக காலத்தில் நிர்வாகிகளிடமிருந்து அற்புதக் குரல்கள் கேட்டன!

என் கையைப் பிடித்துக் கொண்டார். "வா என் அறைக்கு" என்றார். நான் வாங்கிக் கொண்டிருந்த சம்பளத்தைப் போல் 2½ பங்கு சம்பளம். நிறுவனத்தின் தலைமை நிர்வாக அதிகாரியாக - 30 ஆயிரம் டாலர் சம்பளத்தில் ஒரு ஒப்பந்தத்தை டைப் செய்து கையில் கொடுத்தார். வீட்டிற்கு எடுத்துச் சென்றேன்.

என் மகளும் மனைவியும் இந்த ஒப்பந்தத்தைப் படித்துப் பார்த்துவிட்டு நம்பவில்லை! நானும் ஆச்சரியத்தில் மிதந்து கொண்டிருந்தேன்.

மூன்றாண்டுகள் அதை நிர்வகித்தேன். நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருந்த நிறுவனத்தை ஓராண்டு காலத்தில் தூக்கி நிறுத்தி, லாபத்தில் ஓடச் செய்தேன். உணவுத் தொழில் பற்றிய பத்திரிகைகளில் என்னைப் பற்றிக் கட்டுரைகள் வெளி வந்தன. அமெரிக்காவில் தொழில் துறையிலும் தொழிலின் நிதித்துறையிலும் 'யார் யார்' என்ற புகழ் மிக்க டைரக்டரியில் என் பெயர் வெளி வந்தது. (Directory of Who is Who in industry & Finance in USA).

இதைப் படிக்கும் பலரும் அதிர்ஷ்டம் என்று கூறக் கூடும்.

ஆனால் இது நான் பல நாட்களாக - தொழில் துறையில் இறங்கியதிலிருந்து கண்டு வந்த கனவு. தீர்க்க தரிசனம் என்பார்களே (vision) அப்படி மனத்தில் படமாகக் கண்ட - நிகழ்வதாகக் கண்ட - கனவு. அதன் பின் தேடல், உழைப்பு, சிந்தனை, இடைவிடா முயற்சி என்று சளைக்காத மனத்துடன் பாடு பட்டதன் விளைவு. அந்த நிலையில்தான் 'நாம்' வருகிறோம்; 'நம்மால்

முடியும்' என்ற நம்பிக்கை வருகிறது. நம்மைப் பற்றிய பெருமை நமக்கே ஏற்பட்டு, நம்மை மேலும் உந்தித் தள்ளுகிறது.

“சூழ்நிலையைக் குற்றம் சாட்டும் ஏழை மனிதனைக் கண்டு ஆத்மா பரிகசிக்கிறது. உயர் லட்சியங்களை மனத்தில் விதையுங்கள். தன் எண்ண விதைகளைக் கொண்டு சூழ்நிலையைக் கட்டுப்படுத்தலாம் என்பதை உணரும் போது மனிதன் தன்னையே உருவாக்கிக் கொள்கிறான்” என்கிறார் ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவ ஞானி.

## 28

# சமாளிக்கத்தான்... சவால்கள்!

ஒரு புதிய பொருளை உருவாக்கிய போது, எனக்குத் திருப்தி ஏற்பட்டது உண்மை. ஆனால் அது சோதனைக் களத்திற்கு வரும் போது - இடையில் எத்தனையோ சம்பவங்கள் நேரலாம். பொருளின் தரம் பல காரணங்களால் குறைந்திருக்கலாம்.

எனினும் ஒரு சம்பவம் இன்னும் என் மனக்கண் முன் நிற்கிறது. எங்கள் தொழிலகத்தின் எல்லா நிர்வாகிகளும் அங்கே அரை வட்டவடிவில் நின்று கொண்டிருக்கின்றனர். பொருளானது வெந்த நிலையில் மொர மொரப்பான நிலையில் மேஜை மீது வைக்கப்படுகிறது. நிறுவனத்தின் உரிமையாளர் என்னருகில் நின்று கொண்டிருந்தவர், சென்று அதைச் சிறு சிறு துண்டுகளாகப் பதம் பார்க்க வெட்டத் துவங்குகிறார்.

ஏதோ மேலிருந்து, சுமார் நாலடி உயரத்திலிருந்து ஒரு வெண்மையான மங்கலான ஒளிப்படிவத்தில் அதனுள் இறங்கியதைக் கண்டேன். அது உண்மையில் சூடாக ஆவி பறந்த நிலையாக இருக்கலாம். நான் இருந்த உணர்வு நிலையில் அதைப் பற்றி ஆராயும் அமைதி நிலையில் என் மனம் இல்லை.

ஆனால் அங்கிருந்த நிர்வாகிகள், "ஆகா! பிரமாதம்" என்று தெரிவித்தபோது மீண்டும் அந்தக் காட்சி என் நினைவுக்கு வந்தது. இது என் பிரமையாக இருக்கலாம். நமக்கு மேற்பட்ட ஒரு சக்தி ஏதோ ஒன்று நமக்குத் துணை செய்ய வந்தது போன்ற ஆழமான எண்ணமே இன்றும் என் மனத்தில் நிற்கிறது.

அந்த நிறுவனத்தின் உரிமையாளர் மிகவும் திருப்தி அடைந்தவாய் இன்னும் சில துண்டுகளை எடுத்து வாயில் போட்டு சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

அவருடன் நான் அவரது அறைக்குச் சென்றேன். "இந்த நிறுவனம், பெரும் நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக் கிறது'' என்றார். அதன் பல்வேறு கஷ்டங்களையும் நினைவில் கொண்டு வந்தவராய், ஒரு கணம் மௌனம்.

"இன்னும் இரண்டு மூன்று மாதங்களில் இந்த நிறுவனத்தை மூட வேண்டிய நிலை ஏற்படலாம்... எனவே நீங்கள் நன்கு யோசித்துச் சொல்லுங்கள். தலைமை நிர்வாகியாக நீங்கள் பொறுப்பேற்பதில் எனக்குப் பிரியம் தான்'' என்றார்.

அமெரிக்க நாட்டில் ஒரு பழக்கம். ஏதாவது ஒரு நிறுவனத்தில் அதுவும் திவாலாய்ப் போன நிறுவனத்தில் இருந்து ஒரு ஆள் வேலைக்கு விண்ணப்பித்தால் அவர் கீழ் மட்டப் பணியாளராய் இருந்தால் அவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்வார்கள். 'நிறுவனம் திவாலா னதற்கு இவர் பொறுப்பல்ல' என்ற எண்ணத்தில். ஆனால் மேல்மட்ட நிர்வாகிகள் - அதுவும் தலைமை நிர்வாகியாக இருந்த ஒருவர், மூடப்பட்ட ஒரு நிறுவனத்தில் இருந்து வெளியே சென்று வேலைக்கு விண்ணப்பித்தால் வேலைக்கு எடுத்துக் கொள்ள மாட்டார்கள்! ஏனெனில் நிறுவனத்தின் சரிவுக்கும் நஷ்டத்திற்கும் அவர்தான் காரணம் என்ற எண்ணம் அவர்கள் மனத்திலே நிரந்தரமாய் நின்று கொண்டிருக்கும். "இந்த அதிர்ஷ்டக் கட்டையை நம் நிறுவனத்தில் வேறு சேர்க்க வேண்டுமா?'' என்றே எண்ணுவார்கள்.

எனவேதான் அந்த நிறுவனத்தின் சொந்தக்காரரர் என்னைப் பார்த்து அப்படிக் கேட்டார். "மூன்று மாதத்திற்கு நல்ல சம்பளம் கிடைக்கும்; பிறகு நாலாம் மாதத்திற்கு அடிமட்ட வேலைதான் கிடைக்கும். இதற்கு நீ தயாரா?'' என்று கேட்காமல் கேட்டார்.

நான் ஒரு கணம் யோசித்தேன். "இது ஒரு வாய்ப்பு. நம் திறமையைக் காட்ட, வெளிக் கொணர, நாம் விரும்பியதை எல்லாம் செய்ய - இது ஒரு வாய்ப்பு.

அதுவும் பெரிய வாய்ப்பு" என்பதை மட்டுமே என் மனம் சொல்லிக் கொண்டிருந்தது. ஒரு பத்து அல்லது இருபது சதம் இது தோற்றும் போய்விடலாம். அப்படியே தோற்றால் என்ன?

"இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதிய சிவனும், செத்து விட்டானோ? பஞ்சமே ஆனாலும் பாரம் அவனுக்கு அன்னாய், நெஞ்சமே அஞ்சாதே நீ!"

என்ற எண்ணம்தான் மோதியது.

"இல்லை! இதை மீட்டு விடலாம். திருப்பி விடலாம்" என்று உறுதியுடன் அவரிடம் சொன்னேன்.

வெளியிலிருந்து ஒரு நிறுவனத்தை ஆலோசகனாகப் பார்ப்பது ஒரு விஷயம்; உள்ளே தலைமை நிர்வாகியாகப் பொறுப்பேற்பது என்பது முற்றிலும் மாறுபட்ட விஷயம். ஆலோசகனாக இருக்கும் போது நாம் மற்ற நிர்வாகிகள், தொழிலாளர்களது ஒத்துழைப்பை நாடுகிறோம். நிர்வாகி யானபின் அத்துடன் பொறுப்பையும், கண்டிப்பையும், "இது இப்படித்தான் இருக்க வேண்டும்" என்கிற மாற்றத்தையும் நாம் கொண்டு வர வேண்டும்.

**மா**ற்றம்! மாற்றத்தை யாருமே விரும்புவதில்லை!

காரணம்: மாற்றத்தில் முன்பு இருந்த நிலை இல்லை. எல்லாமே புதிய நிலை. அனுபவமற்ற புதிய இடம் - புதிய சூழ்நிலை. மனம் "தனக்கு பாதுகாப்பு இருக்குமா?" என்று பயப்படுகிறது. புதிய சூழ்நிலையில் தனது "வேலைக்கு ஆபத்து ஏற்படும்?" என்கிற பயம் எழுகிறது.

நிறுவனத்தில் நிலவும் சூழ்நிலையை நான் நன்கு அறிந்திருந்தேன். பொருளை வாங்குவோரிடம் பொருளைப் பற்றிய திருப்தியோ மகிழ்வோ இல்லை. அத்துடன் அவர்கள் செய்திருந்த அட்டைப் பெட்டி மேலுறை (packing) சரியில்லை. லேசான பென்சில்கோடு போன்ற எழுத்துக்களில் பொருளின் பெயரை அச்சிட்டிருந்தார்கள். நம்மை அழைக்கக் கூடிய, கவரக் கூடிய நிலையில் அதன் மேலட்டை வண்ணங்கள் இல்லை. எல்லாம் நீர்த்த நிலையில். அதைவிடுங்கள்! மற்ற விஷயங்கள் இன்னும் அதிகக் கவலை தந்தன.

பொருளின் தரம் எங்கே நிச்சயிக்கப்படுகிறது? தொழிற்சாலையில். அந்தத் தொழிற் சாலையில் சுமார் நூறு பேர் ஆண்களும் பெண்களும் வேலை செய்து கொண்டிருந்தார்கள். பொருட்கள் களவு போய்க் கொண்டிருந்தன. தொழிற்சாலையின் நிர்வாகி ஓய்வு பெற்ற உணவுத் துறை ஆய்வாளர். சுத்தமான நிலையில் பொருட்கள் உற்பத்தி செய்யப்படுகின்றனவா என்று ஆய்வு செய்து வந்த மனிதர். அவருடைய மகனும் அங்கே உற்பத்திப் பிரிவில் தரக் கண்காணிப்பாளராக வேலை பார்த்தார். அவரது மகளுக்கும் அங்கே கணக்கெழுதும் வேலை. தொழிற்சாலை நிர்வாகி சமயங்களில் 'கால்ஃப்' பந்து விளையாட வேலை முடியும் முன்பாகவே போய் விடுவார். அவரது மகனோ ஆர்வமில்லாத இளைஞர். பெண்ணோ, "வங்கிவரை வேலை" என்று போவாள். எல்லாம் நல்லவர்கள்தான். எனினும் அங்கே பொறுப்பற்ற நிலை. தரமான பொருளைச் செய்கிறோம். செய்ய வேண்டும் என்கிற 'நிறுவன உணர்வு' இல்லாத நிலை. ஏதோ ஒரு வேலை பார்க்கும் ஒரு மனோபாவத்தைத்தான் அங்கு கண்டேன்.

மாவு பிசைவதிலிருந்து அதைத் தட்டையாக, வில்லையாக ஆக்கி அதை அரை வேக்காட்டில் வேக வைத்து, பின் பொருட்களை அதன் மீது குவித்து கடைசியாகக் குளிர்பதன சாலைக்கு எடுத்துச் செல்வது வரை எல்லாமே யந்திரமயம். எல்லாம் பழைய யந்திரங்கள்! ஆனால் அவை ஒழுங்காக நாணயத்துடன் வேலை செய்து கொண்டிருந்தன.

**பி**ரச்னையே தொழிற்சாலையில்தான் இருப்பதாக எனக்குப் பட்டது. எனவே அங்கே துவங்கினேன். எனது காரியதரிசியிடம் நான் தொழிற்சாலையில்தான் இன்னும் சில வாரங்களுக்கு இருக்கப் போகிறேன் என்று சொல்லி விட்டு அதில் கவனம் செலுத்தினேன்.

காலை ஆறரை மணிக்கு தொழிற்சாலையில் வேலை துவங்கும். எனது வீடோ தொழிற்சாலையிலிருந்து 90 மைல் தள்ளி. எனவே நான் காலையில் 4 மணிக்கே எழுந்து சரியாக ஆறு மணிக்கு தொழிற்சாலைக்குப் போய் விடுவேன். அரைமணி முன்பாக. தொழிற்

சாலையின் வாயிற் படியில் நின்று கொண்டு உள்ளே நுழையும் பலரையும் 'ஹலோ' சொல்லியும் மற்ற ஆயத்த வேலைகளில் கவனம் செலுத்தவும் ஆரம்பித்தேன்.

வேலை நடக்கும்போது ஒவ்வொரு பகுதியிலும் சென்று "வேலை எப்படி நடக்கிறது?" என்று அவர்களுடன் பேசுவேன். சமயத்தில் நானும் உதவுவேன். வேலை நடக்கும்போதே நடக்கும் களவுகள் குறைந்தன. அக்கறையுடன் விசாரித்ததில் அவர்களுக்கு ஒரு சந்தோஷம். நான் கொடுத்த கலவை முறைப்படி மாவு கலக்கப்படுகிறதா என்பதில் கவனமாயிருந்தேன். தெரியாத விஷயங்களைத் தயக்கமின்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டேன். யந்திரங்களை சீரான ஓட்டத்தில் வைத்திருக்கும் பொறுப்பை பெற்றவர் என்னைப் போல ஒரு வெளிநாட்டு இளைஞர். பத்தாவதுக்கு மேல் படிக்காத 'இன்ஜினீயர்'. எனினும் யந்திர நுட்பங்களை நன்கு அறிந்தவர்.

எனது நோக்கத்தை அறிந்த அவர் எனக்கு உதவியாக இருந்தார். அடுத்த வாரம் நான் அங்கு சென்றபோது எங்கும் ஒரு புது உற்சாகம் ஏற்பட்டிருப் பதைப் பார்க்க முடிந்தது. "தலைமை நிர்வாகியே நம்முடன் வந்து சகஜமாகப் பேசுகிறாரே, அக்கறை எடுத்துக் கொள்ளுகிறாரே" என்ற செய்தி பரவியது; அந்த உணர்வில் அவர்கள் மிகுந்த அக்கறையுடன் எல்லா வற்றையும் முன்னைவிடத் துடிப்பாகச் செய்ய ஆரம்பித்தார்கள். பொருட்களால் நிறைந்த பெட்டி களைத் தூக்கி, அடுக்கி வைப்பதிலிருந்து எந்த வேலைக்கும், உடல் உழைப்பிற்கும் நான் தயங்குவதில்லை.

அப்போதுதான் வெளியே நின்ற ஒரு பெரிய 'லாரி' கண்ணில் தென்பட்டது. அதாவது உற்பத்தியான பொருளை வைக்க இடமில்லாமல் பாதுகாப்பில்லாத, வெளியே குளிர்பதனப்படுத்தப் பட்ட லாரியில் பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன. சொன்னார்கள்: "ஒரு வாரத்திற்கு இரண்டு மூன்று முறை பல 'கேஸ்கள்' பெரிய பெட்டிகள் களவாடப்படுகின்றன. பூட்டு உடைக்கப் படுகிறது; லாரி நமது 'காம்பவுண்டை'த் தாண்டி

நிற்பதால் நமது காவல்காரரால் சரிவர இதைக் கண்காணிக்க முடியவில்லை. இதனால் ஏராள நஷ்டம்."

ஒரு வெள்ளிக் கிழமை நாங்கள் காவல் துறையினரிடம் ரகசியமாகப் பேசினோம். அவர்கள் சாதாரண உடையில், சாதாரண காரில் வந்து, தற்செயலாக கார் அங்கு நிறுத்தப்பட்டிருப்பது போன்ற பாவனையில் இரவு பூராவும் கண்காணித்தார்கள். இரவு மணி இரண்டு. லாரியின் கதவைத் திறந்து பெட்டிகளை அப்புறப்படுத்தும் வேலையில் திருடர்கள் ஈடுபட்டார் கள். காவல் துறையினர் அப்படியே அங்கேயே அவர்களைக் கையும் களவுமாய்ப் பிடித்தார்கள்.

இதில் துக்ககரமான விஷயம் என்னவென்றால் திருடியவர் எங்கள் நிறுவனத்திலேயே வேலை செய்பவர். துரதிர்ஷ்ட வசமாக, அவர் அந்த நாட்டுப் பழங்குடிப் பரம் பரையைச் சேர்ந்த இளைஞர்; செல்விந்தியர் என்று சொல்வோமே, அந்த அமெரிக்க இந்தியப் பழங்குடியைச் சேர்ந்தவர். அவருடைய மனைவி ஒரு அமெரிக்கப் பெண். அந்த இளைஞருக்கு வேலை போயிற்று; மேலும் மற்றவர்களுக்கு ஒரு பாடமாக இருக்க, வழக்கும் தொடரப்பட்டது.

இந்த நிலையில் அந்த அமெரிக்கப் பெண் - திருடியவரின் மனைவி - என்னிடம் வந்து முறை யிட்டாள். கோபப்பட்டாள்; அழுதாள். ஏழைக் குடும்பம்.

என்னுள் ஏற்பட்ட மனக் கலக்கம் - அனுதாபம் - "இது நியாயமா?" என்ற உணர்வு. கொஞ்ச நஞ்சமல்ல. ஒரு ஏழை பழங்குடி மகனின் வேலையைப் பறித்து விட்டது பாவமான செயல் போல என்னை வாட்டியது. இரண்டு மூன்று நாட்கள் என்னால் எதுவும் செய்ய முடியவில்லை.

வழக்கை விட்டு விட்டோம்; நாங்கள் மேற்கொள்ள வில்லை. இரண்டு வாரங்களில் அந்த ஆள் வேறொரு வேலையில் சேர்ந்ததாக அறிந்தேன். ஆனால் நாங்கள் செய்த அந்த செயல் - கண்காணிப்பும் கண்டிப்பும் - பிரமிக்கத்தக்க மாறுதலை எங்கள் தொழிலாளர் களிடையே ஏற்படுத்தியது. "இவர்கள் வெறும் பேச்சு

பேசுபவர்களல்ல. காரியவாதிகள்!" என்ற எண்ணம். அதன் கனம் - வேகமாகப் பரவியது.

ஒரு மூன்று மாதங்கள் இப்படித் தினமும் காலை 6 மணியிலிருந்து இரவு 8 வரை நான் அங்கே கடுமையாக வேலை செய்தேன். கண்காணித்தேன். தொழிற்சாலையில் எல்லாம் சரியாகிவிட்ட நிலையில், எங்கள் நிறுவனத்தின் மிக முக்கியமான மனிதரான, எனக்கு அடுத்த கட்டத்தில் வேலை பார்க்கும், விற்பனை விளம்பரம் இவற்றைக் கவனித்துக் கொண்ட மனிதரிடம் சென்றேன்.

"ஜிம்! நமது விற்பனையில் இந்த 19 மாநிலங்களிலும் என்ன நடக்கிறது என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பு கிறேன். நமது நிறுவனத்தின் சிறந்த விற்பனையாளர் இருக்கும் தொகுதியிலும், மிக மோசமாக விற்பனை ஆகும் தொகுதியிலும் நான் சென்று பார்க்க, தங்க, ஏற்பாடு செய்யுங்கள்!" என்றேன்.

"சந்தோஷமாக!" என்றார் அவர்.

நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கும் நம்பிக்கை இழந்துவிட்ட ஒரு நிறுவனத்தைத் தூக்கி நிறுத்துவது என்பது ஒன்றும் எளிதல்ல.

நான் எனது அடுத்தக் கட்டப் பணியில் - விற்பனை இலாகாவில் இறங்கினேன்.

ஒரு ஆப்பிரிக்கப் பழங்குடியில் பிறந்த ஒரு சிறுவன் தன் தாத்தாவைப் பார்த்துக்கேட்டானாம்.

"தாத்தா! இவ்வளவு பெரிய யானையை எப்படித் தின்பது?" என்று.

"கொஞ்சங் கொஞ்சமாக!" என்றாராம். தாத்தா.

அது போல நானும் இறங்கினேன்.

கொஞ்சங் கொஞ்சமாக.

காலை நன்றாக ஊன்றிக் கொண்டு.

29

# செலவைக் குறைத்தேன்; செயலில் விரைந்தேன்...

எங்கள் நிறுவனத்தில், ஐந்து மண்டல நிர்வாகிகள் இருந்தார்கள். இரண்டு மண்டல நிர்வாகிகள் 800 மைல் தள்ளி, - தொலை தூரத்தில்! அவர்களை எல்லாம் அவர்கள் ஊரிலேயே சென்று சந்தித்தேன்.

அமெரிக்காவில், இப்படி நாம் முதன் முறையாகத் தெரிந்து கொள்ளும் முக்கியமானவர்களுடனும், அரை குறையாகத் தெரிந்து வைத்திருக்கும் நண்பர்களுடனும் வியாபாரம் பற்றிய பேச்சு பொதுவாக காப்பிக் கடைகளிலோ பெரிய உணவு விடுதிகளிலோதான் நடக்கும். எப்போது நமக்கு ஒரு சாதகமான விளைவு ஏற்பட வேண்டும் என்று விரும்புகிறோமோ அப்போது சாதகமான சூழ்நிலையை உருவாக்கித் தருவது இந்த உணவு விடுதிகள்தாம். அது சில சமயம் வெறும் காப்பி சாப்பிட்டுக் கொண்டு ஒரு இரண்டு மணி நேரம் பேசுவதாக இருக்கும். விடுதியில் உணவு பரிமாறும் பெண்ணுக்கு அதிகமான 'டிப்ஸ்' கொடுத்து விட்டால் போதும்.

வெளியே சென்று நாம் பேசும்போது நாம் இருவரும் சமநிலையில் பேசுகிறோம்; உறவாடுகிறோம். மற்றொரு வரைப் பூரணமாக - அதிகமாக - ஆழமாகத் தெரிந்து கொள்ள வாய்ப்பேற்படுகிறது. இது ஒரு சகஜமாகப் பழகும் பிணைப்பை ஏற்படுத்தி விடுகிறது. வியாபாரத்தில் இது முக்கியம். உணவு விடுதிகளில் நம்மை எழுந்திருக்கு மாறு நெருக்க மாட்டார்கள் நாமும் சின்னச் சின்ன ஆர்டர்களைக் கொடுத்துக் கொறித்துக் கொண்டிருக்க லாம்.

நான் என்னுடைய நிர்வாகிகளையும் எங்கள் நிறுவனத்தின் விற்பனையாளர்களையும் இப்படித்தான் சந்திப்பது வழக்கம். "உங்களை நமது தலைமை நிர்வாகி சந்திக்க விரும்புகிறார். நமது நிறுவன வளர்ச்சி பற்றியும் விற்பனை பற்றியும் பேச விரும்புகிறார்" என்ற செய்தியை எங்கள் விற்பனைப் பிரிவு மேலாளர் முதலிலேயே அனுப்பி விட்டார்.

அவர்களுக்கு இப்படி ஒரு புதிய தலைமை வந்திருப்பதில் மகிழ்ச்சி. காரணம் பொருளின் புதிய தரம் அவர்களுடன் பேசியது! எனவே அவர்கள் என் வரவை ஆவலுடன் எதிர்பார்த்தார்கள்.

**ஒ**ருசமயம் காலையிலிருந்து மாலை வரை ஒரு விற்பனையாளருடன் அவருடைய பொருளை ஏற்றிச் செல்லும் லாரியிலேயே நானும் சென்றேன். பெரிய வாடிக்கையாளர் கடைகளில் நிறுத்துவார். அங்கே ஆறு கேஸ் கட்டுகள் கொடுக்க வேண்டி இருக்கும். எனது விற்பனையாளர் இரண்டு தூக்க நான் இரண்டைத் தூக்கிச் செல்வேன். எந்த வேலையாக இருந்தாலும் நமது வீட்டு வேலையை நாமே செய்வதில் நான் இயல்பாகவே கொஞ்சமும் வெட்கமோ, கௌரவமோ பார்ப்பதில்லை. 14, 15 வயதிலும்கூட எங்கள் வீட்டுக்கு வேண்டிய குடிநீரை குடத்தில் தெருக்கோடியிலிருந்து தூக்கிக் கொண்டு வருவேன். என் மூத்த சகோதரி கோபித்துக் கொண்டார்; என் தாயைப் பார்த்து: "என்ன இப்படி கல்யாணம் செய்து கொள்கிற ஒரு பிள்ளையைப் போய் தண்ணீர்க்குடம் தூக்கி வரச் சொல்கிறாயே?" என்று. நான் அது பற்றிக் கவலைப்பட்டதில்லை.

எனது விற்பனையாளருடன் செல்லும் போது அவர் அந்தக் கடையின் முதலாளிக்கு என்னைப் பெருமையுடன் அறிமுகப்படுத்துவார். மதியம் ஒரே இடத்தில் சாப்பிடுவோம். ஒருசமயம் எங்கள் பணியாளர் என்னை "இன்று மாலை என் வீட்டுக்கு விருந்துக்கு வர முடியுமா?" என்றார். யோசித்தேன், "வருகிறேன்" என்றேன்.

**மா**லையில் ஒரு பூங்கொத்தை வாங்கிக் கொண்டு அவர் வீட்டிற்குச் சென்றேன். அது வீடு இல்லை.

'மொபைல் ஹோம்' என்று சொல்வார்கள். நமது பஸ் போன்ற ஒரு வெளி அமைப்பு. மரப் பலகைகளால் ஆனது. மேலே தார்ப்பாய் போன்ற பொருளால் கூரை. மற்றபடி வீட்டினுள் இரண்டு அறைகள், சமையலறை, வரவேற்பறை, பாத்ரூம் மற்றும் மின்சாரத் தொடர்பு, டெலிபோன், தண்ணீர் என்று எல்லா வசதிகளும் கொண்ட வீடு. நாம் வேலை மாறினால் இதை அப்படியே சக்கரத்தை மாட்டி வேறு ஊருக்கு இழுத்துக் கொண்டு போய் விடலாம். 1960வாக்கில்தான் இது பிரபலமாயிற்று.

வெள்ளைக்காரர்களுக்கு சைவ உணவு தயாரிப்பது மகா கஷ்டம். "எப்படி உனக்கு வெறும் பொங்கிய சாதத்தையும் வேக வைத்த கறிகளையும் படைப்பேன்? எப்படி இதை மட்டுமே சாப்பிட்டு உயிர் வாழ முடியும்?" என்று பதைத்துப் போவார்கள். இவை எல்லாம் எனக்கு சகஜமாகி விட்டன. பசி நோக்கார் கண் துஞ்சார் என்கிற பாடல் போல நமக்குக் காரியத்திலேயேதான் கண்; சாப்பாடு இரண்டாம் பட்சம்.

ஒரு மனிதருடன் காரில் தனியாகச் செல்வது என்பது ஒரு தனி அனுபவம். நாம் அவருடன் நெருக்கமாகிறோம். நாம் கீழே இறங்க முடியாது. ஏதாவது பேசிக் கொண்டே போகிறோம். ஒருவரை ஒருவர் அதிகம் தெரிந்து கொள்கிறோம்.

அமெரிக்காவில் 14 வயதுக்கு மேற்பட்ட குழந்தைகள் இருக்குமானால் நீங்கள் அவர்களை வீட்டிலேயே பார்க்க முடியாது. பள்ளி, விளையாட்டு, நண்பர்கள் என்று பெரும்பாலும் அவர்கள் வெளியே தான் இருப்பார்கள். அந்த ஊர் அப்படித்தான். எனவே உங்கள் மகனுக்கு நீங்கள் புத்திமதி சொல்ல வேண்டும். அறிவுரை வழங்க வேண்டும், வாழ்க்கையின் உண்மை களைத் தெரிவிக்க வேண்டும் என்றால், சரியான இடம், இப்படிப்பட்ட தொலை தூரக் கார்ப்பயணம்தான்; அல்லது விடுமுறை நாட்களில் குழந்தைகளுடன் நான்கு நாட்கள், பத்து நாட்கள் என்று அமெரிக்க நாட்டைச் சுற்றிப் பார்க்கும் பயணங்கள்தான். இது பெரிய வாய்ப்பு. சில சமயம் இது மட்டுமே வாய்ப்பு - விரிவாக, மனம் விட்டுப் பேச! நாம் அவர்களுக்குப் பிடிக்காததைச்

சொன்னாலும் அவர்கள் கீழே இறங்க முடியாது பாருங்கள்!

எங்களது விற்பனை மண்டலத்தைப் பற்றி ஓரளவு தெரிந்து கொண்டேன். அதாவது வெகு தொலைவில் இருக்கின்ற பல விற்பனை நிலையங்கள் லாபமில்லாமல் சில - நஷ்டத்தில் இயங்குகின்றன. ஆனால் நிறுவனமோ மொத்தத்தில் நஷ்டத்தில் ஓடிக் கொண்டிருக்கிறது. விரிவு படுத்த இது தருணமல்ல. எனவே "செலவைக் குறை" என்பதுதான் செய்யக்கூடிய காரியம்.

ஆனால், இதை இப்படிச் சொன்னால் எப்படி? அமெரிக்கத் தொழில் நிர்வாகத்தில் மகா பெரிய நிபுணர்கள் எல்லாம் இதற்கு (Down sizing) 'டவுன் சைஸிங்' என்ற புதிய பெயரை இட்டிருக்கிறார்கள். அளவை அதாவது 'சைஸை' சிறிதாக்குதல் என்பதுதான் அர்த்தம்.

ஒரு விஷயத்தை இங்கே சொல்ல வேண்டும். இன்றைய மேற்படிப்பில் இந்த 'நிபுணர்கள்' என்போர் கையாளும் தந்திரம் இது. பழைய விஷயத்தை புதிய மாறுபட்ட வார்த்தைகளில் சொல்வதன் மூலம் இது ஏதோ இதுவரை கண்டு பிடிக்கப்படாத விஷயம் போலவும் இவர்தான் கண்டுபிடித்தது போலவும் இவர்கள் செய்து விடுவார்கள்! இவர் 'டவுன்சைஸிங்' எக்ஸ்பர்ட் ஆகி விடுவார்.

இந்த நிர்வாக கலை என்று சொல்கிறோமே. இது அனைத்துமே பொதுவாக எல்லோரும் அறிந்த - தெரிந்து கொண்டிருக்கும் பொது அறிவுதான் (Common Sense). நிபுணர்கள் இதற்கு முக்கியத்துவம் கொடுத்து தெளிவு படுத்துவார்கள். அதுவும் அவசியம்.

நமது உலக ஞானத்தை வைத்துக் கொண்டு நடப்பு விஷயங்களைக் கூர்மையாக கவனித்தோமானால், சிந்தித் தோமானால், நண்பர்களுடனோ, நமது சகாக்களுடனோ விவாதித்தோமானால் எல்லா விஷயங்களுமே நமக்கு விளங்கும் என்பதுதான் நான் கண்ட உண்மை. இதற்காக நிர்வாகக் கலை பயில நான் கல்லூரி போகவில்லையே தவிர ஆர்வத்துடன் நிர்வாகம் பற்றிய நூல்களையும்

கட்டுரைகளையும் படிப்பதுண்டு; தெளிவு படுத்திக் கொள்வதுண்டு.

ஐந்தாக இருந்த விற்பனை மண்டலங்களை மூன்றாகக் குறைத்தேன். சில தொலை தூர விற்பனை நிலையங்களை மூடினேன். மூன்று புதிய மண்டலங் களுக்குள் சில விற்பனை நிலையங்களை உள்ளடக்கினேன். மிக முக்கியமாக இரண்டு மண்டல மேலாளர்களின் பணி இதனால் தேவை இல்லாமல் போயிற்று. இதனால் பெரும் சம்பளம், செலவுப்படி மற்றும் கார் செலவு என்று செலவு குறைந்தது. இதற்கு மற்றொரு காரணமும் இருந்தது.

பல நாட்கள் ஒரே தொழிலில் இருப்பவர்கள் சிறிது காலத்தில் 'தொழில் கிழடு' தட்டி விடுகிறார்கள். "ஏதோ ஒரு வேலை. சம்பளத்திற்காக சில சடங்குகள்" என்கிற ரீதியில் அவர்கள் அலுத்துப்போய் செயல் படுகிறார்கள். துடிப்பு குறைந்து விடுகிறது. புதுமை, மாறுபட்ட சிந்தனை, உலகின் நடப்பைக் கண்காணிக்கும் தன்மை - எல்லாம் இல்லாமல் போய் விடுகிறது. இதனால் மண்டல விற்பனையில் தேக்கம் ஏற்பட்டது. இந்தக் காரணமும் எனது முடிவுகளுக்கு காரணமாய் இருந்தன.

இப்படி ஆட்களை வீட்டுக்கு அனுப்புவதில் ஒரு விஷயத்தை நாம் மறந்து விடுகிறோம். அதாவது, அவன் ஒரு மனிதன்; அவன் பின்னால் அவனை நம்பி இருக்கும் ஒரு குடும்பம்; இந்த வயதில் வெளியேற்றினோமானால், அவனுக்குக் கிடைக்கக்கூடிய வேலை வாய்ப்பு. இவை எல்லாவற்றையும்விட அவனுக்கு ஏற்படும் மனக்கிலேசம், உளைச்சல், உலகமே தன்னைக் கைவிட்டது போன்ற உணர்வு, தான் எதற்கும் லாயக்கில்லை என்ற மாபெரும் தாழ்வு மனப்பான்மை.

இந்த செயல் அங்கே சகஜமாக நடைபெறுகிறது. லூசியானா மாநிலத்தில் எண்ணெய் மூலம் வந்த வரிப்பணம் குறைந்து போன போது - மாநில வருமானம் பாதியாகிப் போனபோது - அரசாங்க அதிகாரிகள் உட்பட பள்ளி ஆசிரியர்கள் உட்பட 25 சதம் பேரை வீட்டுக்கு அனுப்பினார்கள். வெளியே அனுப்பும் போது

கொடுக்கும் சலுகைகளுடன். அதை அங்கே அரசாங்க அதிகாரிகளும், ஆசிரியர்களும் அப்படியே ஏற்றுக் கொண்டார்கள்.

"அரசாங்கத்தில் பணமில்லாவிட்டால் எப்படி சம்பளம் கொடுக்க முடியும்?" என்று வேலை நீக்கப் பட்டவர்களே பேசினார்கள். மாறாக, அநியாயம் இழைத்து விட்டதாக ஆத்திரப் படவில்லை.

**வி**ற்பனையில் எங்கெங்கு செலவினங்களைக் குறைக்க முடியுமோ அதைச் செய்தேன். அப்படிச் செய்யாமல் - இருக்கிறபடியே ஓட்டிக் கொண்டிருந்தால் எங்கள் நிறுவனத்தின் சொந்தக்காரர் சொன்னது போல மூன்று நான்கு மாதங்களில் முழு நிறுவனமும் திவாலாகிப் போகும்!

இது மனிதப்பிமானமற்ற செயல்தான். எனினும் பலரைக் காப்பாற்ற சிலரைத் தியாகம் செய்ய வேண்டிய நிலை என்றுதான் சமாதானம் செய்ய வேண்டி இருக்கிறது. இது இன்று மலேசியாவிலிருந்து சவுதியி லிருந்து கனடாவரை இந்தியர்களைத் திருப்பி அனுப்புகின்ற சர்வ சாதாரணமான விஷயத்தின் காரணமும் இதுதான்.

ஒரு தொழிலில் எப்போதும் வெற்றிமுகம் என்பது நடக்காத ஒரு விஷயம். சரிவு வரத்தான் வரும். அதை எப்படி குறைந்த காயங்களுடன் சமாளிக்கிறோம் என்பதில்தான் வெற்றி அமைந்திருக்கிறது.

வேலை நீக்கப்பட்டவர்கள் என் மீது கோபப் பட்டார்கள்; நீக்கப்படாதவர்களில் சிலரும் என்னை விமர்சனம் செய்தார்கள். திட்டையும் விமர்சனத்தையும் வாங்கிக் கொள்வது கஷ்டமாய்த்தான் இருந்தது. கலிங்கப் போரிலும் சரி வியட்நாம் யுத்தத்திலும் சரி பலர் இறக்கக் காரணமாய் இருக்கிறது போர். தொழில் நடத்துவதும் ஒரு போராட்டம்தான். எனினும் இன்னும் அவை என் மனத்தில் ஆறாத வடுக்களாய் என்னை சிந்திக்கச் செய்கின்றன. ஆண்டவனிடம் மன்னிப்பைக் கோர வைக்கின்றன.

லீ அயோகாக்கா என்ற கார் கம்பெனி நிர்வாகி ஃபோர்டு கார் நிறுவனத்தின் ஒரு துறையில்

நிர்வாகியாக இருந்தவர். பின்னர், கிரைஸ்லர் என்கின்ற கார் நிறுவனத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக் கொள்கிறார். நிறுவனமோ நஷ்டத்தில் போய்க் கொண்டு மூட வேண்டிய நிலையில் உள்ளது. நிறுவனத்தில் 27 துணைத் தலைமை நிர்வாகிகள் (Vice Presidents) இருந்தார்கள். மூன்று பேரை மட்டும் வைத்துக் கொண்டு, மற்றவர்களை வீட்டுக்கனுப்பினார். தொழிலாளர்கள் முன்பு மணிக்கு 21 டாலர் சம்பளம் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அயோகாக்கா தொழிலாளர் சங்கத்திடம் சொன்னார். "என்னிடம் மணிக்கு 18 டாலர் வேலைதான் இருக்கிறது! மணிக்கு 21 டாலர் வேலை இல்லை!" என்றார். தொழிலாளர்கள் ஏற்றுக் கொண்டார்கள்.

லூசியானா மாநிலத்தில் வருமானம் குறைந்தபோது அரசு எடுத்த நடவடிக்கைகளும், இதே போன்று கிரைஸ்லர் நிறுவனத்தில் அயோகாக்கா எடுத்த முடிவுகளும் முன்பே நான் செயல்படுத்திய எண்ணங்கள் என்றால் அது உண்மை.

பின்னால் நான் சொந்தக் கம்பெனி நடத்திக் கொண்டிருந்தபோது தொழில் சரிவு நாடு பூராவும் இருமுறை ஏற்பட்டது. இந்த அனுபவம்தான் எனக்குப் பாடமாய் இருந்தது.

அதுவும் நாட்டின் வருமானமும், நலிந்து கிடக்கும் நிறுவனங்களின் வருமானமும் தத்தளிக்கும் நிலையில் நம் நாட்டுத் தலைவர்களையும், நம் நாட்டு மக்களைச் செதுக்க வேண்டிய - சிந்திக்க வைக்க வேண்டிய - எண்ணங்கள் — "செலவினத்தைக் குறையுங்கள்" — எனகிற எண்ணம்தான்.

30

## ஒரு நிறுவனத்தைத் தூக்கி நிறுத்த முடியுமா?

செலவினங்களைப் பலசமயம் குறைக்க முடியாது என்று நமக்குக் கீழ் உள்ளவர்கள் சொல்வார்கள். நாம் அவர்கள் சொல்வதை ஏற்றுக் கொள்ள வேண்டிய தில்லை. அவர்கள் 'எங்கே குறைக்கலாம்? என்று தீவிரமாகச் சிந்திக்கவில்லை; நம் நிலையை உணரவில்லை; நம்முடன் சேர்ந்து நிறுவனத்தைத் தூக்கி நிறுத்த முழு ஒத்துழைப்பையும், தியாகத்தையும் செய்ய முன் வரவில்லை' என்றுதான் அவர்களைப் பற்றி எண்ணுவேன். பெரும்பாலும் அதுதான் உண்மை.

எங்கள் உணவு நிறுவனத்தில் யந்திரங்களைக் கழுவி சுத்தப்படுத்த மாலையில் சுமார் 12 பேர் வருவார்கள். இரவு 10 மணி வரை வேலை இருக்கும். எனக்கு இவர்களது எண்ணிக்கை அதிகம் எனப்பட்டது. அந்தத் துறையின் தலைமை மனிதரைக் கூப்பிட்டேன்.

"நமக்கு இந்த பன்னிரண்டு பேர் வேலை கட்டுபடியாகாது. நமது நிறுவனம் இப்போது வேறு விதமாகச் செயல்படுகிறது; பழைய மாதிரி அல்ல. ஆறு பேரை வைத்துக் கொண்டு வேலை செய்ய முடியுமா என்று பார்" என்றேன்.

அவர் பதிலுக்கு, "12 பேரை ஆறு பேராக்க் குறைத்தால், எல்லாம் பாதி சுத்தமாக இருந்தால் போதுமா?" என்றார். எப்படிப்பட்ட பதில், கவனியுங்கள்!

"ஓ! ஒரு உணவு நிறுவனத்தில் பாதி சுத்தமாக இருந்தால் போதுமா என்று நீங்கள் கேட்டால், ஒன்று உங்களுக்குப் பொருளின் தரம் பற்றி அக்கறை இல்லை

என்று அர்த்தம்; இல்லாவிட்டால் உங்களுக்கு என்னைப் பற்றித் தெரியவில்லை என்று அர்த்தம்'' என்றேன்.

நான் ஒன்றும் அதிகம் பேசவில்லை. யந்திரங்கள் நிறைந்த உற்பத்திக் கூடத்தை விட்டு விட்டு என் அறைக்குப் போய் விட்டேன்.

சற்று நேரத்தில் கதவைத் தட்டும் சப்தம். கதவு திறந்தது. சுத்தம் செய்யும் குழுவின் தலைவரின் தலை தெரிந்தது. உள்ள வந்தார்.

''மன்னிக்க வேண்டும். நான் ஆறு ஆட்களை வைத்துக் கொண்டு செய்து முடித்து விடுகிறேன். நான் அப்படிப் பேசியதற்கு மன்னிக்கவும்'' என்றார்.

''உட்காருங்கள்!'' என்று சொல்லி நிறுவனம் அனுப வித்துக் கொண்டிருக்கும் சிரமங்களையும் அதை சமாளிக்க எடுக்கும் முடிவுகளையும் சொன்னேன். நண்பர்களாகப் பிரிந்தோம்.

தொழிலில் ஒரு முக்கியமான விஷயம் இருக்கிறது. 'தொழிலில் என்ன நடக்கிறது, என்ன செய்து கொண்டிருக்கிறோம், ஏன் செய்துகொண்டிருக்கிறோம், என்ன திட்டமிட்டிருக்கிறோம்' என்று நாம் சதா நமது தொழிலாளர்களிடம் அறிவித்துக் கொண்டிருக்க வேண்டும். போட்டியாளர்கள் எப்படி நம்மை நெருக்குகிறார்கள். அவர்களுடைய பொருளின் தரம் என்ன என்று தொழிலைப் பற்றிய நாட்டு நிலைமையைக் கூறிக் கொண்டிருக்க வேண்டும். பெரிய நிறுவனங்களில் இதற்காக இப்படி ஒரு செய்தித்தாள் வெளியிடுவார்கள். எங்களுடையது ஒரு பெரிய நிறுவனமுமல்ல; சிறிய நிறுவனமுமல்ல. ஒரு நடுத்தர நிறுவனம். 19 மாநிலங்களில் விற்பனை இருந்ததால் விற்பனையாளர்களை எல்லாம் இணைக்க நிறுவனத்திற்கென்று ஒரு மாத இதழைப் பிரசுரிக்கத் தீர்மானித்தேன்.

எனவே, எனக்கு அடுத்த நிலையில் உள்ள துணைத் தலைமை நிர்வாகியை அணுகி இதைப் பற்றிக் கூறினேன். ''இதை எடுத்துக் கொள்ள முடியுமா?'' என்று கேட்டேன். எங்கள் தேசிய விற்பனை மேலாளர் அல்லது துணைத் தலைமை நிர்வாகி என்பவர் மிகப் பெரிய மனிதர். உயரத்தில் மட்டுமல்ல. அரசியலில் செல்வாக்கு

மிகுந்தவர். நமது ஊர் போல அரசியல் செல்வாக்கு அங்கே எந்த நிறுவனத்தையும் பாதிக்காது. எனக்குங்கீழ் வேலைபார்த்த அந்த நிர்வாகி அந்த மாநிலத்தில் ஆளுனர் பதவிக்குப் போட்டியிட்டு குறைந்த வோட்டுகளில் தோற்றவர். அதாவது முதல்வர் பதவிக்குச் சமமான பதவிக்குப் போட்டியிட்டவர். அமெரிக்க துணை ஜனாதிபதியாக இருந்தவரின் நண்பர். அடிக்கடி ஆலோசனைக்காக வாஷிங்டன் செல்பவர்.

சொன்னார் "இது பெரிய வேலை. இரண்டு மூன்று நாட்கள் எடுத்துக் கொள்ளும். நமக்கு பத்திரிகை தேவை இல்லை. போன் மூலம் நேரடியாக நாம் பேசி விடலாம். எல்லாம் சரியாகத்தான் போய்க் கொண்டிருக்கிறது" என்றார்.

"மாற்றங்களைப் புதிதாகப் பதவி ஏற்கும் நீங்கள் ஏற்படுத்தினால் மட்டும் போதாது. மாற்றங்கள் நடந்து கொண்டிருக்கின்றன என்கிற உணர்வு எல்லோரிடத்திலும் ஏற்பட வேண்டும். பழைய பாதையில் வண்டி ஓடாது, என்கிற ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும். ஒரு 'அதிர்ச்சி' - ஒரு வித்தியாசம் - மாறுபட்ட சூழ்நிலையில் நிறுவனம் இயங்குகிறது என்ற உணர்வு எல்லோரிடமும் இருக்க வேண்டும். அதில் ஒன்றுதான் இந்தப் பத்திரிகை. இது மிக அவசியம் என்பது என் கருத்து."

ஆனால் எங்கள் தேசிய விற்பனை மேலாளருக்கோ, 'நான் அவர் துறையில் நுழைகிறேன்; எனது ஆக்கிரமிப்பை வெளிப்படுத்துகிறேன்' என்ற எண்ணத்தை என் பேச்சு அவர் மனத்தில் ஏற்படுத்தியிருக்கிறது என்பதை உணர்ந்தேன். இதுதான் 'யார் பெரியவர்?' என்கிற போராட்டம். 'நீ புதியவன் தானே?' என்று நம்மைப் பழையவர்கள் சவால் விடுகிற கால கட்டம்.

"கவலைப்படாதீர்கள். நான் பார்த்துக் கொள்கிறேன். நான் ஒரு எழுத்தாளன். இது பெரிய விஷயமல்ல..." என்று எழுந்தேன். அப்போது அமெரிக்க நிர்வாகத்தில் அதிகமாகப் புழங்கப்பட்ட வார்த்தை (Attitude) 'மனோபாவம்' என்பதாகும். விற்பனையாளர்கள் யாராவது எதிர்த்தோ, மறுத்தோ சொன்னால்,

எங்கள் மேலாளர் 'உனக்கு சரியான மனோபாவம் இல்லை' என்று சொல்வாராம். நான் பார்த்த அளவில் அங்கு சூழ்நிலை சரியில்லை. பொருளின் தரம் சரியில்லை. பொருளை உள்ளே கொண்ட அட்டைப் பெட்டி சரியாக இல்லை. எல்லாம் ஏனோதானோ என்றிருந்தது. பணி புரிபவர்களிடையே உற்சாகம் இல்லை. யாரோ அதுவும் முக்கியமானவர்கள் அவர்களுடன் துணை நிற்கிறார்கள் என்கிற உணர்வு அங்கே இல்லை. மேலே இருக்கும் மனிதன் நிறுவனத்தில் மிகவும் அக்கறை எடுத்துக் கொள்கிறான் என்பது ஒரு விஷயம். அத்துடன் நம்மீதும் அக்கறை எடுத்துக் கொள்கிறான்; நம்முடன் பேசுகிறான், நாம் சொல்வதைக் கேட்கிறான் என்கிற எண்ணம் இருக்கிறதே, அது மிகப்பெரிய மாற்றத்தைக் கொண்டு வரும் வைட்டமின் மாத்திரை. அதாவது, அங்கே சூழ்நிலை மோசமாக இருந்தது.

நிறுவனரின் காரியதரிசி, "நீங்கள் உங்கள் செய்திகளைக் கொடுங்கள். நான் பார்த்துக் கொள்கிறேன்!" என்றார். 52 வயதுப் பெண்மணி அவர். அனுபவமும் கண்டிப்பும் மிக்கவர். உள்ளூரில் ஒரு அணுசக்தி மின்சாரத் தொழிற்சாலையை நிறுவ அமெரிக்க நிறுவனம் ஒன்று திட்டமிட்ட போது 'அணுசக்தி மின் நிலையம் இங்கு வரக்கூடாது' என்று போராட்டத்தில் ஈடுபட்டு வென்றவர்.

பத்திரிகைக்கு விற்பனையாளர்களிடமும் மற்றும் எல்லா தொழிலாளர்களிடமும் அபரிமிதமான வரவேற்பு. "எங்கே அந்தப் புலி?" என்று கேட்டுக் கொண்டு உள்ளே நுழைத்தார் எங்கள் நிறுவன உரிமையாளர். எப்போதும் என்னைச் செல்லமாகப் பெருமையுடன் 'டைகர்' என்றுதான் அவர் அழைப்பது வழக்கம்.

இப்போது பொருள் நன்றாக இருந்தது. ஆனால் அதை உள்ளடக்கிய 'பேக்கிங்,' மேலே எழுதப்பட்டிருந்த வாசகம், பொருளின் போட்டோ எல்லாமே எனக்குப் பிடிக்கவில்லை. மாற்றம் உள்ளே இருக்கிறது. என்று எப்படிக் காட்டுவது? வெளியேயும் மாற்றத்தைக் காட்டினால் அல்லவா தெரியும்?

அமெரிக்காவில் - விற்பனையில், விளம்பரத்தில் அதிகம் உபயோகப்படுத்தப்படும் வார்த்தை "புதிது" (New) என்கிற வார்த்தைதான். 'புதிய தரமான பொருள்; புதிய சௌகரியமான 'பேக்கிங்'; புதிய மூடி; புதிய வாசனை; புதிய வாங்கக்கூடிய சைசில்' என்று எங்கு பார்த்தாலும் இந்தப் 'புதிய' தான்! எப்போது பார்த்தாலும் இது விளம்பரத்தில் அதிகம் வரும்.

எங்களது புதிய பொருளோ ஒரு நிறைவான உணவை உட்கொண்ட மன நிறைவைத் தருவது; திருப்தியைத் தருவது. "கனம் நீதிபதி அவர்களே" என்று சொல்கிறோமே அது போன்ற 'கனம்' நிறைந்தது. அப்படிப்பட்ட பொருளின் தன்மையை விளக்குகிறாற் போல அதைப் பிரதிபலிப்பதாக எழுத்தின் 'கனம்' இல்லை. ஊரில் இருக்கும் சிறந்த விளம்பர ஓவியரை அழைத்தேன். விஷயத்தைச் சொன்னேன். உணவுக்கு சகஜமாக சிவப்பு ஆரஞ்சு மஞ்சள்தான் கண்ணைப் பறிக்கும் - கவனத்தைத் திருப்பும் நிறங்கள். பச்சை வண்ணத்தில் உணவுப் பொருளின் படத்தைத் தயாரித்து ஒட்டினீர்களானால், கீரைகளை வேண்டுமானால் விற்கலாம் - மற்றபடி நல்ல உணவு பொருட்களை விற்க முடியாது!

சாப்பிடும் நிலையில் உள்ள சூடான பொருளை கவனமாக அழகாக அதை வெட்டித் துண்டு போடுவது போல போட்டோ எடுத்தோம். எல்லாம் சேர்ந்து புதிய பொருள், புதிய வண்ணப் பெட்டி என்று எல்லாம் பிரமாதமாக, எங்கள் பொருட்கள், கண்களைக் கவரும் வண்ணம், கடைகளின் தட்டுக்களை அலங்கரித்தன.

அடுத்ததாகப் பொருளை விளம்பரம் செய்ய எண்ணினேன். எனக்கு முடிவெடுக்கும் எல்லா உரிமைகளும் இருந்தாலும் முக்கியமான முடிவுகளில் நான் எங்கள் நிறுவன உரிமையாளரிடம் மனம் விட்டுப் பேசுவது வழக்கம். அவரது ஒப்புதலைப் பெற்றுத்தான், நான் மேலே நடவடிக்கை எடுப்பது.

ஆனால், நிறைய கேள்விப் பட்டிருந்தேன், அவருக்கு விளம்பரத்தில் நம்பிக்கையில்லை என்று! இது எனக்கு சற்று அதிர்ச்சியாக இருந்தது. சாதாரண பொருட்கள்கூட

அடிக்கடி விளம்பரம் செய்வதன் மூலமே மக்கள் மனத்தில் நிற்கின்றன; அவர்களை வாங்கத் தூண்டு கின்றன.

அவருடன் பேசி அவருக்கு விளம்பரத்தின் அவசியத்தை யும் நியாயத்தையும் எடுத்துச் சொல்லி, ஒரு புதிய திறமை வாய்ந்த டீ.வி. விளம்பரக் கம்பெனியுடன் நாங்கள் ஒரு ஒப்பந்தம் செய்தோம். சிகாகோவிலுள்ள ஒரு விளம்பர நிறுவனத்தின் சாதனைகளைப் பற்றி "வால்ஸ்டீரிட் ஜர்னல்" என்ற பிரபல நாளிதழ் - வர்த்தக இதழ் - ஒரு கட்டுரை எழுதி இருந்தது. அந்த விளம்பர நிறுவனத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டோம். ஒரு அரை நிமிடம் அதாவது 30 வினாடிகள் ஓடக்கூடிய ஒரு டீ.வி. விளம்பரத்தைத் தயார் செய்ய காலை மணி 9லிருந்து இரவு ஏழு மணி வரை ஆயிற்று. நானும் முழுக்க முழுக்க இதற்காக சிகாகோ சென்று உடனிருந்தேன். அதுவும் நல்ல பிரமாதமான விளம்பரமாக அமைந்ததில் எனக்குப் பெரும் திருப்தி.

ஆனால் விளம்பரத்தை ஒருமுறைதான் போட்டோம் டெலிவிஷனில். காரணம் எங்கள் உரிமையாளர் இது வீண் செலவு என்று கூறி விட்டார்! எனக்கு அதிர்ச்சி. என்ன செய்வது? எங்கள் உரிமையாளருக்குத்தான் விளம்பரத்தில் நம்பிக்கை இல்லையே! எந்தச் சூழ்நிலைகளில் நாம் இருக்கிறோமோ அதற்குள்தான் நாம் நம் கம்ப சித்திர வேலைகளைக் காட்ட வேண்டி இருக்கிறது!

அடுத்து அங்கே ஆண்டுதோறும் டல்லஸ் மாநகரில் மிகப் பெரிய ஹாலில் அமெரிக்காவின் மிகப் பெரிய உணவுக் கண்காட்சி நடைபெறும். புதிய புதிய பொருள்களை விற்பவர்களும் புகழ்பெற்ற உணவு நிறுவனங்களும் அங்கே கடை போட்டிருப்பார்கள். இதில் நமது நிறுவனமும் பங்கு பெற வேண்டுமென்று அங்கு நாங்கள் ஒரு கடையைப் (Stall) போட்டிருந்தோம்.

இந்தச் சமயத்தில்தான் அமெரிக்கா முழுதும் பூச்சி மருந்து அடிக்கப்படாத இயற்கைக் காய்கறி உணவின் முக்கியத் துவமும் அதேபோல, "எடையைக் குறையுங்கள். 'டிரிம்'மாக இருங்கள்" என்ற கொள்கையும்

மக்களிடையே வெகுவேக மாகப் பரவியது. எல்லோரும் தங்கள் எடையைப் பற்றி - ஊளைச் சதையைப் பற்றி - மிகவும் அக்கறைப்பட ஆரம்பித்தார்கள். கோகோ கோலா, பெப்சி போன்ற பானம் தயாரிக்கும் நிறுவனங்களும்கூட 'லோ கலோரி' சர்க்கரை குறைந்த பானங்களை சந்தைக்குக் கொண்டு வந்தார்கள். சர்க்கரைக்குப் பதில் 'சக்கரின்' என்ற தித்திப்புத் தரும் ரசாயனம்; எங்கு பார்த்தாலும் மாவுப் பொருளுக்குப் பதில், நார்ச் சத்து மற்றும் தவிடு போன்ற பொருளை வைத்துத் தயாரிக்கும் குறைந்த கலோரி உணவுகள் என்கிற ஒரு நிலை துவங்கிக் கொண்டிருந்தது.

உடனடியாக நாங்கள் எங்கள் உணவுப் பொருட்களில் 'லோ கலோரிப்'ப் பொருட்களை அறிமுகம் செய்யத் துவங்கினோம். அதே போன்று எந்தவித செயற்கை ரசாயனப் பொருளும் கலவாத உணவுப் பொருளைத் தயாரித்து, அதற்கு "இயற்கை ஆக உங்களுடன்" (naturally yours) என்ற பெயரில் எங்கள் உணவுப் பொருள் ஒன்றை அறிமுகம் செய்தோம். இதை எல்லாம் தூக்கி அடிக்கிறாற் போல நாங்கள் செய்த 'லோ கலோரி' பொருள் ஒன்றை கோதுமைத் தவிட்டை உபயோகித்துச் செய்தோம். அதன் மணமும், ருசியும் அது தரும் கரகரப்பு அனுபவமும் எங்களிடமிருந்த எல்லாப் பொருட்களையும் விட சிறப்பானதாக இருந்தது.

பத்திரிகையில் நாங்கள் விளம்பரங்கூடக் கொடுக்க வில்லை. புதிய பொருள் ஒன்றைக் கொண்டு வந்திருக்கிறோம் என்ற அறிமுகத் தகவலைத்தான் பத்திரிகைகளுக்கு அனுப்பி இருந்தோம்.

நான் ஊரில் இல்லாத சமயம் பல ஊர்களில் சுமார் 94 கடைகளைக் கொண்ட ஒரு பெரிய 'செயின்' நிறுவனத்தின் தலைவர் வாஷிங்டன் D.C யிலிருந்து - அமெரிக்காவின் தலை நகரிலிருந்து - என்னைக் கூப்பிட்டிருக்கிறார். நான் ஊர் திரும்பிய பின், அவர் இது விஷயமாக என்னுடன் பேசினார்; உடனடியாக வரச் சொன்னார். பிரபலமான ஒரு விநியோக நிறுவனத்தினருடன் எங்கள் பொருளைப் பற்றி எங்களுக்காகப் பேசி எங்களது விநியோகஸ்தராக

அவரே ஏற்பாடு செய்தார். அந்தப் பகுதியிலேயே இதுநாள் வரை நாங்கள் இல்லை. எனவே பிரபல வினியோகஸ்தர்கள் நமது பொருளை வினியோகிக்க லேசில் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அது மட்டுமல்ல; அந்த கடையின் தலைமை நிர்வாகி நான் அங்கு சென்று பேசிய பிறகு, பொருளை சோதித்து அதன் தரத்தைக் கண்டு மகிழ்ந்தபோது உடனடியாக ஒரு 'லாரி லோடு' பொருளை ஆர்டர் செய்தார்! இவை எல்லாம் நம்ப முடியாத அளவுக்குப் போய்க் கொண்டிருந்தன! அதிசயத்தின் மேல் அதிசயமாக நிகழ்ந்து கொண்டிருந்தன!






31

# பில்லியன் டாலர் கம்பெனிக்கு ஆலோசகர்!

டல்லஸ் மாநகரில் உணவுக் கண்காட்சி. ஆண்டுக்கு ஒருமுறை நடக்கும் மிகப் பெரிய உணவுப் பொருட்காட்சி. புதிய பொருளை அறிமுகப்படுத்தவும், பெரிய நிறுவனங்கள் தங்களை விளம்பரப்படுத்தி, நிலைநிறுத்திக் கொள்ளவும் சுமார் 400 கம்பெனிகள் வந்திருந்தன. உணவுப் பொருட்களை விற்பனை செய்யும் பெரிய 'செயின் ஸ்டோர்' நிர்வாகிகளும், மற்றும் பெரும் வியாபாரிகளும் அங்கே வருவார்கள்.

இத்தகைய பொருட்காட்சிகள் மிக முக்கிய மானவை. போட்டி நிறுவனங்களின் தன்மையையும், வலிமையாயும் அறிந்து கொள்ள இது ஒரு வாய்ப்பு. பொது மக்களிடம் விற்பதற்கு, என்ன புதிய பொருட்கள் வந்திருக்கின்றன என்று தெரிந்து கொள்ளலாம். நம் தொழில் துறையிலுள்ள முக்கிய மான புள்ளிகளுடன் தொழில் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். பார்க்க வருகின்ற அனைவரும் பெயர் பதித்த அட்டையை சட்டையில் ஒட்டிக்கொண்டு வருவார்கள். அதிலே அவர்களது நிறுவனத்தின் பெயரும் இருக்கும். சகஜமாக பெரிய பெரிய நிறுவனங்களுடன்தான் நான் பேச விரும்புவேன். மற்றவர்களை எனது சகாக்களைக் கூப்பிட்டு ஒப்படைப்பேன்.

ஒரு மனிதர் வெகு நேரமாக எங்கள் 'ஸ்டாலி'ன் ஒரு மூலையில் நின்று கொண்டிருந்தார். விசாரிப்பவர்களின் கூட்டம் குறைந்தபோது, அவரிடம் பேச்சுக் கொடுத்தேன். அவர் முதலில் எங்களது உணவுப் பொருளின் உயர்ந்த தரத்தைப் பாராட்டினார். அடுத்து, அதில் எந்த

செயற்கையான ரசாயனப் பொருளும் கலக்கப்பட வில்லை என்பதை அறிந்த போது அவருக்குப் பல மடங்கு சந்தோஷம் ஏற்பட்டது.

"நீங்கள் இதே தரமுள்ள பொருட்களை ஒழுங்காக உற்பத்தி செய்து, நியூயார்க்கிலுள்ள எங்களுக்கு அனுப்ப முடியுமா?" என்றார்.

"நிச்சயமாக!" என்றேன் நான்.

அவரது அடையாள அட்டையைப் பார்த்தேன். அது ஒரு பெரிய சினிமாப் படம் தயாரிக்கும் மற்றும் ஒரு பெரிய பத்திரிகையை உள்ளடக்கிய மிகப் பெரியதொரு நிறுவனம். உணவுத் துறைக்கும் அவர்களுக்கும் எந்தவித சம்பந்தமு மில்லை!

அவர் சொன்னார்: "உங்களுடைய 'லோ கலோரி' உணவுப் பொருளும் அதன் ருசியும் பிரமாதம். மற்றது இயற்கை உணவு, இந்த இரண்டு அம்சமும் எனக்குப் பிடித்திருக்கின்றன. இதைத்தான் நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். இதன் அடிப்படையில் பெரிய (Fast Food Store) 'விரைவில் உணவு தயாரித்து அளிக்கும் ஒரு உணவு விடுதி'யை ஏற்படுத்தத் திட்டமிட்டு வருகிறோம். எங்களுக்கு உங்கள் பொருளைத் தர முடியுமானால் நாங்கள் வாரம் ஆயிரம் பொருட்களுக்கு ஆர்டர் கொடுக்க முடியும். இது ஒரு ஆரம்பம்தான்!" என்றார்.

கொஞ்ச நேரம் பேசிய பின் விலாச அட்டையைப் பரிமாறிக் கொண்டோம்.

எங்களது புதிய உணவுப் பொருள், லேசாக (light) இருந்தது; அதாவது கலோரி குறைவாக இருந்தது; உங்களுக்கு சதை போடாத உணவு. அதே சமயம் மனத்திற்கு நிறைவையும், ஒரு குறிப்பிட்ட அளவிலேயே 'போதும்' என்கிற உணர்வையும் ஏற்படுத்திய ஒரு பொருள் அது.

'டல்லஸி'லிருந்து திரும்பி எங்கள் ஊருக்குச் சென்று விட்டேன். ஒரு மூன்று மாத காலம் கழிந்த பின் நியூயார்க் நிறுவனத்தின் துணைத் தலைமையதிகாரியிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. எங்களது மக்கள் தொடர்பாளர் உங்களைக் கண்டு டல்லஸில் பேசியது

சம்பந்தமாக நாங்கள் உங்களைச் சந்தித்து விவாதிக்க விரும்புகிறோம். நியூயார்க்கிற்கு வர முடியுமா?" என்று எழுதிக் கேட்டிருந்தார்கள்.

நான் நியூயார்க் சென்றபோது அங்கே என்னுடன் 'இயற்கை உணவு' சம்பந்தமான ஒரு அருமையான நூலை எழுதிய பெண்மணி ஒருவரையும் அழைத்திருந்தார்கள்.

விஷயம் மிகப் பெரிய ஒன்று!

அதாவது அவர்கள் அமெரிக்காவில் இருக்கும் மிகப் பெரிய உணவு விடுதிகளான 'மெக்டானல்டு' மற்றும் 'பர்கர் கிங்' எனப்படும் விரைவில் உணவளிக்கும் உணவு விடுதிகளைப் போல, அமெரிக்கா பூராவும் நிறுவ திட்ட மிட்டிருக்கிறார்கள். இந்தத் தாய் நிறுவனம் பெரிய பில்லியன் டாலர் நிறுவனம். இது ஒரு பெரிய திட்டம். இதை எல்லாம் நானாகத் தெரிந்து கொண்டேன்.

இயற்கை உணவு பற்றி என்னைப் பல கேள்விகள், சந்தேகங்கள் கேட்டார்கள். தங்களுடைய திட்டத்தைச் சொன்னார்கள். 'இது முடியும்வரை விஷயம் நமக்குள்ளே இருக்கட்டும்' என்றார்கள்.

என்னை டல்லஸில் சந்தித்த மக்கள் தொடர் பாளரைச் சந்தித்தேன். அவருடன் நெருங்கிப் பழகியதன் விளைவாக, ஆலோசனைக்காக நீ இவ்வளவு பணம் கேட்கலாம் என்று சொன்னார். ஒரு நாளைக்கு வந்துபோகும் செலவன்றி, ஆயிரம் டாலர்! இது 1980ல் பீட்டர் டிரக்கர் என்ற பிரபல தொழில்துறைப் பேராசிரியர் மட்டுமே இப்படி பணம் வாங்குவதாக கேள்விப்பட்டிருக்கிறேன். நான் மனதிற்குள் அசந்து போனேன்!

அதற்கு 'எனர்ஜி ஸ்டோர்' (Energy store) - சக்தி அளிக்கும் உணவுக்கடை என்கிற அர்த்தத்தில் பெயரிட் டிருந்தார்கள். அதன் வெளி அமைப்பு, உள் அமைப்பு பற்றி என்னிடம் விவரமாகச் சொன்னார்கள். அங்கே விற்க இருக்கும் உணவுப் பொருட்களின் சுவை, மணம், தோற்றம் அதன் தரம் பற்றிய அனைத்திற்கும் என்னை பொறுப்பெடுத்துக் கொள்ளச் சொன்னார்கள்.

அங்கே முக்கிய அயிட்டம் 'பர்கர்'. மாமிசத்தி லிருந்து தயாரிக்கப்படும் தட்டையான, ஆனால் கனமான வடை போன்ற வட்ட வடிவம் கொண்ட உணவு. லேசாக உப்பைப் போட்டு இந்த மாமிசத்தைப் பிசைந்து வடையாகத் தட்டி தோசைக் கல்லில் போட்டு சுட்டு எடுத்து, அதை ஒரு 'பன்'னுக்குள் வைத்துக் கொடுப்பார்கள். கூடவே தக்காளி சாஸ், வட்ட வடிவில் வெட்டப்பட்ட தக்காளி, வெங்காயப் பத்தைகள் மற்றும் நறுக்கப்பட்ட வெள்ளரிப் பிஞ்சு.. இவை அனைத்தும் அந்த பர்கர் மீது அடுக்கப் பட்டிருக்கும். மாமிசம் சாப்பிடப் பழகி விட்டால் சுவையான உணவுதான்! வயிறும் நிறைந்து போகும். நெடு நேரமும் பசி தாங்கும்.

மாமிச உணவின் சுவை பற்றி எழுதும் இந்த இடத்தில், மற்றொரு சுவையான விஷயத்தை நான் சொல்ல வேண்டும்! படிக்கப் போன புதிதில் என்னுடன் நமது ஊரிலிருந்து வந்த நண்பர் ஞான ஒளிவு - கல்வித் துறையில் படித்துக் கொண்டு இருந்தார். அவர் மாமிச பட்சிணி! எனவே என்னை அறிமுகப் படுத்தும்போது பெயரைச் சொல்லிவிட்டு இவர் 'தாவர பட்சிணி - புல்லைத் தின்பார்! (Grass eaters) என்று அறிமுகப் படுத்துவார்!

ஒருவாறாக நண்பர் ஞானஒளிவின் வற் புறுத்தலினால், நான் 'பர்கரை' எல்லாம் சுவைத்திருக் கிறேன். ஆனாலும் விரும்பிப் போவதில்லை; தேடிச் சாப்பிடுவதில்லை. இது ஒருவகை சைவம்!

இதில் வேடிக்கையான விஷயம், எங்கள் நிறு வனத்திலே மாதமிருமுறை நடக்கும் 'நிர்வாகிகள் ருசி பார்க்க நடத்தும் கூட்டம்தான்!'

எனது காரியதரிசி எங்கள் உணவுப் பொருளை மின் அடுப்பில் சுட்டெடுத்து வெட்டி, ஒரு பேப்பர் தட்டில் ஆளுக்குக் கொஞ்சம் ருசிபார்க்கக் கொடுப்பார். நான் மற்றும் நிறுவனத்தின் உரிமையாளர், தேசீய தலைமை விற்பனையாளர், நிறுவனத்தின் நிதி நிர்வாகி, எனது காரியதரிசி சில சமயங்களில் விருந்தினர்கள் என்று எல்லோரும் உணவை ருசி பார்க்க நின்று கொண் டிருப்போம்.

ஒவ்வொரு முறையும் சரியான சூட்டில் வாயில் போட்டுச் சுவைத்து - இரண்டு மூன்று துண்டுகளை யாவது சுவைத்த பின் 'எப்படி இருக்கிறது? என்ன குறை? என்ன மாற்றம் செய்யலாம்?' என்று கூற வேண்டும். அவரவரும் தாங்கள் சாப்பிட்டுச் சுவை பார்ப்பதில் கவனமாக இருப்பார்கள். சாப்பிடும்போது இவர்கள் முகம் எப்படி இருக்கிறது என்று பார்க்க எண்ணினேன். தலையைத் தூக்கி அவர்களைப் பார்த்தேன். நீங்கள் நம்ப மாட்டீர்கள்! அவர்கள் அனைவரும் என் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்!' 'எனது தீர்ப்பு எப்படி இருக்கப் போகிறது?' என்று! மாமிசமே பாரம்பரியமாகச் சாப்பிட்டு' அதில் ஊறிப் போனமனிதர்கள், மாமிசமே சாப்பிடாது - அதில் அதிகம் பழக்கமில்லாத - என் தீர்ப்பை எதிர்நோக்கியிருப்பதைக் கண்டு எனக்குச் சிரிப்புத்தான் ஏற்பட்டது - அதாவது மனத்திற்குள்!

**நா**ன் அந்த நியூயார்க் நிறுவனத்தாரின் வேண்டு கோள்படி அங்கு சென்று சில இத்தாலிய உணவுப் பொருட்களையும், சில மெக்சிகோ நாட்டு உணவுப் பொருட்களையும், சில அமெரிக்க உணவுப் பொருட் களையும் மாதிரிக்காகச் செய்து காட்ட வேண்டும்; அவர்களுக்குப் பரிமாறி அவர்களது அங்கீகாரத்தைப் பெற வேண்டும்.

இங்குதான் மிகப் பெரிய உண்மை ஒளிந்து கொண்டிருக்கிறது! அதாவது நான் நமது 'இசை உலக சுப்புடு' போல! திரு. சுப்புடுக்கு சங்கீத விமர்சனம் வரும்; ஆனால் ஒரு கச்சேரி செய்ய வராது. அதாவது நான், மிக நன்றாக, உணவு எப்படி இருக்க வேண்டும் என்பதையும் எது குறைவு, எதில் மாற்றம் தேவை என்றெல்லாம் பிரமாதமாக விமர்சிப்பேன். 'கேசரோல்' (Cassarole) எனப்படும் ஓரிரு அமெரிக்க உணவுப் பொருட்களையும், சைனீஸ் 'சௌமேன்' எனப்படும் உணவுப் பொருளையும், ஓரளவு - என் மனைவி அங்கீகாரம் அளிக்கும் அளவுக்குச் செய்வேன். (என் மனைவியின் அங்கீகாரம் என்பது சாமான்யமான விஷயமல்ல! அதிலும் கணவனுக்குச் சர்டிபிகேட் கொடுப்பது என்பது மிகப் பெரிய விஷயமாக்கும்!)



**அறுபது மணிவிழாவில் விளநகர் கோவிலில் நானும் என் மனைவி சீதாலட்சுமியும்**

மற்ற எல்லாவகை உணவையும் நான் ருசிபார்த்துச் சொல்வேன். அதிகம் சமைக்கத் தெரியாது. என் மனைவிதான் நன்றாகச் சமைப்பார்.

ஆகவே நான் நியூயார்க்கிற்கு மாதிரி உணவு தயாரிக்க ஒவ்வொரு முறையும் எனது மனைவியை அழைத்துச் செல்வேன். எங்களுக்குச் சமையலறை கொண்ட ஒரு அறையும், பெரிய படுக்கை அறையும் விருந்தினரை வரவேற்கும் அறையும் கொண்ட ரூம்களை 'பார்க்' ஓட்டலில் ஒதுக்குவார்கள். ஹோட்டலின் எதிரே நியூயார்க்கின் புகழ் பெற்ற சென்ட்ரல் பார்க் பூங்கா.

நாளை உணவு விடுதியில் என்ன தயாரித்து அளிக்கப் போகிறோமோ அதை எங்கள் வீட்டிலேயே நியூயார்க்கிலிருந்து வருகின்ற நிர்வாகிகளுக்குத் தயாரித்து அளிக்க ஏற்பாடாகி இருந்தது. நானும் என் மனைவியும் இதற்காக ஒரு வாரம் ஒத்திகை செய்தோம் - பின் ஒரு நாள் விருந்து நடந்தது.

இதிலே இரண்டு முக்கிய விஷயங்கள்! ஒன்றில் பொருளின் தரத்தை உன்னதமாக உயர்த்தி இருந்தோம். அதாவது அவர்கள் தினந்தோறும் சாப்பிடுகின்ற 'பர்கர்' 'மீட்'டின் (மாமிசத்தின்) ருசியை, என்ன செய்தோம்? இயற்கையான உணவுப் பொருளைச் சேர்த்து, அந்த 'பர்கரை'ச் செய்தோம். அது புதிதாக வந்த மாமிசம் போல அவ்வளவு (Juicy) மிருதுவாக, சுவையாக, இருந்தது. வழக்கமாக குளிர்சாதனப் பெட்டியில் தான் மாமிசம் பாதுகாக்கப்படும். இந்த மாமிசத்தை எடுத்து அரைத்து வடை போல 'பர்கர்' தட்டினால், மாமிசம் ஈரப்பசை யில்லாமல், உள்ளே ஒரு லேசான உலர்ந்த தன்மையில் தான் இருக்கும். ஆனால் அப்படிப்பட்ட மாமிசத்தை எடுத்துக் கொண்டு அதை ஈரப்பசை கொண்ட - அப்போதுதான் புதிதாய் வாங்கிய மாமிசத்தைப் போல செய்திருந்தோம். உணவில் பர்கர்தான் மிக முக்கியமான அயிட்டம். அப்படிப்பட்ட முக்கிய பொருளில் இப்படிப்பட்ட மாற்றம் ஏற்பட்ட உடன் எல்லாமே வெற்றியானது போல ஆகி விட்டது! 'ஆகா' என்றார்கள்!

அடுத்ததாக ஒரு காரியம் செய்தோம், யாரும் இதுவரை செய்யாததை. அதாவது இத்தாலியன், மெக்சிகன், ஜப்பானீஸ் என்று எந்த 'பர்கர்' தேவையோ அதற்கான 'சாஸ்' ஒன்றினைத் தயாரித்து அங்கே பொதுவான ஓரிடத்தில் வைத்திருந்தோம். பர்கர் மீது இந்தச் சாஸை தாராளமாக ஊற்றிக் கொண்டால் இந்தச் சுவையுள்ள பர்கரை நீங்கள் சாப்பிடலாம் என்றோம். அதே போன்று தரமும் சுவையும் - ஒவ்வொரு வகை சாசிலும் - எங்கள் முத்திரை - இருந்தது.

'பர்கரி'ல் ஈரப்பசையை (தண்ணீரைச் சேர்த்து அல்ல) உண்டு பண்ணியிருப்பது போல, சில முக்கியமான இடங்களில் உணவின் தன்மையைச் சீண்டியிருந்தோம். அது சாப்பிடுபவர்களின் கவனத்தையும் சுவையையும் தூண்டுமாறு, மறக்க முடியாதபடி செய்திருந்தோம். எல்லாமே சின்னச் சின்ன விஷயங்கள்தான்! இந்தச் சின்ன விஷயங்கள்தான் 'என்ன செய்திருக்கிறார்கள்...?' என்ற ஒரு ஆர்வத்தையும் இனம் புரியாத ஒருவித தேடலையும், ஈர்ப்பையும், நினைவில் நமது முத்திரையையும் ஏற்படுத்தி விடுகிறது.

இசையைப் பற்றி எழுதி இருந்தார்கள் ஒரு சமயம். "பெரிய பாடகனாக நாளை மலர்பவரும், சாதாரண இசை ஆசிரியராக இசைப் பள்ளி நடத்துபவரும் ஒரே ஆசிரியரிடம்தான் பயிற்சி பெறுகிறார்கள். பிறகு ஏன் ஒருவர் இசை மேதையாகவும் மற்றொருவர் பாடம் சொல்லிக் கொடுக்கும் ஆசிரியராகவும் போகிறார்? அந்த இசை மேதை எந்தெந்த இடங்களில் சில பிர்காக்களைச் சேர்க்க வேண்டும் என்பதை அறிந்தவர்; மற்றவர் இதை அறியாதவர்!" என்று எழுதி இருந்தார்கள்.

"எல்லா ஓவியர்களுமே கோடுகளை வைத்துத்தான் ஓவியம் தீட்டுகிறார்கள். எந்த வளைவுகளை எந்த இடத்தில் கொண்டு வர வேண்டுமென்பதில்தான் அவர்கள் வித்தியாசப்படுகிறார்கள்" என்பார் என் ஓவிய நண்பர்.

அதுதான் வித்தியாசம்!

அந்த சூட்சுமத்தில்தான் வெற்றி இருக்கிறது!






32

## சளைக்காத மனமே துணை!

மெக்டானல்டு போன்ற நல்ல இயற்கை உணவு தயாரிக்கும் கடைகளை அமெரிக்கா பூராவும் திறக்கும் திட்டம் என்ன ஆயிற்று என்று அறிந்து கொள்ளப் பலர் ஆவலாயிருப்பீர்கள். நான் சொன்ன ஆலோசனைகளை அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள். அதன்படி என்னென்ன பொருளை விற்கத் தீர்மானிக்கிறோமோ அதை எங்கள் வீட்டில் தயாரித்தோம். நியூயார்க்கிலிருந்து மூன்று பெரிய நிர்வாகிகள் வந்தார்கள். எனக்குக் கொஞ்சம் கூச்சம்தான். மேஜையை அமைக்கும் விதத்திலிருந்து, உணவுப் பண்டங்களின் ருசி வரை, "எப்படிப் போகுமோ?" என்கிற கவலை எனக்கிருந்தது. என்ன செய்ய வேண்டும் என்கிற திட்டமும் அதில் என்ன சுவையை எதிர்பார்க்கிறோம், அதற்கு என்னென்ன பொருளைச் சேர்க்க வேண்டும் என்பதைத் திட்டமிடுவதும் மட்டும் என்னுடைய வேலை. எல்லாவற்றையும் நான் எதிர்பார்க்கும் சுவையுடன், மணத்துடன் அதே அமைப்பில் உருவாக்கும் முழுப் பொறுப்பும் என் மனைவியினுடையது.

வந்தார்கள். வரிசையாக ஒன்றன் பின் ஒன்றாக உணவைப் பரிமாறினோம். எத்தகைய உணவை (மெனுவை) என்ன அயிட்டங்களைக் கொடுக்க வேண்டும் என்பதையும் அவை எப்படி இருக்க வேண்டும் என்பதையும் நானும் என் மனைவியும் தீர்மானித்தோம். அது இந்திய உணவல்ல! இத்தாலிய மற்றும் மெக்சிகன் உணவு!

உணவை மிகவும் ரசித்தார்கள், மகிழ்ந்தார்கள், அங்கீகரித்தார்கள். ஊருக்குக் கிளம்பும்போது என் மனைவிக்கு மகுடம் சூட்டாததுதான் குறை.

அடுத்து எங்களுடைய பணி, நியூயார்க்கில் நாங்கள் ஒரு வாரம் தங்கி இதைச் செய்ய வேண்டும் என்பதுதான். அங்கே நாளைய உணவு விடுதி எப்படி இருக்க வேண்டுமோ அந்தப் பாணியில், உணவருந்தும் மேஜைகள் அலங்கரிக்கப்பட்டு உணவு படைக்கப் பட்டது. நாங்கள் சொல்லியபடி உணவு தயாரிக்கப் பட்டது.

நான் என் மனைவி உட்பட எல்லோரும் சேர்ந்து சாப்பிட்டோம். அங்கு அளிக்கப்பட்ட அனைத்தும் மாமிசம் சம்பந்தப்பட்டது. அவர்களுடைய ஆச்சரியம், எப்படி இந்த சாதாரண மாமிசத்தை இவ்வளவு மிருதுவாக சுவையுடன் செய்தேன் என்பதுதான்! எல்லோரும் கேட்டார்கள். பாராட்டினார்கள்.

இங்கேதான் ஒரு முக்கியமான விஷயம் வருகிறது. நிறுவனத்தின் மூத்த துணைத் தலைவர்கள் ஒரு பதினோரு பேர் வரவில்லை. அவர்கள் கலி போர்னியாவுக்கு - 3000 மைலுக்கு அப்பால் போயிருந்தார்கள். இந்தத் திட்டத்தில் பங்கேற்க அவர்கள் முன்கூட்டியே வருவதாக ஏற்பாடு. ஆனால் அவர்கள் வரவில்லை!

'இந்த உணவு விடுதி திட்டத்தை செய்யலாம் என்று அறிமுகப்படுத்தி, உணவுத் துறையில் நாம் இறங்க வேண்டும்' என்று சொன்னவர் ஒரு துணைத் தலைவர். அவர் நிறுவனத்தின் தலைவருக்கு செல்லப்பிள்ளை. எனவே இந்தப் பெரிய திட்டம் அங்கீகரிக்கப்பட்டால் அவரது முக்கியத்துவம் நிறுவனத்தில் பல மடங்கு உயர்ந்து விடும், என்கிற பயம்தான் மற்ற பதினோரு துணைத் தலைவர்கள் வராததற்குக் காரணம் என்றார்கள். அங்கே மேல் மட்டத்தில் 'பாலிடிக்ஸ்' எப்படிச் செயல்படுகிறது என்பதைக் கவனியுங்கள்!

எனக்கு - நான் செய்த பணிக்கு அவர்கள் ஒப்புக் கொண்ட பெரிய தொகையைக் கொடுத்து விட்டார்கள். ஆனால் இது எங்கோ போய் விட்டிருக்க வேண்டிய திட்டம். எல்லாம் கூடி வந்தது. பின்னால் கேள்விப் பட்டேன், "இந்தப் பதினோரு பேர் அங்கீகரிக்க மறுக்கும் திட்டத்தை எடுத்துக்கொண்டு செயல்படுவது நல்லதல்ல,

பின்னால் பிரச்னை வரும்'' என்று தலைவர் சொன்னதாக.

அடுத்து எங்கள் நிறுவனத்திற்குக் கிடைத்த மிகப் பெரிய வாய்ப்பு -

வாஷிங்டன் டி.சி. நகரில் மிகப் பெரிய உணவு நிறுவனம். பெயரே (GIANT STORES) "ராட்சதக் கடைகள்" என்று.

நான் டல்லசில் நடந்த பொருட்காட்சியிலிருந்து திரும்பிய போது அந்தக் கடையின் நிர்வாக அதிகாரி என்னைக் கூப்பிட்டதாக என் காரியதரிசி தெரிவித்தார். மிகுந்த ஆர்வத்துடன் போனை எடுத்தேன். நிறுவனத்தின் பொருட்கள் வாங்கும் துறையின் தலைவர் என்னுடன் பேசினார்.

"உங்கள் பொருட்களைப் பற்றிப் படித்தேன். நாங்கள் அதை விற்க விரும்புகிறோம். இங்கே இதை எல்லா இடங்களிலும் விற்கும் தரகர்களை உங்களுக்கு நாங்களே ஏற்பாடு செய்கிறோம். நீங்கள் இங்கு வந்து விட்டுப் போக முடியுமா? உங்களுடன் பேச விரும்புகிறேன்!" என்றார்.

நான் மறுநாளே விமானத்தில் போய்ச் சேர்ந்தேன். எனக்கு ராஜ வரவேற்பு.

பொருளை எடுத்துச் சென்றிருந்தேன். உணவைச் சூடுபடுத்திச் சாப்பிட்டுப் பார்த்தார்கள். அவர்களுக்குப் பரமதிருப்தி. இதன் விளைவாக எங்கள் பொருளை இரண்டு 'டிரக்'குகள் ஆர்டர் செய்தார்கள். இது ஒரு மிகப் பெரிய வாய்ப்பு எங்கள் நிறுவனத்திற்கு.

ஆனால் ஒரு விஷயம் நடந்தது. நிலைமையின் கனத்தையும் வாய்ப்பையும் எங்கள் நிறுவனத்தின் சொந்தக்காரரர் உணரவில்லை. எனவே பொருட்களுக்கு வாஷிங்டன் நகரில் டெலிவிஷனிலும் பத்திரிகையிலும் விளம்பரம் செய்ய மறுத்து விட்டார். அவருக்கு விளம்பரத்தில் நம்பிக்கையில்லை; "பணம்தான் வீணாகும்" என்ற கொள்கை கொண்டவர் அவர்.

கடைக்காரர்கள் சொன்னார்கள். "நாங்கள் பத்திரிகையில் விளம்பரம் செய்கிறோம். 'அறிமுகம்'

என்பதால் குறைந்த விலைக்கு விற்போம், நிறைய விற்பனை ஆகும்' என்றார்கள். ஆனால் அப்படித் தன் பொருளை ஓரளவு நஷ்டத்தில் விற்க உரிமையாளர் ஒத்துக் கொள்ளவில்லை.

இதன் விளைவாக ஒரு மாபெரும் வாய்ப்பை நிறுவனம் இழந்தது. இந்தப் பொருளின் தன்மை - குணம் பற்றிச் சரியான அறிமுகம் மற்றும் விளம்பரம் இல்லாததால் கடைகளில் பொருள் அப்படியே தேங்கிக் கிடந்தது. எங்கள் பொருள் ஒரு 'டிரக் லோட்டு'க்கு மேலாகத் திரும்பி வந்தது. திரும்பி வந்த பொருள் கடையில் கையாளப்பட்ட பின் திருப்பி அனுப்பப் பட்டதால் பொருள் முழுவதுமாகத் தூக்கி எறியும் நிலைக்கு வீணாகி இருந்தது.

இப்படி நஷ்டமடைவதைத் தவிர்த்து அங்கேயே குறைந்த விலைக்கு நிறைய விற்றிருக்கலாம்; நல்ல அறிமுகம் கிடைத்திருக்கும்.

ஒரு தலைவனின் சொந்த விருப்பு வெறுப்புக்களும் யதார்த்தத்தை உணராத முடிவுகளும் தொழில் வளர்ச்சியை எப்படிக் கடுமையாக பாதிக்கிறது என்பதை கவனியுங்கள். நமக்கு வரவேண்டிய மிகப்பெரிய வெற்றியை கோட்டை விட்ட உணர்வுதான் என்னுள் எழுந்தது.

இதை எல்லாம் மீறி, நிறுவனமானது முதன் முறையாக நல்ல லாபத்தில் ஓடத் துவங்கியது. அதாவது நாங்கள் கொண்டு வந்த சீர்திருத்தங்கள், மாற்றங்கள் அனைத்தும் பலன் தந்தன.

ஏறத்தாழ ஒரு மில்லியன் டாலருக்கு மேல் நிறுவனத்திற்கு வங்கியில் கடன் இருந்தது.

ஒவ்வொரு மாதமும் வரவு செலவு லாபப் பட்டியலை நான்தான் வங்கியின் தலைவருக்கு எடுத்துச் செல்வது வழக்கம். அவர்கள் கணக்கை உற்றுக் கவனிப்பார்கள்; அத்துடன் நாங்கள் நிலைமையை மீட்க எடுக்கும் நடவடிக்கைகளையும் கேட்பார்கள். ஒவ்வொரு முறையும் வங்கியின் தலைவர் அறையில் நுழையும் போதே "என்ன கறுப்பு மையா? சிவப்பா?" என்று சிரித்துக் கொண்டே கேட்டு, கை குலுக்குவார். கறுப்பு

மை என்றால் 'இந்த மாதம் லாபம்' என்று அர்த்தம்; சிவப்பு மை என்றால் 'நஷ்டத்தில் நிறுவனம் ஓடிக்கொண்டிருக்கிறது' என்று அர்த்தம். என்னை மிகுந்த கௌரவத்துடன் நடத்தினார்கள். ஒரு சமயம் "ஏன் நிறுவனத்தை நீயே வாங்கிக் கொண்டு நடத்தேன்!" என்றார் வங்கியின் தலைவர். நான் மௌனமாக சிரித்தேன்.

நிறுவனத்தில் இன்னும் இரண்டு விஷயங்கள் செய்ய விரும்பினேன். ஒன்று: உற்பத்தி செய்யப்படும் ரொட்டி மாவு எப்போதும் ஒரே பதத்தில் இல்லாமலிருந்தது. இதன் காரணம் மாவு பிசையும் அறையில் சரியான வெப்ப நிலை இல்லை. இதை மாற்ற செலவாகும் என்றாலும், மாற்ற விரும்பினேன்.

இரண்டாவதாக புதிய மெக்சிகன் உணவுப் பொருட்களையும் மற்ற இத்தாலிய உணவுப் பொருட்களையும் விற்பதற்கு நிறைய இடமிருந்தது. மார்க்கெட் இருந்தது. அது நம் வருமானத்தை அதிகப்படுத்தும் என்று எண்ணினேன்.

வங்கியில் இதற்கு உதவத் தயாராக இருந்தார்கள். எனினும் எங்கள் உரிமையாளர் இதற்குத் தயாராயில்லை. தொழிலில் ஒரு பழமொழி உண்டு. "நேற்றிருந்த இடத்தை நிலைநிறுத்திக் கொள்ள வேண்டுமென்றால் கூட நீ ஓடிக் கொண்டிருக்க வேண்டும்" என்பார்கள். தொழில் என்பது தொடர் கண்காணிப்பு; தொடர் முன்னேற்றம். நாம் ஓடவில்லை என்றால் போட்டியாளர்களும், வாங்கும் மக்களும் நம்மைப் பின்னுக்குத் தள்ளி விடுவார்கள். தொழிலில் தேக்கத்திற்கு - இருப்பதை வைத்துக் கொண்டு ஓட்டுவதற்கு - இடமில்லை. அப்படி இருந்தால் நாம் அப்புறப்படுத்தப்படுவோம்.

புதிய சூழ்நிலை, என்னை வளர முடியாதபடி கட்டுப்படுத்துவதாக இருந்தது. எனக்கோ நம் அறிவையும் திறமையையும் பிறருக்கு உபயோகப்படுத்தியும் பலனில்லையே என்ற தாபமும் விரக்தியும் ஏற்பட்டன.

சொந்தமாகத் தொழில் செய்ய வேண்டுமென்று தான் நான் பேராசிரியர் பதவியை விட்டேன். இப்போது போதுமான அனுபவம் பெற்றாய் விட்டது.

வங்கியாளர் சொன்னது எனக்கு நினைவுக்கு வந்தது. எனவே எங்கள் நிறுவனத்தின் உரிமையாளருடன் நிறுவனத்தை வாங்குவது பற்றிப் பேச்செடுத்தேன். அவருக்கு விற்க மனமில்லை. ஏனெனில் அவர் துவங்கிய ஏழெட்டு நிறுவனங்களில் இது ஒன்றுதான் வருமானம் கொடுத்த நல்ல நிறுவனமாய் மாறி இருந்தது.

நாடெங்கும் சுற்றிப் பார்த்ததில், எங்கள் நிறுவனம் சுமார் 16–17 மாநிலங்களில் மட்டுமே இருந்தது. என்னும் 32 மாநிலங்களில் இதைப் போன்ற உணவு நிறுவனத்திற்கு நல்ல வாய்ப்பு இருந்தது. அதுவும் தெற்கு மாநிலங்களில். தெற்கு மாநிலங்களுக்கு 'டிரக்'கில் பொருளை எடுத்துச் செல்வது அதிகச் செலவாகும். எனவே அங்கு நமது உற்பத்திக் கேந்திரம் ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற என் யோசனையும் எடுபடவில்லை.

இதன் விளைவாகச் சிறிது காலத்தில் நான் அதிலிருந்து விலக வேண்டியதாயிற்று. அப்போது இன்னும் சில மனவியல் உண்மைகளை நான் தெரிந்து கொண்டேன்!

ஒரு வேலையில் இருக்கும் போது உங்களுக்குக் கொடுக்கப்படும் மரியாதை, அது இல்லாத போது கொடுக்கப்படுவதில்லை! உங்களை ஒன்றுமில்லாதவர் என்றே உலகம் மதிக்கிறது. தொழில் துவங்குவதென்றால் தாங்களும் அதில் பங்கு பெற்றுப்பணம் போடுவதாகப் பலர் சொல்லி இருந்தார்கள். அவர்கள் எல்லாம் காய்ந்த குளத்திலே தங்காத நாரைகள் பறந்து விடுவது போலப் பறந்து விட்டனர்!

சொந்தமாகக் கையில் போதுமான பணமில்லாத போது தொழில் துவங்க முடியாது என்பதை ஒரு மூன்று நான்கு மாதங்களில் தெரிந்து கொண்டேன். கொடுக்கிறேன் என்றவர்கள் கைவிரித்தார்கள். அடுத்த ஏழெட்டு மாதங்களில் ஒரு நல்ல வேலையையாவது எடுத்துக் கொள்வோம் என்று கடைசியில் ஈடுபட்டேன். நான் இருந்த வேலையோ - தலைமை நிர்வாகம். சில பெரிய

நிறுவனங்களிலிருந்து எனக்கு அழைப்பு வந்தது. ஆனால் எதுவுமே சரியாக அமையவில்லை. உள்ளே நுழைவதற்குப் பல்வேறு தடைகள் இருந்தன.

எனினும் நான் மனம் சளைக்கவில்லை. ஏனெனில் இப்படி வேலையை விட்டு விட்டுப் புதிய பிரதேசத்தைத் தேடுவது எனக்குப் புதிதல்ல; இது எனக்கு மூன்றாவது முறை!

உணவுத் துறை தொழில் நல்ல தொழில்தான். எல்லோரும் தினமும் சாப்பிட்டாக வேண்டும். எனவே விற்பனை நிச்சயம் நடக்கும் - ஆனால் இதில் ஒரு குறை; லாப சதவிகிதம் மிகக் குறைவு! காரணம் எல்லோருக்குமே இது தெரிந்த தொழில். "என் மனைவி நன்கு சமைக்கிறாள். எனவே நான் உணவுத் துறையில் பிரகாசிக்க முடியும் என்று சொல்லிக் கொண்டு இறங்கி விடாதே!" என்பதுதான் உணவுத் துறை ஆலோசகர்கள் சொல்லும் முதல் பாடம். போட்டி மிக அதிகம்.

சொந்தத் தொழில் துவங்க எது நமக்கு ஏற்றதாக இருக்கும் என்று எல்லாவற்றையுமே பார்த்து அலசிக் கொண்டிருந்தேன்.

சில சமயம் அதைரியம் ஏற்படும்; உண்மைதான். ஓரிரு நாள் வரை கூட இந்தச் சோர்வு என்னை அலைக் கழிக்கும். இதை மிஞ்சி எது எனக்கு உயிர் கொடுத்ததென்றால் 'சளைக்காத மனம்' என்பார்களே, அதுதான்!

அந்தக் காலகட்டத்தில்தான் - 1972-ல் மெக்டா னல்டு என்ற உணவு நிறுவனம் ஒரு புகழ்பெற்ற வாசகத்தைத் தனது நிறுவனத்தின் விளம்பரமாகப் பல பத்திரிகைகளிலும் வெளியிட்டிருந்தது. அதை எடுத்து என் அறையில் எனக்கு எதிரே ஒட்டி வைத்திருந்தேன். அது அவர்களுடைய வாசகமும் அல்ல; கால்வின் கூலிட்ஜ் என்ற அமெரிக்க ஜனாதிபதியின் வாசகம். இதுதான் அந்த வாசகம்:

"மேலே செல்லுங்கள்!"

சளைக்காத மனத்திற்கு ஈடாக இவ்வுலகில் எதுவுமில்லை.

திறமை அதற்கு ஈடாகாது. திறமை இருந்தும் தோற்றவர்கள் ஏராளம்.

மேதைத்தனமும் ஈடாகாது. பலன் காணாத மேதைகள் என்பது பழமொழி.

கல்வி மட்டும் ஈடாவதில்லை. இவ்வுலகம், படித்தும் பாதை தவறியவர்களால் நிரம்பி இருக்கிறது.

சளைக்காத மனமும் உறுதியும் மட்டுமே சர்வவல்லமை படைத்தவை.

வாழ்வின் ஒவ்வொரு திருப்பத்திலும் சளைக்காத மனம்தான் எனக்குத் தெம்பு கொடுத்தது; சரியான வழியைக் காட்டியது. தொழிலதிபர் திரு. A.C. முத்தையா எனக்கு எழுதிய கடிதமொன்றில் (I AM AMAZED AT YOUR PERSISTENCE) "உங்களது சளைக்காத குணம் என்னை வியப்படையச் செய்கிறது" என்று. அது என்னால் மறக்க முடியாத வாசகம். என் வாழ்வுடன் ஒன்றிவிட்ட வாசகம்.



## 33

## புதிய திசைகள்

வாழ்வின் ஒவ்வொரு காலகட்டத்தையும் பின்னோக்கிப் பார்க்கும்போது இரண்டு விஷயங்கள் புலப்படுகின்றன. வாழ்வின் எந்த இடத்தில் நமது கல்வி, படிப்பு, அனுபவம் எல்லாம் முடிந்து விட்டதோ அப்போது நாம் வேறு திசையில் நடப்பதற்கான சூழ்நிலைகள் உருவாகின்றன. சூழ்நிலை என்று சொல்வதற்குப் பதில் கட்டாயங்கள் ஏற்படுகின்றன என்று கூற வேண்டும்.

வெளியூருக்குப் போகிறோம் என்று தீர்மானிக்கிறோம். இங்கிருப்பது சரியில்லை - இங்கு எல்லாம் கற்றாகி விட்டது - என்ற நிலையில், சூழ்நிலையே நம்மை இருக்குமிடத்தில் இருந்து வெளியே தள்ளுமாறு உருவாகிறது. அடுத்த நிலை எப்படி இருக்குமோ என்கிற சஞ்சலம் ஏற்படுகிறது. சஞ்சலத்தையும் மீறி நாம் செயல்பட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. வெளியே வந்து பல பாதைகள் செல்லும் ஒரு சதுக்கத்தில் நிற்கிறோமென்றால், ஒரு பாதை தவிர மற்றவை எல்லாம் முட்களாலோ அல்லது பாதை பழுது பார்க்கப் படுவதாலோ அடைக்கப்பட்டிருக்கின்றன. எதிரே ஒரு பாதைதான் - அது வழியேதான் செல்ல வேண்டிய நிர்ப்பந்தம். நம்மை மீறி யாரோ எதுவோ செய்வது போன்ற நிலை. நாம் நடத்தப்படுவது போன்ற சூழ்நிலை. அதைத்தான் 'விதி' நம்மை வழி நடத்திச் செல்கிறது என்கிறார்கள்; நாம் செய்த கர்ம வினைகள் நம்மை வழி நடத்திச் செல்கின்றன என்கிறார்கள்.

பிரபஞ்சத்தின் ஓர் உண்மையை ஜே. கிருஷ்ண மூர்த்திக்கு அவரது குரு உபதேசிக்கிறார். "கடவுளுடைய திட்டம்; இப் பிரபஞ்சம் உயர்நிலையை நோக்கிச்

செல்லும் பரிணாம வளர்ச்சிதான்'' என்று. நாமும் தெரிந்தோ தெரியாமலோ அதையே சொல்கிறோம். நமக்கும் அந்தத் தெளிவு சில சமயம் ஏற்படுகிறது. "வாழ்க்கை ஒரு தேவனாகும் முயற்சி'' என்று கூறுகிறோம். எல்லாம் ஒரு ஒழுங்கிலேதான் நடைபெறுகின்றன.

ஜேம்ஸ் ஆலன் போன்ற தத்துவஞானிகள் "மனிதன்தான் அவனுடைய விதியைநிர்ணயிக்கின்ற சிருஷ்டிகர்த்தா'' என்று கூறுகிறார்கள். அதாவது "நமது எண்ணங்கள்தான் நமது வாழ்வையும், சூழ்நிலையையும் உருவாக்குகின்றன'' என்று. நாம்தான் தீர்மானிக்கிறோம்; விதி செயல்படவில்லை; நமது எண்ணங்கள்தான் நம்மை அங்கே கொண்டு வந்து நிறுத்தி இருக்கின்றன. இப்படி ஒரு சிந்தனை.

நம் செயலையும் சூழ்நிலையையும் நம் எண்ணங்கள் தீர்மானிக்கின்றனவா அல்லது ஏதோ ஒரு சக்தி - விதி - தீர்மானிக்கிறதா? மேனாட்டினர் இதை 64 டாலர் கேள்வி (மிகப் பெரிய கேள்வி) என்பார்கள். இங்கேதான் நாம் தெளிவு பெற சில அரிய விஷயங்களை நம் முன்னோர்கள் நம் முன் வைக்கிறார்கள்.

நம்மை மீறிய ஒரு சக்தி செயல்படுகிறது; நம்மை வழி நடத்துகிறது என்பதைத் தெரிந்து கொள்வதற்குக் கூட நமக்கு அந்தச் சக்தியின் அருள், கருணை வேண்டும் என்று "அவனருளாலே அவர் தாள் வணங்கி'' என்று சொல்லி இருக்கிறார்கள்.

ஏன் சில புத்திசாலிகள், கெட்டிக்காரர்கள், நல்லவர்கள் இப்படி நடந்து கொள்கிறார்கள் - சில சமயம் இப்படி மாட்டிக் கொள்கிறார்கள் என்று நமக்கு வியப்பு ஏற்படுகிறது. "கேடு வரும் பின்னே, மதி கெட்டு வரும் முன்னே'' என்றொரு வாசகம் இருக்கிறது. எது நமக்கு நேர வேண்டுமோ அதற்கேற்ப நம் மனமே முதலில் கெட்டுப் போய் விடுகிறது! எப்படி?!

ஒரு இக்கட்டான வாழ்வின் கால கட்டத்தில் மனிதன் செய்வதறியாது தன்னை மறக்கிறான். அங்கே 'துவைதம்' எனப்படும் உலகின் இரட்டைத் தன்மை - அதாவது நன்மை தீமை, லாப நஷ்டம், நல்லது கெட்டது என்ற எதுவுமே இல்லை. பரிணாம வளர்ச்சிக்கு எது

ஏற்றதோ அதில்தான் நாம் சொல்கிறோம்: அல்லது நாம் அழைத்துச் சொல்லப் படுகிறோம். அங்கே 'நாம்' என்ற மனிதன் தானாக செல்வதுமில்லை; அங்கே 'பிறர்' என்ற மனிதர் நம்மை அழைத்துச் செல்வதுமில்லை. 'நானு'ம் இல்லை. 'பிறரும்' இல்லை. 'ஏகம்'தான் இருக்கிறது. ஒன்றே ஒன்று. மூலம் எல்லாம் தோன்றுவதற்கு முன் இருந்த மூலம்; உற்பத்தி ஸ்தானம்.

வேறொரு வார்த்தையில் அதைப் பிரபஞ்சலயம் என்று கூறலாம். இந்த உலகமே - இந்தப் பிரபஞ்சமே ஒரு ஒழுங்கான ஓட்டத்தில் இயங்கிக் கொண்டிருக்கிறது. அந்த ஓட்டத்தின் தன்மையில், அதன் அர்த்தத்தில் நாமும் கலந்து விடுகிறோம். அருணகிரிநாதர் இதை மிக அழகாக 'மனோலயம்தானே தரும்' என்கிறார். மனம் ஒரு லயத்தில்,ஒரு ஒழுங்கில் தன்னை மறந்து செயல்படுகிறது. அப்போது மனோலயம் என்கிற ஒழுங்கு பிரபஞ்ச லயத்திலே, அதன் பரிணாம வளர்ச்சியிலே ஒன்றி விடுகிறது.

"ஏன் இந்த சிந்தனை எல்லாம்?" என்று நீங்கள் கேட்கக்கூடும். நாம் வாழும் உலகம் இரட்டைத் தன்மை கொண்டது. பொருள் - சக்தி, ஒளி - இருள், நன்மை - தீமை, விருப்பு - வெறுப்பு, பிறப்பு - இறப்பு, நேர் மின்சாரம் - எதிர் மின்சாரம், ஆண் - பெண் என்ற இரட்டைத் தன்மையினால்தான் இவ்வுலகம் ஆக்கப் பட்டிருக்கிறது. அந்த இரட்டைத் தன்மையின் ஒரு அங்கம்தான் 'காரண காரியம்' என்பதும். நமக்கு சில சம்பவங்கள் - நம்மை மீறிய சம்பவங்கள் ஏற்படுகின்றன. நடந்த காரியங்கள் பற்றி நம் மனமானது அதன் காரணத்தை அறிய முற்படுகிறது. காரணத்தை அறிந்து அதைக் கட்டுப்படுத்தி விட்டால் காரியம் நிகழாது. கெடுதலைத் தவிர்க்கலாம். அதனால்தான் இந்தக் காரண காரிய உலகில் நாம் காரணத்தைத் தேடுகிறோம். எல்லாவற்றையும் நம் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர வேண்டுமென்ற ஆர்வத்தில், வாழ்வில் அர்த்தத்தைத் தேடுகிறோம்; ஏன் வந்தோம் இங்கே என்கிற காரணத்தைத் தேடுகிறோம். என்ன காரணத்திற்காக வந்தோம் என்று தெரிந்தால்தான், வாழ்வைப் பயனுள்ளதாக ஆக்கிக் கொள்ள முடியும்.

எனவே நான் மீண்டும் என் வாழ்க்கைப் பயணத்தை வேறு திசையில் - புதிய திசையில் துவங்க இறங்கினேன். நான் தேர்ந்தெடுத்த புதிய துறை பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும் தொழில் ஆகும். எனது நண்பர் சங்கர் ரமணி அதில் இருந்தார். ஸ்டாக் மார்க்கெட்டில் இருந்த நிறுவனத்தை வாங்கி சொந்தமாகத் தொழில் செய்து கொண்டிருந்தார். அவர் படித்த படிப்பெல்லாம் இந்தியாவில் படித்த படிப்புதான். எனினும் அங்கு வெற்றிகரமாக முன்னேறிக் கொண் டிருந்தார். அவரது நிறுவனம் ஸ்டாக் மார்க்கெட்டில் இருப்பதைப் பார்த்து ஆனந்தித்து கனடாவில் இருந்த அவரை போனில் கூப்பிட்டுப் பாராட்டினேன். அடுத்த சில நாளில், விமானத்தில் எங்கள் வீட்டுக்கே வந்து விட்டார் அவர்.

தொழில் செய்யக் கூடிய எல்லாத் துறைகளையும் பார்த்தபோது, இந்த பெட்ரோலிய எண்ணெய்த் துறை 'ஓகோ' என்று போய்க் கொண்டிருந்தது புலப்பட்டது. எண்ணெய் வளம் கொண்ட அரேபிய நாட்டு அரசர்கள் ஒன்று சேர்ந்து விலையை ஏற்றியதால், எண்ணெய் விலை கிடு கிடுவென்று ஏறியது. இதனால் எண்ணெய் எடுக்கும் தொழிலில் ஒரு புதிய முயற்சி எங்கும் தோன்றி இருந்தது.

நான் இருப்பதோ அமெரிக்காவின் வடகோடியில் - விஸ்கான்சின் மாநிலத்தில். எண்ணெய் எடுத்த இடங்களோ பெரும்பாலும் டெக்ஸாஸ், லூசியானா என்ற தென்மாநிலங்களில். 1300 மைல் தொலைவு.

தற்செயலாக 'டைம்' பத்திரிகை வெளியிடும் 'பணம்' என்ற பத்திரிகையைப் பார்த்தேன். அதில் எண்ணெய் எடுப்பது சம்பந்தமான தொழில் பயிற்சி - ஆரம்ப பயிற்சி - லாபயெட் என்ற நகரில் அளிக்கப் படுவதாகவும் அந்தப் படிப்புக்கு வேலை வாய்ப்பு நிறைய இருப்பதாகவும் செய்தி வந்திருந்தது. கூப்பிட்டுக் கேட்டேன். இன்னும் ஒன்பது மாதத்திற்கு வகுப்பிலே இடமில்லை என்று சொல்லி விட்டார்கள்! நான் தளரவில்லை. மீண்டும் கூப்பிட்டேன். அதன் தலைவர் "வாருங்கள், பார்க்கலாம்!" என்றார் கடைசியில். நிச்சயமில்லாத நிலை. தெரியாத ஊர்.

எனது புத்தம் புதிய விலை உயரந்த காரை எடுத்துக் கொண்டேன். காரின் பின்புறத்தில் தூங்குவதற்கான (Sleeping Bag) ஒரு மிருதுவான ஜமுக்காளப் பையை எடுத்துக் கொண்டேன். சமையலுக்கான சில பாத்திரங்கள். மனைவியிடம் சொல்லிக் கொண்டேன். கையில் கொஞ்சம் பணம். வழி பார்த்து செல்வதற்கு நெடுஞ்சாலை 'மேப்.' அவ்வளவுதான்! பயணம். புதிய திசையை நோக்கி வாழ்க்கைப் பயணம்! இரண்டு நாள் காரில் பயணம். அந்த ஊருக்குப் போய்ச் சேர்ந்தபோது இருட்டி விட்டது. இரவு மணி ஒன்பது. எங்கு கேட்டாலும் ஓட்டலில் இடமில்லை என்ற செய்திதான். ஒரு ஹோட்டலில் அதன் நிர்வாகி சொன்னார். "ஒரே ஒரு அறை இருக்கிறது; மாடியில். ஆனால் கீழே இரவு பூராவும் நடனம், இசை 'டிரம்' என்று ஒரே சத்தம் இருக்கும். உன்னால் தூங்க முடியுமென்றால் எடுத்துக் கொள்!" என்றார். வேறு வழி? எடுத்துக் கொண்டேன். 1300 மைல்கள். கார் ஓட்டிய களைப்பு. படுத்ததுதான் தெரியும்.

**ந**மது ஊர் I.T.I போன்ற நிறுவனத்தினரால் தரப்படும் பத்து வாரப் பயிற்சி. பாடம் என்பது மிகக் கொஞ்சம். எல்லாமே நேரடிப் பயிற்சி. ஒரு பெரிய 130 அடி உயரமுள்ள 'ரிக்' எனப்படும் எண்ணெய்க்காக பூமியைத் துளைக்கும், துரப்பண இயந்திரம்தான் பயிற்சிக்கூடம்.

அமெரிக்கர்களை மிகவும் பாராட்ட வேண்டும். இங்கே கர்னல் டிரேக் என்பவர் பூமிக்கடியில் உப்புப் பாறை இருக்கிறதா என்று துரப்பணம் போட்ட போது பெட்ரோலிய எண்ணெய் வந்தது. கொஞ்சங் கொஞ்சமாக பெட்ரோலிய எண்ணெயின் உபயோகத்தைக் கண்டுபிடித்தார்கள். இன்று எண்ணெய் எடுக்கும் தொழில் நுட்பத்தில் அமெரிக்கர்கள் செய்திருக்கும் சாதனை மிகப் பெரியது. அவர்கள் எதிலும் சும்மா இருக்க மாட்டார்கள். மேலே, மேலே என்று போய்க் கொண்டிருப்பவர்கள். முன்னிலும் மேம்பட்டதாக, மேம்பட்டதாக என்று அவர்கள் எதையுமே சிந்திப்பவர்கள், ஆராய்பவர்கள், செயல்படுபவர்கள். அதுதான் அவர்களை உயர்த்தியிருக்கிறது.



**1980ல் ஏப்ரலில் பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும் மிகப்பெரிய துரப்பண யந்திரத்தில் நான் பெற்ற பயிற்சி**

நான் சேர்ந்த பயிற்சியில் கும்பலில் ஓரிருவர் பட்டம் பெற்றவர்கள். மற்றவர்கள் பத்தாவது, எட்டாவது, ஆறாவதுதான். நான் மட்டுமே மேல் படிப்பு படித்தவன். யாரும் இதை வித்தியாசமாக எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் "இந்தியர்கள் தங்கள் அந்தஸ்தைப் பற்றிய அதிகம் நினைவு கொண்டவர்கள் - தற்பெருமை கொண்டவர்கள்" - என்று விஷயம் தெரிந்த அமெரிக்கர் கள் சொல்வார்கள். இதேபோலத்தான் யூதர்களையும் சொல்வார்கள். அதே போல இந்தப் பயிற்சிக்கூடத்தில் அங்கு பழகுவதிலும், பாடம் படிப்பதிலும் இந்த மனோபாவம் என்னிடமும் இருந்தது, - சில நாள், சுய பச்சாதாபமும் ஏற்பட்டது, என் மேல். எல்லாம் இரண்டு மூன்று நாட்கள்தான். அதன் பிறகு, வண்டி "ஜே ஜே" என்று ஓடத்துவங்கியது. "ஒரு புதிய துறையின் அடிப்படைகளை எல்லாம் நாம் கற்றுக் கொண்டால் பின்னால் யாரும் நம்மை அசைக்க முடியாதல்லவா? என்ற எண்ணம்தான் ஓடிக் கொண்டிருந்தது. அது மகிழ்ச்சி தந்தது. வாழ்வில் இதுவரை, இப்படி, எதையும் சமாளிப்பவனாகவே தான் இருந்து வந்திருக்கிறேன். இதைப் பெருமையாக நானே எண்ணிக் கொண்டேன்.

ஒருநாள் வேறுவிதமான ஒரு பயிற்சி. எண்ணெய் எடுக்கும் யந்திரக் கோபுரத்தின் மீது ஏறி அங்கே இருக்கும் சிவப்பு மின் விளக்கின் 'பல்பை'க் கழற்றிவிட்டுப் புதிய ஒன்றை அங்கே திருக வேண்டும். எண்ணெய்த் துரப்பண கோபுரமோ 120 அடி உயரம். அதில் ஏற ஒரு அடி அகலத்தில் கம்பிகளாலான படிகள். ஏறுவதற்குக் கைப்பிடிகள் ஏதும் கிடையாது. மேலே இருக்கும் படிகளைத்தான் பிடித்துக் கொள்ள வேண்டும். நானோ, கூரை ஏறி கோழி பிடிக்கத் தெரியாதவன்! அதாவது பனிக்காலத்தில் எங்கள் வீட்டுக் கூரை மீது சுமந்து கிடக்கும் பனித் திரள்களையே கூரை மேலேறித் தள்ளியவனல்ல. இப்போது அந்தரத்தில், வானை நோக்கி வைக்கப்பட்டிருக்கும் ஏணியில் ஏற வேண்டும். ஏறிய பின் இரண்டு கைகளும் பிடிப்பை விட்டு விட்டு பல்பை எடுத்து மாற்ற வேண்டும். ஏணியின் உச்சியில் இடுப்பு - ஏணி மீது சாய்ந்திருப்பது ஒன்றுதான் ஆதாரம்.

ஏறவே எனக்கு 20 நிமிடம் ஆயிற்று. கீழே பார்த்தால் அதல பாதாளம். காலை அடுத்த படியில் எடுத்து வைக்கும்போது, பயத்தினால் கால் உறைந்து போயிற்று! ஆனால் கீழே இருந்தவர்களோ நேரம் எடுத்துக் கொள்கிறேன், மெதுவாக ஏறுகிறேன் என்று என்னைத் திட்டிக் கொண்டிருந்தார்கள்.

பயிற்சி முடிந்து பட்டயம் கொடுத்தார்கள். பத்திரிகையில் ஒரு விளம்பரம் வந்தது. ஒரு பெரிய உள்ளூர் எண்ணெய்த் தொழில் ஈடுபட்டிருந்த ஒரு நிறுவனத்திற்கு அதன் ஆராய்ச்சிப் பிரிவில் தலைமைஏற்க ஆள் தேவை என்ற விளம்பரம். விண்ணப்பித்தேன். அதன் தலைவர் முன்னாள் பேராசிரியர். எண்ணெய் சம்பந்த மான ஒரு அருமையான ரசாயனத் தொழிலை வேகமாக வளர்த்திருந்தார்.

இந்தத் தொழிலைத் தெரிந்து கொள்வதற்காக அதன் ஆரம்பப் பயிற்சியை நான் எடுத்துக் கொண்டிருக் கிறேன் என்கிற விஷயம் அவர் கண்ணில் பட்டது. "இது நல்லது" என்றார். சேர்மன், பிரசிடெண்ட் என்ற நிலைக்கு அடுத்த மூன்றாவது இடத்தில் 48 ஆயிரம் டாலர் சம்பளத்தில் வேலை!

34

## அனுபவம் எனும் பள்ளிக்கூடம்

---

பெட்ரோலிய எண்ணெய் எடுக்கும்தொழில் "ஓகோ!" என்று போய்க் கொண்டிருந்த காலம். நான் ஒரு நல்ல நிறுவனத்தில் - வேகமாக வளர்ந்து வரும் ஒரு நிறுவனத்தில் சேர்ந்தேன். அந்த நிறுவனம் எண்ணெய் எடுப்பதற்கு சாதாரண களி மண்ணிலிருந்து, பேரியம் சல்பேட் எனப்படும் ரசாயனப் பொருளிலிருந்து, மிஷினுக்குப் போகும் எண்ணெய் வரை, தயாரித்து விற்றது. அதிலும் ஒரு புதிய துறையில் இறங்கி இருந்தது. 'பாலிமர்' எனப்படும் நீண்ட மூலகங்களைக் கொண்ட கொழ கொழப்பான பொருள்; துரப்பணம் செய்வதற்குப் பெரிதும் உதவும் பொருள் - இந்தப் புதிய துறையில் நல்ல எதிர்காலம் இருந்தது.

அதன் தலைவர் ஒரு முன்னாள் பேராசிரியர். அவர் பல்கலைக் கழகத்தில் பெட்ரோலியத் துறையில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்தவர். அங்கே பல்கலைக்கழக ஆசிரியர்கள் தங்கள் பாடம் சம்பந்தமான தொழில் நிறுவனங்களுடன் நெருங்கிய சம்பந்தம் கொண்டிருப்பார்கள். எனவே ஒருநாள் அந்தப் பேராசிரியர் தமது ஆசிரியர் வேலையை விட்டு விட்டு தொழிலில் இறங்கி விட்டார். நான்கு ஆண்டுகளில் அந்த நிறுவனம் மிகப் பெரும் வளர்ச்சியை எட்டியது.

நிறுவனத்திற்குச் சொந்த விமானம் இருந்தது. மொத்தம் 120 பணியாளர்கள். தொழில் துறையில் நல்ல பெயர். புதிய துறை. இந்தத் துறை பற்றி யாருக்கும் அதிகம் தெரியாத ஒரு காலகட்டம். பேராசிரியர் மகா புத்திசாலி. அதே சமயம் கோபமும் படபடப்பும் அதிகம் கொண்டவர். நிர்வாகக் குழு அமர்ந்திருக்கும் அறையில் நுழைகிறார் என்றால், அங்கே காற்றிலே கூட நிசப்தமும்,

அச்சமும் கவனமும் கலந்திருக்கும். அவர் சொல்வது தான் வேதம். பேராசிரியர் அல்லவா? கூட்டங்களை ஒரு வகுப்பு போலவே நடத்துவார். பெட்ரோலியத்துறை அறிவு பெற இதைவிட வேறெங்கும் வாய்ப்புக் கிடைக்காது.

எனக்கு ஓரளவு அடிப்படைப் பயிற்சி இருந்ததால் நான் வேகமாக நிலைமையைப் புரிந்து கொண்டேன். இதை விடச் சுவையான விஷயம், நம்மைப் பார்க்க வருகின்ற விற்பனையாளர்கள்தான். அவர்களிடமிருந்து புதிய பொருட்கள் பற்றியும் மாற்று நிறுவனங்களின் பொருட்கள் பற்றியும் நிறைய தெரிந்து கொள்ளலாம். அப்படியும் தெரிந்து கொண்டேன். ஒவ்வொரு வாரமும், அமெரிக்க நிர்வாக இயல் சங்கம் வெளியிடும் வார இதழும் என் மேஜைக்கு வந்து விடும்.

இப்படி அங்கு உள்ள அனைவரும் தொழில் துறை ஞானம் பெற அவர் பெரும் பாடுபட்டார். நாங்கள் எங்கள் நிறுவனத்தை "ஒரே ஒரு மனிதனால் ஆன பல்கலைக் கழகம்'' (One man University) என்று சொல்வதுண்டு.

என் மேற்பார்வையில் ஒரு யந்திரப் பிரிவு, ஒரு கம்ப்யூட்டர் பிரிவு, ஒரு ரசாயன சோதனைக் கூடப் பிரிவு என்று மூன்று துறைகள் இருந்தன. எல்லாவற்றிலுமே நல்ல திறமை வாய்ந்த தலைவர்கள் இருந்தார்கள். எனவே நிர்வகிப்பதில் கஷ்டமில்லை.

நான் அங்கு வேலை பார்க்கத் துவங்கி இரண்டு மாதம் ஆகியிருக்கும். ஒரு நாள் எங்கள் தலைவரிடம் போய், "எல்லாம் சரியாகப் போய்க் கொண்டிருக்கிறது. ஏதேனும் புதிய பொருளை விற்பனைக்குக் கொண்டு வர விரும்புகிறீர்களா?" என்றேன்.

அவர் அன்றிருந்த மனநிலை சரியில்லை போலும்! அவர் தம் மனைவியுடன் ஹாவாயிக்கு பத்து நாள் விடுமுறை எடுத்துக் கொண்டு செல்லத் தயாராக இருந்தார். நான் கேட்டதோ "ஏதாவது சவால்கள் இருக்கின்றனவா?" என்ற தோரணையில் தோன்றியது போலும்' அவர் என்னைப் பார்த்தார்.

"ஆய்வுக் கூடத்தில், மிகப் பெரிய போட்டி நிறுவனமான 'பேராய்டு' தயாரித்திருக்கும் செல்லுலோஸ் (பஞ்சுத் தூள்) பக்கெட் இருக்கிறது. சென்று பார்! பஞ்சுத் தூள் அடியில் தங்கிக் கட்டியாக மாறிவிட்டது. மேலே அதை கரைக்க வேண்டிய திரவம் தனியாக நின்று கொண்டிருக்கிறது. என்ன செய்ய முடியுமென்று பார்! அடியில் தங்காமல், இது நல்ல கரைசலாக இருந்தால் நல்ல மார்க்கெட் இருக்கிறது" என்று ஒரு வெடிப்புடன் சொன்னார்.

ஆய்வுக்கூடம் சென்றேன். பார்த்தேன். எண்ணெய் எடுக்கும் துரப்பணக் குழாயில் கரைசலைத்தான் ஊற்றலாமே தவிர மற்ற கட்டிகளைப் போடக் கூடாது. எப்படி ஒரு பெரிய நிறுவனம் இப்படிப்பட்ட - சரிவரத் தயார் செய்யப்படாத ஒரு பொருளை விற்கிறார்கள் என்பது எனக்கு வியப்பாக இருந்தது. இது பெரிய சவால்தான். எனக்கோ இது முதல் சவால். அதுவும் தலைவர் கொடுத்திருக்கும் சவால். அதுவும் நானாகக் கேட்டு வாங்கிக் கொண்ட சவால்!

ஒரு வாரத்திற்கு முன்தான் ஒரு ரசாயன நிறுவனத்தின் விற்பனையாளர் ஒருவர் என்னிடம் இதுபற்றிப் பேசியது என் நினைவுக்கு வந்தது. அவரைக் கூப்பிட்டேன். அவர் இந்த பஞ்சுத்தூளை கரைசல் நிலையில் கொண்டு வரும் ஒரு பொருளைத் தங்கள் நிறுவனம் தயார் செய்வதாகச் சொன்னார். அனுப்பச் சொன்னேன். ஆய்வுக் கூடத்தில் சிறிய அளவில் சோதித்துப் பார்த்தேன். நன்றாக வேலை செய்தது.

கச்சாப் பொருட்களை வாங்கும் எங்கள் நிறுவன நிர்வாகியிடம் பேசினேன். "நீங்கள் செய்ய முடியு மென்றால் நான் விற்கத் தயார். நல்ல மார்க்கெட் இருக்கிறது" என்றார் அவர்.

ஆர்டர் செய்தோம். தேவையான பொருட்கள் வந்து இறங்கின. சனி, ஞாயிறு என்று பாராமல் நான்கு பேர் இதைச் செய்ய இறங்கினோம். சுமார் நூறு, 'ஐந்து காலன்' பக்கெட்டுகளில் பொருளை ஊற்றி சீல் செய்தோம். எங்கள் நிறுவனத்தின் பெயரை ஒட்டினோம். ஞாயிற்றுக் கிழமை அன்றே அதற்கு ஆர்டர் வந்தது; விற்றும் தீர்ந்து விட்டது! ஒரு பத்து 'பக்கெட்டு'களை, - பொருள்

அடியில் தங்குகிறதா என்று பார்ப்பதற்காக வைத்திருந்தோம்.

நிறுவனத் தலைவர் விடுமுறை கழிந்து செவ்வா யன்று வந்தார். கச்சாப் பொருள் வாங்கும் நிர்வாகி அவரிடம் இந்த விற்பனை பற்றிக் கூறினார். தலைவருடன் நானும் அந்தப் பக்கெட்டுகளில் இருந்த பொருளை சோதிக்கச் சென்றோம். பொருள் கொஞ்சமும் அடியில் தங்காமல் பிரமாதமான கரைசலாக நின்று கொண்டிருந்தது.

"வெரிகுட்!" என்றார்.

அடுத்த மாதச் சம்பளம் வரும்போதுதான் அந்த 'வெரிகுட்'டின் அர்த்தம் தெரிந்தது. எனது பதவி நிரந்தரமாக்கப்பட்டது! எனது சம்பளம் மூன்றே மாதத்தில் மூவாயிரம் டாலர் உயர்த்தப்பட்டது. இது சேர்மன், பிரசிடெண்ட் என்ற இரு பெரும் தலைகளுக்கு அடுத்த நிலையில் என் சம்பளம்!

அடுத்தபடியாக ஒரு மாதத்தில் மற்றோர் சம்பவம் நிகழ்ந்தது. எங்கள் நிறுவனத்தின் இரண்டாவது நிலையில் இருக்கும் உபதலைவர் என் அறைக்கு வந்தார். அவர் முன்பு பெரிய வழக்கறிஞராக இருந்தவர்.

"டாக்டர் முத்து! நம் நிறுவனத்தின் எல்லா செய்முறை ரகசியங்கள் அனைத்தும் இனி உங்களிடம் ஒப்படைக்கப் போகிறோம். இனி அவற்றை நீங்களே வைத்துக் கொள்ளலாம்" என்றார்.

நான் சொன்னேன்:

"ஐயா! உங்கள் நம்பிக்கைக்கு என் நன்றி. நம் நிறுவனத்தின் செய்முறை ரகசியங்கள் எல்லாம் எனக்குத் தேவையில்லை. அதில் என்ன இருக்கக்கூடும் என்பது பற்றிய அனுமானம் எனக்கு உண்டு. அதில் எதையாவது மாற்றி, வேறு உயர்ந்த பொருளைத் தயார் செய்ய வேண்டுமானால் மட்டுமே, அந்தப் பொருள் பற்றிய செய்முறைத் தகவல்களை மட்டுமே கொடுங்கள்! இல்லாவிடில் அவை உங்களிடமே இருக்கட்டும்!" என்றேன்.

அவர் சிறிது நேரம் சிரித்துக் கொண்டே நின்றார். ஒன்றும் பேசவில்லை. போய்விட்டார்.

அவர்களுடைய நிறுவன ரகசியங்களை என் மனத்தில் போட்டு வைக்க எனக்கு விருப்பமில்லை. ஏன் அந்த அநாவசிய தூண்டல்கள்?

இது சம்பந்தமான மற்றோர் விஷயத்தையும் சொல்ல வேண்டும். இரண்டாண்டுகளில் நிறுவனம் நிர்வாகக் கோளாறினால் மூடப்படும் கீழ்நிலை அடைந்த போது, ஒரு போட்டிக் கம்பெனிக்காரர் என்னிடம் வந்தார். நான் அப்போது அந்த நிறுவனத்திலிருந்து வெளிவந்த சமயம்; வேலையில்லாமலிருந்த நேரம். சொன்னார்: "உங்கள் நிறுவனம் செய்து வந்த அந்தக் குறிப்பிட்ட 'பாலிமருக்கு' நிறைய கிராக்கி இருக்கிறது. நான் வாரம் ஒரு 'டிரக் லோடு' விற்க முடியும். நீ செய்து கொடு! அல்லது அந்த செய்முறையைக் கொடுக்க முடியுமா?" என்றார்.

"ஐயா! அதற்குத்தான் அதை அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளவே நான் மறுத்து விட்டேன். நான் அதைச் செய்ய முடியாது. அந்த நிறுவனம் இன்று சங்கடத்தில் இருக்கிறது. அதற்கு ஒருக்காலும் கெடுதல் செய்ய நான் விரும்ப மாட்டேன்" என்றேன்.

அவர்கள் என்ன செய்தார்கள்?

எனக்குங்கீழ் வேலை பார்த்த அமெரிக்கனை 'பயிற்சி' என்ற பெயரில் பயிற்சி கொடுக்க அழைத்து, அவரிடமிருந்து விஷயத்தைக் கறந்து கொண்டதாகப் பின்னால் அறிந்தேன்!

**மூ**ன்றே மாதத்தில் மூடப் போகும் நிலையிலிருந்த ஒரு உணவு நிறுவனத்தை தூக்கி நிறுத்தினேன், முன்பு. இங்கே நல்ல நிலையில் ஓடிக் கொண்டிருந்த ஒரு நிறுவனம் என் கண் முன்னே மூடப்படுகின்ற நிலைக்கு வந்தது.

பேராசிரியர் நல்ல மனிதர். நான் அவருக்காக வருந்தினேன். ஏன் இந்த நிறுவனம் தோற்றது? இது எல்லோருக்குமே ஒரு பாடமாக இருக்கும்.

இந்த நிறுவனம் பேரார்வத்தால், சுய முயற்சியால், நல்ல லாபம் நிறைந்த துறையில், தேவையான காலகட்டத்தில், வளர்ந்த ஸ்தாபனம். இது மிகப் பெரிய நிறுவனமாக ஆகக்கூடிய வாய்ப்பு நிறைய இருந்தது.

நான் அதில் சேர்வதற்கு முன்னால் அது 35 லட்சம் டாலர் வருமானமுள்ள ஒரு நிறுவனம். அதன் தலைவர் அதனுடைய பிரமிக்கத்தக்க பொருளையும் வளர்ச்சியை யும், இருக்கும் எதிர்காலத்தையும் கணக்கிட்டு அதை மூன்றரைக் கோடி டாலர் வருமானமுள்ளதாக அடுத்த ஆண்டே ஆக்கத் திட்டம் போட்டார்.

விமானம் வாங்கப்பட்டது.

பத்தொன்பது பேர் இருந்த நிறுவனம் நூற்றி ஐந்து பேர் உள்ளதாக விரிவாக்கப்பட்டது. நிறுவனத்தில் பெண் காரியதரிசிகள் தவிர அனைவருக்கும் போக்குவரத்துக்கு, புதிய கார் கொடுக்கப்பட்டது. சேர்க்கப்பட்டவர்களில் பாதிப்பேர் வேறு துறை அனுபவம் கொண்டவர்கள்; பொதுவாகத் பெட்ரோலியத் தொழில் திறமை அற்றவர்கள். திட்டமோ மூன்றரை கோடி. இதன் விளைவாக அடுத்த 1½ ஆண்டுகளில் நிறுவனம் மூடுகின்ற அளவுக்கு வந்து விட்டது. ஆறு மாதத்தில் மறுபரிசீலனை செய்தார்கள். இரண்டு கோடியாகக் குறைத்தார்கள். அடுத்த ஒன்பது மாதத்தில் ஒன்றரைக் கோடியாகக் குறைத்தார்கள். கடைசியில் என்னையும் சேர்த்துப் பதினோரு பேரைத் தவிர அனைவரையும் வீட்டுக்கனுப்பினார்கள். கடைசி காலக்கட்டத்தில் வங்கியில் கடன் வாங்கிச் சம்பளம் கொடுக்கும் நிலை ஏற்பட்டது. சில மாதங்களில் கடன்காரர்களின் தொல்லை; நெருக்கடி.

சுருக்கமாகச் சொன்னால் அகலக் கால் வைத்து விட்டார்கள். 12-வது படியில் காலை நன்றாக ஊன்றிக் கொண்டு 13-வது படிக்கும் 14-க்கும் போக வேண்டுமே தவிர, எடுத்தவுடன் 24-வது படிக்குப் போவது ஆபத்தானது. உள்ளதும் போகின்ற ஆபத்தான நிலை.

மற்றொரு விஷயம். சொந்தமாகத் தொழில் செய்பவர்களுக்கு எப்போதுமே "காக்கைக்குத் தன் குஞ்சு பொன் குஞ்சு" என்பது போல தங்கள் தொழிலின்

யதார்த்த நிலை பற்றிய ஞானமே இருப்பதில்லை. எனவே அவர்கள் அதை விற்க முயலும் போது அளவு கடந்து விலை சொல்கிறார்கள். இதனால் வண்டி ஓடிக் கொண்டிருக்கும்போதே விற்கத் தவறி விடுகிறார்கள். வண்டி பழுதடைந்து, ஓட முடியாத நிலையில் காயலான் கடைக்குப் போய்ச் சேர்கிறது. முடிவில் அந்த நிறுவனத்தை வங்கிக்காரர்கள் எடுத்துக்கொண்டு அடிமாட்டு விலைக்கு விற்றார்கள்.

வாழ்வில் ஏற்றமும் வருகிறது; இறக்கமும் வருகிறது. ஒருசில நிறுவனங்கள்தான், அமெரிக்காவில் 'த்ரீ எம்' (3M) எனப்படும் நிறுவனம் போல, எப்போதும் ஒரே நிலையில் தொடர்ந்து முன்னேறிக் கொண்டிருக்கிறார்கள்.

தொழிலில் சில சமயம் ஆசை பேராசை ஆகி விடுகிறது. பேராசை நம் கண்களை மறைத்து விடுகிறது. யதார்த்த உலக நிலையைப் பேராசை மறைத்து விடுகிறது. "நமது பேராசை நிறைவேறப் போகிறது" என்ற நினைப்பில் ஆணவம் வளர்ந்து விடுகிறது. 'தான் தொட்டதெல்லாம் பொன்னாகும்' என்று மனிதன் நினைக்கிறான். நேற்று வரை நீங்கள் வெற்றி பெற்றிருக்கலாம் அது நாளைய வெற்றியை உறுதி செய்யாது. நாளை ஒரு புதிய நாள். நாம் விழித்துக் கொண்டு கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டும். ஸ்டாக் மார்க்கெட்டில், "நஷ்டமாவதை உடனடியாகக் குறையுங்கள்" என்றொரு புழமொழி உண்டு. நஷ்டம் வரும்போல் தோன்றினால் நாம் எங்கெங்கெல்லாம் செலவினங்களைக் கட்டுப்படுத்த முடியுமோ அதை உடனடியாகச் செய்ய வேண்டும்.

நான் சொந்த நிறுவனத்தைத் துவங்கியபோது பெட்ரோலிய எண்ணெய் பீப்பாய் 28 டாலர் விற்ற நிலையிலிருந்து 18 டாலர் 12 டாலர் 9 டாலர் என்று 9 மாதத்தில் வேகமாகச் சரிந்து வந்தது. யாருமே அந்த நிலையில் புதிய எண்ணெய் எடுக்க துரப்பணம் போடுவதில்லை. அமெரிக்காவில் பீப்பாய் 18 டாலருக்கு விற்றால்தான் புதிய எண்ணெய்க்காகத் தோண்ட முன்வரலாம். விலை குறையக் குறையக் குறைய, எங்கள் சொந்த நிறுவனத்தில் விற்பனை வெகு வேகமாக இறங்கிக்

கொண்டிருந்தது. முதலில் நிர்வாகிகளை வீட்டுக்கு அனுப்பினேன். அடுத்த சில மாதங்களில் விற்பனை யாளர்களை! கடைசியில் என் காரியதரிசியும் நானும்தான் இருந்தோம். முடிவில் என் காரியதரிசியை யும் வீட்டுக்கு அனுப்பிவிட்டு, எல்லாவற்றையும் நானே செய்தேன். இரண்டாண்டு காலம் தொழில் நசிவை சமாளிக்கும் அளவுக்கு நல்லவேளையாகச் சேமித்து வைத்திருந்தேன். மனக் கஷ்டம் இருந்ததே தவிர, இது என் தொழிலை பாதிக்கவில்லை. தொழில் மறுபடி முளைவிட்டபோது நான் ஏணியில் ஏறத் தயார் நிலையில் இருந்தேன். ஏறினேன். இப்படி இருமுறை மார்க்கெட் சரிவு ஏற்பட்டது. இருமுறையும் நான் தொழிலை விட்டு விட்டு ஓடி விடவில்லை.

பிறருடைய அனுபவத்தில் நாம் பாடம் கற்றுக் கொள்கிறோம். சொந்த அனுபவமோ நம்மை மண்டையிலடிக்கிறது. நம்பிக்கையும், புத்திசாலித்தனமும் உழைப்பும் கவனமும் மட்டுமே நமக்கு உதவியாக இருந்து கஷ்டங்களிலிருந்து நம்மை மேவி வரச் செய்கிறது.






35

## ஜீவப் போராட்டங்கள்

**வா**ழ்வில் நாம் தெரிந்து கொள்ள வேண்டிய ஒரு கருத்து இந்தச் சம்பவம்:

அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடி ஒரு கத்தோலிக்கர். கத்தோலிக்கர்கள் அமெரிக்க நாட்டில் சிறுபான்மையினர். அவர் ஜனாதிபதியானபோது பத்திரிகைகள் எல்லாம், அவர் "தொட்டது தங்கமாயிற்று; வைத்தது வைரமாயிற்று" என்று எழுதினார்கள். மனிதர் மகிழ்ந்து போனார்; தம்மிடம் இயல்பிலேயே அத்தகைய 'வெற்றிச் சக்தி' இருக்கிறதென்று நம்பினார். பாராட்டப் படுகிறவர்கள் எல்லாம் - அளவு கடந்து புகழப்படுப வர்கள் எல்லாம் கீழே விழ, குழி பறிக்கப்படுகிறது என்பதுதான் உண்மை.

அதை நம்பி கியுபாவின் மீது படை எடுத்த போது, அறுபது பேர் கொண்ட அமெரிக்காவின் பாரசூட்படை கியுபாவின் சதுப்பு நிலங்களில் சிக்கி மாட்டிக் கொண்டது. சின்னஞ்சிறு தீவான கியுபாவோ ஏறத்தாழ இரண்டு பில்லியன் டாலருக்கு விவசாயக் கருவிகள் கொடுத்தால்தான் கைதிகளைத் திருப்பி அனுப்ப முடியும் என்றார்கள். அமெரிக்கா கியுபாவிடம் தோற்றது.

என்ன நடந்தது?

போர்த் தளபதிகள் திட்டம் தீட்டி படை எடுக்கலாம் என்று சொன்னார்கள். சரிவர ஆராயாமல் எடுத்த முடிவு. வெற்றி பெற்று விடுவோம்; இது சுண்டைக்காய் விஷயம் என்ற எண்ண மிதப்பு ஆணவமாக இருந்ததே தவிர, இப்படிப்பட்ட நிலையில் ஏற்படுகின்ற தவிப்பும் கவலையும் அதன் விளைவாக

எடுக்கின்ற சர்வ ஜாக்கிரதையான காரியங்களும், கண்காணிப்பும் இல்லாமல் போய் விட்டன.

ஜான் கென்னடிக்கு இப்படிப்பட்ட சம்பவத்தைக் கையாண்ட அனுபவம் கிடையாது. ராணுவத் தளபதிகள் சரிவர ஆராயவில்லை. படை இறங்கியதோ இரவு நேரம். உலகின் மிகப் பெரிய வல்லரசு தோற்றது.

இதுதான் பாடம். நாம் தொட்டதெல்லாம் 'ஓகோ' என்று போகும் என்ற மிதப்பு மனநிலையில் இருக்கும் போது அவன் யதார்த்த நிலையை - சூழ்நிலைகளின் உண்மைகளை உணர்வதில்லை; அலட்சியம் செய்கிறான். உள்ளது உள்ளபடி அவனால் பார்க்க முடிவதில்லை.

இதுதான் நான் வேலை பார்த்த நிறுவனத்திற்கு ஏற்பட்டது. அதாவது சரிவு. வருமானத்திற்கு மேல் நிர்வாகச் செலவுகள். சிக்கனத்தைப் புறக்கணித்த நிலை. இதன் விளைவாக ஏகப்பட்ட நிர்வாகிகள், கம்பெனி கார்கள். விமானம். நிறுவனம் மூடப்படுகின்ற நிலைக்கு வந்தது.

வாழ்வின் ஆரம்பக் கால கட்டங்களில் கஷ்டமும் தோல்விகளும் ஏற்பட்டிருந்தால் அவை மனிதனைப் பக்குவப் படுத்தியிருக்கும். அதனால்தான் சொல்கிறார்கள் அறிஞர்கள். "குழந்தைகளை பணக்கார வீட்டுக் குழந்தைகளாக கான்வென்டிலும், ஊட்டியிலும் படிக்க வைக்காதீர்கள். அவர்கள் நடைமுறை உலகின் கஷ்ட நஷ்டங்களையும் சூழ்நிலையையும் சிக்கனத்தையும் உழைப்பையும் அறிய வேண்டும். இல்லாவிடில் அவன் பின்னால் கஷ்டப்படுவான்!" என்கிறார்கள்.

வெற்றிப் படிகளில் வேகமாக ஏறும் மனிதனும் சரி - சொகுசு வாழ்க்கைக்கு பழக்கப்பட்டிருப்பவனும் சரி - எதிர்பாராத தோல்வி ஏற்படும் போது, அவனால் ஈடுகொடுக்க முடிவதில்லை; துவண்டு போகிறான்.

நிர்வாக அறிவியலில் கூட கண்காணிப்பு என்ற வார்த்தைக்குக் கொடுக்கப்பட வேண்டிய முக்கியத்துவம் இன்னும் கொடுக்கப்படவில்லை என்பதுதான் என் அபிப்ராயம்.

நல்லவர்களாலும் தியாகிகளாலும் ஆளப்பட்ட நம் நாட்டின் சீரழிவுக்கு காரணம் பொது மக்களும் தலைவர்களும் நாட்டைக் கண்காணிக்க தவறியதுதான். ஜேம்ஸ் ஆலன் என்ற தத்துவ ஞானி மிக அழகாகச் சொல்கிறார். "சரியான முயற்சியால் பெறப்பட்ட வெற்றியைத் தக்க வைத்துக் கொள்ள வேண்டுமானால், கண்காணிப்பு ஒன்றினால் மட்டுமே முடியும்" என்கிறார். நமது சுதந்திரம் சரியான - உயர் முயற்சியால் பெறப்பட்ட வெற்றிதான். எனினும் தக்கவைத்துக் கொள்ள முடியவில்லை.

**வே**லையோ இல்லை; இதுதான் நல்ல சமயம்; நமது நெடுநாள் பேரவாவான சொந்தத் தொழிலைத் துவங்க என்று எண்ணினேன். நான் வேலை பார்த்த முன்னைய நிறுவனத்தில் இல்லாத இரண்டு முக்கியப் பொருளைத் தயார் செய்தேன். இவை இந்தத் தொழிலில் வழக்கமாக உபயோகிக்கப்படும் சிறப்புப் பொருட்கள். இவற்றுக்கான தகவல் பற்றிய பிரசுரங்களையும் சாம்பிள்களையும் எடுத்துக் கொண்டேன்.

எங்கள் பொருட்களை மற்ற சிறந்த பொருட்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்படி ஒரு புகழ் பெற்ற சோதனைக் கூடத்தில் சோதித்ததில் அவை பிரமாத மாக வெளிவந்தன. அந்த ஆதாரங்களையும் எடுத்துக் கொண்டேன். எல்லாப் பெரிய நிறுவனங்களுக்கும் சென்று அவர்களின் 'லிப்ட்'களில் ஏறி இறங்கிக் கொண்டிருந்தேன்!

"சோதனை அளவில் உங்கள் பொருள் சிறந்தது தான். ஆட்சேபம் இல்லை. இதை யாரிடமாவது இனமாகக் கொடுத்து தொழிலில் - செய்முறையில் - இது எப்படிச் செயல்படுகிறது என்று நிரூபியுங்கள்" என்றார் கள் பலர்.

இனாமாகக் கொடுத்தால் கூட பரீட்சை செய்ய யாரும் முன்வரவில்லை!

ஆறு மாதம், ஒன்பது மாதம் ஒரு வருடம் என்று மாதங்கள் ஓடின. ஒரு வருடம் மூன்று மாதமும் ஓடியது, என் கண்ணெதிரே.

காலணாவுக்கு என் பொருளை விற்க முடியவில்லை!

நான் தளர்ந்து போனேன்.

அதைரியம் அடிக்கடி தலை காட்டியது.

கையிருப்பு எல்லாம் இந்த 15 மாதங்களில் தீர்ந்து போயிற்று. வேலைதான் மீண்டும் பார்க்க வேண்டும் போலிருக்கிறது என்று எண்ணிய நிலையில் ஒரு சமயம், 'அமகோ' என்ற பெரிய நிறுவனத்திற்குள் நுழைந்தேன். அங்கிருந்த அதிகாரி என்னைப் பார்த்தார். விஷயங் களைக் கேட்டார்- மனிதனுக்கு மனிதன் கொடுக்கும் மரியாதையுடன். அமெரிக்கர்கள் "உண்டு; இல்லை" என்று தெளிவாக சொல்கிறவர்கள். அவர் சொன்னார். "நான் உங்களுக்கு உதவ முடியாது." நான் இதை அதிகம் கேட்டிருக்கிறவன். ஆகையால் மற்ற விஷயங்களை - உலக விஷயங்களை - மனதாரப் பேசிவிட்டு எழுந்தேன். அவரும் எழுந்தார். எழுந்து நின்று கொண்டே சொன்னார்.

"எங்கள் நிறுவனத்தில் சிறுதொழிலதிபர்களிட மிருந்து பத்து சதம் பொருட்களை வாங்க வேண்டும் என்கிற மத்திய அரசின் சட்டம், நடைமுறையில் இருக்கிறது. ஆனால் உங்களைப் போல உள்ள ஒரு அறிமுகமில்லாத புதிய நிறுவனத்திடமிருந்து நேரடியாக வாங்க முடியாது. எங்களுக்கு சப்ளை செய்யும் கெமிக்கல் நிறுவனம் இருக்கிறது. அவர்களைப் போய்ப் பாருங்கள்" என்றார்.

எண்ணெய்த் தொழிலின் அபரிமிதமான வளர்ச்சியில் ஆரம்ப கால கட்டம் அது. படிப்பும் தொழில் நுட்பமும் தெரியாத யார் யாரோ அப்போது அங்கே குபேரராகிக் கொண்டிருந்தார்கள்.

மறுநாள் காலை. அமகோ நிறுவனத்தார் குறிப்பிட்ட அந்த நபரைப் போய்ப் பார்த்தேன்.

"என் பெயரைச் சொல்லி உன்னைப் பார்க்கும்படி சொன்னாரா?" என்று இரண்டு முறை கேட்டார் அவர்.

"ஆம்!" என்றேன்.

"உன் பொருள் பட்டியலை எடு!" என்றார்.

எங்களிடம் உள்ளது இரண்டே பொருட்கள். பட்டியல் எங்கே பட்டியல்! எனவே நான் எங்கள் பொருட்களைப் பற்றிய பிரசுரங்களைக் கொடுத்தேன்.

அதை நோட்டமிட்டவாறு கேட்டார்.

"உங்களிடம் நுரை பொங்குவதைத் தடுப்பதற்கு நல்ல பொருள் ஏதேனும் இருக்கிறதா?" என்றார்.

நான் ஒருகணம் கூட தயங்கவில்லை.

"ஓ! இருக்கிறதே!" என்றேன். இவர் மட்டும் வாங்குவதென்றால் - என்னால் அவர்களுக்குத் தேவைப்படும் எதையும் செய்து கொடுக்க முடியும் என்ற நம்பிக்கை இருந்தது. அதைவிட முக்கியமாக, "சமீபத்தில், ஒரு விற்பனையாளர் வந்த போது அவர் சொன்ன விஷயங்களும், காட்டிய சாம்பிளும் நினைவுக்கு வந்தன. அவர் காட்டியது ஒரு அருமையான நுரை தடுக்கும் பொருள்.

"அந்தத் தொழில்நுட்ப விவரங்களையும் விலைப் பட்டியலையும் எடுத்து வாருங்கள் மாலை நான்கு மணிக்கு...' என்றார்.

**நா**ன் வீடு திரும்பினேன். யோசித்தேன். இனி அந்த நிறுவனத்திற்கு எழுதி அதனுடைய தொழில்நுட்ப விவரங்களைப் பெறுவதற்கு நேரமில்லை. என்னுடைய அலமாரிக்குச் சென்றேன். போட்டி நிறுவனங்களுடைய பொருள் பட்டியல் கேட்லாக்குகளை எடுத்தேன். அதில் உள்ள ஒரு நல்ல கம்பெனியின் நுரையைத் தடுக்கும் பொருள் பற்றிய தகவல் பிரசுரத்தை எடுத்தேன். மேலேயிருந்த அவர்களின் கம்பெனி பெயரை வெட்டி விட்டு எங்கள் நிறுவனத்தின் பெயரை அதிலே ஒட்டி 'ஜெராக்ஸ்' எடுத்தேன். நேராக எடுத்துக் கொண்டு நாலு மணி சந்திப்பிற்கு போனேன்.

ஏதோ பெயருக்கு நான் கொடுத்த விவரத்தைக் கவனித்தார். என் படிப்பும், நான் யார் சொல்லி வருகிறேன் என்பதும் அவருக்கு முக்கியமாகப்பட்டிருக்க வேண்டும்.

"எனக்கு ஐந்து கேலன் பக்கெட்டுகள் வேண்டும். 108 வேண்டும். எப்போது கொடுக்க முடியும்?'' என்று கேட்டார்.

"இரண்டு வார கால அவகாசம் தேவை'' என்றேன்.

''சரி. பரவாயில்லை. என்னிடம் கொஞ்சம் கையிருப்பு இருக்கிறது - உபயோகித்துக் கொள்கிறேன். நீ அதற்குள் கொடு."

நான் மகிழ்ச்சியுடன் திரும்பினேன். ஏனெனில் இது எனது முதல் விற்பனை.

ஆனால் என் முன் பெரிய சவால் இருந்தது. பெரிய ஒரு ரசாயன நிறுவனத்திடமிருந்து வாங்கி நான் அதைக் கலந்து ஐந்து காலன் பக்கெட்டுகளில் நிரப்பி அனுப்ப வேண்டும்.

இரண்டாவதாக எங்களுக்கு பொருளைத் தயாரிக்கும் இடமும் இல்லை. தொழிலின் விலாசம் வீடுதான்! அதைவிட கடுமையான சோதனை, பொருளை வாங்கப் போதுமான பணமும் இல்லை - கைவசம். இந்தப் பதினைந்து மாதங்களின் என் சேமிப்பு பணம் எல்லாம் கரைந்து போய் விட்டது!

மறுநாள் ஒரு அதிசயம் நிகழ்ந்தது. கிரெடிட் கார்டு தரும் ஒரு நிறுவனத்திடமிருந்து ஒரு கடிதம் வந்திருந்தது.

"அன்புடையீர், கடந்த பத்தாண்டுகளுக்கு மேலாக எங்கள் கிரெடிட் கார்டு மூலம் பொருட்களை வாங்கி அதற்கான பணத்தை எங்களுக்கு ஒழுங்காகக் கட்டி வருகிறீர்கள். எனவே உங்கள் நாணயத்தை மதித்து உங்களுக்கு அதிக கடன் வசதிக்கான தங்க நிற கிரெடிட் கார்டை அனுப்பி யுள்ளோம். எல்லா வங்கிகளிலும் நீங்கள் உடனடியாக கடன் பெறும் வசதி இதற்குண்டு'' என்று எழுதி இருந்தார்கள்.

என்னால் நம்ப முடியவில்லை. மனம் ஆண்டவனை எண்ணி கைகூப்பிக் கொண்டிருந்தது. மறுநாள் பொருளை ஏற்றி வந்த லாரி எங்கள் வீட்டு முன் வந்து நின்றது. அதிலே எனக்கு வேண்டிய பொருள் 55 காலன் பீப்பாய்களிலே வந்திருந்தது.

"எங்கே இறக்க?" என்று கேட்ட டிரைவர், பீப்பாய்களை இறக்கும் 'லிப்ட்' வைத்திருக்கிறாயா?" என்றார்.

நான் இல்லையென தலையாட்டினேன். டிரைவர் என்னைத் திட்டிக் கொண்டிருந்தார்.

என்ன செய்வதென்று தெரியாத நிலையில் என் நண்பர் ஒருவரை போனில் கூப்பிட்டு யோசனை கேட்டேன். அவர் சொன்னார். "பனிரெண்டு மைல் தொலைவில் ஒரு "ஸ்டோரெஜ்" நிறுவனம் இருக்கிறது. அது உனக்கு உதவும். அங்கே எடுத்துச் செல்" என்றார்.

லாரியை நேராக அங்கே போகச் சொல்லி முன்னால் என் காரில் வழி காட்டிக் கொண்டு போனேன்.

ஐந்து காலன் பக்கெட்டுகள் கிடைக்குமிடத்தை அவர்கள் சொன்னார்கள். நான், என் மனைவி, என் மகன் அசோகன் மூவருமாக அந்த ஸ்டோரேஜ் இடத்தை தொழிற் சாலையாக்கிக் கலந்து ஆர்டரைப் பூர்த்தி செய்தோம்.

நுரையை ஒடுக்கும் இந்தப் பொருளுக்கு பார்க்ளேஸ் பிரேக் (Barclays Break) என்று பெயரிட்டோம். 'பிரேக்' என்றால் தமிழில் உடைப்பது என்று பொருள்படும். இதில் வேடிக்கை என்னவெனில் இதே 'பிரேக்' என்ற வார்த்தையை மிகவும் பிரபலப்படுத்தி Gimme A Break என்ற தலைப்பில் ஒரு டீ.வி. தொடர் பிரமாதமாக வந்து கொண்டிருந்ததுதான். Gimme என்பது Give me என்பதன் சுருக்கம். கறுப்பு மக்கள் உபயோகிக்கும் பேச்சு மொழி. பிரேக் என்றால் "எனக்கு ஒரு வாய்ப்புக் கொடு. இடம் விடு" என்ற பொருளில் தலைப்பு.

எண்ணெய்த் துறையில் நாங்களும் நுழைய ஓர் இடம் கேட்பது போல இருந்தது எங்கள் பொருளின் பிரேக் என்ற பெயர். அதுவே உண்மை. எதிர்பாராத சம்பவங்கள்! எதிர்பாராத பொருத்தங்கள்!

கார்ல் கஸ்டவ் யங் என்ற மனவியல் அறிஞர் சொல்வதுபோல; "வாழ்வில் இப்படிப்பட்ட ஒரே அர்த்தமுள்ள சம்பவங்கள் - நிகழுமானால் - அது நீங்கள்

சரியான பாதையில் சென்று கொண்டிருக்கிறீர்கள்" என்று அர்த்தம்.

எனக்கென்னவோ அவர் சொல்வதை விட ஒரு படி தாண்டி, இப்படிப்பட்ட ஒன்றுக்கொன்று தொடர்புடைய சம்பவங்கள் நிகழும் போது, அது ஒரு புதிய துவக்கத்திற்கான அடையாளம். அதற்குப் பிறகு பிரமாதமான நல்ல காலம் என்றுதான் படுகிறது. ஏனெனில் என் வாழ்வில் இப்படி நான் எதிர்பாராது நிகழந்த பல சம்பவங்களும் என்னை ஆசி கூறி வழிகாட்டி புதிய பாதைகளிலே இறக்கி விட்டதைக் கண்டேன். அடுத்து ஒரு குறிப்பிடத்தக்க ஒரு விஷயத்தை இங்கே சொல்ல வேண்டும். அந்த 'பார்க்கிளேஸ் பிரேக்' என்ற பொருள் - எங்களுக்கு அத்துறையில் நுழைய இடங்கொடுத்த முதல் பொருள் - நுரையை உடைப்பதில் தலைசிறந்த பொருள் என்று அமகோ பொறியாளர் களால் வாங்கப்பட்டது; புகழப்பட்டது என்பதுதான்.

36

## லாபமோ லாபம்!

எனது சொந்த நிறுவனம் இரண்டாயிரம் சதுர அடி கொண்ட ஒரு வாடகைக் கட்டடத்தில்தான் துவங்கியது. முன்னால் என் அலுவலக அறை. உள்ளே ஒரு சோதனைக்கூடம். சோதனை செய்து பார்த்து, புதிய பொருளைத் தயாரிக்கும் ஆர்வம் என்னை விடவில்லை. மற்றபடி விற்கும் பொருட்களை மூட்டையாகவும் பீப்பாயாகவும் அடுக்கி வைக்கப் பெரிய இடம்.

இப்படிப்பட்ட இடத்தை எடுத்ததுகூட நிர்ப்பந்தம் தான். நான் நெருக்கப்பட்டதுதான் காரணம்! 'அமகோ' என்ற இரண்டாவது பெரிய எண்ணெய் நிறுவனத்தார் என்னைக் கூப்பிட்டார்கள். எண்ணெய் எடுப்பதில் உபயோகிக்கப்படும் களிமண் போன்ற கூழை நீர்க்க வைக்கும் ஒரு பொருளைக் குறிப்பிட்டு அதை சப்ளை செய்ய முடியுமா என்று கேட்டார்கள். நான் உடனே ஒப்புக் கொண்டேன். யார் இதை உற்பத்தி செய்கிறார்கள் என்பது அங்கே பலருக்குத் தெரியாது. அது ஒரு ரசாயனப் பொருள். அந்த நிறுவனத்தை நான் அறிவேன். எனவே நான் அவர்களைக் கூப்பிட்டேன். அப்போது, என் வீடுதான் என் அலுவலகம் போன் என் பெயரில்தான் இருந்ததே தவிர, கம்பெனி பெயரில் இல்லை. ஆகவே என் கம்பெனி பெயரைச் சொல்லி தகவல் விசாரித்தால் கிடைக்காது. அப்படிப்பட்ட கம்பெனியே இல்லை என்று சொல்லி விடுவார்கள்.

மற்றுமோர் விஷயம், எங்கள் தொழிலில் இருக்கும் எந்தப் பெரிய நிறுவனமும் சரி, எந்தக் கலவை வேண்டுமோ அதற்கான மூலப் பொருட்களையும் கலவை விகிதத்தையும் இதை செய்து கொடுக்கும் ஒரு தொழிற்சாலைக்கு அனுப்பி விடுவோம். அவர்கள் அந்தக்

கலவை விகிதத்தையும் என்ன பொருள் தயாரிக்கப் படுகிறது என்பதையும் ரகசியமாக வைத்துக் கொள்வார் கள். அவர்களே அங்கே அதை கை இருப்பாக வைத்துக் கொண்டு எங்களுக்கு ஆர்டர் வரும்போது நாம் சொல்கிற கம்பெனிக்கு அனுப்பி வைப்பார்கள்.

இதனால் இந்தத் தொழிலில் இருக்கும் எந்தப் பெரிய நிறுவனங்களுக்கும் சொந்தத் தொழிற்சாலை என்று ஏதும் இருப்பதில்லை. உடனடி தேவைப்படும் பல பொருட்களையும் விற்பனைக்கு வைத்திருக்கும் 'கோடோன்' எனப்படும் ஸ்டோரேஜ் இடம் மட்டும் அலுவலகத்துடன் இணைந்து இருக்கும்.

அமெரிக்காவின் வடமேற்கு மாநிலமான வாஷிங்டனிலிருந்து ஒரு "ரெயில்பெட்டி" அளவு பொருளை வரவழைக்க ஆர்டர் கொடுத்தேன். பொருள் தயாராயிற்று. ஆர்டர் கொடுத்த இடத்தில் என் போன் நம்பரைத் தொலைத்து விட்டார்கள்! ஏதோ சில விவரங்களை அறிய என் கம்பெனி பெயரைச் சொல்லி என் போன் நம்பரைத் தேடி இருக்கிறார்கள். இந்த ஊரில் அப்படிப்பட்ட கம்பெனியே இல்லை என்று டெலிபோன் இலாகா கூறிவிட்டது! அவர்களுக்குச் சந்தேகம் வந்தது! விசாரித்துக் கொண்டு வந்து, ஒரு வழியாக என்னைப் பிடித்தார்கள். "உன் கம்பெனியே இல்லை என்கிறார் களே! உன்னை நம்பி எப்படிப் பொருளை அனுப்ப முடியும்?" என்று 'டோஸ்' விட ஆரம்பித்ததும் தான் எனக்கு இது பொருளை வாங்கி விற்கிற சாதாரண விஷயமல்ல. பெரிய அலுவலகம், அதற்கென்று பெண் காரியதரிசி மற்ற எல்லா பந்தாக்களும் தேவை என்பது எட்டியது.

உடனடியாக நான் இன்னும் பெரிய இடத்திற்கு மாற வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. மாறினேன்.

தொழில் வேகமாக வளரவே, எனது விற்பனை யாளர்களுக்கும் காரியதரிசிக்கும் கணக்கெழுதுப வருக்கும் மீட்டிங் ஹால் என்றும் பெரிய இடம் மீண்டும் தேவைப்பட்டது.

அருகிலுள்ள தொழில்பேட்டையில் ஒரு பெரிய இடம் பூட்டப்பட்டு கிடந்தது. விசாரித்ததில் அது




எங்களது சொந்த நிறுவனம் பார்க்ளே கெமிக்கல்ஸ் லாபயெட் லூசியானாவில்

வங்கியின் வசம் இருக்கிறதென்றார்கள். "உங்களுக்குப் போதுமா? பிடித்திருக்கிறதா பாருங்கள்!" என்று சாவியைக் கொடுத்தார்கள்.

நானும் என் மனைவியும் காரில் சென்று நிறுவனத்திற்கு சொந்தமான பெரிய 'கார்பார்க்' செய்யு மிடத்தில் நிறுத்தினோம். இறங்கினேன். காலடியில் புத்தம் புதிய காசு ஒன்று கிடந்தது. எடுத்துக் கொண்டேன். அலுவலகத்தைத் திறந்தேன் நிமிர்ந்து பார்த்தேன் 105 என்று போட்டிருந்தது. என் வீட்டு எண்ணும் அதேதான்! நல்ல பொருத்தம்!

'அமகோ' நிறுவனத்தின் தலைமை நிர்வாகி ஒருநாள் என்னைக் கூப்பிடனுப்பினார். "நீங்கள் ஏன் இன்னொரு கம்பெனி மூலம் உங்கள் பொருளை விற்க வேண்டும்? நேராக எங்களுக்கே 'சப்ளை' செய்தால் என்ன? பொருளை ஏற்றி வர டிரக்குகள் எல்லாம் நாங்கள் ஏற்பாடு செய்து தருகிறோம்" என்றார். என் கண்கள் ஆனந்தத்தால் அகல விரிந்தன. எனினும்

நாங்கள் முதலில் யார் மூலம் அமகோவுக்கு விற்று வந்தோமோ அந்த நிறுவனத்தின் தலைவரிடம் ஒரு வார்த்தை சொல்லிவிட்டு, ஒப்புதல் பெற்று, அந்த மன நிறைவோடுதான். புதிய பணியை மேற்கொண்டேன். அவர்களை விட நாங்கள் அதிகம் வளர்ந்தது உண்மை. எனது படிப்பும், தொழில் நுட்பமும் அதற்குக் காரணம் எனினும் இன்றும் அவர்களுக்கு நான் நன்றி சொல்கிறேன்; சந்திக்கிறேன்.

அடுத்த சில ஆண்டுகளில் மற்றோர் சம்பவம் நிகழ்ந்தது.

நாங்கள் இருந்த ஊர் லாபயெட் எனப்படும் நகரம். மெக்சிகோ வளைகுடாவில் எண்ணெய்க்காகத் தோண்டும் எல்லா பெரிய நிறுவனங்களுக்கும் தலைமை அலுவலகம் லாபயெட்தான். சில சமயம் 140 இடங்களில் வளைகுடாவில் கடல் பிரதேசத்தில் எண்ணெய் தோண்டும வேலை நடக்கும். இது எங்கள் வளைகுடாப் பகுதியில் மட்டும். அகில இந்தியாவிலும் அப்போது 90 'ரிக்'குகள் இருந்தன.

எண்ணெய் எடுக்கும் துரப்பண யந்திரம், டி.வி டவர் போன்றிருக்கும் யந்திரத்தை உபயோகிக்க ஒரு நாளைக்கு 64000 டாலர் வாடகை. குறைந்த பட்சம் 11 பேர் தொழில் நுட்ப ஆசாமிகள் அங்கு வேலை செய்கிறார்கள். அவர்களது சம்பளம், பூமியைத் தோண்டு வதற்குத் தேவையான ரசாயனப் பொருட்கள் - இப்படி ஏராள செலவு.

'அமகோ'வின் தலைமை நிர்வாகி என்னைக் கூப்பிடனுப்பினார். "எண்ணெய் கம்பெனி சம்பந்தமாக நாங்களே தயாரிக்கும் பல்வேறு ரசாயனக் கலவைகள் இருக்கின்றன. அவை பெரும்பாலும் நீங்கள் விற்பதி லிருந்து வேறுபட்டவை. இந்த எங்களுடைய பொருட் களை விற்கும் உரிமையை உங்களுக்குக் கொடுக்கத் தீர்மானித்திருக்கிறோம். எங்கள் தேவைக்கும் பிறர் தேவைக்கும், நீங்கள் விற்கலாம். இதை நாங்கள் நிர்வகிக்க விரும்பவில்லை" என்று சொல்லி கை குலுக்கினார்.

எப்படி கதை!

இவை எல்லாம் என்னை மீறிய சம்பவங்கள். எனது தரமான சேவையும், நாணயமும், பொறுப்பான நடவடிக்கைகளும் காரணமாயிருந்திருக்கலாம். ஆனாலும் இவை என்னை மீறிய சம்பவங்கள். எனக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை.

எங்கள் நிறுவனத்தின் மேலாளர் - எனக்கு அடுத்த படி இருந்த நிர்வாகி 'ரான்' என்பவருக்கு நான் மூன்று மாதத்திற்கொரு முறை சம்பளத்தை ஏற்றிக் கொண்டே போனேன். இது இப்படி சகஜமாக நடைபெறும் விஷயமல்ல. பெருமையுடன் இதை என் மனைவியிடம் தெரிவித்தபோது அவள் சொன்னாள். "என்ன இது? ரானுக்கு நல்ல சம்பளம்தானே கொடுக்கிறோம். ஏன் இப்படி அடிக்கடி ஏற்றிக் கொண்டே போகிறீர்கள்?" என்றாள். "இதோ பார்! ஆற்றிலே வெள்ளம் போகிறது! அய்யா குடி! அப்பா குடி! அதுதான் விஷயம்!" என்றேன். எங்கள் நிறுவனம் அப்படி வளர்ந்தது.

நிறுவனம் துவங்கிய உடனேயே நான் ஓர் ஆடிட்டரை - தணிக்கையாளரை - மாதாந்திர கணக்கு வழக்கு பார்க்கவும், வருமான வரி, சம்பள வரி பிடித்தம் போன்றவற்றைச் செய்யவும் வைத்திருந்தேன்.

ஆடிட்டர் போலவே ஒரு வழக்கறிஞரையும் எங்கள் நிறுவனத்திற்காக வைத்திருந்தேன். வேலை செய்யும் மணிக்கேற்ப அதற்குப் பணம் கொடுக்க வேண்டும். எந்தப் பணியாளருடன் ஒரு வேலை ஒப்பந்தம் செய்தாலும் வழக்கறிஞர் விவரமான ஒப்பந்தம் எழுதிக் கொடுத்த பிறகுதான் நான் கையெழுத்திடுவேன்.

"அமெரிக்கா எதற்கும் வழக்கு மன்றங்களுக்குப் போகும் சமுதாயம்" என்று ஜப்பானிய 'சோனி' நிறுவனத்தின் தலைவர் சொல்வார். அங்கே "சட்டத்தை மீறலாம்; செல்வாக்கை உபயோகிக்கலாம், லஞ்சம் கொடுத்து அதிகாரியை வாங்கி விடலாம்" என்கிற விஷயமே இல்லை. எனவே எல்லோரும் அங்கே சட்டத்தைப் பெரிதும் மதிப்பார்கள்.

வருமான வரி அதிகாரிகள்கூட அன்புடன், மரியாதையுடன் நம்மை நடத்துவார்கள். ஒருமுறை நமது கணக்கு தணிக்கை செய்யப்படுமானால் அதன் பின் ஒரு மூன்றாண்டுகளுக்கு நம் பக்கமே வரமாட்டார்கள்.

முதல் தடவை என்னைத் தேடி வந்தபோதும் சில சந்தேகங்களைக் கேட்டு தெளிவு படுத்திக் கொள்வதற் காகவே வந்தார்கள். 'எப்படி செலவினங்களை அவ்வப் போது குறித்துக் கொள்ள வேண்டும்' என்பதை எனக்குக் கூறிவிட்டுப் போனார்கள். அவ்வளவுதான். அங்கே பொதுவாக எல்லோரையும் நல்லவர்கள், யோக்கியமான வர்கள் என்றே பார்க்கிறார்கள்.

எனது மூத்த மகன் சித்தார்த்தன், அங்கே வங்கிகளைத் தணிக்கை செய்யும் அரசாங்க நிதி கட்டுப்பாட்டு இலாகாவிலே பணிபுரிகிறான். அந்த இலாகாவிலே அவன் சேர்ந்து 20 ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டதால் நல்ல உயர்ந்த உத்தியோகம்.

ஒருநாள் காலையில் நான் செய்தித்தாளைப் புரட்டியபோது நகரத்திலுள்ள ஒரு வங்கி மூடப்பட்ட தாகப் படித்தேன். என் மகனைக் கேட்டேன். "ஏன் மூடினார்கள்?" என்று, அதன் காரணங்களை எல்லாம் எடுத்துக் கூறிவிட்டு, "நேற்று மாலை, எனது குழுவுடன் சென்று நான் மூடிவிட்டு வந்தேன்" என்றான். எனக்கு வியப்பாக இருந்தது. எப்படி அங்கே நிர்வாகிகளுக்குப் பொறுப்புகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன என்பது எனக்கு வியப்பாக இருந்தது. எல்லாம் அங்கே நேரடி விஷயம்; எதுவும் வாய்தா வாங்கும் விஷயமல்ல; தள்ளிப் போடும் விஷயமல்ல. வேகமாக, அதே சமயம் நியாயமாக, அங்கே காரியங்கள் நடைபெறுகின்றன. அரசாங்கம் என்பது எங்கே இருக்கிறது என்று தேட வேண்டும். நீங்கள், உங்கள் குடும்பம், உங்கள் தொழில் இதுதான் அங்கே முக்கியத்துவம் பெறுகின்றன. நமக்கு உதவியாக அரசாங்கம் அங்கே இயங்கிக் கொண்டிருக்கிறது.

ஒரு தொழில் துவங்கினால் நமது நிறுவனத்தின் பெயரையும் தொழிலையும் ரிஜிஸ்டர் செய்ய வேண்டும்.

அவ்வளவுதான். நிறுவனத்தின் பெயர்ப்பலகையை மாட்டி விட்டு நீங்கள் தொழிலை நடத்தலாம். தொழிலுக்கு உதவி செய்வதற்காகவே அங்கே அரசாங்கம் இருக்கிறது. இங்கே தொழிலையும் தொழிலதிபர்களையும் என்ன செய்கிறார்கள், எப்படி உபயோகிக்கிறது அரசாங்கம் என்று நான் சொல்லத் தேவை இல்லை.

சொந்தத் தொழிலில் நாட்ட முடையவர்களாகத் தான் அங்கே இளைஞர்களை சமுதாயமும் கல்விக் கூடங்களும் பக்குவப்படுத்துகின்றன. படிப்பை முக்கியமாக வேலைக்காகப் படிப்பதில்லை; அறிவிற்காக, அந்த அறிவை வாழ்வில் உபயோகிக்கலாம் என்கிற நோக்கில் இளைஞர்கள் கல்விக்கூடத்தை அணுகு கிறார்கள். பாடத்தை எடுத்துக் கொள்கிறார்கள்.

என் தணிக்கையாளர் என்னைவிட வயதில் மூத்தவர். அவருடைய மனைவியும் ஒரு தணிக்கையாளர் தான். 'பார்க்ளே கெமிக்கல்ஸ்' என்ற எங்கள் நிறுவனம் அபரிமிதமாக லாபம் சம்பாதித்துக் கொண்டிருந்தபோது நிறுவனத்தின் மாதாந்திர வரவு செலவைப் பார்த்துவிட்டு அவர் சிரித்துக் கொண்டே கூறினார்.

"இவ்வளவு பணத்தையும் வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?" என்றார்.

நான் சிரித்துக் கொண்டேன்.

மனத்தில் ஓடிய எண்ணம்: "இனி நாம் ஊருக்கு - தமிழ்நாட்டுக்குக் கிளம்புகின்ற வேலையைப் பார்க்க வேண்டியதுதான்!"









37

## பதவி தரும் அங்கீகாரம்!

**தா**ய்நாடு திரும்பத் தீர்மானித்தேன். ஏன் தீர்மானித்தேன்? இந்தக் கேள்வியைப் பல இடங்களிலும் கேட்கிறார்கள்.

தீர்மானம் என்பது ஒரு முடிவை மனத்தில் வைத்து நாம் செய்து கொள்ளும் சங்கல்பம்; எண்ணம்... இது ஏதோ 1987ல் திடீரென்று ஏற்பட்ட முடிவல்ல. கொஞ்சம் கொஞ்சமாக மனத்தில் கனிந்தது. திரும்ப வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது 1963லேயே, அதாவது நான் அங்கு சென்ற மறு ஆண்டிலேயே.

எனவே நான் அமெரிக்கா வந்த புதிதில் நண்பர்கள் அனைவரும் மிக ஆர்வத்துடன் இந்தியா பற்றிப் பேசுவோம். வருடம் 1962. அப்போது அறிஞர் அண்ணா தான் தி.மு.க தலைவர். அவர் தலைமையில் திமுக கட்சி சட்டமன்றத்தில் 50 இடங்களைப் பிடித்திருந்தது. எல்லோருக்குமே அண்ணா நம்பிக்கை நட்சத்திரமாகத் தென்பட்டார்.

அன்றைய நாட்டு நடப்பைப் பற்றி என்னைக் கேட்டார்கள். அண்ணா பாராளுமன்றத்திற்குச் சென்ற போது ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சி என் மனத்தில் மாறாத இடத்தைப் பெற்றிருந்தது! அப்போது நேருதான் பெருமை மிக்க பிரதமர்.

ஜனாதிபதி உரைக்குப் பின் பாராளுமன்றத்தில் அதைப் பற்றிய விமர்சனத்தில் எல்லா பாராளுமன்ற உறுப்பினர்களும் பங்கு பெறுகிறார்கள்.

அப்போது அண்ணா பேசுகிறார். ‘எதற்காக திராவிட நாடு கேட்கிறோம்’ என்பதை விளக்கி, மிக அருமையான, ஆணித்தரமான நியாயம் நிறைந்த பேச்சு.

நேருவே அசந்து போய் ஆர்வத்துடன் கவனிக்கிறார். இதில் மிகப் பெரிய விசித்திரம் என்னவென்றால், இதன்பின் பேசிய யாரும் ஜனாதிபதியின் உரையை விட்டு விட்டார்கள்; எல்லோருமே அண்ணாவின் உரையைப் பற்றியே பேசத் துவங்கினார்கள். பாராளு மன்றம், ஜனாதிபதி எல்லாம் எங்கோ போக, அண்ணா முக்கியத்துவம் பெற்றார். அண்ணாவின் பேச்சு அவர்களைக் கலக்கியது என்று சொல்வதற்கு பதில் ஆழமாகத் தொட்டது என்ற உணர்வுதான் இருந்தது. இதைத்தான் நான் அங்கே சொல்லிக் கொண்டிருந்தேன். சில ஆண்டுகளில் 1967ல் அண்ணா முதல்வராகப் பதவி ஏற்றார். ஒரு மிகப் பெரிய, புதிய சகாப்தம் தோன்றப் போகிறது என்று எல்லோரும் எதிர்பார்த்தோம். உலகில் விஷயமறிந்த எல்லோருமே எதிர்பார்த்தார்கள் என்று சொல்வது மிகையாகாது. அதனால்தான் யேல் பல்கலைக்கழகம் ‘சப் பெல்லோ ஷிப்’ என்ற உயர் விருதினை அளித்து அவரை அங்கே ஒரு வாரம் தங்க அழைத்திருந்தது.

இன்னொரு முக்கிய விஷயம். விஸ்கான்சின் பல்கலைக் கழகத்தில் தென் ஆசிய கல்வி என்ற துறை ஒன்றிருந்தது. அதில் முழுக்க முழுக்க இந்தியாவைப் பற்றிய படிப்புதான். அங்கே ஹென்ரி ஹார்ட் என்ற அரசியல் பேராசிரியர், ஜோ எல்டர் என்ற சமுதாய இயல் பேராசிரியர், பிரைக்கன் பர்க் என்ற சரித்திரப் பேராசிரியர், மூவருமே இந்தியாவின் அரசியல், சமுதாய இயல், சரித்திரம் என்ற பிரிவில் ஆழமாக ஆராய்ச்சி செய்தவர்கள்; தமிழ்நாட்டை அறிந்தவர்கள்.

எனக்கு எப்போதுமே இப்படி மிகப் படித்தவர் களைப் பார்க்கும்போது, பேசும்போது, அதிக மரியாதை கலந்த பிரமை ஏற்படும். எனவே இவர்களைச் சந்திப்பேன். பலமுறை எங்கள் வீட்டிற்கு விருந்திற்கு அழைப்பதுண்டு. ஹென்ரி ஹார்ட் அவர்களின் அரசியல் வகுப்பில், எனக்கு நேரம் கிடைக்கும்போது அவரது அனுமதி பெற்று அமர்வதுண்டு. ‘இப்போது மெட்ராஸ் மூர்த்தியின் அபிப்பிராயத்தைக் கேட்போம்’ என்பார் ஹென்ரி ஹார்ட்.

இந்தச் சூழ்நிலையால் என்னுள் தோன்றிய எண்ணங்கள்: இந்தியர்களாகிய - தமிழர்களாகிய நாம் - இங்கே வந்து இவர்களுக்குச் சமமாகவும், சில சமயங் களில் இவர்களே வியக்கும்படியும் செயல்பட முடிகிறதே - அவ்வளவு புத்திசாலித்தனம் இருக்கிறதே, இருந்தும் ஏன் இப்படி ஏழை நாடாக நாம் இருக்கிறோம்? இதை, எல்லாம் மாற்ற வேண்டும். இங்கிருக்கிற ஒவ்வொருவரும் அவரவர் துறையில் சென்று பாடுபட்டால், முன்னேற்றக் கருத்துக்களைத் தெரிவித்தால் நாடு மாறிவிடும். நாம் ஏதாவது செய்தாக வேண்டும்' என்ற எண்ணம் ஆழமாக விழுந்தது.

எங்கும் எதிலும் சர்வேஸ்வரனைப் பார்ப்பார் களாமே பக்தர்கள், அதுபோல எங்கும் எதிலும் - ஒரு ஹைபிரிட் கோழி இனத்தைஉண்டு பண்ணி இருக்கிறார் கள் என்று படித்தால் கூட "அட! நம் ஊரிலும் இப்படி ஏற்பட்டால் எப்படி இருக்கும்?" "இப்படிப்பட்ட சுயமாக சிந்திக்கின்ற கல்வி முறையைக் கொடுத்தால் எப்படி இருக்கும்?" என்றே எண்ணங் கொண்டிருப்பேன். இன்னும் தாகம் தணிந்தபாடில்லை.

இன்னொருபுறம் எனது வேதியல்பாட ஆர்வம். ஒருமுறை ஆராய்ச்சி செய்து கொண்டிருந்தபோது நான் எடுத்துக் கொண்ட ஒரு செடியிலிருந்து, அதனுள் இருக்கும் முக்கிய மூலப் பொருளைத் தனியே பிரித் தெடுக்க முடியவில்லை. ஆராய்ச்சி துவங்கி ஓராண்டு ஓடி விட்டது.

பேராசிரியர் கூப்பிட்டார். "இது கஷ்டமாக இருக்கும் போலிருக்கிறது. நான் உனக்கு வேறு ஒரு பொருளை ஆராய்ச்சி செய்யத் தருகிறேன். அதைத் துவங்கு" என்றார்.

"இந்த ஆளால் முடியவில்லை" என்று நம்மைப் பற்றித் தீர்மானம் செய்து விட்டாரோ என்ற தாழ்வு மனப்பான்மை என்னை உலுக்க, "இன்னொரு மூன்று மாதம் முயன்று பார்க்கிறேனே?" என்று கூறினேன்.

பேராசிரியர் சொன்னார். "உலகில் எத்தனையோ விஷயங்கள் எவ்வளவு போராடினாலும் விடுவிக்க முடியாதவை இருக்கின்றன. அதில் காலத்தைச்

செலவிடுவதில் பயனில்லை. நீ டாக்டர் பட்டம் எடுக்க வேண்டும். ஏதாவது புதிய முடிவுகளுக்கு வா வேண்டும். எனவே இதைச் செய்?'' என்றார்.

அடுத்த ஆண்டிலேயே எனக்கு நான் எடுத்துக் கொண்ட பொருளைப் பற்றிய, புது தகவல்கள் - நல்ல முடிவுகள் - கிடைத்தன.

இந்த சமயத்தில்தான் ஆராய்ச்சியிலேற்பட்ட கஷ்டங்களும் இங்கு என்னைப் போல் ஆராய்பவர்கள் செய்வதன் விளைவுகளும் பற்றி மனம் யோசிக்க ஆரம்பித்தது. டாக்டர் பட்டத்திற்கு மிக முக்கியமாக, சுயமாக சிந்திக்க வேண்டும். எடுத்துக் கொண்ட ஆய்வில், அறிஞர்களுக்கோ, பொது மக்களுக்கோ இன்றோ நாளையோ பயன்படக்கூடிய தகவல்கள் கிடைக்க வேண்டும்.

இப்படி நான் ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த போதுதான் எப்படி மனித மனம் - விஞ்ஞானியின் மனம் எப்படி புதிய பொருளைக் கண்டுபிடிக்கிறது என்ற கேள்விக்கு பதிலைத் தேடும் ஆர்வம் என்னுள் எழுந்தது. எல்லா விஞ்ஞானிகளுடைய வாழ்க்கை வரலாறுகளையும், சுய சரித்திரங்களையும் படித்தால் அங்கே அதில் இதற்கான பதில் புதை பொருளாக, மறைந்து கிடக்கும் ஞானமாக இருக்கும் என்ற எண்ணம் ஏற்பட்டது.

இப்படி சிந்தித்ததற்கு மூல காரணம் நான் கிண்டி பொறியியற் கல்லூரியில் வேலை பார்த்தபோதே படித்த ஜேம்ஸ் ஆலனின் நூல்தான். அந்த எண்ணங்களின் சக்தி என்னுள் வேலை செய்து கொண்டிருந்தது. இதுவரை விடுவிக்கப்படாத பெரும் புதிர் இது. ஆனால் பின்னால் நம் நாட்டு சித்தர்கள், யோகிகள் எண்ணங்களின் மூலம் எப்படிப் பல சித்திகளை சாதிக்கிறார்கள் என்று மனத்தின் அபார சக்தியை அறிந்தபோது நாம் இறங்கிய இடம், சரியான, முக்கியமான துறைதான் என்ற மகிழ்ச்சி எனக்கு ஏற்பட்டது.

எனவே எனது மேற்படிப்பின் ஆராய்ச்சி வேதியல் துறையுடனே, ''புதியன காணும் சிந்தனா முறை'' என்பதைப் பற்றி, மனவியலில் இறங்கி விட்டது. சிந்தனா

முறை பற்றி நான் மேற்கொண்ட ஆராய்ச்சிகளும், படித்த நூல்களும் நான் தெரிந்து கொண்ட விஷயங்களும், என் அனுபவமும் சிந்தனைகளும்தான் மனவியலில் பல நூல்களாக வெளி வந்தன.

இதில் எனக்கு ஆச்சரியம் தந்த சம்பவம் இந்திய மன மருத்துவச் சங்கமும், சென்னை மனவியல் சங்கமும் சேர்ந்து எனக்கு 'மாமனிதர்' என்ற பட்டத்தை அளித்ததுதான். நான் இதை எதிர்பார்க்கவில்லை. நான் முறையாக மனவியல் படித்தவனல்ல. அதில் பட்டம் பெற்றவனல்ல! முறை சாராக்கல்வி என்பார்களே அதுபோல நானே நிறைய படித்து மனவியலை அறிந்திருந்தேன். அதை அமெரிக்காவில் ஏற்றுக் கொள்வார்கள்; நமது ஊரில்? சகஜமாக ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். அப்படி இருக்கும்போது எப்படி இவர்கள் அதைக் கடந்து நம்மை அங்கீகரிப்பார்கள் என்கிற யோசனைகள் எனக்குள் இருந்தன.

காஞ்சிப் பெரியவர் கேட்டுக் கொண்டதற்கு இணங்க P.S உயர் நிலைப் பள்ளி மாணவர்கள், மயிலாப்பூர் திருக்குளத்தைத் தூர் எடுத்தார்கள். அந்த மாணவர்களைப் பாராட்டி அவர்களுக்குச் சான்றிதழ் வழங்க என்னை அழைத்திருந்தார்கள். அங்கே என்னுடன் மேடையில் சென்னைப் பல்கலைக் கழக மனவியல் பேராசிரியர் டாக்டர் கே.வி. காளியப்பனும் அமர்ந்திருந்தார். நான் மாணவர்களிடம் பேசி முடித்தவுடன் பேராசிரியர் காளியப்பன் எழுந்தார். “இன்று இந்த மாணவர்களுக்குப் பதிலாக எனது சக ஆசிரியர்கள் இங்கே பயிற்சி எடுத்துக் கொண்டிருந்தால் மிகுந்த பயன் பெற்றிருப்பார்கள். மனவியலை நடை முறைக்குக் கொண்டு வந்து விட்டார்” என்று என்னைப் பற்றி பேசினார்; பாராட்டினார்.

நானும் அதை இன்னொரு பாராட்டு என்றுதான் எடுத்துக் கொண்டேன்.

அதே போலத் தமிழ்ப் பேராசிரியர்கள் பல்வேறு பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும்- குறிப்பாக சென்னைப் பல்கலைக் கழகத்தில் தொடர்ந்து

மூன்றாண்டுகள் எண்ணங்கள் என்ற என் நூலைப் பாடப் புத்தகமாக வைத்ததும் என்னளவில் பெரிய கௌரவம்.

சென்ற ஆண்டு ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் அறக்கட்டளை சார்பில் எனக்கு அண்ணா மலைச் செட்டியார் விருது வழங்கினார்கள். பின்னர் திருக்கோயிலூரில் கபிலர் விருது.

எப்படி நான் இவர்களுக்கு நன்றி சொல்ல முடியும்?

நேற்று வரை தம்பிரானாக இருந்த மடத்துறவி மறுநாள் குருமகா சன்னிதானமாகப் பதவி ஏற்கும்போது அன்றிலிருந்து அவருக்குத் தனி மரியாதை ஏற்படுகிறது. நேற்றுத் தம்பிரானாக இருந்த அதே மனிதர்தான் இவர். எந்தவிதமான புனிதமும் ஏறிவிடவில்லை, குருவான மறுநாளில்! ஆனால் அந்தப் பெருமை தம்பிரானாக இருந்தபோது கொடுக்கப்படுவதில்லை. பதவி தரும் அங்கீகாரம் இது!

அறிஞர் அண்ணா திராவிட நாடு பற்றிய கருத்தை மேடைகளிலே பேசுவதற்கும், அதே கருத்தை எல்லோரது கவனத்தையும் ஈர்க்கும் பாராளுமன்றத்தில் பேசுவதற்கும் பெருத்த வேறுபாடு இருக்கிறது. பதவி தரும் முக்கியத்துவம் இது. எனவே, கருத்துகள் பரவுவதற்கு இது போன்ற அங்கீகாரங்கள் தேவைப்படுகின்றன. பொது மக்களது மனோபாவத்தில் இவை ஒரு விழிப்புணர்வை ஏற்படுத்துகின்றன. இது உண்மை!



38

# அமெரிக்காவில் அறிஞர் அண்ணா

மனவியல் துறையில் எப்படி இறங்கினேன் என்பதைப் பற்றி எழுதினேன். அரசியல் துறையில் கட்சிக்காரனாய் அல்ல- ஆனால் பொது வாழ்வில் நான் எப்படி இறங்கினேன் என்பதையும் நான் குறிப்பிட வேண்டும்.

எனக்கிருந்த அசைக்க முடியாத எண்ணம் தமிழ்ப் பண்பாட்டிலே விளைந்த தமிழர்களின் அறிவிலும் திறமையிலும் எனக்கிருந்த அபார நம்பிக்கைதான். இது இருந்தும், 'இவர்கள், ஏன், உலக அரங்கில் பிரகாசிக்க முடியவில்லை?' என்கிற ஆதங்கம்.

சங்க காலப் பாடல்களும் சரி, தேவாரம், திருவாசகம், திருமூலர், திருக்குறள் என்று வரிசையாகத் தமிழ் இலக்கியம், வேறு எங்குமே காணாத அளவுக்குச் சிறப்புற்று நிற்கிறது. வெறும் உபசாரத்திற்காகவா பாடினார் பாரதி, "யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல், வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" என்று? "பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை" என்கிறார். சிறப்பான இலக்கியங்கள் இருக்கின்றன சில மொழிகளில். நம்முடையவையோ அவற்றிற்கு இணையாக, பல இடங்களில் மேலும் சிறப்பாகத் தனித்து நிற்கின்றன.

என்ன குணங்கள் தமிழர்களைப் பின்னுக்கிழுக் கின்றன என்பதை நாம் முறையாக ஆராயவேண்டும். நமது சிந்தனை, அணுகுமுறை, செயல்களில் உள்ள குறைகளை நாம் தெரிந்து கொள்ள வேண்டும். அவற்றை நிவர்த்திக்க நாம் நடவடிக்கை எடுக்க வேண்டும். "மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசுவதில் ஓர்

மகிமை இல்லை. திறமான புலமை எனில் வெளிநாட்டார். அதை வணக்கம் செய்தல் வேண்டும்."

ஆங்கிலத்தில் creativity (ஆக்க சிந்தனை) என்பார்கள். விளக்கமாகச் சொன்னால் "புதியன காணும் மனோ பாவம்." இந்தக் குணம் அமெரிக்காவிலும் ஐரோப்பா விலும் இருக்கிற அளவுக்கு நம் நாட்டில் இல்லை. ஜப்பான்கூட கடந்த 20 ஆண்டுகளில் ஜெர்மனியையும் அமெரிக்காவையும் 'காப்பியடித்து', அதன் பின் இன்று, தானே புதிய துறைகளில் இறங்கவும் கண்டுபிடிக்கவும் துவங்கி விட்டது.

சில அடிப்படைக் குணங்கள் நம் சமுதாயத்திலே இல்லை. உதாரணமாக (விசுவாசம்), நன்றியுடைமை, கூட்டுணர்வு (Team work)கட்டுப்பாடு (Discipline)அத்துடன் பெரியார் ஈ.வெ.ரா அவர்கள் கூறியதுபோல சுய கௌரவம். தன்னைப் பற்றிய கம்பீரம் ஏற்படும் வகையில் நமது சொல்லும் செயலும் இல்லை என்பது. (Self esteem) குழந்தைகளை அன்புடனும் ஆதரவுடனும் வளர்க்கும் நாம், அவர்களுக்குரிய தனித்துவத்தை மதிப்பதோ அவர் களுடைய சுதந்திரத்திற்கு ஊறு செய்யாமல் வளர்க்க வேண்டும் என்பதில் அக்கறையோ க்காட்டுவதில்லை. இதனால் தன்னம்பிக்கையற்ற – பிறரைச் சார்ந்து நிற்கும், தன் மதிப்பு அற்ற ஒரு இளைஞனை பள்ளி மூலமும், குடும்ப வளர்ப்பின் மூலமும் உருவாக்குகிறோம்.

இப்படிப்பட்ட எண்ணங்களின் பாதிப்பு என்னிடம் இருந்தது; தொடர்ந்து இருக்கிறது. அறிஞர் அண்ணா பதவி ஏற்ற போது - அவர் அமெரிக்கா வந்தபோது நான் அவருடன் சுமார் 20 நாட்கள் கூட இருந்தேன். அவர் அமெரிக்காவில் பங்கு கொண்ட நிகழ்ச்சிகளை ஆனந்தவிகடனில் எட்டுக் கட்டுரைகளாக எழுதினேன்.

அண்ணாவின் திராவிட நாடு பத்திரிகையை நான் முன்பே தொடர்ந்து படித்து வந்ததனால் எனக்கு அண்ணாவின் மீது அபரிமிதமான மதிப்பு. எனவே விகடனில் என்னை எழுதுமாறு கேட்டபோது அதைப் பெரிய பாக்கியமாக எண்ணினேன். அண்ணா அறிஞர்: நன்கு படித்தவர். மிகுந்த பண்பாளர். அவரிடம் சிந்தனைத் திறனும், அபாரமான பேசும் திறனும்

இருந்தன. பெரியாரின் தாக்கமும், அவர் வாழ்ந்த கால கட்டத்தின் தாக்கமும் அண்ணாவிடம் நிறைய இருந்தன.

ஆனாலும், அவர் பாராளுமன்றத்திலே பங்கேற்ற போதிலிருந்து அவர் முற்றிலும் வேறுபட்ட அகில இந்தியத் தலைவராக உயர்ந்தார் என்பதே என் அபிப்ராயம்.

அண்ணா அமெரிக்காவில் இருந்தபோது வெவ்வேறு துறையில் இருந்து படித்தவர்கள், நிபுணர்கள் எல்லாம் தமிழ் நாட்டுக்கு வந்து உதவ விரும்புவதாக, தினந்தோறும் போன்கால்கள் வந்து கொண்டிருந்தன. தமிழர் இருக்குமிடங்களில் எல்லாம் பெரிய கூட்டங்கள்-அசாதாரணமாக, அண்ணாவுக்கென்று. நமது ஐ.நா.வின் நிரந்தரப் பிரதிநிதி ஜி. பார்த்தசாரதி ஒரு பெரிய விருந்து அளித்தார் நியூயார்க்கில்.

அவருடனே இருந்ததால் பல சமயம் அவருடன் பல விஷயங்களையும் பேசும் வாய்ப்புக் கிடைத்தது. அண்ணாவே பல சமயம் என்னைத் தன்னுடன் அழைத்துக் கொண்டு போனார். அப்போதுதான் அவர் பதவிக்கு வந்திருந்தார். தமிழ் மக்களிடையே இருந்த எதிர்பார்ப்போ ஏராளம். தமிழ்நாடே, முழுமையாக, கிராமங்களிலிருந்து நகரங்கள் வரை, "படித்தவர் களாகவும், செல்வச் செழிப்புடனும் வாழும் நாடாகவும் மாறிவிடும்" என்றும், மாறப் போகிறது என்றும் எல்லோருமே நம்பினார்கள்.

தமிழ்நாட்டில் செய்ய வேண்டிய மாற்றங்களைப் பற்றியும் அதற்கு அமெரிக்காவில் வாழும் தாங்கள் என்ன செய்ய முடியும் என்றும் பேசியவர்களிடம் எல்லாம், அண்ணா சொன்னது இதுதான்: "காலம் வரும். உரிய காலத்தில் உங்களை அழைத்து உபயோகித்துக் கொள்கிறேன்" என்பதுதான். நம் நாட்டிலேயே வந்து தங்கி விடுவோம் என்று வந்த எங்களுடன் படித்த டாக்டர் சௌந்தரராஜனுக்குக்கூட - அண்ணாவுக்கு அவரை முன்பே தெரிந்திருந்தும் கூட - சரியான வேலை கிடைக்க வில்லை. சரியாக அவரை உபயோகிக்க முடியவில்லை.



யேல் பல்கலைக்கழகத்தில் அறிஞர் அண்ணாவுடன்

பொதுவாக எந்த வேலைக்குப் போனாலும், எந்தத் தொழிலில் இறங்கினாலும், அமெரிக்க ஜனாதிபதி பதவி உட்பட, அதன் நெளிவு சுளிவுகளைப் புரிந்து கொள்ள ஓராண்டு காலம் ஆகும் என்று சொல்வார்கள். அண்ணா அதைத்தான் - தான் காலூன்றிக் கொள்ள வேண்டிய நேரத்தைப் பற்றித்தான் - சொல்லியதாக நினைக்கிறேன்.

ஜான் கென்னடி பதவி ஏற்றபின் ஒருமுறை சொன்னார். “பதவிக்கு வருமுன் சொன்னது வேறு: இங்கிருக்கும் நிலைமை வேறு. உள்ளே வந்து பார்க்கும் போதுதான் இது தெரிகிறது” என்று. இதை அண்ணாவும் உணர்ந்திருக்க வேண்டும்.

ஒவ்வொரு விஷயத்தையும் அண்ணா கையாண்ட விதம், அவருடைய அன்பையும், உயர் குணங்களையும் படித்த பண்பாளர் என்பதையும் காட்டிக் கொண்டிருந்தது. நியூயார்க்கில் பலரும் அவருடன் படம் எடுத்துக் கொள்ள விரும்பினார்கள். அப்படிப் பலர் வந்து அவருடன் படமெடுத்துக் கொள்ள விரும்பிக் கேட்டுக்

கொண்டபோது, அருகிலிருந்த என்னைப் பார்த்து, "ஒரு படம் எடுங்கள்" என்றார். பிறகு என்னிடம் சொன்னார். "இதெல்லாம் நமக்கு சிறிய விஷயம். ஆனால் அவர்களுக்கோ பெரிய விஷயம்!" என்று கண்களை உயர்த்திச் சொன்னார். நம்முடைய அண்ணாதானே, நாம்தான் அவருடன் இருக்கிறோமே, என்று நான் அவருடன் படங்களே எடுத்துக் கொள்ளவில்லை. யேல் பல்கலைக் கழகத்தில் அவருடன் கடைசியாக உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தபோது ஒரு படமாவது எடுத்துக் கொள்ள வேண்டும் என்று எண்ணம் மேவி எடுத்துக் கொண்டேன். அது ஒன்றுதான் எங்கள் கிராம வீட்டில் என் அண்ணன் பத்திரமாக மாட்டி வைத்திருக்கிறார்கள்.

ஐக்கிய நாடுகள் சபைக்குச் சென்றபோது ஊதாண்ட் அவர்களைச் சந்திக்கச் சென்றோம். ஐக்கிய நாடுகளின் சபைத் தலைவர் ஊதாண்ட், பர்மாவைச் சேர்ந்தவர். பல ஆண்டுகள் பதவியில் இருந்தவர். அங்கே உபதலைவராக பதவியில் இருந்தவர், நமது ஊர்த் தமிழர், நரசிம்மன். ஊதாண்ட், பார்த்தசாரதி, அண்ணா, நரசிம்மன் அனைவரும் நின்று படம் எடுத்துக் கொண்ட போது நான்தான் அவர்களது படத்தை எடுத்தேன். அண்ணா என்னையும் வந்து நிற்குமாறு அழைத்தார். நான்தான் 'அது முறை அல்ல' என்று எண்ணி மறுத்து விட்டேன். இப்படி என்னால் மறக்க முடியாத சம்பவங்கள் பல.

யேல் பல்கலைக் கழகத்தில் அண்ணாவைப் பார்க்க பத்திரிகை நிருபர்கள் வந்திருந்தார்கள். மதியம் மூன்று மணிக்குக் கூட்டம். ஆனால் அண்ணா வரவில்லை. என்னை அனுப்பினார்கள் அழைத்துவர. சென்றேன். அண்ணா குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார். திரும்பி விட்டேன். மணி நாலுக்கு மேலேயும் ஆகிவிட்டது. "ஒரு போட்டோ எடுத்துக் கொண்டால் போதும்" என்று நிருபர்கள் தவித்தார்கள், அவசரத்துடன். அண்ணா மாடியிலிருந்து இறங்கி வந்தார். கையில் ஒரு புத்தகத்துடன் வந்தார். "உங்களை ஒரு படம் எடுத்துக் கொள்கிறோம்... அந்த புத்தகத்தைப் படிப்பது போல் வைத்துக் கொள்ளுங்கள்" என்றார்கள். மூன்று நான்கு



பல்கலைக்கழகத்தில், டாக்டர் பட்டம் படிக்கும் மாணவர்களுடன் ஒரு உரையாடல் வலது கோடியில் நான்

பேர்தான் இருந்தோம். அண்ணா கையில் வைத்திருந்த புத்தகம் திருக்குறள். உடனே மறுநாள் இந்தியன் எக்ஸ்பிரஸ் நிருபர், ஆந்திரக்காரர், "அண்ணா திருக்குறளை, அங்கு மாணவர்களுக்கு சொல்லிக் கொடுத்தார்" என்று படத்தின் கீழ் எழுதி அனுப்பி விட்டார்! அப்படியே பிரசுரமாயிற்று! இன்றும் பலர் அதையே இங்கு 'அண்ணா அங்கு திருக்குறள் பாடம் நடத்தினார்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது எனக்குச் சிரிப்புத்தான் வருகிறது. ஒரு பத்திரிகை நிருபர் என்னவெல்லாம் செய்யலாம் என்பது எனக்கு அப்போது தான் தெரிந்தது. இன்னும் அந்தச் சம்பவம் எனக்கு வேடிக்கையாகவே இருக்கிறது. சமீபத்தில் ஒரு பத்திரிக்கையில் யாரோ ஒருவர் BECAUSE என்ற வார்த்தையை நான்குமுறை உபயோகிக்கும்படி கேட்டதாகவும், அப்படி அண்ணா உபயோகித்து அமெரிக்காவில் தனது புலமையைக் காட்டியதாகவும் எழுதி 'டூப்' விட்டிருந்தார். அப்படி எதுவும்

நடக்கவில்லை. நமது ஊர் துணுக்கு மூட்டைகள் இப்படி இல்லாததை நிறைய எழுதுகின்றன!

**யே**ல் பல்கலைக் கழகத்தில், டாக்டர் பட்டத்திற்குப் படிக்கும் மாணவர்களிடையே அண்ணாவைப் பேச அழைத்திருந்தார்கள். ஒரு விஷயம், அண்ணா எங்கு சென்றாலும் எதுவும் குறிப்புக்களைப் பார்த்துக் கொண்டோ அல்லது எடுத்துக் கொண்டோ வருவதில்லை. பல்கலைக்கழக மாணவர் சாப்பிடும் 'காபி டீரியா'வில் சாப்பிட்டோம். உட்கார்ந்து அங்கேயே பேராசிரியர்கள் சிலர் உட்பட பேசிக் கொண்டிருந்தோம். 'அடுத்து அரசியல் படிப்பு படிக்கும் மாணவர்களைச் சந்திக்கிறீர்கள். நீங்கள் உங்கள் அறைக்குச் சென்று ஏதாவது (குறிப்புகள்) எடுத்துக் கொள்ள வேண்டுமா?'' என்று கேட்டார் பேராசிரியர். "வேண்டாம்! நேரே போகலாம்'' என்றார் அண்ணா. நிலமையின் கனத்தைத் தெரிவிக்கும் வகையில் பேராசிரியர் சொன்னார். "இவர்கள் எல்லாம் டாக்டர் பட்டத்திற்குப் படிக்கும் மாணவர்கள்...'' என்றார்.

"அப்படி என்றால் வேலை சுலபமாயிற்று!'' என்றார் அண்ணா. பேராசிரியர் முகத்தில் ஈயாடவில்லை.

அந்தக் கூட்டத்தில் அண்ணா மிக அழகாக, இந்திய நாட்டின் ஐக்கியத்தையும் மத்திய ஆட்சியையும் எந்த விதத்திலும் குறை சொல்லாது. இந்தியாவின் தூதர் - பிரதிநிதி என்கிற அளவில் உள்ளத்திலிருந்து பேசினார். அகில இந்திய நிலைமையையும் பூராவாக உணர்ந்து இந்தியாவின் தூதராக அவர்கள் கேள்விகளுக்குப் பதிலளித்தது அவரது மற்றொரு பரிமாணத்தைக் காட்டியது.

"இலங்கையையும் இணைத்து அகண்ட தமிழகம் அமைக்க வேண்டுமென்று பேசப்படுகிறதே!'' என்ற கேள்வி வந்தபோது என்னிடம் திரும்பி "நம்ம சி.பா. ஆதித்தனாரது "நாம் தமிழர் இயக்கம்'' பற்றிக் கேட்கிறார்கள்!'' என்று சொல்லி சிரித்துக் கொண்டே பதில் சொன்னார்.

அண்ணா மறுமுறை அமெரிக்கா வந்தபோது புற்று நோய் சிகிச்சைக்காக வந்தார். "எந்த நோய் வந்தால்

என்ன, அமெரிக்காவில் எல்லோரையும் பிழைக்க வைத்து விடுவார்கள்' என்றுதான் நான் எண்ணிக் கொண் டிருந்தேன். அப்போது 'கல்கி'யிலிருந்து ஒரு செய்தி வந்தது. அண்ணாவின் உண்மை நிலை என்ன என்று தெரிந்து தெரிவிக்குமாறு கேட்டிருந்தார்கள்.

இது சுலபமல்ல. எனினும், அண்ணாவுக்கு சிகிச்சை அளிக்கும் மூத்த மருத்துவருக்கு உதவியாளராக வந்திருந்த, ஒரு தமிழ்நாட்டு இளைஞர், டாக்டர் எனது நண்பர் சங்கர் ரமணிக்குத் தெரிந்தவர். டல்லசிற்கு ஒருநாள் சங்கர் ரமணி வீட்டிற்கு வந்திருந்தார். அவர் சொன்ன விவரம். "நிலமை கவலைக்கிடம்" என்பதுதான். இதற்கான பல விஷயங்களையும் விளக்கி, அவர் சொன்னார்.

இது இங்கே கல்கி பத்திரிகையில் வெளிவரவும், மற்ற பத்திரிகைகள் வேறு விதமான நம்பிக்கையுடன் செய்திகளை வெளியிடவும், அண்ணாவுக்கு அடுத்த நிலையிலுள்ள தலைவர்களிடமிருந்து உடனடியாக ஜி. பார்த்தசாரதி அவர்களுக்கு 'போன்கால்' வந்தது. உடனே திரு. ஜி. பார்த்தசாரதி என்னைக் கூப்பிட்டு கோபித்துக் கொண்டார். "இதன் விளைவுகளை நீங்கள் யோசித்துப் பார்த்தீர்களா? அவர் பெரிய பதவியில் இருக்கிறார். உடல் நிலைமை சரியில்லை என்றால் உடனடியாக அடுத்து பதவிக்கு வருபவர்களிடையே எத்தனை போட்டிகள், முயற்சிகள், சண்டைகளை இது கிளப்பி விடும். உண்மையாயிருந்தாலும் நாம் இதை எழுதலாமா?" என்றார். என் தவறு அப்போதுதான் எனக்குப் புரிந்தது.

**நா**ட்டிய கலாநிதி பாலசரஸ்வதியின் வீட்டில் உலகத் தமிழ் மாநாட்டு படத்தை அண்ணா போட்டுக் காட்டினார். படம் துவங்கியபோது சொன்னார்: "கருணாநிதி வசனம்" என்று குறிப்பிட்டு. அவர் வசனத்தில் இருந்த பெருமதிப்பை இரண்டே வார்த்தையில் கூறி விட்டார்.

இரவு பதினோரு மணி இருக்கும். பால சரஸ்வதி அவர்களின் வீட்டிலிருந்து அண்ணா தங்கி இருக்கும் யேல் பல்கலைக் கழகத்திற்குத் திரும்பினோம்.

அண்ணா வந்த கார் ரிப்பேராகி விட்டது. எனவே அண்ணாவை என் காரில் அழைத்து வந்தேன். பத்து மைல் தொலைவு அண்ணா மனம் விட்டு பால சரஸ்வதியின் நாட்டியத்திலிருந்து நேருவரை பல்வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டு வந்தார்.

யேல் நகர எல்லைக்குள் வந்து விட்டோம். தெருவில் சிவப்பு, பச்சை தடை விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. எதிரே சாலையில் சிவப்பு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. அண்ணா பேசிக் கொண்டிருந்த ஜோரில், நான் சிவப்பு விளக்கை கவனிக்காமல் நேரே வண்டியை ஓட்டி விட்டேன்! அண்ணாவும் கவனிக்க வில்லை. அது பற்றிச் சொல்லவில்லை. நல்லவேளையாக அந்த இரவு 11 மணிக்கு எந்த காரும் குறுக்கே வரவில்லை!

ஆனால் எனக்குள் எழுந்த அச்சம் என் எலும்பை உறைய வைத்து விட்டது. அதிலிருந்து நான் எந்த வி.ஐ.பி. யையும் வைத்து காரை ஓட்டுவதில்லை என்று சங்கற்பம் செய்து கொண்டேன்.

39

# கலைஞருடன் சில அனுபவங்கள்

---

அறிஞர் அண்ணாவுக்குப் பின் முதல்வராக கலைஞர் மு. கருணாநிதி பதவி ஏற்றார். கட்சியைக் கட்டுக்கோப்பாக நிர்வகிப்பதிலே அண்ணாவின் பாராட்டையும், சென்னை மாநகர் தேர்தலில் வெற்றி பெற்றதற்குத் தங்க மோதிரத்தையும் பெற்றவர். அந்த திறமையே மூத்த தலைவர் நெடுஞ்செழியனையும் ஒதுக்கி, இவரை பதவியில் ஏற்றியது.

யாருமே பதவிக்கு வரும்போது அற்புதமான கனவுகளுடனும் நல்ல எண்ணங்களுடனும்தான் வருகிறார்கள். ஆனால் காலப் போக்கில் பலர் சூழ்நிலைக்கு ஈடு கொடுக்கிறார்கள். அதிலேயே காலம் கழிந்து விடுகிறது. சிலர் சூழ்நிலைக்கு மேல் உயர்கின்றனர். கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் பதவி ஏற்றபோது அரசியல் வேறு திசையில் செல்லத் துவங்கியது. ஆனாலும் அண்ணா ஓராண்டே பதவியில் இருந்ததால் கலைஞரிடம், மக்களுக்கும் படித்தவர்களுக்கும், இருந்த தி.மு.க. எதிர்பார்ப்பு அதிகம்.

முதல்வர் மு. கருணாநிதி அமெரிக்க நாட்டின் அழைப்பின் பேரில் அமெரிக்கா வருகிறார் என்ற செய்தியைப் படித்தேன். அண்ணா வரும்போது சில முன்னேற்பாடுகளைச் செய்து கொண்டு வந்திருந்தால் மிக முக்கிய செனட்டர்களை (பாராளுமன்ற உறுப்பினர்களை) பார்த்திருக்க முடியும்; பல விஷயங்கள் தமிழ் நாட்டிற்கு உபயோகமாக இருந்திருக்கும் என்று எண்ணியவன் நான்.

எனவே அவருக்கு இது பற்றி ஒரு விரிவான கடிதம் எழுதினேன். கலைஞர் மு.க.வை அப்போது அதிகம் அறிந்தவனல்ல நான். அண்ணாவுக்கு அடுத்து உள்ள

இளந்தலைமுறைகளில் உள்ள ஒருவர் என்பது தெரியும்; நன்றாக பேசக் கூடியவர் என்பது தெரியும். திருவாரூரி லிருந்து அவர் பிரசுரித்துக் கொண்டிருந்த முரசொலியை அவர் எழுத்தின் நடைக்காகவே படித்தவன். அண்ணா வின் 'திராவிட நாடு,' பெரியாரின் 'விடுதலை', கலைஞரின் 'முரசொலி', நாவலரின் 'மன்றம்', 'போர்வாள்' - இப்படிப்பல பத்திரிகைகளையும் வாங்கி வருபவர் எனது பால்ய நண்பர் விளநகர் கணேசன். அவர் பலமுறை தி.மு.க சட்டமன்ற உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். நாங்கள் அனைவரும் தி.மு.க.வின் கொள்கைகளிலே ஈடுபாடு கொண்டவர்கள். தூத்துக்குடியில் நடந்த மிகப் பெரிய தி.மு.க மாநாட்டிற்கு விளநகர் கணேசன் போய் வந்தார். அதை விட ஏறத்தாழ ஒன்றரை ஆண்டு முரசொலி காரியாலயத்திலேயே தங்கி கலைஞர் மு.க.வுடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர். எங்கள் நண்பர் கூட்டம் தி.மு.கவிடமிருந்து பிரமாதமாக எதிர்பார்த்தது.

அமெரிக்க ஜனாதிபதி ஜான் கென்னடி சொன்னார். "வெளியிலிருந்து பார்ப்பது வேறு; உள்ளே போனதும் நிலவும் நிலைமை வேறு, என்பதை உள்ளே போனவுடன்தான் நான் உணர்ந்து கொண்டேன்" என்று.

கலைஞரின் பேச்சை ஒரு முறை நான் வைத்தீஸ் வரன் கோயிலில் கேட்டிருக்கிறேன். இளமைக்கே உரிய வேகமும், சப்தமும் அதிகம். அவர் அமெரிக்கா வந்தபோது அவர் வைத்தீஸ்வரன் கோவிலில் பேசியதை நினைவு படுத்தினேன். அவர் உடனே அன்று "மழை பெய்தது நினைவிருக்கிறதா?" என்று கேட்டார். நான் உண்மையிலேயே அவர் ஞாபக சக்தியைக் கண்டு அதிசயித்துப் போனேன்.

"திராவிட நாடு - தனி நாடு - ஒருநாள் வருவதாகவும் அப்போது ஹிந்து, விகடன், கல்கி போன்றவை எல்லாம் ஆண்டு மலர் வெளியிடுவார்கள்" என்று அவர்களது முரசொலி பொங்கல் மலரில் கார்ட்டூன் போட்டிருந்தார்கள். தனித் 'தமிழ்நாடு சாத்தியமல்ல' என்று புரிந்து கொள்ள எனக்கும் மிகுந்த காலம் தேவைப்பட்டது.

கலைஞர் கவிதை நடையிலே எழுதுவார் முரசொலியில். "காவிரி நதிக் கரையில் விளையாடினான்; கங்கை நதிக் கரையில் புகழ்பாடினன்" என்று. அவர் ஒரு அருமையான இலக்கிய கர்த்தா. அவர் வசனம்தான் ஒரு காலத்தில் சினிமாவில் எடுபட்டது. சினிமாவே வசனத்தை நம்பி ஓடியது.

அண்ணா அமெரிக்கா வந்தபோது ஐக்கிய நாடுகள் சபையின் நிரந்தர இந்திய பிரதி நிதியாக திரு ஜி. பார்த்தசாரதி இருந்தார். அவருக்கு அண்ணாமீது அளவு கடந்த மரியாதை. 'கண்ணியம்' என்ற வார்த்தைக்கு ஓர்உருவம் கொடுத்தால் அது அண்ணாவாகத்தான் இருக்கும். அப்படிப்பட்ட கண்ணியம் அவருடன் பழகும்போதும் பேசும்போதும் பிரதிபலிக்கும். எனவே ஜி.பி. நியூயார்க்கில் இருந்த இந்திய ஹாலில் மிகப் பெரிய சந்திப்புக்கு - அண்ணாவை இந்திய மக்கள் சந்திப்பதற்கு ஏற்பாடு செய்திருந்தார். இப்படியெல்லாம் அவர் ஏற்பாடு செய்ய வேண்டியதில்லை. எனினும் அவர் அண்ணா மீது கொண்டிருந்த மதிப்பு அவரை அதைச் செய்யச் செய்தது.

ஜி.பி. அவர்களுடன் பேசிக்கொண்டிருந்த போது "நீங்கள் ஏன் தமிழ் நாட்டுக்கு வந்து நல்ல காரியங்களைச் செய்யக்கூடாது?" என்று கேட்டேன். அவர் சொன்னார்: "இன்னும் இரண்டாண்டுகளில் என் பதவி இங்கே முடிகிறது. நான் தமிழ்நாட்டுக்கு வருவதாக இருக்கிறேன். பல்கலைக் கழக பொறுப்பை எடுத்துக் கொள்வதாக இருக்கிறேன். அண்ணா என்னுடன் பேசினார். அப்போது நிறைய செய்யலாம்" என்றார் மலர்ந்த முகத்துடன்.

சுருட்டையான தலை மயிர்; நெடிய உருவம்; கம்பீரமான தோற்றம்; புன்னகையுடன் கூடிய முகம். "எப்போது வேண்டுமானாலும் என் வீட்டுக்கு வாருங்கள். என் வீட்டு டெலிபோன் நம்பரைத் தருகிறேன்" என்றார் ஜி.பி.

அண்ணா காலமானபின், நான் ஜி.பியைச் சந்தித்தேன். "ஏன் வரவில்லையா?" என்று கேட்டேன். "அண்ணாவுடன் கொண்டிருந்த நட்பு வேறு!" என்று சொல்லி விஷயத்தை முடித்து விட்டார்.

முதல்வர் மு. கருணாநிதி அமெரிக்கா வருகிறார் என்று அறிந்தபோது நான் மகிழ்ந்தேன். டெல்லியில் உள்ள அமெரிக்க தூதுவரகத்தில் என்னென்ன ஏற்பாடு களைச் செய்து கொண்டு வந்தால் நல்லது, என்பது பற்றி எழுதி இருந்தேன்.

ஜான் ஹாப்கின்ஸ் மருத்துவமனையில் கலைஞருக்கு கண்சிகிச்சை முடிந்தவுடன், நியூயார்க் வால்டார்ப் ஆஸ்டோரியா ஹோட்டலில் தங்கியிருப்பா ரென்றும் சந்திக்க அங்கு வருமாறும் திரு. மாறன் கூப்பிட்டுச் சொன்னார். வால்டார்ப் ஆஸ்டோரியா. ஒரு புகழ் பெற்ற ஹோட்டல். நேரு தங்கியிருந்த ஹோட்டல். நேருவும் ஐசன்ஹோவரும் சந்தித்த இடம்.

நான் அங்கே மூன்று நாட்கள் தங்கி இருந்தேன். கலைஞர் என்னைப் பார்த்ததில்லை; நானும் அவரை இதுவரை தனியாக சந்தித்ததில்லை. அங்கு அன்று தமிழர்களிடையே அவர் பேசியபோது திரளான கூட்டம். நான் முதல் வரிசையில் அமர்ந்திருந்தேன்.

முதல்வருடன் மூன்று பேர் வந்திருந்தார்கள். அன்றைய நிதித்துறை செயலர் வெங்கட்ரமணன், மாறன் எம்.பி, டாக்டர் வெங்கடசாமி (கண் மருத்துவர்). என்னை முதல்வருக்கு அறிமுகப்படுத்தி வைத்தார் வெங்கட் ரமணன்.

வால்டாப் ஆஸ்டோரியாவில் மறுநாள் மதியம் விருந்தளித்தேன். அப்போது அமெரிக்காவின் தலைசிறந்த இரு கல்வியாளர்களையும் விருந்துக்கு அழைத்து முதல்வரை சந்திக்க ஏற்பாடு செய்திருந்தேன். கல்வி யாளனாக இருந்த எனக்கு, நமது ஊர் கல்வித்திட்டம் மாற்றப் பட வேண்டுமென்பதில் பெரும் அக்கறை.

பேச்சு ஆங்கிலத்தில் இருந்தாலும் அதை மொழி பெயர்ப்பில் புரிந்து கொண்ட கலைஞர், மிகத் துல்லியமாக, ஆழமான கேள்விகளை அவர்களிடம் கேட்டுக் கொண்டிருந்தது என்னை வியப்பில் ஆழ்த்தியது. இதை இன்னும் என்னால் மறக்க முடியவில்லை. அன்றிரவே அவர் அறையில் நாவலர் நெடுஞ்செழியன் (அன்றைய கல்வி அமைச்சர்) அவர்களைக் கூப்பிட்டு

இப்படி ஒரு கல்வி மாற்றத்திற்கான குழு இங்கிருந்து வர இருக்கிறது என்பதைத் தெரிவித்தார்.

இன்றும்கூட, சிலமாதங்களுக்கு முன் ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் உள்ள பொருளாதாரப் பேராசிரியர்களை அழைத்து தமிழ் நாட்டிற்கான நல்ல யோசனைகளைத் தெரிவிக்குமாறு அழைத்திருக்கிறார் என்பதை செய்தித் தாளில் படித்தேன். அதாவது நல்லது செய்வதில் அவருக்கு ஆர்வம் இருந்தது பற்றி யாருக்கும் ஆட்சேபம் இருக்க முடியாது.

"பங்களாதேஷ் போரின் காரணமாக அமெரிக்க இந்திய உறவு பாதிக்கப்பட்டதால் அக் கல்வித் திட்டத்தை நிறைவேற்ற இப்போது முடியாது" என்று என்னைக் கூப்பிட்டுச் சொன்னார், தஞ்சாவூரிலிருந்து நிதித்துறை காரியதரிசி வெங்கட்ரமணன்.

ஒரு தலைவனுடைய வாழ்க்கை எல்லோரும் பார்க்கக் கூடிய ஒரு திறந்த புத்தகம். அதில் தனி மனித வாழ்க்கை, குடும்பப் பிரச்னை, சகாக்களது நம்பகத் தன்மை, கட்சி அமைப்பு, எதிர்க்கட்சிகளின் சவால்கள், நாட்டின் பிரச்னைகள் என்று பலவும் இருக்கின்றன. எந்தத் தலைவரைப் பார்த்தாலும் சமீப காலங்களில் பதவியைத் தக்க வைத்துக் கொள்வதிலேயே - தங்களுடைய 'இமேஜை' நிலை நிறுத்திக் கொள்வதிலேயே - பெருமளவு நேரம் போய் விடுவதைப் பார்க்கிறோம்..

எனவே அவர்கள் வாழ்வில் குறைகளும் நிறைகளும் உண்டு. ஒருவர் பதவியிலிருக்கிறார் என்பதற்காக அவருக்கு ராஜ ராஜ சோழன் விருது அளிக்கப்படுகிற காலமும் கூட்டமும் உண்டு. அவர் பதவியிலிருந்தால் நாம் ஜெயிலுக்குப் போக வேண்டியிருக்கும். எனவே எப்படியாவது அவர் ஆட்சியைக் கலைக்க வேண்டும் என்பதை மட்டுமே ஜனநாயக லட்சியமாக வைத்துச் செயல்படும் எதிர்க்கட்சிகள் இருக்கும் கால கட்டமும் உண்டு. இதுதான் நமது நாடு.

முதல்வர் மு.க அவர்களின் குறை நிறைகளை எல்லாம் சீர் தூக்கிப் பார்த்து, இன்றைய கால கட்டத்தில் வாழ்பவர்கள் சரியாக எழுதிட முடியாது. இந்த கால

கட்டம் கடந்த பின்தான் ஒரு சரித்திராசிரியன் எல்லாவற்றையும் பின்னோக்கிப் பார்த்து பாரபட்ச மில்லாமல் தீர்ப்பைக் கூற முடியும்.

எம்.ஜி.ஆர் பதவியிலிருந்தது, எப்படி கலைஞர் மு.க.வை 'வனவாச'த்தில் பல ஆண்டுகள் அப்புறப்படுத்தி வைத்திருந்ததோ, அதேபோல அவரது இன்றைய தேர்தல் வெற்றிக்கு என்ன காரணம் என்று கலைஞரை நிருபர்கள் கேட்டபோது ஒரே வார்த்தையில் பதில் சொன்னார் "ஜெயலலிதா!" என்று. இதிலிருந்தே பல விஷயங்களைப் புரிந்து கொள்ளலாம்.

ஒரு சமயம் அமெரிக்காவுக்கு திரும்பும்போது நான் கலைஞரைச் சந்திக்க கோட்டையிலுள்ள சட்டமன்றத் தலைமையகம் சென்றேன். சட்டமன்றம் நடந்து கொண்டிருந்தது. கலைஞர் நேரம் எடுத்துக் கொண்டு வந்து என்னை அவருடைய தனி அறைக்கு அழைத்துச் சென்றார். அப்போது நியமிக்கப்பட்டிருந்த பல்கலைக் கழக துணை வேந்தர்களின் தரத்தைப் பற்றியும் இதனால் நமது எதிர்கால சந்ததிகள் அல்லவா பாதிக்கப் படுவார்கள் என்றும் நான் கூறினேன். கலைஞர் மனம் விட்டுப் பேசி தமக்கேற்பட்ட நிர்ப்பந்தங்களைச் சொன்னார். "எவ்வளவு சீக்கிரம் அவர்களை நீக்க முடியுமோ அதைச் செய்யுங்களேன்..." என்றேன் நான். "அதெப்படி முடியும்? இன்னும் இரண்டாண்டு காலம் அவர்களுக்குப் பதவி இருக்கிறதே?"

"இப்போதுதான் "முடியாது" என்று சொல்கிற கருணாநிதி அவர்களைப் பார்க்கிறேன்" என்று நான் சொன்னபோது அவர் சிரித்தார்; பதில் பேசவில்லை. அது அவர் மனத்தை உறுத்தி இருக்க வேண்டும். விஷயம் அத்துடன் முடியவில்லை. அடுத்த வாய்ப்பு வந்தபோது சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு யுனெஸ்கோவிலிருந்த டாக்டர் மால்கம் ஆதிசேஷயாவையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு உலகப் புகழ் பெற்ற டாக்டர் சந்திரசேகரையும் நியமித்திருந்தார். நான் பல தலைவர் களுடனும் பழகி இருக்கிறேன். கலைஞர் நன்கு விஷயம் தெரிந்தவர்; திறமைசாலி, நிர்வாகத்திற்கு வேண்டிய கண்டிப்பு மிகுந்தவர், பேச்சுத் திறன் மிக்கவர்.

நிஜமில்லாததையும் நிஜமென்று நம்ப வைக்கக் கூடியது அவர் பேச்சு. தோற்றால்கூட "நாங்கள் எங்கே தோற்றோம்? தம்பி புள்ளி விவரத்தைப் பார்த்தாயா?" என்பார்.

அப்போது எம்.ஜி.ஆர் முதல்வராக பதவியில் இருந்தார். கலைஞர் எதிர்க்கட்சித் தலைவராக இருந்தார். அப்போது இலங்கைப் பிரச்னை தமிழகத்தில் தொய்வு நிலையில் இருந்தது. சில மாதங்களுக்கு முன்பு தான் சபாரத்தினம் கொல்லப்பட்டார். அதில் கலைஞருக்கு மிகவும் அதிர்ச்சி. எம்.ஜி.ஆருக்கோ - விடுதலைப்புலிகள், அவர் கொடுத்த பணத்தையும் வாங்கிக் கொண்டார்கள், அதேசமயம் கலைஞர் திரட்டிக் கொடுத்த பணத்தையும் பெற்றுக் கொண்டார்கள் என்பதில் விடுதலைப் புலிகள் மீது அதிருப்தி.

அப்போது இலங்கைத் தமிழர் தலைவர்களான அமிர்தலிங்கமும், சிவ சிதம்பரமும் முதல்வர் எம்.ஜி.ஆரின் விருந்தினராகச் சென்னையில் குடி இருந்தனர்.

இந்த நிலையில் இலங்கையில் தமிழர் படுகொலை அநியாயமாக நடந்து கொண்டிருந்தது. கேட்பாரில்லை. டாக்டர் இரா. ஜனார்த்தனம், அமிர்தலிங்கம், சிவசிதம்பரம் இருவரையும் அழைத்துக் கொண்டு நான் தங்கி இருந்த இடத்திற்கு வந்து விஷயத்தை விளக்கினார். எம்.ஜி.ஆரிடம் சொல்லுங்கள் என்றார்கள்.

எம்.ஜி.ஆரோ எனது நெருங்கிய நண்பர். எனினும் நான் அவரிடம் சொல்லவில்லை. கலைஞரை அவருடைய தேனாம்பேட்டை அலுவலக மாடியில் தனியே சந்தித்தேன். சிரித்துக்கொண்டே அவர் கேட்ட முதல் கேள்வி: "எம்.ஜி.ஆர்தான் உங்கள் நண்பராயிற்றே. ஏன் அங்கே போகவில்லை?"

"அங்கே நான் ஏன் போகவில்லை என்பது இங்கே வந்திருப்பதிலிருந்தே தெரிந்திருக்குமே. நீங்கள் ஏதாவது இலங்கை மக்களுக்குச் சாதகமாக அறிக்கை விட்டால் தான் அவர் நகர்வார்; அவரும் இதில் அக்கறை காட்டுவார்" என்று விவரமாகச் சொன்னேன். யாரைப் பற்றியாவது ஒரு அபிப்ராயம் எம்.ஜி.ஆர் மனதில் விழுந்து

விட்டால் நாம் சொல்லி அவரை மாற்றுவது சுலபமல்ல. ஆனால் கலைஞர் அறிக்கை விடுவாரானால் உடனே அவரும் இறங்குவார். ஏனெனில் அந்த கால கட்டம், கதாநாயகனுக்கும் வில்லனுக்கும் நடந்த போராட்ட மாகவே கழிந்தது. ஏனெனில் இருவருமே சினிமாவில் வளர்ந்தவர்கள். இது என் கணிப்பு.

நான் எம்.ஜி.ஆரின் நண்பராக இருந்தபோதிலும் நான் கலைஞரைப் போய்ப் பார்க்கத் தயங்கவில்லை; அவரும் என்னுடன் இனிமையாகப் பேசத் தயங்க வில்லை. திறந்த மனத்துடன் விஷயத்தை அணுகினார். "நான் உங்களுக்குத் திங்கட்கிழமை பதில் சொல்கிறேன்" என்றார். நான் அவரைப் பார்க்கச் சென்றது வெள்ளிக் கிழமை.

திங்களன்று, நான் அவரை முன்பு போல் தனியாகத்தான் சந்திப்பேன் என்று எண்ணிச் சென்ற எனக்கு காத்திருந்தது அதிர்ச்சி. அங்கே அரங்கண்ணல், பேராசிரியர் அன்பழகன் வைகோ மற்றும் ஒரு பத்துப் பேர் - தீவிர தி.மு.க. கட்சிக்காரர்கள். அங்கே அமர்ந்திருந்தார்கள். அவரது முடிவை எதிர்பார்த்துச் சென்ற என்னைப் பார்த்து "அவர்களது கேள்விகளுக் கெல்லாம் பதில் சொல்லுங்கள்" என்று சொல்லி விட்டார் கலைஞர்.

இது நான் எதிர்பாராத ஒன்று. எனினும் பதில் சொன்னேன். விளைவு? மறுநாளே அவர் சொன்னது போல ஒரு அறிக்கை விட்டார். பின்பு வழக்கம் போல இலங்கைப் பிரச்னையில் எல்லாத் தரப்பு தலைவர்களும் அக்கறை கொண்டார்கள். அமிர்தலிங்கம் அவர்களுக்கும் சிவசிதம்பரம் அவர்களுக்கும் இதில் மிகுந்த திருப்தி. முக்கியமான இலங்கைப் பிரச்னையை விட்டுக் கொடுக்காமல், தமிழர்களின் உரிமைக்காக அவர் அன்று இறங்கினார். அதனால் அன்று ஒரு திருப்பம் ஏற்பட்டது உண்மை.

40

# எம்.ஜி.ஆர் என்ற பண்பாளர்!

"எம்.ஜி.ஆரின் அமெரிக்க விஜயத்திற்கு ஏற்பாடு செய்ய முடியுமா? அவரை அமெரிக்கப் பல்கலைக் கழகங்கள் அழைக்குமானால் நல்லது" என்று மணியன் எனக்குக் கடிதம் எழுதியிருந்தார். முன்னதாக நான் சில அமெரிக்கப் பேராசிரியர்களுடன் தமிழ்நாடு வந்தபோது ஒரே ஒருமுறை எம்.ஜி.ஆரைச் சந்தித்திருக்கிறேன். எம்.ஜி.ஆர் எங்களுக்காகப் போட்டுக் காட்டிய சினிமாக் காட்சியின்போது (நினைத்ததை முடிப்பவன்) அவரை சந்தித்ததற்குப் பின் இப்போதுதான் நானும் மணியனும் எம்.ஜி.ஆரைப் பற்றிப் பேசுகிறோம்.

நான் இதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளவில்லை. எனக்கு இதில் விருப்பமில்லை. எனவே நான் மணியனுக்கு உடனே பதிலளிக்கவில்லை.

எனது அக்கறையின்மைக்குக் காரணம் அவரது ரசிகர் மன்றங்கள்.

இப்படி ரசிகர் மன்றங்களை உருவாக்குவது தமிழ்நாட்டின் அறிவு வளர்ச்சிக்கும் தொழில் வளர்ச்சிக்கும் முன்னோடியாக இருக்காது என்பது என் அபிப்பிராயம். இதனால் நாடு திசை திரும்பி எங்கோ போய்க் கொண்டிருப்பதாக எண்ணினேன். இது தமிழ்நாட்டில் வழிபாட்டு மனோபாவத்தை அல்லவா உருவாக்கும் என்ற அதிருப்தி என்னுள் இருந்தது.

ஆனால் எனது அமெரிக்கப் பல்கலைக் கழகப் பேராசிரிய நண்பர்களுடன் எம்.ஜி.ஆர் பற்றிப் பேசியபோது, அவர்கள் காட்டிய ஆர்வம் - அவர்கள் இது விஷயமாக மற்றவர்களுடன் தொடர்பு கொண்டது

- என்னை மறுபடியும் இதைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டின.

யோசித்தேன். எனக்குப் பிடிக்கிறதோ இல்லையோ, மனிதர் நிச்சயமாய்ப் பதவிக்கு வரப் போகிறார். பதவிக்கு வந்த பிறகு 'நான் உங்களை அங்கீகரிக்கப்போவதில்லை' என்று சொன்னால், எனக்காக உலகமா தலை கீழாகப் போய்விடும்? போகப் போவதில்லை!.... 'உலக யதார்த்தத்தை ஏற்றுக் கொள். ஏற்று அதற்குள் புகுந்து, ஏதாவது நன்மை செய்ய முடியுமா பார்!' என்று என் உள்ளுணர்வு அறிவுரை கூறிற்று.

'ஒரு தத்துவஞானி உலகை ஆள வேண்டு'மென்று சொன்னார் சாக்ரடீஸ், நம் நாட்டில் தத்துவமேதை டாக்டர் ராதா கிருஷ்ணனை ஜனாதிபதி பதவிக்குத் தேர்ந்தெடுத்தார்கள் நேருவின் காலத்தில். உலகமே பாராட்டியது. இன்று நம் நாடு எங்கே போகிறது?

நம் நாட்டின் வழிபாட்டு மனோபாவம், மிக மோசமாகப் போய்க் கொண்டிருந்தது. டாக்டர் பட்டம், அடை மொழிகள், லாரியில் வரும் கூலிக் கூட்டம் ஓட்டுக்காக ஏழைகளுக்கு கொடுக்கும் 'பொங்கல்' இனாம்கள் என்று நாம் வெகுவாக முன்னேறி விட்டோம். இவை எல்லாம் ஊரை ஏமாற்றுகிற வேலை என்பது என் அபிப்பிராயம்.

"சினிமாவின் மூலம்" என்ற புதிய தலைமுறையைத் துவக்கிய மனிதர் எம்.ஜி.ஆர். அவரை நான் சென்னையில் வாகினி தியேட்டரில் சந்திக்கச்சென்ற போது, சற்றுக் காலதாமதமாகி விட்டது.

"எம்.ஜி.ஆர் இருப்பாரா? நாழியாகி விட்டது! போய் விடுவாரா?" என்ற மணியனது தவிப்பு எனக்கு எம்.ஜி.ஆரின் முக்கியத்துவத்தை உணர்த்தியது. எம்.ஜி.ஆர் எங்களுக்காகக் காத்திருந்தார். உள்ளே பெரிய கூட்டம்! அவரது மனைவி ஜானகி, அமைச்சர் ராஜாராம் என்று பல வி.ஐ.பிக்கள், தியேட்டரில்.

படம் ஓடிக் கொண்டிருந்தது. நான் அவர் அருகில் அமர்ந்து சினிமாவையும் அவரையும் பார்த்துக் கொண்டிருந்தேன். "இவர்தானா திரையிலே நடிப்பவர்?"

என்று என்னால் நம்பவே முடியவில்லை. அவ்வளவு இளமையாகத் தோன்றினர் சினிமாவில். சினிமா விமரிசனத் துறையில் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த அமெரிக்கப் பேராசிரியர் சொன்னார்: "எம்.ஜி.ஆர். சினிமா மீடியத்தை உணர்ந்து நடிக்கிறார். உங்கள் ஊர்ப் படங்களில் நிறைய நாடகத்தன்மையைப் பார்க்கிறேன்".

இடைவேளை வந்தது. எல்லோருக்கும் காபி, டிபன் கொண்டு வரப்பட்டது. எம்.ஜி.ஆர் எங்கோ கையைக் காட்டிக் கொண்டிருந்தார். கவனித்தேன். நான்காவது வரிசையில் உட்கார்ந்திருந்த யாரோ ஒரு மனிதரைச் சுட்டிக்காட்டி "ராமசாமிக்குக் காப்பி பிடிக்காதே. அவருக்குப் பால் கொடுத்தீர்களா?" என்று கேட்டார். அவரது கரிசனம், மனிதாபிமானம் இன்றும் என்னுள் நிற்கிறது.

அடுத்த முறை வந்தபோது அவர் வீட்டிற்குப் போயிருந்தேன். என் மூத்த மகன் சித்தார்த்தன், "வீட்டில் 'நீங்களும் அவரும் உள்ள ஒரு போட்டோ கூட இல்லை; இந்த தடவை எடுத்து வாருங்கள்' என்று சொல்லி அனுப்பினான். எனவே காமிராவுடன் போயிருந்தேன்.

"உங்களைத் தனியாக ஒன்று எடுத்துக் கொள்கிறேன் முதலில்" என்று சொல்லிவிட்டு, காமிராவை இயக்கினேன். அந்த காமிரா இயங்க மறுத்தது. அதை, இதை என்று எல்லாவற்றையும் தொட்டுப்பார்த்து அழுத்தினேன். ஒன்றும் நடக்கவில்லை! எனக்கே வெட்கமாய்ப் போய் விட்டது. ஆகவே சற்றுப் பின் வாங்கி நின்று கொண்டு 'கிளிக்' செய்வதைப்போல் பாவனை செய்து விட்டு அவரிடமிருந்து விடை பெற்றுக் கொள்ளத் துவங்கினேன்.

"இங்கே அந்த காமிராவைக் கொடுங்கள்!" என்றார். அதன் பின் சுமார் அரைமணி நேரம் என்னென்னவோ செய்தார். பின் என்னிடம் கொடுத்து "எடுங்கள்" என்றார். நான் எடுத்த மறக்க முடியாத படம் அது!

ஒருமுறை அவரை சத்யா ஸ்டுடியோவில் மேக் அப் அறையில் சந்தித்தேன். 'மேக் அப்' நடந்து கொண்டிருந்தது. என்னுடன் சகஜமாகப் பேசிக்கொண்டிருந்தார்.

அவருடைய காரிய தரிசி அவரிடம் அனுமதி கேட்டபின், ஒரு பெண்ணும் நடுத்தர வயதுடைய மனிதரும் உள்ளே நுழைந்தார்கள். ஏதோ பேசிக்கொண்டார்கள். அந்தப் பெண்ணை மேக்கப் ரூமிலேயே நாட்டியமாடச் சொன்னார் எம்.ஜி.ஆர். அந்தப் பெண்ணினுடைய நாட்டியம் பற்றி தொழில்நுட்பம் அறிந்தவராக விமர்சித்துக் கொண்டிருந்தார். நான் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தேன்.

தன் இமேஜைப் பற்றி மிகவும் அக்கறையாக இருந்தார். மிக முக்கியமாக, மக்களுக்கு எது பிடிக்கும் என்னும் விஷயத்தில் மக்களின் நாடியை நன்கு கணித்து வைத்திருந்தார். எனவே அனேகமாக அவரது எல்லாப் படங்களும் வெற்றிப் படங்களாகவே அமைந்தன. பொது மக்களின் ருசி பற்றிய அவரது துல்லியமான கணிப்புதான், அவரது சினிமா வெற்றிகளுக்கும், அரசியல் வெற்றிகளுக்கும் காரணம். படத்தில் தலைப்புகளைக் கொடுப்பதில் கூட அவரது வெற்றி மனோ பாவத்தைக் காட்டும் மனவியல் தத்துவம் பளிச்சிட்டது. நினைத்ததை முடிப்பவன், நாடோடி மன்னன், உலகம் சுற்றும் வாலிபன், மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன் என்ற ரீதியில் உள் அர்த்தமுள்ள தலைப்புகள். படத்தில் வரும் கதாநாயகனும் யோக்கியமானவனாக, உழைப்பவனாக, நியாயத்திற்குப் போராடுபவனாக, சண்டைகளில் ஜெயிப்பவனாக, நிராதரவான தங்கைக்கோ, ஒரு பெண்ணுக்காகவோ போராடி வெற்றி பெறுபவனாக சித்திரிப்பார்.

அதேபோல நல்ல 'கேரக்டர்'ராகத் தன் வாழ்விலும் வாழ்ந்தார். பீடி, சுருட்டு, சிகரெட் குடிக்க மாட்டார். மது அருந்தமாட்டார். நிறைய தான தருமங்கள் செய்வார். ஏழைகளுக்கு உதவுவார். இவை சேர்ந்து அவரை ஓர் உயர்ந்த மனிதர் என்ற நம்பிக்கையை மக்கள் மனத்தில் உருவாக்கியிருந்தது.

அவருடன் நெருங்கிப் பழகிய பல நண்பர்கள் கூறி இருக்கிறார்கள். "அவர் மனிதரை நேசித்தார். யாராவது அவர் வீட்டுக்குள் நுழைந்து விட்டால் அவரது அன்பு மழையில், உபசரிப்பில் நனைந்து அவரது பரம பக்தராகத்தான் வெளிவருவார்" என்பார்கள்.

ஒரு சமயம் காரில் போகும்போது மணியன் "வள்ளல் குணம், பிள்ளை மனம்" என்று வரும் பாடலை மெல்லிய குரலில் பாடிக் கொண்டு வந்தார். மணியன் விட்ட இடத்திலிருந்து எடுத்துக்கொண்டு "வள்ளல் குணம், கள்ள மனம் யாரோ" என்று பாடினார், எம்.ஜி.ஆர். எல்லோரும் சிரித்தோம்.

நான் அவரிடமிருந்து எதையும் எதிர்பார்க்க வில்லை; எதையும் வாங்கிக்கொள்ளத் தயாராயில்லை. "அப்படியிருந்த மனிதர் இவர் ஒருவர்தான்" என்று வித்வான் லட்சுமணன் என்னைப் பற்றி அறிமுகம் செய்வார்.

எம்.ஜி.ஆர். பதவி ஏற்ற புதிதில், ஒரு பல்கலைக் கழகத் துணை வேந்தர் பதவி காலியாகியது. நான் அமெரிக்காவிலிருந்து இவருடைய பதவி ஏற்பு வைபவத்திற்காகச் சொந்தச் செலவில் வந்திருந்தேன். இவரிடமிருந்து ஒரு நண்பர் வந்தார், நான் தங்கி இருந்த இடத்திற்கு.

"அந்தப் பதவியை எடுத்துக் கொள்ள உங்களுக்கு இஷ்டமா? தலைவர் விரும்புகிறார்" என்று கேட்டு.

"எனக்கு அமெரிக்காவில் கல்லூரியில் பேராசிரியர் வேலை இருக்கிறது. தவிர இந்த வேலை கொடுக்கும் மூவாயிரம் ரூபாய் சம்பளத்தில் இங்கிருந்து கொண்டு என் குழந்தைகளைக் கல்லூரியில் படிக்க வைக்க முடியாது. நன்றி" என்றேன். "உங்களை கௌரவிப்பது எப்படி என்று எங்களுக்குத் தெரியும்!" என்று சொல்லிவிட்டுப் போனார் அவர்.

அதேபோல இரண்டாவது முறை தேர்தல் நடந்தபோது தேர்தலைப் பார்ப்பதற்காக வந்திருந்தேன். "அமைச்சராக்கி விடுவோம். விரும்பினால் நிற்கச் சொல்லுங்கள்" என்று சொல்லி அனுப்பினார். அப்போதும் நான் "வேண்டாம், நன்றி" என்றுதான் சொன்னேன்.

காரணம்: அவரிடம் பதவி ஏற்றால் அங்கே நட்பு முறை போய் விடும். அதைவிட என் சுதந்திரம் போய் விடும். இது என் குணத்திற்கு ஒத்து வராது.

ஔவையார் பாடுவார், "கொடிது கொடிது வறுமை கொடிது., அதனினும் கொடிது இளமையில் வறுமை" என்று. இளமையில் வறுமையோடு, நாடக நடிகராக, நிச்சயமில்லாத ஒரு துறையைத் தம் வாழ்க்கைத் துறையாக எடுத்துக் கொண்டவர் அவர். வேலை நிச்சயமில்லை. வேலை இருந்தாலும் வருமானம் நிச்சயமில்லை. கதாநாயகன் ரோலும் முக்கியத்துவமும் நிச்சயம் இல்லை. இப்படிப்பட்ட நிச்சயமற்ற நிலையில் வாழ்பவர்களது குணங்கள் பிற்காலத்தில் எப்படி இருக்கும் என்பதை எல்லாம் மனவியலில் சொல்கிறார்கள். அதில் ஒன்றைக் குறிப்பிட வேண்டுமானால் அவர் கையில் எப்போதும் தோலினால் ஆன ஒரு பெட்டி இருக்கும். ஒரு சமயம் நான் அருகில் இருந்தபோது திறந்தார். பெட்டி நிறைய உயர்ந்த தொகை நோட்டுக் கட்டுக்கள்! இது அவருக்குப் பாதுகாப்பையும் மனநிறைவையும் தந்ததென்று சொன்னார்கள். அவர் அதை அள்ளிக் கொடுத்த போதும் பார்த்துக் கொண்டிருந்தேன். நோட்டுக் கட்டுக்களாகத்தான் கொடுத்தார்; பிரித்து தனி நோட்டுக்களாக அல்ல!

மணியனின் வேண்டுகோளின்படி எம்.ஜி.ஆர் அமெரிக்கா வரவும் பல்கலைக்கழகங்களின் சிறப்பு விருந்தினராகப் பேசவும் என்னால் ஆனதைச் செய்தேன். ஒரு ஆறுமாத காலம் இதற்காக அமெரிக்கப் பல்கலைக் கழகங்களுக்கும் இந்தியாவுக்கும் எழுதி பாடுபட்டேன்.

எம்.ஜி.ஆரும் வந்தார். பல கூட்டங்களில் கலந்து கொண்டு சிறப்பாகப் பேசினார்.

அமெரிக்கப் பயணம் முடிந்து அவர் இந்தியா திரும்புமுன் கடைசி நகரமாக நியூயார்க்கில் தங்கி இருந்தோம். அவரது அமெரிக்க விஜயத்தை நான் எழுத வேண்டுமென்று மணியன் சொன்னார். நானோ எழுதத் தயாராயில்லை. மணியன் சொன்னார்:

"படித்தவர்கள் அவரை 'நடிகர் என்றுதான் பார்க்கிறார்கள். எனவே நீங்கள் எழுதினால்தான் நல்லது. ஏன் ஒரு நடிகர் நாட்டை ஆளக் கூடாதா? அவர் நல்லவர் இல்லையா?... நீங்கள் எழுதினால்தான் அது

படித்தவர்களை எட்டும். அவர்கள் அவரை ஏற்பார்கள். நீங்கள் அண்ணாவைப் பற்றி, கலைஞரைப் பற்றி எழுதி இருக்கிறீர்கள். எனவே நீங்கள்தான் இதையும் எழுத வேண்டும்'' என்றார்.

மணியனுக்காக, எழுதினேன். அந்த அறையில் கிடந்த கவர்களைப் பிரித்து அந்த தாளில் என் முதல் கட்டுரையை நியூயார்க்கில் எழுதிக் கொடுத்தேன். மணியன் அதை பத்திரப்படுத்திக் கொண்டார். என்னுடைய கட்டுரையின் துவக்கமே "நான் ஒரு சிவாஜி ரசிகன்'' என்றுதான் துவங்கும். அதுதான் உண்மை. ஆனால் அந்தக் கட்டுரைத் தொடரின் தலைப்பு: "பல்கலைக்கழகங்கள் அழைத்த பண்பாளர்'' அந்தத் தலைப்பு இருக்கிறதே. அதில் அந்த 'பண்பாளர்' என்ற வார்த்தை இருக்கிறதே. அதன் முழு உருவம்தான் எம்.ஜி.ஆர். இதுதான் என் நினைவில் இன்றும் தேங்கி நிற்கிறது.

நண்பர் மணியன் சில சமயம் அவரை விளக்க முடியாமல், அவர் ஒரு "பினாமினன்'' என்பார். அதாவது "இந்தக் கால கட்டத்தில் தோன்றிய ஒரு அற்புதம்'' என்ற அர்த்தத்தில்.

மனிதர்கள் போய் விடுகிறார்கள். அவர்கள் நம்மோடு இருந்த அனுபவங்கள் மட்டும், நம் நெஞ்சை நனைக்கின்றன.





41

## புகழ் மணக்கும் பேனா

---

நான் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தக் காலத்தில் என்னைப் பல பேர் 'கெட்டிக்காரன்' என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நான் கெட்டிக்காரனா என்பது எனக்குத் தெரியாது; நான் நானாக இருந்தேன். அவ்வளவுதான். எல்லோரும் என்னைப் போல்தான் இருக்கிறார்கள் என்கிற நினைப்பு வரும்.

என் அப்பாவின் நெருங்கிய நண்பர் ஒருவர் என்னைக் கேட்டார்.

"ஏய், படிச்சுட்டு என்னடா பண்ணப்போறே?"

என் தாய் சொன்னார்: "கலெக்டராகப் போகிறான்."

அப்போதெல்லாம், சுதந்திரம் வராத காலம் - கலெக்டர் உத்தியோகம்தான் மிகப் பெரிய உத்தியோகம். அப்பாவின் நண்பர் ஏகடியம் செய்தார்.

"வருவான் வருவான்... கலயம் கட்டுவான்." என்றார். எல்லோரும் சிரித்தார்கள்.

என் தாய் தந்த ஊக்கம், என் மீது வைத்திருந்த நம்பிக்கை, ஆசை இதற்கெல்லாம் ஈடே இல்லை. இவைதான் என் ஆசைகளுக்கும் முயற்சிகளுக்கும் உந்துகோலாய் இருந்தன.

நான் அப்போது ஆறாவது படித்துக்கொண் டிருந்தேன். அப்போது புதிதாக ஒரு பேனா வந்தது. 'எபர்ஹார்டு பேபர்' என்று பெயர். இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்டது. மிக அழகான பேனா. விலை ஒண்ணரை ரூபாய். அப்போது இட்லி விலை காலணா. கணக்கெழுதும் ஒரு குமாஸ்தாவினுடைய அன்றைய

சம்பளம் 30 ரூபாய். இதில் ஒன்னரை ரூபாய் விலை கொடுத்துப் பேனா வாங்குவதா? இப்படித்தான் என் பெற்றோர் சிந்தித்திருக்க வேண்டும்.

பேனா, அரக்கு போன்ற ஒரு பொருளால் செய்யப்பட்டிருந்தது. முத்துச் சிப்பியை ஒரு அசைவில் நோக்கினால் பளபளவென்று மின்னுமே, அதைப் போல் மின்னியது. ரோஸ் நிறம். கேட்டு ஒரு மாதமாகியது. ஒன்றும் நடக்கவில்லை. "இப்போது இவனுக்கெதற்கு இவ்வளவு விலையில்" என்று அவர்கள் எண்ணி இருக்கக்கூடும்.

நான் 'மக்கர்' செய்தேன்.

வீட்டிலே முக்கியமான பண்டிகை நாள். சாமி படத்து முன் இலை போட்டு சாதம் பரிமாறி, காத்திருக்கிறார்கள். நைவேத்யம் செய்து சூடம் கொளுத்திக் காட்ட வேண்டிய நேரம். என்னைத் தேடுகிறார்கள். நான் காணாமல் போய் விட்டேன்!

வீட்டிலே, தெருவிலே, என்று கடை ஆட்கள் பறந்தார்கள். ஆளைக் காணவில்லை. நானோ வீட்டின் சாமான் வைக்கும் அறையில் பானைகளுக்கிடையில் ஒளிந்து கொண்டிருந்தேன். கொஞ்ச நேரம் ஆயிற்று. என் தாயின் பரிதவிப்புக்குரல் கேட்டது! என்னால் அதற்கு மேலும் தாள முடியவில்லை. எழுந்து வெளியே வந்தேன்.

என் தாய் - அழாத குறைதான்.

"அங்கே போய் ஒளியலாமா? பூச்சி பொட்டு கடித்து விடுமே" என்றார்கள்.

"எனக்குப் பேனா வாங்கிக்கொடுக்க வில்லை. அதனால்தான்" என்றேன்.

மறுநாளே எனக்குப் பேனா கிடைத்து விட்டது!

ஒரு சமயம் என் தாய் கொடுத்த மதிய உணவை அப்படியே திரும்ப எடுத்து வந்து விட்டேன். பாத்திரத்தை விளக்கப் போட, டிபன் பாக்சைத் திறந்த என் தாய், கொடுத்த உணவு அப்படியே இருப்பதைப் பார்த்துப் பதறிப் போய்க் கேட்டார். "ஏன் சாப்பிடவில்லை?" என்று.

"நீ என்னுடன் சண்டை போட்டாயே. அதனால் தான்" என்றேன்.

"ஐயையோ! காலையிலிருந்து சாப்பிடாமல் பட்டினி கிடக்கிறாயா?" என்று தவித்துப் போய் விட்டார்.

எனக்கும் என் அண்ணனுக்கும் முன், நான்கு குழந்தைகளைப் பறி கொடுத்தவரல்லவா அவர்.

இப்படி என் உண்ணாவிரதங்களுக்குப் பலன் இருந்தது! பிடிவாதக்காரன் என்ற பெயர் எனக்கு நிலைத்தது.

குழந்தைகளிடம் சில பிடிவாதங்களை நாம் ஏற்றுக் கொள்ள முடியாது; உண்மைதான். எனினும் நியாயமான பிடிவாதங்களில் நாம் கொஞ்சம் விட்டுக் கொடுப்பது நல்லது. ஏனெனில் அதுதான், நாளடைவில், மன உறுதியாகி, வைராக்கியமாக மாறுகிறது. காரியங்களை சாதிக்கும் மன வலிமையைக் கொடுக்கிறது.

அன்று அப்படி வாங்கிய பேனாவை நான் ஆறாவது வகுப்பிலிருந்து 11வது வகுப்பு வரை வைத்திருந்தேன். மசிபோடத் திறந்து திறந்து திருகியதில் மரை கழன்று மசி கசிய ஆரம்பித்தபோதுதான் பேனா ஓய்வு பெற்றது!

**சி**ன்ன வயதிலிருந்து எனக்கென்னவோ ஒரு பேனா மோகம். இன்று எண்ணிப் பார்க்கிறேன், இதுதான் எழுத்தாளனாகும் சுய தர்மத்தின் – இயல்பான சுபாவத்தின் - வெளிப்பாடோ? புதிய டிசைனில் உள்ள உயர்ந்த பேனாக்களை வாங்குவதில் ஆசை. அதுவும் சொந்தக் கம்பெனி துவங்கிய பின் புதிய புதிய புத்தகங்களை லட்சியம் செய்யாமல் வாங்குவதும் புதிய பேனாக்களை வாங்குவதும் தண்ணீர் பட்ட பாடுதான்.

ஒரு சமயம் என் வழக்கறிஞர் நண்பர் அலுவலகத்தில் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண் டிருந்தேன்.

"என்ன பேனா அது?" என்றார் என் நண்பர்.

"புதிய மாண்ட்பிளாங்க்! பிரான்சில் வாங்கினேன். 92 டாலர்!"

அவர் தன் பையிலிருந்த பேனாவை எடுத்தார்.

''முத்து! இதோ பார்! இதுவும் மாண்ட் பிளாங்க்தான்! ஜெர்மனியில் வாங்கினேன். விலை என்ன என்று நினைக்கிறாய்?'' என்றார். எனக்குத் தெரியும், அதன் விலை 192 டாலர்.

அதன் பிறகு என் பேனா பற்றிப் பேசுவதில்லை; பேனாவை எழுத மட்டுமே வைத்துக் கொண்டேன்!

ஆனால் ஒரு எழுத்தாளனுக்கு பேனாவை விட உயரிய பொருள் உலகில் வேறு எது இருக்க முடியும்?

பதினைந்து ஆண்டுகளுக்கு முன் நான் இந்தியா வந்தபோது 'கல்கி' ஆசிரியர் திரு. ராஜேந்திரனைச் சந்தித்தபோது உங்கள் தந்தை கல்கி அவர்கள் விட்டுச் சென்ற பேனா ஏதாவதொன்று இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

"நான் அப்போது இளைஞன். எல்லாம் எங்கோ போய் விட்டது. யாரும் கவனம் செலுத்தவில்லை'' என்றார் ஆதங்கத்துடன்.

இவை அனைத்தும் எனது இயல்பான சுபாவம் தந்தது - (சுய தர்மம்) - என்று எடுத்துக் கொண்டால் என்னைச் சூழ்நிலையும் பல சம்பவங்களும் சுயதர்மத்திற்கு உதவி என்னை உருவாக்கின.

**பே**னாவுக்கு அடுத்தபடியாக என்னை மகிழ்விக்கும் விஷயம் நாதஸ்வரம். சிறந்த நாதஸ்வரக் கலைஞர்கள் அன்று தஞ்சையில் இருந்தார்கள். திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளை, திருவெண்காடு சுப்பிரமணிய பிள்ளை, திரு வீழிமழலை சகோதரர்கள், திருவிடை மருதூர் வீருசாமிப் பிள்ளை என்று பிரபல நாதஸ்வர வித்வான்கள்.

இவர்களுக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? வாழ்வில் எனக்குக் கலா ரசனையைக் கொடுத்ததே இவர்கள்தான். நாளை இவர்களைப் போல் ஆகும் தாகத்தில், நாதஸ்வரம் கற்றுக் கொள்ளும் கற்றுக் குட்டிகளின் நாதஸ்வர இசையும், கற்றுக் கொடுப்பவரின் இசையும்தான் எனக்கு பூபாளம் பாடி என்னைத் தினமும் எழுப்பி விடும்.

எங்கள் ஊரில் இசை வேளாளர் தெரு என்று பெரிய தெருவே இருந்தது. அங்கிருந்த என்னொத்த வயதினர், அனைவருமே நண்பர்கள்.

பேராசிரியர் கல்கியின் இசை விமர்சனங்களை எல்லாம் விடாது படித்தவன் நான். எனவே எனக்கு டைகர் வரதாச்சாரியிலிருந்து திருப்பாம்பரம் சுவாமிநாத பிள்ளை வரை தெரியும், - சின்ன வயதிலேயே.

நாதஸ்வர சக்ரவர்த்தி திருவாவடுதுறை டி.என். ராஜரத்தினம் பிள்ளை என்னை மிகவும் கவர்ந்தவர். வருங்கால தமிழ்ச் சமுதாயமே அவரைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும். அப்படியொரு மனிதர் அவர்: மாமேதை!

இரவு மணி இரண்டு. இடம் பொறையாருக்கு அருகில். சுவாமி ஊர்வலம் வந்து கொண்டிருக்கிறார். ராஜரத்தினம் பிள்ளையின் வாசிப்பைக் கேட்பதற் காகவே தெருவில், அங்கங்கே சுவாமி நின்று விடுவார்! கூட்டமான கூட்டம். அந்த நேரத்திலும், அவர் வாசித்தால் நம்மை எங்கோ கொண்டு சென்று விடுவார். குழல் குழல் என்கிறார்களே, இதுதான் உண்மையான குழல் என்று நான் நினைக்கிறேன். அத்தனை இனிமை; அத்தனை கம்பீரம், அத்தனை ஆண்மை, அத்தனை வேகம், அத்தனை நெளிவு சுளிவுகள். ராஜரத்தினம் அவர்கள் வாசித்து முடித்தபின் அவர் நடந்து கொள்ளும் பாணி இருக்கிறதே அதே பெரிய காவியம்! பிரமிக்க வைக்கும். ஏனெனில் அவர் சாதாரண மனிதரல்ல!

வாசித்து ஓய்ந்தவுடன் தன் நாதஸ்வரக் கருவியை அருகிலிருப்பவர்களிடம் கொடுப்பார். இவர் மீண்டும் வாசிக்கும்வரை அவர்தான் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். அப்படி ஒரு பந்தா. ராஜ தர்பார். மற்றவர்களைப் போல இசைக் கருவியை இவர் கையில் தூக்கிக் கொண்டிருக்க மாட்டார். பிறகு இடது புறம் திரும்புவார். ஒரு ஆள் ஒரு பெரிய வெள்ளி வெற்றிலைப் பாக்குப் பெட்டியை பவ்யத்துடன் திறந்து நீட்டுவார். அதிலிருந்து ஒரு கொழுந்து வெற்றிலையை எடுத்து சுண்ணாம்பைத் தடவுவார்.

"பிள்ளைவாள்!" என்றொரு குரல் கேட்கும். ஒரு பெரிய மனிதர் அங்கே கும்பிடு போடுவார். பிள்ளைவாள் அந்த வெற்றிலைப் பாக்கு கையுடனே அவருக்குத் தன் அன்பைத் தெரிவிப்பார். கை விரல்களிலே வைரம் ஜொலிக்கும்.

மனிதர் அவ்வளவு சிவப்பு; அழகு, கம்பீரம். ராஜ தோற்றம் என்ன, ராஜாவேதான் - இல்லாவிட்டால் அவரை சினிமாவில் - 'காளமேகம்' படத்தில் நடிக்க அழைப்பார்களா?

நான் அமெரிக்காவிலிருந்து வந்தபோது கல்கியின் பேனாவைத் தேடியது போல், ராஜரத்தினம் அவர்கள் வாசித்த நாதஸ்வரம் கிடைக்குமா என்று தேடினேன்.

"எங்கே கிடைக்கும்!" என்றார்கள்.

எனது ஆசை வேறு விதத்தில் பூர்த்தியாயிற்று.

எனது மூத்த மகன் சித்தார்த்தன் - யசோதரா திருமணம். நண்பர் மணியன் கேட்டார். "இசைக் கச்சேரிக்கு யாரை ஏற்பாடு செய்ய?" என்று. "மயிலாடுதுறை திருமணத்திற்கும், சென்னையில் நடக்கின்ற வரவேற்பிற்கும், இரண்டு தலை சிறந்த நாதஸ்வர வித்வான்களை ஏற்பாடு செய்து விடுங்கள் போதும்" என்றேன்.

திருமணத்திற்கு நாதஸ்வர மேதை சின்ன மௌலானா அவர்களையும், சென்னையில் நடந்த வரவேற்பிற்கு நாதஸ்வர சக்ரவர்த்தி நாமகிரிப்பேட்டை கிருஷ்ணன் அவர்களையும் மணியன் ஏற்பாடு செய்திருந்தார். இருவரும் பிரமாதமாக வாசித்தார்கள்.

மாப்பிள்ளை அழைப்பிற்கு எங்கள் ஊர் சீனுவாசம் பிள்ளை அவர்களை ஏற்பாடு செய்திருந்தோம். அவர்தான் என் திருமணத்திற்கும் வாசித்தவர். "காட்டில் மலர்ந்த ரோஜா" என்பார்களே அதுதான் சீனுவாசம் பிள்ளை. இந்த நாதஸ்வரம் என் வாழ்வில் ஒரு கலா ரசனையையும் வாழ்வில் ஒரு முழுமையையும் தந்தது.

**ந**ம் ஒவ்வொருவரிடமும் ஒரு தனித்தன்மை இருக்கிறது. ஆனால் பக்குவமடையாத உள்ளத்தில் இந்தத்

தனித்துவம் மெலிதான ஆணவத்தை வளர்த்து விடுகிறது என்பதே நான் கண்ட உண்மை.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படித்துக் கொண்டிருந்தபோதே என் கட்டுரைகளும், கதைகளும் பத்திரிகைகளில் வெளிவந்தன. நான் வித்தியாசமானவன் என்ற உணர்வை இது என்னுள் ஏற்படுத்தியது.

“ஊர் உலகம் பற்றி அதிகம் அறிந்தவன்” என்ற நினைவு ஓடும்.

பொதுவாக அதிகம் தனிமையை நாடுபவன் நான். எனக்குப் பிடித்த விஷயங்கள் பொதுவாக எல்லோருக் கும் பிடித்ததற்கு அப்பால் இருந்தன. மற்றவர்கள் சிறிய வட்டத்தில் இருந்து கொண்டு ‘ஏக கலாட்டா’ செய்கிறார்கள், குண்டு சட்டிக்குள் குதிரை ஓட்டு கிறார்கள் என்கிற மனப்பான்மையுடனேயே பலரைப் பார்த்தேன்; சமுதாயத்தைப் பார்த்தேன். இந்தத் தனித்துவம் வேண்டியதுதான். ஏனெனில் இவர்கள்தான் நாளை புதிய பொருட்களைக் கண்டு பிடிப்பவர்களாக வும், பிரச்னைகளுக்குப் புதிய தீர்வு காணும் ஆக்க சக்தி கொண்ட மனம் கொண்டவர்கள் என்றும் இவர்களைப் பற்றி மனவியல் அறிஞர்கள் எழுதுகிறார்கள்.

இதன் மறுபக்கம்: இவர்கள் தனக்குத் தெரிந்ததையே சரி என்று சாதிப்பார்கள். உலகத்துடன் ஒன்றி இவர்களால் பழக முடியாது. தவறைத் திருத்திக் கொள்ளும் மனப்பக்குவம் இல்லாதவர்கள்; தன்னிடம் தவறு இருக்கிறது என்பதையே உணராதவர்கள்!

வாழ்வில் நான் தெரிந்து கொண்ட உண்மை “திறந்த மனமும், தவற்றைத் திருத்திக் கொள்ளும் மனப் பக்குவமும்தான்” என்பார் தத்துவஞானி ஜேம்ஸ் ஆலன். என்னிடமிருந்த தனித்துவம் எனக்குப் பல சங்கடங்களை வாழ்வில் உண்டாக்கியது. எல்லா சங்கடங்களுக்கும் உலகின் மீது பழியைப் போட்டு என்னை நானே சமாதானம் செய்து கொள்வேன்.

நான் மீண்டும் அண்ணாமலையில் எம். ஏ. படிக்கப் போனபோதுதான் எனக்கும் என் பேராசிரியருக்கும் ஏற்பட்ட மோதலில் எனக்குத் தெளிவு பிறந்தது.

இது மக்களால் ஆன உலகம். இங்கே நாம் தனித்து வாழவில்லை; இணைந்து வாழ்வது தான் சுகம் என்பதை எல்லாம் நான் தெரிந்து கொண்டபோது, என் வாழ்வில் என் முகத்தில் இருந்த சோக முத்திரை தானே விலகியது. வேகமாக பல இனிமையான சூழ்நிலைகள் உருவாயின.

பிறரிடம் இருந்த நல்ல குணங்கள் எனக்கு மிகத் தெளிவாகத் தெரிய ஆரம்பித்தன. 'தான்' என்கிற நினைப்பு மறைந்து அதற்கு நேர்மாறான, 'எளிமை' என்பதன் மகத்துவம் புரிய ஆரம்பித்தது!



42

# மக்கள் சக்தியே மகேசன் சக்தி!

ஆண்டு 1987 அக்டோபர்; அமெரிக்காவிலிருந்து தமிழ்நாட்டுக்கு வந்தேன். என்ன செய்ய வேண்டுமென்பது எனக்கு நன்கு தெரிந்திருந்தது. ஆனால் அதை எப்படிச் செய்வது என்பதில்தான் யோசனை. தமிழ் நாட்டில் தங்கியிருந்த மூன்று மாதங்களில் பலரை நான் சந்தித்தேன். எனது நெருங்கிய நண்பர்கள் சிலர், நான் அரசியல் கட்சிகளில் ஏதாவது ஒன்றில் சேர்ந்து பணியாற்றுவது நல்லது என்று சொன்னார்கள். சில பிரமுகர்கள் வீடு தேடி வந்தார்கள். எனினும் நான் விரும்பிய தூய்மையும் லட்சிய தாகமும் கொண்ட அமைப்பையோ தலைவர்களையோ பார்க்க முடியவில்லை. இது பெரிய உறுத்தல்.

மற்றொரு விஷயம், நான் யார் யாரெல்லாம் என்னுடன் நிற்பார்கள் என்று பல முக்கியமானவர்களை எதிர்பார்த்திருந்தேனோ அவர்கள் எல்லாம் வெறும் பார்வையாளராகவே நின்றனர்! அதாவது நாடு இப்படிப்பட்ட இழிநிலை அடைந்துவிட்டதே என்று ஆதங்கம் காட்டுகிற அளவுக்கு, அக்கறை காட்டுகிற அளவுக்கு, பேசுகிற அளவுக்கு இறங்கிப் பாடுபட யாருக்கும் விருப்பமில்லை.

இதில் துணையாக இருந்தவர்கள் எனது இன்றைய நண்பர்கள்தான்; சம வயதுடையவர்கள் அல்ல! அதில் குறிப்பாக நண்பர் ஆபிரகாமைக் குறிப்பிட வேண்டும். நண்பர் ஆபிரஹாம், அரேபிய நாடுகளில் இருந்தார். அப்போது நல்ல வேலை. அதைவிட அங்குள்ள தமிழர்களை எல்லாம் ஒன்றுபடுத்தி அடிக்கடி தமிழர் திருவிழா நடத்திக் கொண்டிருந்தவர். நான் தொழில் வேலையாக அங்கு சென்றபோது, அவர் பொங்கல் விழா

ஒன்றிற்கு ஏற்பாடு செய்து என்னை அழைத்துப் பேசச் சொன்னார். அத்தகைய கூட்டத்தையும் ஆர்வத்தையும் நான் வெளிநாடுகளில் கண்டதில்லை. இந்தியாவைப் பற்றி ஒத்த கருத்துக்களைக் கொண்டவர் அவர். இந்தியா வந்து ஏதேனும் செய்ய வேண்டும் என்பதில் உண்மையான அக்கறை கொண்ட மனிதர். எம்.ஏ. படித்தவர். இந்தியாவில் கார்போரண்டம் நிறுவனத்தில் நல்ல வேலையில் இருந்தவர்.

அவர் மீண்டும் சென்னைக்கு வந்து விட்டார். நாங்கள் இருவரும் வால்மீகி நகர் வீட்டின் மொட்டை மாடியில் நண்பர்களுடன் உட்கார்ந்து மணிக்கணக்கில் விவாதித்தோம். ஒரு அமைப்பை உருவாக்கத் தீர்மானித்தோம்.

இயல்பாகவே நான் எளிமையானவன். காரணம் என் தந்தை மிக எளிமையானவர். அந்த பாரம்பரிய குணம் என்னிடமிருந்தது. இது நமது ஊருக்கு அவ்வளவு நல்லதல்ல என்பதை நான் அப்போது உணரவில்லை.

வீடுதேடிக் கொண்டிருந்தேன். நான் ஒரு ஆள். வீடு எனக்கு மட்டும்; என் மனைவி அமெரிக்காவிலேயே தங்குவதாகத் தீர்மானித்து விட்டார். எனது டாக்டர் நண்பர் சொன்னார். “உங்களுக்குப் பிடித்த இடத்தில் அழகான புதிய வீடு. உங்களுக்குப் போதும். கடற்கரையில் அமைந்திருக்கிறது - வால்மீகி நகரில்” என்றார். போய்ப் பார்த்தேன். இரண்டு அறைகள், ஒரு ஹால், ஒரு சமையல் இடம். இப்படி உள்ள ஒரு வீடு. சின்ன இடம். எடுத்துக் கொண்டேன். போய் வர கார் தேவையாயிற்றே என்று ஒரு பழைய காரை வாங்கிக் கொண்டேன்.

ஒரு பெரிய புதிய வீட்டிற்கோ அல்லது ஒரு புதிய காரையோ - நான் அமெரிக்காவில் உபயோகித்த பெரிய காரையோ நான் எளிதாகக் கொண்டு வந்திருக்க முடியும். என்னவோ இப்படிப்பட்ட விஷயங்களில் என் மனம் போனதே இல்லை. பின்னால்தான் நான் தெரிந்து கொண்டேன். அமெரிக்காவிலிருந்து பேரும் புகழுடனும் வந்தவர் என்று பெரிதாக என்னிடம் எதிர்பார்த்தவர்களுக்கு இந்த என்னுடைய விஷயங்கள் என்னைப் பற்றி ஏமாற்றத்தை உருவாக்கி இருக்கிறது என்பதை.

நான் என்ன செய்ய முடியும்! யாருக்காகவும் நான் வாழ்கின்றவனல்ல. பிறரது எதிர்பார்ப்புகளுக்கேற்ப நடந்து கொள்பவனல்ல! ''நான்; எனது தேவை!'' அத்துடன் எல்லாமே முடிந்து விடும். இது அதிகம் எடுபட வில்லை என்பதை நன்கு உணர்ந்தேன். "தலைவருக்கான பந்தா இல்லை'' என்றனர் என் நண்பர்கள் சிலர். "இருப்பது அவ்வளவுதான். ஆளை விடுங்கள்!" என்பேன் நான்.

என் நண்பர் செல்லப்பா என்பவர் சென்னை தி. நகரிலிருந்து அமெரிக்கா வந்திருந்தார் படிக்க. அவர் சொல்வார், அங்கிருந்த மற்றவர்களிடம், "எங்கள் வீடு தி. நகரில் பெரிய பங்களா. 24 அறைகள் கொண்டது. என்னுடைய சகோதரியும் விஜயலட்சுமி பண்டிட்டின் மகளும் ஒரே விமானத்தில் பயணம் செய்தபோது பழக்கம். எனவே அவர்கள் குடும்பத்தை எங்களுக்கு நன்கு தெரியும்!" என்று. நான் இதை எல்லாம் நிஜம் என்று நம்புபவன். பின் ஒரு நாள் என் நண்பர் ஏரன் ஞானஒளிவு சென்னையில் விசாரித்து வந்து சொல்ல, அவர்கள் தி.நகரில் ஒண்டுக் குடித்தனம் இருந்தவர்கள் என்று தெரிந்து கொண்டேன்! இப்படியெல்லாம் என்னால் 'புருடா'க்கள் விடமுடியாது. அது ஒரு தனி உலகம். "நாம் பொய் சொன்னால், அதைக் கண்டுபிடித்து விடும், நம்மை விட பெரிய புத்திசாலிகள் இருக்கிறார்கள்'' என்ற அபிப்ராயம் எனக்கு எப்போதும்.

இந்தியா வந்ததும், எனக்கு எல்லாவித உதவிகளையும் செய்ய முன் வந்தார் எனது புத்தகப் பதிப்பாளர் வானதி திருநாவுக்கரசு அவர்கள். நான் அமெரிக்காவிலிருந்து ஒவ்வொரு முறை வரும்போதும் என் புத்தகங்கள் ஒன்றிற்கு வெளியீட்டு விழா ஏற்பாடு செய்ய விரும்புவதாகக் கூறுவார். நான் அதை முழுவதுமாக மறுத்து வந்தவன். எனக்கு இப்படிப் பாராட்டப்படுவது, விழா கொண்டாடுவது எல்லாம் பொதுவாகப் பிடிப்பதில்லை. இதனால் என் புத்தகங்கள் வரிசையாக வெளி வந்து கொண்டிருந்த போதும், பத்து ஆண்டுகள் வரை புத்தக வெளியீட்டு விழாவை நான் தவிர்த்து வந்தேன்.



வானதி திருநாவுக்கரசு அவர்கள் நடத்திய புத்தக வெளியீட்டு விழாவில் கல்கி ராஜேந்திரன், சிவசங்கரி வானதி திருநாவுக்கரசு முதலியோர். 29–5–1988

'சிந்தனை தொழில் செல்வம்' என்ற எனது நூல் வெளிவந்து மூன்று ஆண்டுகள் ஆகியிருக்கும். ஒருநாள் நான் அதை அமெரிக்காவில் தற்செயலாக எடுத்துப் படித்துப் பார்த்தேன். உடனே வானதி திருநாவுக்கரசு அவர்களுக்கு எழுதினேன். "ஐயா! இந்த நூலைப் படித்துப் பார்த்தேன். இந்த மனிதர் உண்மையிலேயே பிரமாதமாக எழுதி இருக்கிறார். நிச்சயமாக ஒரு விழா எடுக்க வேண்டியதுதான். நம் நாட்டில் சொந்தமாகத் தொழில் செய்வோர் பெருக வேண்டும். எனவே எந்த அரசியல்வாதி மற்றும் பிரமுகர்களை அழைக்காமல் தொழிலதிபர்களைக் கொண்டு ஒரு வெளியீட்டு விழா ஏற்பாடு செய்யுங்கள்!" என்று எழுதி இருந்தேன். அப்படியே அந்தமுறை நான் வந்தபோது ஏவி. எம். ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் ஏ. சி. முத்தையா, எம்.வி. அருணாசலம், ஜேம்ஸ் பிரடெரிக் போன்ற தொழிலதிபர்களை அழைத்து புத்தக வெளியீட்டு விழாவை ஏற்பாடு செய்திருந்தார்.

## மக்கள் சக்தி இயக்கத் துவக்கவிழா
## 1988 மே–29ம் தேதி பாரதீய வித்யாபவன்




எந்த தலைவர்களையும் அழைக்காத சாதாரண தொண்டர்கள் பங்கேற்ற மேடை
நுழைவுக்கட்டணம் 10 ரூபாய் கொடுத்து உட்கார இடமில்லாமல் நின்ற காலை மாலை கூட்டம்.
எல்லா மாவட்டங்களிலுமிருந்து வந்த பிரதிநிதிகள்.
துவக்க நாளன்றே அனைத்து மாவட்டங்களிலும் இயக்கம் துவக்கம்.



மக்கள் சக்தி இயக்கம் துவங்கிய உடன் மது விலக்கிற்காக முதல் உண்ணாவிரதப் போராட்டம் 1988 ஜுலை
திருப்பூரில்




1988 செப்டம்பர் 15. P.S. உயர்நிலைப்பள்ளி மண்டபத்தில் மகளிர் மேம்பாட்டு கருத்தரங்கு. மேடையில் சாவித்திரி ராகவேந்திரா, டாக்டர் சுதா சேஷையன் எம்.எஸ். யு; வசுமதி ராமசாமி, எழுத்தாளர் அனுராதா ரமணன்.



காந்தி கிராம பல்கலைக் கழகத்தில் பயிற்சிக்கு வந்த இளைஞர்கள்.

அதேபோல எனது நண்பர் அருண் ஐஸ்கிரீம் சேர்மன் சந்திரமோகன் சென்னையிலுள்ள சிறு தொழிலதிபர்களை எல்லாம் ஹோட்டல் சோழாவில் ஒரு விருந்திற்கு அழைத்து என்னைப் பேச ஏற்பாடு செய்தார். நாட்டின் நாடி ஓரளவுக்கு எனக்கு பிடிபட்டது.

**நா**னும் ஆபிரஹாமும் இரவுபகலாகத் திட்டம் தீட்டினோம். 'மக்கள் சக்தி இயக்கம்' என்ற பெயர் முன்பே முடிவாகி இருந்தது. "இயக்கம்' என்ற வார்த்தையிலும் 'சக்தி' என்ற வார்த்தையிலும் ஒரு ஓட்டமும் துடிப்பும் இருக்கிறது. நண்பர்கள் அங்கீ கரித்தார்கள்.

1988 மே மாதம் 29ம் தேதியைத் தேர்ந்தெடுத்தோம். இரண்டு மாதம் முன்பே துவங்கி இருக்க வேண்டும். ஏனெனில் இரண்டு மாதம் முன்புதான் சி.எஸ். அவர்கள் 'மக்கள் தூய்மை இயக்கம்' என்ற அமைப்பைத் துவங்கி இருந்தார். அதிலும் நான்தான் காரியதரிசி.

அப்போதுதான் "நம்பு தம்பி, நம்மால் முடியும்!" என்ற தொடரை ஆனந்தவிகடனில் எழுதி முடித் திருந்தேன். அதற்கு அளவு கடந்த வரவேற்பு இருந்தது. அனேகமாக ஒவ்வொரு வாரமும் நானும் விகடன் ஆசிரியர் பாலனும் வரப் போகிற ஒவ்வொரு கட்டுரையைப் பற்றியும் விவாதிப்போம். அருமையான யோசனை சொல்பவர் ஆசிரியர் பாலசுப்ரமணியன். எனினும் தம்மை வெளியில் காட்டிக் கொள்ள மாட்டார்.

எனது கருத்துக்களை விகடன் என்ற தங்கத் தாம்பாளத்தில் வைத்து என்னைத் தமிழ் கூறும் நல்லுலகிற்கு வழங்கியது ஆனந்த விகடன்; அதன் ஆசிரியர் பாலசுப்பிரமணியன்; பொறுப்பாசிரியர் மணியன்.

"என் கட்டுரைகளை நீங்கள் தானே படிப்பீர்கள்?" என்று ஒரு முறை நண்பர் மணியனைக் கேட்டேன். "இல்லை இல்லை. உங்கள் கட்டுரை - மஞ்சள் தாளில் வருகின்ற கட்டுரைகள் முதலில் ஆசிரியர் பாலனின் பார்வைக்குப் போகும். அவர் பச்சைப் பேனாவினால் கோடிட்டு அனுப்புவார்" என்றார்.

அப்போதுதான் திரு பாலன் எவ்வளவு உன்னிப்பாகக் கவனிக்கிறார் என்ற விஷயத்தை நான் அறிந்து கொண்டேன்.

மணியன் பிரிந்த பிறகு விகடனை எந்த வித தொய்வும் வராமல் தூக்கி நிறுத்திய பெருமையும் இன்று பல்வேறு பத்திரிகைகளை விகடன் சார்பில் வெளியிடும் ஒரு சிறந்த தொழில் மனோபாவமும் அவர் சாதனைகள்! அது வெறும் புகழ்ச்சி அல்ல. விகடன் இதழில் “நம்மால் முடியும்” தொடரில் “மக்கள் சக்தியை இயக்க மாக்குவோம்” என்ற தலைப்பில் ஒரு கட்டுரையைக் கடைசியாக எழுதி இருந்தேன். அதாவது மக்கள் சக்தி இயக்கம் என்ன செய்யப்போகிறது என்று, விரிவாக எழுதி முடித்திருந்தேன். விகடன் ஆசிரியர் எனது முயற்சிகள் எல்லாவற்றிற்கும், எல்லாவகையிலும், உறுதுணையாக இருந்தார்.

ஏ.சி. முத்தையா ஆகட்டும், விகடன் ஆசிரியர் பாலன் ஆகட்டும், காலஞ்சென்ற நண்பர் மணியன் ஆகட்டும், எனது நண்பர் பாலசந்தர் ஆகட்டும், வானதி திருநாவுக்கரசு, வித்வான் லட்சுமணன் என்று இன்னும் எனக்கிருக்கும் நண்பர் குழுவாகட்டும் எல்லோரும் ஆண்டவன் எனக்களித்த பாக்கியம் என்றே எண்ணி நான் மனத்தால் தொழுகை நடத்துவதுண்டு.

**ம**க்கள் சக்தி இயக்கத் துவக்க விழா மே 29, 1988 அன்று பாரதீய வித்யா பவனில் நடந்தது. இரண்டு விஷயங்களை நான் கடைப்பிடித்தேன்; இரண்டும் வித்தியாசமான விஷயங்கள்.

அதாவது இந்த துவக்க விழாவுக்கு எந்தப் புகழ் பெற்ற பிரமுகரையும் அழைக்க வேண்டாம். அவர்களுக்காக கூட்டம் வர வேண்டாம். உண்மையில் நம் கொள்கைகளை அறிந்தவர்கள் நமக்காக வருபவர்கள் மட்டுமே வந்தால் போதும் என்பது ஒன்று.

இரண்டாவது, நாமோ 1800 ரூபாய் கொடுத்து ஒரு ஹாலை வாடகைக்கு எடுக்கிறோம். வெறும் வேடிக்கை பார்க்க வரும் மனிதர்களால் இது நிறையக் கூடாது! எனவே நுழைவுக்கட்டணம் பத்து ரூபாய் வைப்போம் என்று தீர்மானித்தது.

எனது நண்பர்கள் - அழாத குறைதான் - "200 பேர் வருவார்களா, நம் அழைப்பை ஏற்று என அஞ்சிக் கொண்டிருந்தோம். இப்போது நுழைவுக் கட்டணம் வேறு வைத்து விட்டீர்கள். 50 பேர் வருவார்களா?" என்று இடிந்து போய் உட்கார்ந்து விட்டார்கள். நான் சிறிதும் மனம் தளரவில்லை.

காலை பத்து மணிக்கு மயிலாப்பூர் கீழமாட வீதியில் பெரிய 'லயன்' நின்று கொண்டிருந்தது உள்ளே நுழைய. விலாசம் பூர்த்தி செய்யச் சொல்லி ஒரு படிவம் வைத்திருந்தோம். அதைப் பூர்த்தி செய்ய யாருக்கும் நேரமில்லை. திமுதிமுவென்று உள்ளே நுழைந்தார்கள். கூட்டம் என்றால் அப்படிக் கூட்டம்.

அன்று மதியம் வந்திருந்த அனைவரையும் மாவட்ட ரீதியாகப் பிரித்து அப்போது 20 மாவட்டங்கள் இருந்தன. பத்தொன்பது மாவட்டங்களில் எங்கள் கிளைகளைத் துவங்கினோம். ஒரே நாளில் - முதல் நாளில். எழுதியது தினமலர், கட்டுரையாக, "கீழிருந்து கிளம்புகிறது மக்கள் சக்தி" என்று. விசித்திரமான ஒரு வரவேற்பும் கிடைத்தது. முரசொலியில் கலைஞர் மு. கருணாநிதி எழுதி இருந்தார்; மக்கள் தூய்மை இயக்கத்தையும், மக்கள் சக்தி இயக்கத்தையும் தாக்கி. சி.எஸ். அவர்களைப் பற்றி ஒண்ணே கால் பத்தி! என்னைப் பற்றி ஒரு அரைப்பத்தி! அதில் என்னை "மயிலாடு துறையில் பிறந்த மாமேதை" என்று கிண்டலாக எழுதி இருந்தார். அவர் உள்ளத்திலே அச்சம்? வெறுப்பு?...?

நானோ "கலைஞர் அவர்கள் என்னை" மயிலாடுதுறையில் பிறந்த மாமேதை" என்று பாராட்டி இருக்கிறார் என்று தமாஷாகச் சொல்லி அவருக்கு நன்றி தெரிவித்துக் கொண்டிருந்தேன்; தமிழ்நாடு பூராவும் - எல்லாக் கூட்டங்களிலும்!

43

## சின்ன விஷயங்கள் - பெரிய சாதனைகள்!

கடந்த பத்தாண்டுகளிலே மக்கள் சக்தி இயக்கத்தின் லட்சியமாக நாங்கள் குறிப்பிடுவது மூன்று முக்கிய விஷயங்கள்:

முதலாவதாக சுயவளர்ச்சி. தனிமனிதன் உயர்ந்தால் தான் சமுதாயம் சிறந்ததாக அமையும். இங்கே பொதுவாக மனிதனிடம் தன்னால் முடியும் என்கிற தன்னம்பிக்கை குறைவு. சார்ந்து நிற்கும் ஒரு சமுதாயத்தை உருவாக்கி விட்டோம். அதனால்தான் அதிகம் பேர் பிறரிடம் வேலை செய்து பிழைக்கத் தயாராயிருக்கிறார்களே தவிர, சொந்தக் காலில், ஒரு சொந்தத் தொழிலில் இறங்கத் தயாராயில்லை. தன்னம்பிக்கை இல்லை; துணிவு இல்லை; எதையும் சமாளிப்போம்; சமாளிக்க முடியும் என்ற மனஉறுதி இல்லை.

இந்த சார்ந்து நிற்கும் குணத்தை நமது மத்திய மாநில அரசுகளும் அதிகமாக வளர்த்து விடுகின்றன. இனாம், இலவசம், வேட்டி, புடவை, வீடு, பல்பொடி, செருப்பு என்று. பல அரசியல்வாதிகளுக்கு என்ன செய்கிறோம்? இதன் ஆழம் என்ன? இது எங்கு கொண்டு விடும்?' என்று சிந்திக்கிற திறன் இல்லை. பல பேர் தெரிந்தும், வோட்டுக்கு இனாம் கொடுப்பது நல்லது என்று 'இரந்து பெறும் குணத்தை' மக்களிடம் வளர்த்து வருகிறார்கள்.

எனவேதான் உன்னை நீ முழுமையாக வளர்த்துக் கொள். உன்னிடம் பாரம்பரிய பலம் இருக்கிறது. உன் காலிலே நில். தைரியத்தை, தன்னம்பிக்கையை, மனித உறவுகளை, முடிவெடுக்கும் திறனை வளர்த்துக் கொள்

என்கிற சுயவளர்ச்சியை கடந்த 25 ஆண்டுகளுக்கு மேலாக எழுதி வருகிறோம். கடந்த பத்தாண்டுகளாக பயிற்சி முகாம் நடத்துகிறோம்.

இரண்டாவதாக சுய பொருளாதார மேம்பாடு இவ்வுலகில் வாழ பொருள் தேவை; அதைப் போதிய அளவுக்கு மேல், தனக்கும் இந்த சமுதாயத்திற்குமாக அவன் சம்பாதிக்க முடியும் என்று சொல்கிறோம். விளக்குகிறோம்; பயிற்சி கொடுக்கிறோம். எந்தக் காரியத்திலும் கஷ்டமும் வரும், நஷ்டமும் வரும் என்பதை உணர்ந்து சமாளிக்க முடியும் என்று இறங்குபவனுடைய வருமானம் அவன் தீர்மானிப்பது தான். இது முதலாளி தீர்மானிப்பதல்ல.

சொந்தத் தொழில் செய்பவன் சுதந்தர மனோ பாவம் கொண்டவன் **தனது** எல்லாத் திறமைகளுக்கும் வாய்ப்பளிக்கிறான். சொந்த சாதனையில் மன நிறைவு பெறுகிறான். இதனால் ஊருக்கு அதிக நன்மை செய்ய முடிகிறது! உற்பத்தி செய்பவர்கள் அதிகம் உள்ள நாடுதான் செல்வந்த நாடாக இருக்கிறது.

மூன்றாவதாக, 'சமுதாய ஈடுபாடு கொள்ளுங்கள்' என்று சொல்கிறோம். நாம், இந்தச் சமுதாயத்திலிருந்து பலவற்றையும் பெறுகிறோம் என்பதைப் பலரும் மறந்து விடுகிறார்கள். வளம் மிகுந்தவர்கள் நலிந்தவர்களுக்கு உதவுவதுதான் வாழ்க்கை நெறி, உயர் தர்ம நெறி - இப்பிரபஞ்சத்தில் உள்ள அனைத்து ஜீவராசிகளும், ஜடப் பொருள்களும் ஒன்றுக்கொன்று உதவியாகத் தான் படைக்கப்பட்டிருக்கின்றன என்பதை நாம் புரிந்து கொள்வதில்லை. இப் பிரபஞ்சத்திலுள்ள கோள்கள் அனைத்தும் தனித்தும் இயங்குகின்றன, இணைந்தும் இயங்குகின்றன என்கிற உண்மையைப் பெரும்பாலோர் உணர்வதில்லை.

ஒரு காந்தி செய்த சமுதாயப் பணியினால்தான் இந்தியா மாத்திரமல்ல, மற்ற முப்பது நாடுகள் சுதந்தரம் பெற்றன. ஊர் நன்மையில்தான் தனி மனித பாதுகாப்பு இருக்கிறது. சுயவளர்ச்சி ஒரு காசின் ஒரு பக்கம் என்றால் சமுதாய ஈடுபாடு என்பது ஒரு நாணயத்தின் மறுபக்கம் ஆகும். நாட்டிற்கு தேவையான - முக்கிய மூன்று

கொள்கைகளை இயக்கத்தின் லட்சியங்களாக ஏற்றுக் கொண்டிருக்கிறோம். ஒரு சமுதாயத்தை முழுமையாக உருவாக்கும் லட்சியங்கள் இவை. எங்கள் இயக்கத்தின் நிர்வாகக்குழு உறுப்பினர் எஸ். பார்த்தசாரதி சொல்வார் “இந்த கொள்கைகள் எல்லா நாட்டிற்கும் எல்லா சமுதாயத்திற்கும் பொருந்தும்” என்பார்.

இன்றிருக்கும் சமுதாய சீர்கேடுகளைப் பார்க்கும் யாரும் பொதுவாழ்வில் இறங்க அஞ்சுகிறார்கள். காரணம் ‘என்னால் என்ன செய்ய முடியும்?’ என்பன போன்ற கேள்விகள். இதைவிட மேலாக அவநம்பிக்கை. “இந்த நாடு மாறாது; இதை மாற்றமுடியாது”என்ற அவல எண்ணம். அவ்வளவு ஆழமாகச் சீர்கேடுகள் புரையோடிப் போயிருக்கின்றன., உண்மைதான். ஆனால் நாம் செய்யாவிட்டால் என்ன ஆகும்? நிலைமை இன்னும் மோசமாகும். நாம் செய்யாவிட்டால் யார் செய்வார்கள்? அமெரிக்கர்களோ, ஜப்பானியர்களோ வந்து நமக்காக இதை எல்லாம் சீர்திருத்தப் போவதில்லை.

ஆகவே இங்கு நாம் மனிதனில் மனமாற்றத்தை ஏற்படுத்த வேண்டும்; நம்பிக்கையை ஊட்ட வேண்டும்; அந்த எண்ணநிலையில் ஏற்படும் மாற்றம்தான் நம்பிக்கையாய், செயலாய், பழக்கமாய், ஒரு மனிதனின் குணநலனாய் மாறுகிறது.

இந்த மனமாற்றம் பற்றி நான் இந்தியா வருவதற்கு முன்பிருந்து இதுபற்றி என்ன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

எனது நண்பர்களிடம் பேசினேன்; மக்களிடம் என்னால் முடியும் என்ற நம்பிக்கை இல்லை என்பதை உணர்ந்தேன் அதுதான் சாதனைக்கு விசை என்பதும் தெளிவாக புரிந்தது.

பெரிய மாநாடு போட்டு இதைப் பற்றிப் பேச வேண்டும் என்று எண்ணினேன்; எங்கு பார்த்தாலும் இப்படிப்பட்ட போஸ்டர் ஒட்ட வேண்டும் என்று சிந்தனை ஓடியது. உடனே ஒரு மாற்று சிந்தனை: இது என்ன எல்லோருக்கும் தெரியாமலா இருக்கிறது? தெரிந்த விஷயத்தைப் போய்ச் சொல்வானேன்? எல்லாம்

தெரிந்தவன் போல இதைப் போய் சொல்வதா? இப்படிப்பட்ட கேள்விகள், சந்தேகங்கள், தயக்கங்கள்.

மனவியல் அறிஞர்கள் சொல்கிறார்கள். "மிகப் பல முக்கிய விஷயங்கள் எல்லாம் சாதாரண விஷயங்கள் தான். எல்லோருக்கும் தெரிந்தவைதான். ஆனால் அவைதான் முக்கியம் என்பதைப் பொதுமக்கள் ஆழமாக உணர்வதில்லை; எனவே சர்வசாதாரணமாக, லேசாக எடுத்துக் கொள்கிறார்கள். உபயோகித்து வெற்றி காணலாம் என்கிற தெளிவு இல்லை. எனவே உபயோகிப்பதில்லை என்கிறார்கள்.

உண்மைதான். மகாத்மா காந்தியின் வாழ்வை எடுத்துக் கொள்ளுங்கள். உப்பு சத்தியாக்கிரகம் என்றார்; அதற்காக தண்டி யாத்திரை போகப் போகிறேன் என்றார்.

உப்பு! உப்பு எவ்வளவு சாதாரண விஷயம்!

ஒரு நாளைக்கு எவ்வளவு உப்பு உபயோகிக்கிறோம்?

மிகக் கொஞ்சம்! அதற்குப் போய் வரி போட்டால்என்ன. உப்பின் விலை எவ்வளவு கூடிவிடப் போகிறது? மிக கொஞ்சம்!

இதற்காக ஒரு போராட்டமா?

சே! உப்புப் பெறாத விஷயம்! ஏதாவது ஒரு பெரிய விஷயத்தைப் போராட்டத்திற்காக எடுத்துக் கொண்டால் சரி! இந்த மனிதர் வேலை கெட்ட மனிதர்; வேறு விஷயமில்லாத மனிதர் - இப்படித்தான் எண்ணினார்கள் நேருவும், படேலும். சிரித்து, நகைத்து, பரிகாசம் கூட தங்களுக்குள் செய்து கொண்டார்கள்.

சாதாரண விஷயம் - அந்த சாதாரண விஷயம்தான் அசாதாரணமான பலனைத் தந்தது. தண்டி யாத்திரை அனைத்து மக்களையும் ஒன்றாக்கியது. அதுதான் சூட்சுமம்.

உப்பு வரி என்று போடப்படும் வரியின் தொகைக்காக அல்ல இந்தப் போராட்டம். ஒரு கொள்கைக்காக. ஒரு நியாயத்திற்காக. அடிப்படை உரிமைக்காக.

அதே போலத்தான் கைராட்டை கதர். சுதேசித் துணி. சின்ன விஷயம்! சாதாரண விஷயம். 'கைராட்டை

சுற்றினால் வெள்ளைக்காரன் போய் விடுவானா?' என்று கேட்டார்கள்.

கைராட்டை எல்லோரையும் இணைத்தது. சொந்தமாக நெய்த துணி என்ற மாபெரும் சுய கௌரவத்தை அளித்தது. இதன் விளைவாக மான்செஸ்டரில் பல துணி மில்கள் மூடப்பட்டன.

சாதாரண விஷயம் என்ன செய்கிறது என்பதைக் கவனியுங்கள்!

மூன்றாவதாக அவர் எடுத்துக் கொண்ட சத்தியம், அஹிம்சை.

உண்மை பேசு என்றார் - அவர் உண்மையே பேசினார். உண்மை பேசு என்றுதான் ஆரம்பப் பள்ளியிலிருந்து அரிச்சந்திரன் நாடகம் வரை பார்க்கிறோம். ஆனால் நாம் அதை சீரியசாக - பெரிதாக - முக்கியமானதாக எடுத்துக் கொள்ளவில்லை. ஏனெனில் இது தெரிந்த விஷயம்; சாதாரண விஷயம்.

இப்படி 'சாதாரண விஷயம்,' 'தெரிந்த விஷயம்தானே' என்று எண்ணுவதன் மூலம் அவற்றை அலட்சியப்படுத்தி விடுகிறது நமது மனம். ஆனால் சின்ன விஷயங்களுக்குள் தான் பெரிய மகிமை அடங்கி இருக்கிறது. எளிமைதான் படாடோபத்தை வெல்கிறது.

சின்ன மந்திரம் 'ஓம்' என்ற நாதம்தான் இப் பிரபஞ்சத்தின் ஒலி. பிரபஞ்சம் உருவாகக் காரணமான ஒலியாகக் கருதப்படுகிறது. ஹார்வர்டு பல்கலைக் கழகத்தில் இந்த மந்திரச் சொல்லின் வலிமை பற்றி ஆராய்ந்திருக்கிறார்கள்.

'நம்புங்கள், நம்மால் முடியும்' என்று சொன்னால், 'பெரிய மேதைதான்' என்று ஏளனம் செய்ய மாட்டார்களா என்கிற எண்ணமெல்லாம் என்னை உள்ளுக்குள்ளே இழுத்துக் கொண்டிருந்தன.

இளைஞர் ஒருவர் எனக்கு உதவியாக கார் ஓட்டிக் கொண்டிருந்தார். பெயரே வைரம். பெரிய இடத்துப் பையன். அவருக்குத் திருமணம் நடந்தது, மயிலாடுதுறையில். போயிருந்தேன். தெருமுனைகளில் எல்லாம் 'நம்பு தம்பி, நம்மால் முடியும்!' என்ற செய்தி



கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் முதல்வராக இருந்த போது அனைத்துக் கட்சிப் போராட்டம் பூரண மதுவிலக்கிற்காக; மக்கள் சக்தி இயக்கத்தில் சுமார் 31 பேர் சிறை சென்றனர்.



சிறையிலிருந்து வெளிவந்த தொண்டர்கள்.
ரத்தக்கறை படிந்த கைதி உடை; சாம்பாரில் புல்லுக்கும் இடம். படுக்கும் ஹாலில் மூட்டைப் பூச்சியின் படைஎடுப்பு. படுக்கைக்கு நேர் கதவில்லாத கழிப்பறை. நசுங்கி அழுக்கேறிய அலுமினிய தட்டுக்கள் குவளைகள்.

## காவேரி நீருக்காக போராட்டம்




காவேரி நடுவர் மன்றம் அமைக்கப்பட்டு நீதிபதிகள் நிலவரமறிய வந்தபோது "முறையிடுங்கள்" என்று விவசாயிகளை தட்டி எழுப்பி ஊர் ஊராக சென்ற காவேரி ரதம்.

துணியில் எழுதப்பட்ட பேனர்களை எங்கு பார்த்தாலும் தொங்க விட்டிருந்தார்கள். இது என் கூச்சத்தைப் போக்கியது: இந்த எண்ணம் என்னுள் வலுப்பட்டது.

விகடனில் இப்படி 'நம்பு தம்பி, நம்மால் முடியும்' என்கிற தலைப்பில் ஒரு தொடர் எழுதினால் என்ன என்று விகடன் ஆசிரியர் உயர்திரு பாலன் அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர் இதை வரவேற்றார். வரவேற்றது மட்டுமல்ல; ஒவ்வொரு கட்டுரையின் போதும் கட்டுரையின் கருத்துகளை என்னுடன் விவாதித்தார்.

இந்தத் தொடரை எழுதி முடிக்கின்ற தருணத்தில் தான் எனது நண்பர் டைரக்டர் பாலசந்தர் ஒரு கடிதம் எழுதி இருந்தார். "உங்கள் தலைப்பை நான் களவாடிக் கொண்டிருக்கிறேன்!" என்று.

எழுத்துக்கள் எப்படி எப்படி யார் யாரைத் தொடுகின்றன என்பதைப் பாருங்கள். நான் பதிலுக்கு எழுதினேன். "தாராளமாக எடுத்துக் கொள்ளுங்கள்! மட்டற்ற மகிழ்ச்சி" என்று.

அவர் என்ன படம் பிடிக்கிறார், கதை என்ன, யார் நடிக்கிறார் என்கிற எந்த விஷயமும் எனக்குத் தெரியாது - இந்த தலைப்பை உபயோகிக்கப் போகிறார் என்பதைத் தவிர.

இந்த வாசகம் விகடனின் முத்திரையையும் பாலசந்தருடைய முத்திரையையும் பெற்று வலிமை பெற்றது; பிரபலமாக்கியது.

அதை விட ஒரு முக்கிய மாற்றமும் பத்திரிகை உலகில் ஏற்பட்டது. 1972லிருந்து விகடனிலும் இதயம் பேசுகிறதிலும் நான் எழுதிக் கொண்டிருந்தபோது, இதன் தாக்கம் மற்ற பத்திரிகைகளையும் தொட்டது. குமுதம் பத்திரிகை ஆசிரியர் எஸ். ஏ. பி அவர்கள் தமது மனவியல் மொழிபெயர்ப்புத் தொடருக்காக "நினைப்பது முடியும்!" என்று மதுரை போன்ற பெரு நகரங்களில் பெரிய பேனர்களை நிறுவி இருந்தார்கள். எனக்கு சந்தோஷம். இன்று மனவியல் தொடர் இல்லாத பத்திரிகையே



விளநகர் கிராமத்தில் பொய்யாகுளத்தில் ஏ.வி.சி. கல்லூரி ஆசிரிய மாணவர்களுடனும் கிராம மக்களுடனும் தூர் வாரிய காரியம்தான் முதல் பணி (1987ல்)



1988ல் மயிலாடுதுறையில் விவசாயப் பெருங்குடி மக்களைக் கூட்டி தஞ்சை மாவட்ட வளர்ச்சி மாநாடு இதன் விளைவாக உருவானதுதான் நாகைக்கு அருகில் பணகுடியில் 4000 கோடி ரூபாயில் உருவான எண்ணெய் சுத்திகரிப்பு நிலயம். இதன் காரண கர்த்தாவான எம்.ஆர்.எல். ராமலிங்கம் இதில் பங்கேற்றபின் உருவானது.

இல்லை என்ற ஒரு நிலைக்கு பத்திரிகை உலகம் வந்திருக்கிறது.

நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம் இதுதான்.

சின்ன விஷயம் என்பது சின்னது அல்ல.

சாதாரண விஷயம் என்பது எல்லோருக்கும் தெரிந்ததாய் இருக்கலாம். ஆனால் அது சாதாரண விஷயமல்ல என்பதுதான்.

இயக்கம் துவங்கியவுடன் நான் செய்த முதல் காரியம் எங்கள் கிராமப் பணிதான். அங்கே எங்கள் ஊரின் முக்கிய பொய்கைக் குளத்திலே தூர் வாரினோம். நான்தான் கிணறு வெட்டியவனாயிற்றே, தூர் வாருவதா பெரிய காரியம்?

ஏ.வி.சி. கல்லூரி மாணவர்களுடன், உள்ளூர் மிராசுதாரர்கள் அளித்த தொழிலாளர்களுடன், இயக்க நண்பர்களுடன் குளத்தை ஆழப்படுத்தித் தூர் எடுத்தோம். உடல் நிலை தளர்ந்த நிலையில் இருந்த என் நண்பர் விளநகர் முன்னாள் எம்.எல்.ஏ. கணேசன் குளக்கரையில் ஒரு சாக்கைப் பிரித்துப் போட்டு உட்கார்ந்து கொண்டு நான் மண் சுமப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவரைப் பார்த்து பேசப் போன போது, "நான் சுமக்க உடல் இடங்கொடுக்கவில்லையே" என்று கண்ணீர் வடித்தார்.

இயக்கம் செய்த இரண்டாவது காரியம் தஞ்சை மாவட்டத்தில் உள்ள 200 விவசாயப் பெருங்குடி மக்களை அழைத்தோம். "காவிரியில் தண்ணீரோ வருவதில்லை. மழையோ பெய்வதில்லை. இப்படியே போனால் என்ன ஆகும். தஞ்சை தொழில் வளத்தில் மிகவும் பிற்படுத்தப்பட்ட கடைசி மாவட்டம் என்பது தெரியுமா? நாம் ஏதாவது தொழில் துவங்க வேண்டும்" என்ற முன்னுரையுடன் ஒரு இரண்டு நாள் கருத்தரங்கை நடத்தினோம். ஆலோசனை சொல்ல சுமார் பதினைந்து அறிஞர்களை அழைத்திருந்தோம். தஞ்சை மாநகரின் முக்கிய பிரமுகர் அனைவரும் கலந்து கொண்டார்கள்.




எண்ணெய் சுத்திகரிப்பு நிலயம் ஏற்படுத்துவதற்கான மனுவை ஜனாதிபதி வெங்கட்ராமனிடம் கொடுத்தோம் அது நிறைவேறிய போது நன்றி தெரிவித்து போஸ்டர் ஒட்டினோம்.

இதன் விளைவாக எடுக்கப்பட்ட யோசனைதான் தஞ்சை மாவட்டத்தில் பணகுடியில் ஒரு எண்ணெய் சுத்திகரிப்பு நிலையம். எண்ணெய் ஐந்து லட்சம்டன் அளவில்தான் கிடைத்தது. ஆனால் இன்னும் அதிகம் கிடைக்கும் வாய்ப்பிருந்தது. பெட்ரோல், எரிவாயு மற்றும் பெட்ரோலியப் பொருட்கள் தேவைப்படுவதால் நாம் கச்சா எண்ணெயை வெளியிலிருந்து கொண்டு வந்தாவது இங்கு சுத்திகரித்தாக வேண்டிய கட்டாயத்தில் இருந்தோம். ஜனாதிபதி வெங்கட்ராமனிலிருந்து பலரையும் பார்த்தோம் இது விஷயமாக.

இதற்கு முழு மூச்சாக இறங்கிச் செயல் பட்டவர் எனது நண்பர், சென்னை எண்ணெய் சுத்திகரிப்பு நிலையத்தின் பின்னாள் தலைவர், குடந்தைவாசி - எஸ். ராமலிங்கம் அவர்கள்தான். அவர் சென்னை நிறுவனத்தில் தலைமைப் பதவி ஏற்றபோது இதன் முதலீடு இரண்டாயிரம் கோடியாகவும் பின்னால் நாலாயிரம் கோடியாகவும் உயர்ந்தது.



**எஸ். ராமலிங்கம்,** பி.ஈ.
எம்.ஆர்.எல். தலைவர்
காவேரிப் படுகையில் எண்ணெய்
சுத்திகரிப்பு நிலையம் வரக்
காரணமாய் இருந்தவர்.

கவனியுங்கள் இது எம்.பிக்கள் செய்த விஷயமல்ல. அல்லது அமைச்சர்களால் கொண்டு வரப்பட்ட திட்டமல்ல. மக்கள் ஒன்று கூடிச் செய்த திட்டம். தேவையிருந்தது என்பது ஒரு தூண்டுகோல்; அவ்வளவு தான். எல்லோரையும் சேர்த்து ஒரு கூட்டம் போடுவது கூட, எவ்வளவு நல்ல காரியத்தில் முடியலாம் என்பதை அறிந்து கொண்டேன்.

அடுத்ததாக நாங்கள் எடுத்துக் கொண்டது நதி நீர்த் திட்டம் - காவிரி நீருக்கான போராட்டங்கள்.

நதி நீருக்கான திட்டம், எப்படி உருவாயிற்று? மக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்த நாங்கள் கன்னியாகுமரியிலிருந்து சென்னை வரை 38 நாட்கள் 1030 கிலோமீட்டர் நடந்த பாத யாத்திரை; மேற்குத் தொடர்ச்சி மலையில் காடுகள் அழிக்கப் படுவதைத் தடுக்க நாங்கள் மேற்கொண்ட, நாகர்கோவிலிலிருந்து மதுரைவரை மலை அடிவாரம் வழியே நடந்த பாதயாத்திரை என்று மொத்தம் நான்கு பாதயாத்திரைகள் சென்றோம்.

44

## பாதை எங்கும் பரவச மக்கள்!

நதிகளை தேசீய மயமாக்கக் கோரியும், தென்னக நதிகளை இணைக்கக் கோரியும் முதல் பாதயாத்திரையை 1991-ல் துவங்கினோம். நீண்ட பயணம். கன்னியாகுமரியிலிருந்து ஆரம்பம். அனுபவமில்லாத கால்கள். இயக்க இளைஞர்கள், "நீங்கள் தினந்தோறும் கொஞ்சம் நடந்து பழகுவது நல்லது" என்று சொன்னார்கள். ஆனால் எங்கே நடக்க நேரம்? நடந்து விடலாம் என்ற நம்பிக்கை! நல்ல வெயில் காலம்.

ஒவ்வொரு நாளும் காலையில் வெயிலுக்கு முன் கூட்டுப் பிரார்த்தனை செய்து விட்டுக் கிளம்புவோம். சுமார் பன்னிரண்டு கிலோ மீட்டர் நடப்பது; பின் சுமார் 11 மணி அளவில் காலை உணவு; ஓய்வெடுத்துக் கொண்டு மதிய உணவுக்குப் பின் சுமார் நாலு மணிக்கு மீண்டும் 12 கிலோமீட்டர் பயணம். இரவு 7-8 மணிக்கு முடியும். துணையாக ஒரு ஜீப், ஒரு வேன், வேஷ்டி துணிமணிகளைக் கொண்ட அனைவரது பெட்டிகளையும் சுமந்து கொண்டு; மைக் பொருத்தப்பட்டு. முன்னதாகவே தங்குமிடங்கள், உணவு மற்றவை எல்லாம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

எங்கே கிராமங்களைக் கண்டாலும், எங்கே மக்களைக் கண்டாலும் ஜீப்பில் என்னை ஏற்றி விடுவார்கள்; நதி நீர் பற்றிய பிரசாரம்.

முதல் நாள், முதல் 13 கிலோமீட்டரை நடந்து முடிப்பதற்குள் இன்னும் எவ்வளவு தூரம், எவ்வளவு தூரம்? என்று கேட்கும்படியான நிலை!

சிலப்பதிகாரத்தில் இரவோடிரவாகக் கோவலன், கண்ணகியை அழைத்துக் கொண்டு பூம்புகாரிலிருந்து



குமரியில் விவேகாநந்தர் சிலைக்குமுன் பிரார்த்தனை.
நதிகளை இணைக்கக் கோரி பாத யாத்திரை துவக்கம்.
விவேகாநந்த கேந்திரா – குமரி

மதுரையை நோக்கி நடப்பார். பாவம், கண்ணகி வீட்டை விட்டு வெளியே அதிகம் நடந்தறியாத பெரிய இடத்துப் பெண். சுமார் 10 மைல் நடந்தவுடன் மதுரை வந்து விட்டதா என்று கேட்கிறாளாம். அந்தக் கதைதான் நம் விஷயமும்!

"இன்னும் கொஞ்ச தூரம்தான்" என்பார்கள். எங்கே தங்குவோம் இரவில்? சில சமயம் பள்ளிக் கூடங்களின் வெளிப்புற வராண்டா, பஞ்சாயத்து போர்டு கட்டடம், ஊர் எல்லைப்புறத்தில் உள்ள காளியம்மன் கோயில், பல மதியங்களில் தென்னந் தோப்புகள். பலசமயம் அறிமுகமில்லாத அன்பர்களின் வீட்டில் குடிசைகளில், கயிற்றுக்கட்டிலில், தரையில்.

பாதயாத்திரை துவங்கிய மூன்று நாட்களில் என் இடது பாதத்தின் முன் பகுதியில் பெரிய கொப்பளம். தள தளவென்று தண்ணீர் கட்டிக் கொண்டு, பஞ்சு வைத்து துணியை அதன் மீது சுற்றிக் கொண்டு, காலை இழுத்துக் கொண்டு நடக்க வேண்டியதுதான்!

எங்கு கூட்டம் போட்டுப் பேசி முடிக்கிறோமோ அங்கே "அப்பாடா!" என்று திரும்பிப் பார்த்தால், அங்கே ஒரு நர்சிங்ஹோம், அல்லது டாக்டர் வீட்டுப் பலகை தொங்கும். உள்ளே போவேன். டாக்டர் அன்புடன் கவனிப்பார்; சொல்வார்: "கொப்பளத்தைக் குத்திவிட்டு நீரை வடித்து விடுகிறேன். எல்லாம் சரியாகிப் போய் விடும். ஆனால் இரண்டு நாள் இங்கே மருத்துவ மனையில் தங்கி ரெஸ்ட் எடுத்துக் கொண்டால் சரியாய்ப் போய்விடும்" என்பார்.

பாதயாத்திரையில் 'ரெஸ்டா?' அதெல்லாம் நடவாத காரியம். நான் நடக்காமல் அவர்களை மட்டும் நடக்கச் சொல்வதா? ஊஹூம்!

"சும்மா மருந்து போட்டுக் கட்டி விடுங்கள். பார்த்துக் கொள்றேன்" என்று சொல்லிவிட்டு நடந்து போக வேண்டியதுதான். கொப்பளத்தில் இருந்து தண்ணீரை உள்ளேயே உறிஞ்சிக் காய வைக்கும் மாத்திரைகளை ஒரு டாக்டர் கொடுத்தார். நான்கு நாளில் காய்ந்து போயிற்று. தோல் உரிந்தது. பார்த்தால் மிக மிருதுவான ரோஸ் கலரில் புதிய தோல்! சிறு கல் கூடப் பட முடியாது; அப்படி வலிக்கும்!

பொட்டல் வெளிகளிலே நடந்தோம். கிராமங்களில் வயல்களின் குறுக்கே நடந்தோம்.

இந்தக் களைப்பை எல்லாம் எது போக்கியது? எங்கள் இளைஞர்கள். எங்கள் பொதுக் காரியதரிசி சத்திய நாராயணன். இதை திட்டமிட்டு ஏற்பாடு செய்தவர்; வயதில் இளைஞர். தன்னம்பிக்கை மிக்கவர். அனைவருக்குமே இது பயிற்சிக்கூடமாக இருந்தது.

பொதுமக்களின் வரவேற்பு அதிசயிக்கத்தக்க வகையில் இருந்தது. டீக்கடையில் கூட்டம் இருக்கிறதென் றால் நடைப் பயணத்தை நிறுத்தி கூட்டம் போடுவோம். பஸ் ஸ்டாண்டில் மக்கள் நிற்கிறார்கள் என்றால் அங்கே பிரசாரம். கடைத்தெருவில் பேசும்போது அன்புடன் சோடா கொண்டு வருவார்கள்; 'டீ' கொண்டு வருவார்கள்.

கடையநல்லூர், விக்கிரமசிங்கபுரம், பாபநாசம், ராஜபாளையம், திருச்சி, மயிலாடுதுறை, சென்னை என்று

பாதயாத்திரை 1



தென்னக நதிகளை இணைக்கக் கோரி பாதயாத்திரை
ராஜபாளையத்தில் பாதயாத்திரை. மகளிர் அணி முன்னே நடக்க.
இதுவரை இப்படி வெளியே வந்து நிகழ்ச்சிகளில் கலந்து கொண்ட
பழக்கமில்லாத ராஜபாளையம் ராஜுக்கள் வீட்டு பெண்மணிகள்.



பாதயாத்திரை "சென்னை சேர்ந்தோம்"

பாதயாத்திரை 2

நதிகளை தேசீய மயமாக்கக் கோரி குமரி முதல் சென்னை வரை பாதயாத்திரை (1991)



"எங்கு கூட்டம் நிற்கிறதோ அங்கெல்லாம் விளக்கம்"
அய்யம்பேட்டை தஞ்சை மாவட்டம்



புதுக்கோட்டையில்

எங்களுக்குக் கிடைத்த வரவேற்பில் திளைத்துப் போய் விட்டோம். எந்த ஊரில் கூட்டம் போட்டுக் கிளம்பு கிறோமோ அந்த ஊர்க்காரர்கள் அடுத்த ஊர்வரை எங்களுடன் வருவார்கள்!

ஓரிடத்தில் ஓர் இளம் தாய், அப்போதுதான் நடக்கக் கற்றுக் கொண்ட தன் குழந்தையிடம் ஒரு இரண்டு ரூபாய் நோட்டைக் கையில் கொடுத்து தெருவில் நடந்து கொண்டிருந்த எங்களிடம் அனுப்பினார். அந்தக் குழந்தை கைகளில் நோட்டைப் பிடித்துக் கொண்டு எங்களை நோக்கி வந்தபோது கண் கலங்கியது. மனம் சிலிர்த்தது.

மற்றோரிடம். கடைத்தெரு; பேசி முடித்தவுடன் உடல் 'தாட்டிகை'யான ஒரு பெரிய பெண்மணி. அரை யணா காசு அளவுக்கு நெற்றியிலே குங்குமம். அள்ளி முடித்த தலை. தெருவில் கடை விரித்து மிட்டாய் விற்றுக் கொண்டிருந்தார். எலுமிச்சை வில்லை மிட்டாய் கொண்ட ஒரு பெரிய பொட்டலத்தைத் தூக்கி வந்து என்னிடம் கொடுத்தார். அவர் கண்களில் வாழ்த்துக்கள். என் கண்களில் நீர்! அந்தப் பெண்மணிக்கு நான் - நாங்கள் என்ன செய்து விட்டோம்!

செட்டிநாடு வழியாக நடந்தோம்; கோனாப்பட்டு என்று நினைக்கிறேன். இரண்டு பக்கமும் பெரிய, பெரிய வீடுகள். பணக்கார வீடுகள். வாசலில் பெண்கள் - தாய் மார்கள் கையெடுத்துக் கும்பிட்டுக் கொண்டு நின் றார்கள். நாங்கள் திரும்பிக் கும்பிட்டு விட்டால் ஈடாகி விடுமா?

பல இடங்களில் பல துறவிகள் எங்களுடன் நடந் தார்கள். மூர்த்தி, தலம், தீர்த்தம் என்பார்கள்; அதாவது புனிதத்தலமாக கோயில் இருக்கும் ஊர், அந்த ஊர்த் திருக்குளம், அந்த கோயிலில் உள்ள ஆண்டவர் என்று தரிசித்து வருவார்களாம். தீட்சை பெற்றுக்கொண்ட துறவிகள். அப்படித்தான் புனிதமான மக்களை, தன்னலம் மீறிய மக்களை, அன்பால் தொடப்பட்ட மக்களைக் கண் டோம்; அவர்கள் வாழும் ஊரில் நடந்தோம்; அவர்கள் ஊரில் ஓடும் ஆற்றில் குளித்தோம். பலர் வீட்டில் - முகம்

தெரியாதவர்களின் வீட்டில் உண்டோம். உபசரிக்கப் பட்டோம்.

சென்னைக்கு வந்தபோது வரிசையாக வரும் கூட்டம் ஆயிரத்திற்கு மேல் போயிற்று. பிரமிப்பை ஏற் படுத்தியது.

கிண்டி அருகில் வரும்போது எதிர்சாரியில் ஒரு மத்திய அமைச்சர் காரில் கிண்டி சாலை வழியே விமான நிலையத்திற்குச் செல்கிறாராம். நாங்கள் சென்னை நோக்கிச் செல்கிறோம். அவர் சென்னையிலிருந்து செல் கிறார். இடையே சாலையைப் பிரிக்கும் இரும்புத் தடுப்புக் கம்பிகள். காவல்துறையினர் எங்களை நிறுத்தினார்கள், நாங்கள் வேறு சாலை வழியாக - மத்திய அமைச்சருக் காகப் போக வேண்டுமென்று நிர்ப்பந்தித்தார்கள். இதை எல்லாம் முன்னே சென்ற எங்கள் இளைஞர்களே சமாளித்தார்கள். அது முடியாதென்றபோது, எங்களை சாலை ஓரத்தில் போட்டிருந்த நடைபாதையில் நடக்க வேண்டும் என்றார்கள். அலைமோதுகின்ற கூட்டம். எனவே அதுவும் நடக்கவில்லை!

ஆனால் ஆச்சரியம். கிண்டியிலே எங்களைக் கெடுபிடி செய்த காவல்துறை, சைதாப்பேட்டையில் அத்தனை பேருக்கும் எலுமிச்சம் பழச்சாறு கொடுத்து எங்களை உற்சாகப்படுத்தினார்கள் - சிரித்த முகத்துடன் வரவேற்றார்கள்.

நல்லது வரும்; நிலைமை நாளை மாறும், என்ற சந்தோஷமே எனக்கு ஏற்பட்டது. இப்படிப்பட்ட மாற்றத்தைப் பார்த்தபோது - நன்றி கூறினோம்; நடந் தோம்.

களைப்புத் தீர மதியம் தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் தங்கினோம். முதல்நாள்தான் செல்வி ஜெயலலிதா முதல்வராகப் பதவியேற்றிருந்தார். நதிநீர் இணைப்பு பற்றிய மகஜரை எடுத்துக் கொண்டு அவர் வீட்டுக்குச் சென்றோம். எங்களைச் சந்தித்தார்; உபசரித்தார்.

"இதற்காகவா இவ்வளவு தூரம் நடந்தீர்கள்? டாக்டர் எம்.ஜி.ஆர் இரண்டாண்டுகளுக்கு முன்பே இது பற்றி டெல்லியில் மகஜர் கொடுத்திருக்கிறாரே!" என்றார்.

அன்று மாலை ஏழு மணிக்கு மயிலாப்பூர் மாங் கொல்லையில் பெரிய கூட்டத்திற்கு மேடை போட்டிருந் தோம். நானும், நண்பர் குமரி அனந்தனும், மேடையில் அமர்ந்திருந்தோம். எதிரே பெரிய கூட்டம்!

திடீரென்று மழை பொழிய ஆரம்பித்தது. மேடையின் உள்ளே, கட்டியிருந்தத் துணியின் வழியே என் தலையிலும் மழை பொழிந்தது; அபிஷேகம் செய்தது என்றே சொல்லவேண்டும்!

"மாமழை போற்றுதும், மாமழை போற்றுதும்" என்ற சிலப்பதிகார வரிகள்தான் எனக்குள் ஒலித்துக் கொண்டி ருந்தன. மழை எங்களுடன் வந்து கொண்டிருந்தது! கன்னியாகுமரியில் பாதயாத்திரை துவங்கும் போதும் தண்ணீருக்காக, மழைக்காக பிரார்த்தித்தோம். வெளி வாங்கியிருந்த வானம் சடசடவென்று பெய்து எங்களுக்கு ஆசி கூறியது. நடுவில் பாலாற்றைக் கடக்கும் போதும் சொன்னேன் "இதில்தான் தண்ணீர் வரப்போகிறது" என்று இளைஞர்களிடம். பாலத்தை தாண்டுவதற்குள் மழை எங்களை நனைத்தது. இன்று பாதயாத்திரையை முடிக்கின்ற கூட்டத்தில் மழையோ மழை!

45

## கிராமங்களே, வருக!

மக்கள் சக்தி இயக்கம் அமைதியாகச் செயல் புரிகிறது. ஈடுபாடுடைய நல்ல இளைஞர்கள் இருக்கிறார்கள். அத்துடன் அறிஞர்களாலும் நிபுணர்களாலும் ஆன ஒரு அருமையான நிர்வாகக் குழு இருக்கிறது.

நாளைய் நாடு நலம் பெற வேண்டுமானால் இன்று என்ன செய்ய வேண்டும் என்று எண்ணிக் காரியங் களைச் செய்கிறோம். இன்று ஊரிலே சப்தம் அதிகமா யிருக்கிறது; எனவே எங்கள் செயல் உங்கள் காதில் விழு வதில்லை!

செயல் - அதாவது செய்வதை - கர்ம யோகமாக - செய்து கொண்டே போவதுதான் பொருளால் ஆன இவ்வுலகின் தர்மம் - நியதி. எனவேதான் நாங்கள் இப்போது நடக்கும் பல விஷயங்களையும் அரசியல் நிலைமை பற்றியும்கூட அறிக்கை விடுவதில்லை. ஏனெனில் இன்று பொய்யெல்லாம் மெய்யெனப் பேசும் வாய் ஜாலக்காரர்களாலும், நெறி பிறழ்ந்தவர்களாலும் அரசியல் உலகம் ஆட்கொள்ளப்பட்டிருக்கிறது. கடந்த முப்பது ஆண்டுகளாக அரசியலும் சினிமாவுமே மக்கள் மனத்தை நிரப்பிக் கொண்டிருக்கின்றன!

சரி, மக்கள் சக்தி இயக்கம் என்ன செய்து வருகிறது?

நம் நாட்டில் 65 சத மக்கள் விவசாயிகள்; 70 சத மக்கள் கிராமத்தில் வசிக்கிறார்கள். அவர்களில் பாதிக்கு மேற்பட்டவர்களுக்குப் படிப்புமில்லை, வருமானமு மில்லை.

ஏழ்மையான நாடுகளை வரிசைப்படுத்தினால் மிகவும் ஏழ்மையான நாடுகளில் ஒன்றாக இருக்கிறது

இந்தியா. ஏன் அடித்தள மக்களின் அடிப்படைத் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடாது?

முதலாவதாக நம் நாட்டின் ஜீவன் விவசாயம்; "அவர்களிடம் ஏர் கலப்பை இருக்கிறது. உழைக்கும் கரங்கள் இருக்கின்றன. அவர்களுக்குத் தண்ணீர் கொடுங்கள். நேற்று பொட்டல் வெளியாய்க் கிடந்த மண்ணில் இன்று அவன் பயிர் செய்து விளைவித்தானானால் அது நம் நாட்டிலேயே நம் விவசாயி கொண்டு வரும் புதுப்பணம். நிறைய வாயையும் வயிற்றையும் உற்பத்தி செய்யும் நாம் உணவைப் பற்றித்தான் அக்கறைப் பட வேண்டும். எனவே வீணாகக் கடலில் பாயும் தென்னக நதிகளான மகாநதி, கோதாவரி, கிருஷ்ணாவை காவிரியுடனும் வைகையுடனும் இணைக்க முடியும். இதைக் கொஞ்சம் கொஞ்சமாகச் செய்தால்கூட போதும். நடக்கக் கூடிய காரியம்.

கர்நாடகத்திற்கும் தமிழ்நாட்டிற்கும் காவிரி நீரில் உடன்பாடு கொண்ட பா.ஜ.க.வால் இது பற்றி ஒத்த கருத்தை உருவாக்க முடியாதா?

தென்னக நதிகளை இணைக்கும் பெரும் பணியைத் தான் மக்கள் சக்தி இயக்கம் எடுத்துக் கொண்டிருக்கிறது. இதற்காக பாதயாத்திரை நடந்து, திட்டம் தீட்டி, டெல்லிக்கு பலமுறை சென்று மத்திய அரசிடம் அறிக்கை கொடுத்தோம். "இது சாத்தியம்; பணம் விவசாயிகளிடமிருந்து பெறலாம்; இது செய்யப்படவேண்டும்" என்று சொன்னோம். மத்திய அரசு ஏற்றுக் கொண்டிருக்கிறது.

**ஏன் நாம் இத்தனை நாள் செய்யவில்லை? எது முக்கியம் என்று நம் தலைவர்கள் உணரவில்லை. அவ்வளவுதான்.**

இரண்டாவதாகக் கல்வி: ஏழைகளின் அறிவுக் கண்களைத் திறந்துவிட நாம் முயலவில்லை; திட்டமிடவில்லை. அரசியல் சாசனம் சொல்கிறது: 14 வயதுக்கு உட்பட்டவர்கள் அனைவருக்கும் கல்வி கொடுக்கப்பட வேண்டும். எட்டாவது வகுப்பு வரையாவது அனைவரும் படித்திருக்க வேண்டும் என்று.

அதைத்தான் மக்கள் சக்தி இயக்கம் எடுத்துக் கொண்டிருக்கிறது. கிராமங்களில் இரவுப் பள்ளிக்கூடம்



மக்கள் சக்தி இயக்கம் தமிழ்நாடு முழுதும் பல நகரங்களில் சுயவளர்ச்சிப் பயிற்சி தொழில் முனைவோருக்கான பயிற்சி சமுதாய சேவைக்கான பயிற்சி மாணவர்களுக்கு தன்னம்பிக்கைப் பயிற்சிகளை நடத்துகிறது.

மூலம்; கிராமங்களில் நூலகம் மூலம்; கிராமங்களில் விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவதன் மூலம்.

ஒருபடி மேலே சென்றால், நமது கல்விமுறையும் கல்வியும் சீர்திருத்தப்பட வேண்டும்; உலக அரங்கிற்கு ஈடாக நாம் உயர வேண்டும்; 21-வது நூற்றாண்டின் எதிர்பார்ப்பிற்கு நாம் நமது தலைமுறையைத் தகுதி உள்ளவர்களாக ஆக்க வேண்டும் என்று ஒரு புதிய கல்வித் திட்டத்தை இயக்கம் அறிமுகப்படுத்தி இருக்கிறது!

வால்ஸ்டிரீட் ஜர்னல் என்றொரு பிரபல அமெரிக்க நாளிதழ். அதில் ஒரு கட்டுரையில் ஓமன், கோஸ்டரீகா என்ற இரண்டு நாடுகளை ஒப்பிட்டிருந்தார்கள். ஓமன் எண்ணெய் வளம் கொழித்த நாடு; பணம் இருந்தது. எல்லோரும் வசதியாக இருந்தார்கள். சாலை வசதி இல்லை. உற்பத்தி இல்லை; ஏனெனில் படிப்பு இல்லை.

கோஸ்டரீகா ஏழையாக இருந்த நாடுதான். எல்லோருக்கும் கல்வியைக் கொடுத்தார்கள். ஒரு

பத்தாண்டில் அது வசதி படைத்த நாடாக முன்னேறிய நாடாக இன்று இருக்கிறது. கல்விதான் அறிவைக் கொடுக்கிறது; அறிவுதான் திறமையை வளர்க்கிறது. திறமையும் நம்பிக்கையும்தான் ஒரு நாட்டை வேறுபடுத்திக் காட்டுகின்றன.

**ஏன் ஐம்பதாண்டுகள் ஆகியும் நமது மக்கள் இன்னும் 40 சதம் பேர் கல்வி அறிவு அற்றவர்களாயிருக்கிறார்கள் ?**

**நமது தலைவர்கள் எது முக்கியம் என்பதை உணரவில்லை. வேறென்ன சொல்ல முடியும் ?**

நாம் அதில்தான் கவனம் செலுத்த வேண்டும். மக்கள் சக்தி இயக்கம் அதைத்தான் செய்து வருகிறது.

மூன்றாவதாக, மக்கள் அதிகமாக வாழும் இடம் இன்றும் கிராமங்கள்தான். 70 சத மக்கள் அங்கே வசிக்கிறார்கள். அங்கே பெண்கள் 70 சதம் படிக்காதவர்கள்.

கிராமவாசியின் வருமானத்தையும் நகரவாசியின் வருமானத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இருக்கும் ஏற்றத் தாழ்வு "அநியாயம்!" என்றும் "ஏழை வயிற்றில் அடிக்கப்படுகிறான்'' என்றும் நாம் ஆதங்கப்படும் அளவுக்கு இருக்கிறது.

இரண்டு வேளை முழு உணவுகூட அவர்களுக்குக் கிடைப்பதில்லை. கண் கூடாகப் பார்த்தோம், கிராமங்களில். சாலை வசதி இன்றி, குடிநீர் இன்றி, மருத்துவ வசதி இன்றி, பள்ளி இன்றி இன்றும் ஏராளமான கிராமங்கள், 1999லும்.

இதனால்தான் மக்கள் சக்தி இயக்கம் கிராமங்களை தத்தெடுத்துக் கொள்ளும் பணியில் ஈடுபட்டிருக்கிறது. இவர்களும் நம்மைப் போல படிப்பிலும் வருமானத்திலும் நல்ல நிலைக்கு வருகிற வரையில் சமதர்ம சமுதாயம் வராது. ஏழைகளுக்கு நியாயம் வழங்காத ஒரு சமுதாயமாகத்தான் நாம் இருப்போம்.

கிராமங்களில் விஷயம் தெரிந்தவர்கள் தேவைப்படுகிறார்கள். துணை போகிறவர்கள், தேவைப்படுகிறார்கள்; துணிச்சலாகத் தட்டிக் கேட்பவர்கள் தேவைப்படுகிறார்கள். இதை அரசாங்கமா செய்யப் போகிறது?

பல இடங்களில் கிராம மக்களின் உலக ஞானம் கிராமத்துடன் நின்று விடுகிறது. கால்சட்டை போட்டு, காரில் சென்று இறங்கினால் அவர்கள் அதிகாரிகள் என்று எண்ணி, குறை தீர்க்க முறையிடுகிறார்கள்.

சில பெரிய விஷயங்களான ரேஷன் ஷாப் ஊழலோ, சாலை போடுகிறேன் என்று போடாமல் கணக் கெழுதப்படுவதோ, கள்ளச் சாராயப் பணத்தை கட்சிக் காரர்கள் பங்கு போட்டுக் கொள்ளும் விஷயமோ - பெரிய இடத்துக் கொள்ளை பற்றியோ ஏதுமே தெரியாமல் – இதுதான் வாழ்க்கை – என்று ஏற்றுக் கொண்டு வாழும் மக்கள்.

பாரதி பாடுகிறார்:

'கஞ்சி குடிப்பதற்கிலார் – அதன்
காரணங்கள் இவை என்ற அறிவும் இலார்'

என்று.

பல மாவட்டங்களில் கிராமங்களைத் தத்தெடுத்துக் கொண்டு கிராம வேள்வி என்ற திட்டத்தை அறிமுகப் படுத்தி இருக்கிறோம்.

இன்றைய கிராம மக்களுக்கு உள்ள முதல் தேவை: வேலை வாய்ப்பு; வருமானத்திற்கு வழி; அடுத்தவேளை அரிசி வாங்கக் காசு. சிறு தொழில்களில் பயிற்சிக்கு ஏற்பாடு செய்கிறோம். காந்தி கிராமம், சேலம் ராஜாஜி ஆசிரமம் போல வராதா என்று இவ்விடங்களில் கிராமங் களில் செய்யக் கூடிய 60க்கு மேற்பட்ட தொழில்கள் சொல்லிக் கொடுக்கப்படுகின்றன.

இந்த ஏழு அம்சங்கள்: 1) வேலை வாய்ப்பு, சிறு தொழில்கள் மூலம் வருமானத்திற்கான வழிகள் 2) இரவுப் பள்ளி, நூலகம் 3) சேமிப்பு மாதம் 25 – 50 ரூபாய். இதில் வரும் பணம் பலருக்குத் தொழில் துவங்க உதவுகிறது. 4) சுகாதாரம், கழிப்பறை, 5) மதுவிலக்கு 6) பெண்கள் உயர்வு, பெண்கள் உரிமைகள், 7) சமூக நல்லிணக்கம்.

இதில் உள்ள முதல் நான்கு அம்சங்களில்தான் துவக்கத்தில் கவனம் செலுத்துகிறோம். இந்தத் திட்டம் விசாகப்பட்டினத்தில் உள்ள டாக்டர் பரமேஸ்வரராவ் அவர்களால் நேரடியாக சுமார் 30 கிராமங்களிலும், பிறர்

தமிழ்நாடெங்கும் இதுவரை பல முறை கல்லூரிகளிலும்
பள்ளிகளிலும் தன்னம்பிக்கை சொற்பொழிவு
ஆற்றியிருக்கிறார் ஆசிரியர் உதயமூர்த்தி



ஈரோட்டுக்கு அருகிலுள்ள கொங்கு வேளாளர்
மகளிர் கல்லூரி முன் பாதயாத்திரையில் வந்தவர்களுக்கு இளநீர்
அளித்து வரவேற்ற மாணவிகள்.



பள்ளி மாணவர்கள் மத்தியில்



"என் பேச்சின் எழுச்சியை முகத்தில் கண்டேன்"
ராஜபாளையம் ராஜுஸ் மகளிர் கல்லூரி மாணவிகள்.

மலேசியாவில்



உயர்வோம் பத்திரிகையின் ஆண்டுவிழாவில் மலேசியாவின் தலைநகரம் கோலாலம்பூரில் பத்திரிகாசிரியர் இர. கோ. ராஜுவின் அழைப்பின் பேரில் பலமுறை மலேசியா சென்றிருக்கிறார்.



கோலாலம்பூர் கூட்டத்தில் ஒரு பகுதி.

## ஆசி கூறிய மகான்கள்



யோகிராம் சுரத் குமார்



தருமபுரம் ஸ்ரீலஸ்ரீ ஷண்முக தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்

மூலம் சுமார் 300 கிராமங்களிலும் நடைமுறைப் படுத்தப் பட்டு பலன் தரும் திட்டம்!

என்னைப் பலர் கேட்கிறார்கள்: 'எப்படி அமெரிக்காவிலிருந்து இங்கு வரத் தீர்மானித்தீர்கள்? சொகுசான வாழ்க்கை - உங்கள் குழந்தைகள், குடும்பம், பேரக் குழந்தைகள் - என்று எல்லாவற்றையும் ஒதுக்கி விட்டு?' என்று. 1962ல் சென்ற எனக்கு 1963லேயே, "நம் நாடு உயர்ந்த நாடு; கெட்டிக்காரர்கள், புத்திசாலிகள் நிறைந்த நாடு. அமெரிக்காவில் பார்க்கும் நல்லனவற்றை எல்லாம் இந்தியாவிற்குக் கொண்டு செல்ல வேண்டும்" என்ற தணியாத ஆர்வம் ஏற்பட்டது. சுமார் பதிமூன்று தமிழ்ப் பத்திரிக்கைகள் எனக்கு விமானத் தபாலில் வந்து கொண்டிருந்தன. எனவே தமிழ்நாட்டுடன் எண்ணங் களால் ஒன்றிவிட்டேன். இந்தியா பற்றி சொல்லிக் கொடுக்கும் அமெரிக்கப் பேராசிரியர்களுடன் நட்பு கொண்டு அவர்களுடன் பேசி மற்றவர்களது கோணத்தில் பாரபட்சமில்லாமல் நம் நாட்டை நான் பார்ப்பதுண்டு; சிந்திப்பதுண்டு. அவர்களுடைய வகுப்பில் அமர்ந்து பாடம் கேட்பதுண்டு.

இந்த ஆர்வம்தான், இந்த எண்ணங்கள்தான் என்னுடைய சூழ்நிலையை உருவாக்கிக் கொடுத்தன. அண்ணா வந்தபோதும், கலைஞர் கருணாநிதி வந்த போதும், அமெரிக்காவுக்கு எம்.ஜி.ஆரை அழைத்துச் செல்ல எல்லா ஏற்பாடுகளையும் நான் செய்த போதும் இந்த ஆழமான எண்ணங்கள் ஏற்படுத்தியவைதான் இவர்களது சந்திப்புக்கள். இவர்களது தொடர்பு நாட்டைப் பற்றி நான் எண்ணியதை சாத்தியமாக்க முடியும் என்ற நம்பிக்கையைத் தந்தது.

இப்படி அமெரிக்கப் பேராசிரியர்கள், நம் நாட்டுத் தலைவர்கள் என்று அமெரிக்காவில்கூட எனக்கு ஒரு சூழ்நிலை ஏற்பட்டதை எண்ணி நானே வியப்பதுண்டு. காரணம் நமது எண்ணங்கள் நம்மை மட்டும் மாற்றுவ தில்லை, நம்முடைய சூழ்நிலையையே மாற்றிவிடுகின்றன என்கிற மாபெரும் உண்மையைத் தெரிந்து கொண்டேன்!

இதைவிட முக்கியமாக நமக்கு ஒரு கடமை இருப்ப தாக எண்ணினேன். நான் எழுதுகிறேன், "நாடு அப்படி இருக்க வேண்டும்; இப்படி இருக்க வேண்டும். இது

சாத்தியம்,'' என்றெல்லாம். இப்படி ஊருக்கு உபதேசம் செய்வது சுலபம். அதற்காக நாம் இறங்கிப் பாடுபடும் போதுதான் நாம் இப்படி விமரிசிப்பதற்கு நமக்கு உரிமை உண்டு; அதுதான் முறையான காரியம் என்ற எண்ணம் என்னுள் படிந்து போயிருந்தது. இதற்கு காரணம் நான் படித்த வேதியல் படிப்பு.

இந்த விஞ்ஞானப் பாடம் எனது சொல்லுக்கும் செயலுக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்க வேண்டும் என்பதை சதா என்னுள் சொல்லிக் கொண்டே இருந்தது. விஞ்ஞானப் பாடங்களில் தத்துவம் - கருத்துக்கள் இருக்கும். அதற்கு மேலே போய், தத்துவத்தை விளக்க செயல்முறை சோதனைகள் உண்டு. அதாவது செய்து காட்ட வேண்டும். விஞ்ஞானப் பாடங்களின் அணுகு முறைகள், எண்ணங்களாய், பழக்கங்களாய் மாறி என்னுள் பதிந்து விட்டன.

அடுத்ததாக, ''எண்ணங்கள் உலகை மாற்றும்; உலகை மாற்றி இருக்கின்றன'' என்பதை பலர் வாழ்விலி ருந்து நான் அறிந்தேன்.

என்னையும் சரி; என்னை இப்படி சிந்திக்கச் செய்த நல்லவர்களையும் சரி, மக்கள் யாரும் மண்டி போட்டு "நீங்கள்தான் இந்த நாட்டைக் காப்பாற்ற வேண்டும்!'' என்று கேட்கவில்லை; கேட்க மாட்டார்கள். இதைத்தான் நமது நடுத்தர வர்க்கம் உணர வேண்டும். நம்மால் முடியுமா? மக்கள் ஒன்று சேர்வார்களா? உணர்வார் களா? என்று சந்தேகப்பட்டுக் கொண்டிருக்கவோ, தயங்க வோ நேரமில்லை.

நாம்தான் நம் தலையில் அட்சதையைப் போட்டுக் கொண்டு - ஆண்டவன் ஆசி கூறுவதாக எண்ணிக் கொண்டு - நம்மாலானதை, நாம் இருக்குமிடத்தில் செய்ய வேண்டும்; முதலில் துவங்க வேண்டும். சிந்திக் கிறேன்...

என்னைச் செதுக்கிய எண்ணங்கள்...

"பலனை எதிர்பாராதே; கடமையைச் செய்'' என்று கூறுகிறது பகவத்கீதை!

1988ல் திரு உதயமூர்த்தி அவர்களுக்கும் திருமதி சீதாலட்சுமி அவர்களுக்கும் மணிவிழா நடந்தது.
அமெரிக்காவில் ஹுஸ்டன் நகரில் மீனாட்சி அம்மன் கோவிலில்

மூத்தமகன் சித்தார்த்தன் மருமகள் டாக்டர் யசோதரா மூத்த பேத்தி அனிதா இளைய பேத்தி மிஷல்



இரண்டாவது மகன் அசோகன். மருமகள் மாலா பேரன் சிவாவுடன்



மகள் கமலா மருமகன் டாம்விட் வழககறஞூா
பேரன் ஜோ பேத்தி குழந்தை ஜூலியன் சீதா

## வி.ஐ.பிக்களுடன்



மகள் கமலா திருமண வரவேற்பு சென்னையில் நடந்தது. வாழ்த்த வந்த உயர்திரு டாக்டர் A.C. முத்தையாவும் அவர் மனைவி திருமதி தேவகி முத்தையாவும்.
மணமகள் கமலாவுடன் நிற்பவர் மணமகன் 'டாம்விட்'டின் தாய் மேரி.



1995ல் ராமகிருஷ்ணவித்யாலயத்தில் மக்கள் சக்தி இயக்க பயிற்சி முகாம் நடந்தபோது அதன் தலைவர், முன்னாள் கல்வி அமைச்சர் பெரியவர் அவிநாசிலிங்கம் செட்டியார் வாழ்த்துகிறார்.



தஞ்சை பண குடியில் எண்ணெய் சுத்திகரிப்பு நிலயம் வேண்டி மனுவுடன் இந்திய ஜனாதிபதி ஆர். வெங்கட்ராமன் அவர்களுடன் ஜனாதிபதி மாளிகையில்.



முன்னாள் பிரதமர் சந்திரசேகர் அவர்களை ஏர்க்காட்டில் தங்கி சந்தித்த போது.



இன்றைய பிரதமர் வாஜ்பாய் அவர்களும்,
உள்துறை அமைச்சர் அத்வானி அவர்களும்
முதன்முறையாக பா.ஜ.க தலைவர்களாக சென்னை வந்த போது
எம்.எஸ்.யு அவர்கள் வரவேற்றார்.

"பனைமரமே! பனைமரமே!
ஏன் வளர்ந்தாய் பனைமரமே?"

"நான் வளர்ந்த காரணத்தை
நாடறிய சொல்வேன் கேள்!"*



(படத்தில் காரோட்டி வந்த இளைஞர் கல்யாணி)
(பெண்ணின் பெயர் கொண்டவர்.)

பாதயாத்திரை (1991ல்) வந்தபோது பாண்டிச்சேரிக்கு அருகில் ஒரு அதிசய பல கிளைகள் கொண்ட பனைமரம்.

* பனைமரம் தன் கதையைச் சொல்லும் பள்ளிக்கூட பாடல் வரிகள்.

